'**வெயிலேறிப்** போகின்றதே! இனிப் பசியென்கின்ற வேதனை வந்து சம்பவிக்குமே! இந்த விதிவசத்திற்கு என்ன செய்வது!' என்று தேனில் விழுந்த ஈயைப்போல், திகைக்கின்ற ஏழை ஜீவர்களுடைய திகைப்பை நீக்குவதுதான்—ஜீவகாருண்யம்.

'**இருட்டிப்போகின்றதே** இனி ஆகாரங்குறித்து எங்கே போவோம்!—யாரைக்கேட்போம்!—என்ன செய்வோம்!'—என்று விசாரத்தில் அழுந்திய ஏழை ஜீவர்களது விசாரத்தை மாற்றுவதே—ஜீவகாருண்யம்.

'**நடந்து** நடந்து காலுஞ்சோர்ந்தது,—கேட்டுக்கேட்டு வாயுஞ்சோர்ந்தது,—நினைத்து நினைத்து மனமும் சோர்ந்தது. இனி இப்பாவி வயிற்றுக்கென்ன செய்வோம்!—என்று கண்ணீர் வடிக்கின்ற ஏழைகளுக்கு ஆகாரங்கொடுத்துக் கண்ணீரை மாற்றுவதே—ஜீவகாருண்யம்.

'**பகற்போதும்** போய்விட்டது,—பசியும் வருத்துகின்றது,—வேறிடங்களிற்போக வெட்கந்தடுக்கின்றது,—வாய்திறந்து கேட்க மானம் வலிக்கின்றது,—வயிறு எரிகின்றது,—உயிரை விடுவதற்கும் உபாயந் தெரியவில்லை,—இவ்வுடம்பை ஏன் எடுத்தோம்!'—என்று, மனமும் முகமும் சோர்ந்து சொல்வதற்கு நாவெழாமல், உற்பாத சொப்பனங்கண்ட ஊமையைப்போல் மனமறுகுகின்ற மானிகளாகிய ஜீவர்களுக்கு ஆகாரங் கொடுத்து மானத்தைக் காப்பதுவே—ஜீவகாருண்யம்.

'**நாம்** முன் பிறப்பில் பசித்தவர்கள் பசிக்குறிப்பறிந்து பசியை நீக்கியிருந்தால் இப்பிறப்பில் நமது பசிக்குறிப்பறிந்து பசியை நீக்குவதற்குப் பிறிதொருவர் நேர்வார்,—அப்போது அப்படி நாம் செய்ததில்லை. இப்போது நமக்கிப்படிச் செய்வாருமில்லை'—என்று விவகரித்துக்கொண்டு தூக்கம் பிடியாமல் துக்கப்படுகின்ற ஏழை ஜீவர்களுக்கு ஆகாரங்கொடுத்துத் துக்கத்தை நீக்கித் தூக்கம் பிடிக்க வைப்பதே—ஜீவகாருண்யம்.

**தேகமுழுதும்** நரம்புகள் தோன்றப் பசியினால் இளைத்து உயிரொடுங்கி மூர்ச்சை மூடியகாலத்தும் அயலாரைக் கேட்பது துணியாமற், கடவுளை நினைத்து நினைத்து,—நெருப்பிற்படுத்து,—நித்திரை செய்யத் தொடங்குவாரைப்போல,—அடிவயிற்றிற் கொடிய பசி நெருப்பை வைத்துப் படுக்கத் தொடங்குகின்ற விவேகிகளுக்கு ஆகாரங்கொடுத்து அந்தப்பசி நெருப்பை ஆற்றுவதே—ஜீவகாருண்யம்.

'**நேற்றுப்பட்டினி** கிடந்ததுபோல் இன்றும் பட்டினிகிடப்பது எப்படி? நாம் பாவியவசத்தால் இன்றும் பட்டினி கிடக்கத் துணிவோமாயினும், பட்டினி சகியாத நமது ஏழைமனைவி வயிற்றுக்கு யாது செய்வோம்?

இவள் பசியைக் குறிப்பதும் பெரிதல்ல, வார்த்திப திசையால் மிகவுஞ்சோர்ந்த நமது தாய் தந்தைகள் இன்றும் பட்டினிகிடந்தால் இறந்துவிடுவார்களே! இதற்கென்ன செய்வோம்? பசியினுல் அழுதழுது களைத்த நமது புத்திரர்களது சோர்ந்த முகத்தை எப்படிப்பார்ப்போம்?'—என்று எண்ணி எண்ணிக், கொல்லன் உலையிலூத மூண்ட நெருப்பைப்போல், பசிநெருப்பும்,—பய நெருப்பும்,—விசாரநெருப்பும்,—உள்ளே மூண்டபடி யிருக்கக் கன்னப்புடையில் கைகளை வைத்துக்கொண்டு கண்களில் நீர்கலங்க வருந்துகின்ற ஏழைகளுக்கு ஆகாரங் கொடுத்து வருத்தத்தை மாற்றுவதே—ஜீவகாருண்யம்.

'**கண் கை, கால்** முதலிய உறுப்புக்களிற் குறைவில்லாதவர்களாகி ஆகாரஞ் சம்பாதிக்கத்தக்க சக்தியுள்ளவர்களும் பசியால் வருந்தி இதோ படுத்திருக்கின்றார்கள்,—குருடும், செவிடும், ஊமையும், முடமுமாகவிருக்கின்ற நமக்கு ஆகாரம் எந்த வழியாற் கிடைக்கும்!—பசி எப்படி நீங்கும்'—என்று தனித்தனி நினைத்து நினைத்துத் துக்கப்படுகின்ற ஏழைகளுக்கு ஆகாரங் கொடுத்துத் துக்கத்தை நீக்குவதே—ஜீவகாருண்யம்.

**பசியினுல்** வருந்துகின்றவர்கள் எந்தத் தேசத்தாராயினும்,—எந்தச் சமயத்தாராயினும்,—எந்த ஜாதியாராயினும்,—எந்தச் செய்கையாராயினும்,—அவர்கள் தேசவொழுக்கம், சமயவொழுக்கம், ஜாதியொழுக்கம், செய்கையொழுக்கம் முதலானவைகளைப் பேதித்து விசாரியாமல்,—எல்லா ஜீவர்களிடத்தும் கடவுள் விளக்கம் பொதுவாக விளங்குவதை அறிந்து பொதுவாகப் பார்த்து அவரவர் ஒழுக்கத்திற்குத் தக்கபடி, அவர்கள் பசியை நிவர்த்தி செய்விப்பதே—ஜீவகாருண்யம்.

**சன்மார்க்க** ஒழுக்கத்திற்கு ஒத்த சத்துவ ஆகாரத்தால் பசி நிவர்த்திசெய்துகொள்ளத் தக்க மிருகம், பறவை, ஊர்வன, தாபரம் என்கின்ற உயிர்களுக்குப் பசி வந்தபோது, பசி நிவர்த்தி செய்விப்பதே—ஜீவகாருண்யம்.

**பசியை** நிவர்த்திசெய்துகொள்ளத்தக்க புவனபோக சுதந்தரங்களைப் பெறுதற்குரிய அறிவு இருந்தும்,—பூர்வ கர்மத்தாலும்,—அஜாக்கிரதையாலும்,—அச்சுதந்தரத்தைப் பெற்றுக்கொள்ளாமல் பசியினுல் வருந்துகின்ற ஜீவர்களுக்கு ஆகாரங்கொடுத்து அந்தப் பசி வருத்தத்தை நீக்கித் திருப்தி யின்பத்தை உண்டுபண்ணுவதற்குக் காரணமாகிய 'ஜீவகாருண்யம் என்கின்ற திறவுகோலைக்' கொண்டேதான் மோட்சமாகிய மேல்வீட்டுக் கதவைத் திறந்து கொண்டு உள்ளே புகுந்து எக்காலத்தும் அழியாத இன்பத்தை அநுபவித்து வாழவேண்டும். ஆகலின், ஜீவகாருண்யமென்கின்ற மோட்ச வீட்டுத் திறவு

கோலைக் காலமுள்ளபோதே சம்பாதித்துக்கொண்ட சமுசாரிகள்,—சரியை, கிரியை, யோகம், ஞானம் என்கிற சாதன சகாயங்களை வேண்டாமல், எக்காலத்தும் அடையாத இன்பவீட்டை அடைந்து, அவ்வீட்டுக் கதவைத் திறந்துகொண்டு, உள்ளே புகுந்து, நித்திய முத்தர்களாய் வாழ்வார்கள்.

புண்ணிய பூமிகளை வலஞ்செய்தல்,—புண்ணிய தீர்த்தங்களிலாடல்,—புண்ணிய தலங்களில் வசித்தல்,—புண்ணியமூர்த்திகளைத் தரிசித்தல்,—தோத்திரஞ் செய்தல்,—ஜெபஞ் செய்தல்,—விரதஞ் செய்தல்,—யாகஞ் செய்தல்,—பூஜை செய்தல்,—முதலிய சரியை கிரியைகளைச் செய்கின்ற விரதிகளும்,—பத்தர்களும்,—இருடிகளும், — உணவை நீக்கி, உறக்கத்தை விட்டு, விடயச் சார்புகளைத் துறந்து,—இந்திரியங்களை அடக்கி,—மனோலயஞ்செய்து,—யோகத்திலிருக்கின்ற யோகிகளும்,—அளவிறந்த சித்தியின்பங்களைப் பெற்ற சித்தர்களும்,—நித்தியா நித்தியங்களை அறிந்து,எல்லாப் பற்றுக்களையும் துறந்து,பிரமானுபவத்தைப் பெற்ற ஞானிகளும்,—ஜீவகாருண்யம் என்கிற திறவுகோலைச் சம்பாதித்துக் கொள்ளாதவர்களானால்,—மோட்சமென்கிற மேல்வீட்டிற்கு முன்னும் பின்னுமாக ஏறிச் சமீபத்திற் காத்திருந்து மீளவும் அத்திறவுகோலைச் சம்பாதிக்கத் திரும்புவார்க ளல்லது, கதவைத்திறந்து உள்ளே புகுந்து இன்பத்தை அடைந்து வாழமாட்டார்களென்று உண்மையாக அறியவேண்டும்.

இதனால், அறிவு விளங்கிய ஜீவர்களுக்கெல்லாம் ஜீவகாருண்யமே கடவுள் வழிபாடென்றும் அறியப்படும், அன்றியும், ஜீவகாருண்யவொழுக்கத்தை உடையவர்களாகி அருந்தல் பொருந்தல் முதலிய பிரபஞ்ச போகங்களை அனுபவிக்கின்ற சமுசாரிகளெல்லாம் சர்வ சத்தியையுடைய கடவுளருளுக்கு முழுதும் பாத்திரமாவார்கள். **ஜீவகாருண்ய வொழுக்கமில்லாமல் ஞானம், யோகம், தவம், விரதம், ஜெபம், தியானம் முதலியவைகளைச் செய்கின்றவர்களும் கடவுளருளுக்குச் சிறிதும் பாத்திரமாகார்கள் ; அவர்களை ஆன்மவிளக்கமுள்ளவர்களாகவும் நினைக்கப்படாது ; ஜீவகாருண்யமில்லாது செய்யப்படுகிற செய்கைகளையெல்லாம் பிரயோஜனமில்லாத மாயாஜாலச் செய்கைகளே யாகுமென்று அறியவேண்டும்.**

**எல்லா ஜீவர்களும்** கடவுள் இயற்கை யுண்மை ஏகதேசங்களாதலாலும், அவரவர் இடங்களிற் கடவுள் அருள் விளக்கம் விளங்குதலாலும்,—சமுசாரிகளுள் தமது தாய், தந்தை, புணர்ந்தோர், மக்கள், துணைவர் முதலிய குடும்பமட்டில் பசியாற்றிக்கொள்ளத்தக்க, அற்ப சக்தியுள்ள சமுசாரிகள், தாய், பிதா, மக்கள், துணைவர் முதலிய குடும்பத்தாரைப் பசியினாற் பரதவிக்கவிட்டு அயலார்க்குப் பசியாற்றத் தொடங்குதலும்,—தம்மிடத்துப்

பசித்துவந்த அயலாரை,—அந்தப் பசியால் பரதவிக்கவிட்டுத், தம் குடும்பத்தார் பசியையாற்றத் தொடங்குதலும்,—கடவுளருளுக்குச் சம்மதமல்ல.

ஆகலால், தமது குடும்பச் செலவைக் கூடியமட்டில் சிக்கனஞ் செய்து, இருதிறத்தார் பசியும் நீக்குதல்வேண்டும் என்றும்;—அற்ப சத்தியினுங் குறைவுபட்டுத் தமது குடும்பமட்டிலும் பசியாற்றுவிப்பதற்குப் பிரயாசையால் மிகச் சிறிய முயற்சியுடைய சமுசாரிகள், தமது குடும்பமட்டிலாவது பசியாற்றுவித்துக்கொண்டு,—தம்மிடத்துப் பசித்துவந்த அயலார் விஷயத்தில் மிகவும் தயவுடையவர்களாகி அவர் பசியை மற்றொருவரைக் கொண்டாவது ஆற்றுவிப்பதற்குத் தக்க முயற்சி யெடுத்துக்கொள்ள வேண்டுமென்றும்,—இயல்புள்ள பிரபல சமுசாரிகள் தங்கள் தங்கள் வருவாய்க்குத் தக்கவரையில், தாய், பிதா, புணர்ந்தோர், மக்கள், துணைவர், உறவினர், சிநேகர், அதிதிகள், பெரியர், அடிமைகள், அயலார், பகைவர் முதலியவர்களுக்கும், தமது குடும்பத்திற்குச் சகாயமாகத் தேடிய, பசு, எருது, எருமை, ஆடு, குதிரை, தாபர முதலிய பிராணிகளுக்கும், பசியையாற்றுவித்துத் திருப்தியின்பத்தை உண்டுபண்ண வேண்டுமென்றும்,—விவாகம், புத்திரப்பேறு, தெய்வம் படைத்தல் முதலிய பலவகைச் செய்கைகளில் வேறு வேறு சடங்குகளும், வேறு வேறு பெருமைப்பாடுகளும் குறித்துப் பொருட்செலவு செய்தலை அமைத்து,—விவாகமுதலிய அந்தந்தச் செய்கைகளிலும் பசித்த ஜீவர்களுக்குப் பசியை ஆற்றுவித்து இன்பத்தையுண்டுபண்ணுகின்ற சிறப்பினையே செய்யவேண்டுமென்றும்—அப்படிச் செய்யில், பசித்தவர் பசிநீங்கி அடைந்த இன்பத்திலும் அனேகமடங்கு அதிகமான இன்பத்தைத் தாம் அடைவார்களென்றும் சத்தியமாக அறிய வேண்டும்.

சமுசாரிகள் விவாக முதலிய விசேஷ காரியங்களில் பந்தலை அலங்கரித்தும்,—அவ்விடத்தில் வேறு வேறு சடங்குகளைச் செய்வித்தும்,—ஆடல் பாடல் வரிசை ஊர்வலம் முதலிய விநோதங்களையும் அப்பவர்க்கம், சித்திரான்னம் முதலிய பெருமைப்பாடுகளையும் நடத்தியும், எக்களிப்பில் அழுந்தியிருக்குந் தருணத்தில், பசித்த ஏழைகள் முகத்தைப் பார்க்கவும் சம்மதிக்கவில்லை. இப்படிப்பட்ட சந்தோஷ காலத்தில் தமக்காயினும் தமது மக்கள் துணைவர் முதலியோர்க்காயினும் ஒவ்வோர் ஆபத்து நேரிடுகின்றது. அப்போது அவ்வளவு சந்தோஷத்தையும் இழந்து துக்கப்படுகிறார்கள். இப்படித் துக்கப்படும்போது,—அலங்காரஞ் செய்த பந்தலும், சங்கல்பவிகல்பமான சடங்குகளும்,—ஆடல், பாடல், வாத்தியம், வரிசை, ஊர்கோலம் முதலிய விநோதங்களும்,—அப்பவர்க்கம், சித்திரான்னம் முதலிய பெருமைப்பாடுகளும்,—அந்த ஆபத்தைத் தடைசெய்யக் கண்டதில்லை. அந்தச்

உபகாரியத்தில் உள்ளபடியே பசித்த ஜீவர்களுக்கு ஆகாரங்கொடுத்துப் பசியை நீக்கி அவர்கள் அகத்திலும், முகத்திலும், கடவுள் விளக்கத்தையும், கடவுளின்பத்தையும், வெளிப்படச் செய்திருந்தார்களானால்,—அந்த விளக்கமும் இன்பமும் அத்தருணத்தில் நேரிட்ட ஆபத்தை நீக்கி விளக்கத்தையும் இன்பத்தையும் சத்தியமாக உண்டுபண்ணுமல்லவா? ஆகலில், விவாக முதலிய விசேஷச் செய்கைகளிலும் தங்கள் தங்கள் தரத்திற்கு ஒத்தபடி பசித்தவர்களது பசியை ஆற்றுவித்துத் திருப்தி யின்பத்தை உண்டுபண்ணுவது முக்கியமென் றறியவேண்டும்.

சூலை, குன்மம், குஷ்டம் முதலிய தீராத வியாதிகளால் வருந்துகின்ற சமுசாரிகள் தங்கள் தரத்திற்கு ஒத்தபடி பசித்தவர்களுக்குப் பசியாற்றுவிப்பதே விரதமாக அநுசரித்தார்களானால்,—அந்த ஜீவகாருண்ய அநுசரிப்பே நல்ல மருந்தாக அந்த வியாதிகளை நிவர்த்திசெய்து, விசேஷ சௌக்கியத்தை உண்டுபண்ணுமென்பது உண்மை.

பலநாள் சந்ததியில்லாமல் பலபல விரதங்களைச்செய்து வருந்துகின்ற சமுசாரிகள் தங்கள் தரத்திற்குத் தக்கபடி பசித்த ஏழைகளது பசியை ஆற்றுவிப்பதே விரதமாக அநுசரிப்பார்களானால்,—அந்த ஜீவகாருண்ய அநுசரிப்பு நல்ல அறிவுள்ள சந்ததியை உண்டுபண்ணுமென்பது உண்மை.

அற்பவயதென்று குறிப்பினால் அறிந்துகொண்டு இறந்து போவதற்கு அஞ்சி விசாரப்படுகின்ற சமுசாரிகள்,—தங்கள் தரத்திற்குத் தக்கபடி பசித்த ஏழைகளுக்குப் பசியை ஆற்றுவிப்பதே விரதமாக அநுசரிப்பார்களானால்,—அந்த ஜீவகாருண்ய அநுசரிப்புத் தீர்க்காயுளை உண்டுபண்ணுமென்பது உண்மை.

கல்வி, அறிவு, செல்வம், போகம், முதலியவைகளைக் குறித்து வருந்துகின்ற சமுசாரிகள்,—தங்கள் தரத்திற்குத் தக்கபடி பசித்த ஏழைகளுக்குப் பசியாற்றுவிப்பதே விரதமாக அநுசரிப்பார்களானால்,—அந்த ஜீவகாருண்ய அநுசரிப்பு கல்வி, அறிவு, செல்வம், போகம், முதலானவைகளை உண்டுபண்ணுமென்பது உண்மை.

பசித்தவர்களுக்குப் பசியாற்றுவிப்பதே விரதமாகக்கொண்ட ஜீவகாருண்யமுள்ள சமுசாரிகளுக்குக் கோடையில் வெயிலும் வருத்தாது,—மண்ணும் சூடுசெய்யாது,—பெருமழை, பெருங்காற்று, பெரும்பனி, பேரிடி, பெருநெருப்பு முதலிய உற்பாதங்களும் துன்பம் செய்விக்கமாட்டா,—விடேசிகை, விஷக்காற்று, விஷசுரம் முதலிய அஜாக்கிரதைப் பிணிகளுமண்

டாகா,—அந்த ஜீவகாருண்யமுள்ள சமுசாரிகள்,—ஆற்று வெள்ளத்தாலும், கள்ளர்களாலும், விரோதிகளாலும், கலக்கப்படார்கள், அரசர்களாலும் அவமதிக்கப்படார்கள்,—ஜீவகாருண்யமுள்ள சமுசாரிகளது விளைநிலத்தில் பிரயாசையில்லாமலே விளைவு மேன்மேலும் உண்டாகும்,—வியாபாரத்தில் தடையில்லாமல் லாபங்களும், உத்தியோகத்தில் கெடுதியில்லாத மேன்மையும் உண்டாகும் ;—சுற்றங்களாலும் அடிமைகளாலும் சூழப்படுவார்கள் ;—துஷ்டமிருகங்களாலும், துஷ்ட ஜந்துக்களாலும், துஷ்டப் பசாசுகளாலும் துஷ்ட தெய்வங்களாலும், பயஞ்செய்யப்படார்கள்.

**ஜீவகாருண்யமுள்ள சமுசாரிகளுக்கு எப்படிப்பட்ட ஆபத்துக்களும் அஜாக்கிரதையினாலும் ஊழ்வகையினாலும் சத்தியமாக வராது.**

**பசித்தவர்களுக்குப்** பசியாற்றுவித்து இன்பத்தை உண்டு பண்ணுகின்ற ஜீவகாருண்ய ஒழுக்கமாகிய மேலான விரதமானது—தேவர்கள், மனிதர்கள், பிரமசாரிகள், சமுசாரிகள், தபசிகள், சந்யாசிகள், ஆண் ஜாதியர், பெண் ஜாதியர், வார்த்திபர், வாலிபர், உயர்ந்தோர், தாழ்ந்தோர், முதலிய யாவராலும் அவசியம் செய்யத்தக்கதென்பது கடவுளாணை யென்றறிய வேண்டும்.

**பசித்தவர்க்குப்** பசியை நீக்குகின்ற விஷயத்தில் புருஷனைப் பெண் ஜாதி தடுத்தாலும்,—பெண்சாதியைப் புருஷன் தடுத்தாலும்—பிள்ளைகளைத் தந்தை தடுத்தாலும்,—தந்தையைப் பிள்ளைகள் தடுத்தாலும்,—சீஷரை ஆசாரியர் தடுத்தாலும்,—அடியாரை ஆண்டவன் தடுத்தாலும்,—குடிகளை அரசன் தடுத்தாலும்,—அந்தத்தடைகளால் சிறிதுந் தடைபடாமல் அவரவர் செய்த நன்மைதீமைகள் அவரவரைச் சேருமல்லது வேறிடத்திற் போகாதென்பதை உண்மையாக நம்பி ஜீவகாருண்ய வொழுக்கத்தை நடத்த வேண்டுமென்றும் அறியவேண்டும்.

**உள்ளபடி** பசியால் வருந்துகின்ற ஜீவர்களுக்கு ஆகாரங் கொடுக்க நினைத்தபோது, நினைத்த புண்ணியரது மனம் வேறு பற்றுக்களைவிட்டுச் சுத்தக்கரணமாகி நினைத்தபடியால், அந்தப் புண்ணியர்களை யோகிகளென்றே உண்மையாக அறியவேண்டும்.—ஆகாரங்கொடுக்க நினைத்தபடி உபசரித்துக் கொடுக்கும்போது, அவருண்ணுவது தாமுண்ணுவதாக அறிந்து களிக்கின்றபடியால், ஞானிகளென்றே உண்மையாக அறியவேண்டும்.—ஆகாரங் கொடுக்க உண்டு பசி தீர்ந்தவர்களுக்கு அத்தருணத்தில் ஆன்மாவின் உள்ளும் புறத்தும் கீழும்மேலும் நடுவும் பக்கமும் நிறைந்து கரணமுதலிய தத்துவங்க

ளெல்லாம் குளிர்வித்துத் தேகமுழுதும் சில்லென்று தழைய முகத்தினிடமாகப் பூரித்து விளங்குகின்ற கடவுள் விளக்கத்தையும் திருப்தியின்பமாகிய கடவுள் இன்பத்தையும் பிரத்தியட்சத்தில் தெரிசித்து அநுபவிக்கின்றார்களாதலால், அந்தப் புண்ணியர்கள் கடவுளைக் கண்டவர்களென்றும் கடவுளின்பத்தை அனுபவிக்கின்ற முத்தரென்றும் அறியவேண்டும்.—பசி நீங்க உண்டு சந்தோஷித்தவர்கள் இந்தப் புண்ணியர்களைத் தெய்வமாகப் பாவிக்கின்றார்களாதலால், இவர்களே தெய்வமுமென்று உண்மையாக அறியவேண்டும்.

**ஜீவகாருண்ய** வொழுக்கம் உடையவர்களாகி ஜீவர்களைப் பசியேன்கின்ற அபாயத்தில் நின்றும் நீங்கச்செய்கின்ற உத்தமர்கள் எந்த ஜாதியாராயினும்,—எந்தச் சமயத்தாராயினும்,—எந்தச் செய்கையையுடையவர்களாயினும்,—தேவர், முனிவர், சித்தர், யோகர், முதலிய யாவராலும் வணங்கத்தக்க சிறப்புடையவர் ஆவார்களென்று சர்வ சக்தியையுடைய கடவுள் சாட்சியாக சத்தியஞ் செய்யப்படுமென்று அறியவேண்டும்.

**இன்னும்** இந்த ஜீவகாருண்ய வொழுக்கத்தின் விரிவைச் சமரச வேதத்திற் கண்டுகொள்ளலாம்.

அருட் பெருஞ்ஜோதி

கட்டோடே கனத்தோடே வாழ்கின்றோ மென்பீர்
கண்ணோடே கருத்தோடே கருத்தனைக் கருதீர்
பட்டோடே பணியோடே திரிகின்றீர் தெருவில்
பசியோடே வந்தாரைப் பார்க்கவும் நேரீர்
கொட்டோடே முழக்கோடே கோலங்காண் கின்றீர்
குணத்தோடே குறிப்போடே குறிப்பதைக் குறியீர்
எட்டோடே யிரண்டுசேர்த் தெண்ணவும் அறியீர்
எத்துணை கொள்கின்றீர் பித்துல கீரே.

---

உ

அருட்பெருஞ்ஜோதி

சன்மார்க்க விளக்கத்தின் முதற்பிரிவாகிய

# ஜீவகாருண்ய ஒழுக்கம்

(இரண்டாவது பிரிவு)

திருச்சிற்றம்பலம்



உலகத்தில் உயர்பிறப்பாகிய மனிதப் பிறப்பைப் பெற்றுக் கொண்டவர்கள், இந்தப் பிறப்பினால் அடையத்தக்க தலைப்பட்ட ஆன்ம இன்ப சுகத்தைக் காலமுள்ள பொழுதே விரைந்து அறிந்து அடையவேண்டும்.

**1. அந்தத் தலைப்பட்ட ஆன்ம இன்பவாழ்வு எத்தனை வகை? என்று அறிய வேண்டில்:—**

இம்மையின்ப வாழ்வு, மறுமை இன்பவாழ்வு, பேரின்பவாழ்வு, என மூன்று வகையென்று அறியவேண்டியது.

## 1. இம்மை யின்ப வாழ்வு

அவற்றுள் சிறியதேக கரணங்களைப் பெற்றுச் சிறிய முயற்சியால் சிறிய விடயங்களைச் சில நாள் அநுபவிக்கப்படுகின்ற இன்பத்தை இம்மை யின்ப வாழ்வு என்றறிய வேண்டும்.

### இம்மையின்ப லாபம்

இம்மை இன்ப லாபமாவது:—மனிதப் பிறப்பில்,—தேகத்திலும், கரணங்களிலும்,—புவனத்திலும்,—போகங்களிலும்,—குறைவின்றி நல்ல அறிவுடையவர்களாய்,—பசி, பிணி, கொலை முதலிய தடைகளில்லாமல், உறவினர், சிநேகர்,அயலார் முதலியருந் தழுவ,—சந்ததி விளங்கத்தக்க சற்குண முள்ள மனைவியோடு,—விடயங்களைச் சிலநாள் அநுபவிக்கின்றதை இம்மை யின்பலாபம் என்றறிய வேண்டும்.

இம்மை இன்பத்தை அடைந்தவர் பெருமை எது? என்று அறியவேண்டில் :—

அன்பு, தயை, ஒழுக்கம், அடக்கம், பொறுமை, வாய்மை, தூய்மை முதலிய சுபகுணங்களைப் பெற்று, விடய இன்பங்களை வருந்தி முயன்று, அனுபவித்துப் புகழ்பட வாழ்தலென்று அறியவேண்டும்.

## 2. மறுமை யின்ப வாழ்வு

மறுமையின்ப வாழ்வாவது யாது? எனில் :—

உயர் பிறப்பில் பெரிய தேககரணங்களைப் பெற்று பெரிய முயற்சியால் பெரிய விஷயங்களைப் பலநாள் அனுபவிக்கின்ற இன்பத்தை மறுமையின்ப வாழ்வு என்று அறியவேண்டும்.

### மறுமை யின்ப லாபம்

மறுமையின்ப லாபம் எது? என்னில் :—

உயர் பிறப்பைப்பெற்று இம்மையின்ப லாபத்தில் குறிக்கப்பட்ட நற்குணங்களெல்லாம் பொருந்த உயர் நிலையில் சுத்தவிடயங்களைப் பலநாள் அனுபவிக்கின்ற இன்ப லாபத்தை மறுமையின்ப லாபமென்றறிய வேண்டும்.

மறுமையின்ப லாபத்தை யடைந்தவர் பெருமை யாது? என்றறிய வேண்டில் :—

அன்பு, தயை முதலிய சுபகுணங்களைப் பெற்றுச் சுத்தவிடய இன்பங்களை எண்ணியபடி தடைபடாமல் முயன்று பல நாளனுபவித்துப் புகழ்பட வாழ்தலென்றறிய வேண்டும்.

## 3. பேரின்ப வாழ்வு

பேரின்ப வாழ்வாவது :—

எல்லாத் தேகங்களையும், எல்லாக் கரணங்களையும், எல்லாப் புவனங்களையும், எல்லாப் போகங்களையும், தமது பூரண இயற்கை விளக்கமாகிய அருட்சத்தியின் சந்நிதி விசேடத்தால் தோன்றி விளங்க விளக்கஞ் செய்விக்கின்ற பூரண இயற்கை உண்மை வடிவினராகிய கடவுளின் பூரண இயற்கை இன்பத்தைப் பெற்று, எக்காலத்தும், எவ்விடத்தும், எவ்விதத்தும், எவ்வளவும் தடைபடாமல் அனுபவிக்கப்படுகின்ற ஒப்பற்ற அந்தப் பெரிய இன்பத்தைப் பேரின்ப வாழ்வு என்றறிய வேண்டும்.

## பேரின்ப லாபம்.

பேரின்ப லாபம் யாது? எனில் :—

யாவுந் தாமாய் விளங்குவதே.

—∞—

**2.** பேரின்ப லாபத்தையடைந்தவர் பெருமை எது? என்றறிய வேண்டில் :—

**தோல்**, நரம்பு, என்பு, தசை, இரத்தம், சுக்கிலம், முதலிய அசுத்த பூத காரியங்களும்,—அவற்றின் காரணங்களாகிய அசுத்த பிரகிருதி அணுக்களுமாகிய தேகத்தை மாற்றி, மாற்று இவ்வளவு என்றறியப்படாத உயர்ந்த பொன்னாகிய சுத்த, பூத காரிய சுத்த தேகத்தையும், பொன்வடிவாகத் தோற்றுதல் மாத்திரமே யன்றிப் பரிசிக்கப்படாத சுத்த பூதகாரண பிரணவ தேகத்தையும், தோன்றப்படுதலின்றி விளங்குகின்ற ஞான தேகத்தையும், பெற்றவர்களாயிருப்பார்கள்.

**உள்ளே** மண்ணினது திண்மையால் தறிக்கப்படார்கள் ;—புறத்தே மண் கல் முதலியவற்றால் எறியினும், அவை அவர் வடிவில் தாக்குவன வல்ல ;—உள்ளே நீரினது தண்மையால் குளிரப்படார்கள் ;—புறத்தே நீரிலழுத்தினும் அவர் வடிவம் அழுந்தாது ;—உள்ளே நெருப்பினது வெம்மையால் சுடப்படார்கள் ;—புறத்தே நெருப்பிற் சுடினும் அவர் தேகத்தில் சூடும் வடுவும் தோன்றுவனவல்ல ;—உள்ளே காற்றினது ஊக்கத்தால் அசைக்கப்படார்கள் ;—புறத்தே காற்று அவர் வடிவைப் பரிசித்தசைக்கமாட்டாது ;—உள்ளே ஆகாயத்தின் கலப்பினால் அந்தரிக்கப் படார்கள் ; — புறத்தே ஆகாயம் அவர் தேகத்தை அந்தரிக்க மாட்டாது ;—ஆதாரத்தி லன்றி நிராதாரத்திலும் அவர் தேகம் உலாவும்.

எண்சீரடி யாசிரிய விருத்தம்

காற்றாலே புவியாலே ககனமத னாலே
கனலாலே புனலாலே கதிராதி யாலே
கூற்றாலே பிணியாலே கொலைக்கருவி யாலே
கோளாலே பிறவியற்றாங் கொடுஞ்செயல்க ளாலே
வேற்றாலே யெஞ்ஞான்றும் அழியாதே விளங்கும்
மெய்யளிக்க வேண்டுமென்றேன் விரைந்தளித்தா னெனக்கே
ஏற்றாலே யிழிவெனநீர் நினையாதீ ருலகீர்
எந்தையருட் பெருஞ்ஜோதி யிறைவனைச்சார் வீரே.

(6-ந் திருமுறை. பக்கம் 366—64)

அவரது கண்கள் முதலிய கரணேந்திரியங்களும், வாக்கு முதலிய கர்மேந்திரியங்களும் ;—பார்த்தல் முதலிய விஷயங்களேயும், பேசுதல் முதலிய விஷயங்களேயும் பற்றுவனவல்ல. தயையினுல் விஷயங்களேப் பற்றவேண்டில் சுவர், மலே முதலிய தடைகளும்,— அவர் கண்களே மறைப்பனவல்ல; — அண்ட பிண்டங்களில் அகம் புறம் முதலிய எவ்விடத்துமுள்ள விடயங்களே அவர் கண்கள், — இருந்தவிடத்து இருந்தே கண்டறியும், — அண்ட பிண்டங்களில் எவ்விடத்திருந்து பேசினும், அவர் செவிகள் இருந்த இடத்திருந்தே கேட்டறியும், — எவ்விடத்தில் இருக்கின்ற ரசங்களேயும் அவர் நா இருந்த இடத்திருந்தே சுவைத்தறியும், — எவ்விடத்திருக்கின்ற பரிசங்களேயும் அவர் மெய் இருந்தவிடத்திருந்தே பரிசித்தறியும்,—எவ்விடத்திருக்கின்ற கந்தங்களேயும் அவர் மூக்கு இருந்த இடத்திருந்தே முகந்தறியும்,—எவ்விடத்திருக்கின்றவர்களுக்கும் அவரது கைகள் இருந்த விடத்திருந்தே கொடுத்தல் கூடும்.—எவ்விடத்திலும் அவரது கால்கள் இருந்த விடத்திருந்தே நடத்தல் கூடும்.—அவரது வாக்கு எவ்விடத்திருக்கின்ற எவ்வெவர்களோடும் இருந்த விடத்திருந்தே பேசுதல் கூடும்.—மற்ற இந்திரியங்கள் இருந்த விடத்திருந்தே எவ்விடத்தும் ஆனந்தித்தல்கூடும்.—அவரது மன முதலான கரணங்கள் எப்படிப்பட்ட விஷயங்களேயும் பற்றுவனவல்ல ;—தயவினுல் பற்றத்தொடங்கில், எல்லா உயிர்களினது எல்லாச் சங்கற்ப விகற்பங்களேயும் ஒரு நிமிடத்தில் ஒருங்கே நினேத்து விசாரித்து நிச்சயித்துக் கொள்ளும்.—அவரறிவு ஒன்றையும் சுட்டியறியாது ;—தயவினுல் சுட்டியறியத் தொடங்கில், எல்லா அண்டங்களேயும், எல்லா வுயிர்களேயும் எல்லாப் பண்புகளேயும், எல்லா அனுபவங்களேயும், எல்லாப் பயன்களேயும், ஒருங்கே ஒரு நிமிடத்தில் சுட்டியறியும்.—அவர்கள் நிர்க்குணத்தராவார்கள்,—அல்லது, சாத்துவித தாமச இராசத முதலிய முக்குணங்களாலும் உள்ளே விகாரப்படார்கள் ;—புறத்தே அவரது குணங்கள் கரணங்களேப் பற்றுவனவல்ல.—உள்ளே பிரகிருதியினுல் மூடப்படார்கள் ;—புறத்தே அவரது பிரகிருதி குணங்களேப் பற்றுவனவல்ல.—உள்ளே கால தத்துவத்தால் வேற்றுமைப்படார்கள் ;—புறத்தே காலத்தால் அவரது திருமேனி தடைபடாது.—உள்ளே நியதி அளவால் அளக்கப்படார்கள் ;—புறத்தே நியதியால் அவரது திருமேனி அரைபடாது.—அன்றிக் காலம், வித்தை, ராகம், புருடன் முதலிய மற்றைத் தத்துவங்களும் தத்துவ காரியங்களும் அவர்களுக்கு இல்லே.—மாயையால் பேதப்படார்கள் ;—சுத்தமகா மாயையைக்கடந்து அதன்மேல் அறிவுருவமாக விளங்குவார்கள்.

ஆகாரம், நித்திரை, மைதுனம், பயம் என்பவைகளால் தடைபடார்கள். அவர்கள் தேகத்திற்குச் சாயை, வியர்வை, அழுக்கு, நரை, திரை, மூப்பு, இறப்பு முதலிய குற்றங்கள் உண்டாவனவல்ல. பனி, மழை, இடி,

வெயில் முதலியவற்றாலும், இராக்கதர், அசுரர், பூதம், பிசாசு முதலிய வற்றாலும், தேவர், முனிவர், மனிதர், நரகர், மிருகம், பறவை, ஊர்வன, தாபரம் என்பவைகளாலும், — எவ்விடத்தும், — எக்காலத்தும்,—அவர் தேகம் வாதிக்கப்படாது ;—வாள், கத்தி முதலிய கருவிகளாலும், கண்டிக்கப்படாது ;—எல்லா அண்டங்களும் அணுக்கள்போலச் சிறிதாகத் தோன்றலும், எல்லா அணுக்களும் அண்டங்கள் போலப் பெரிதாகத் தோன்றலும் அவர் தேகத்திற்கு உரித்து;—இறந்தோரை எழுப்புதல்,—வார்த்திபரை வாலிபராக்கல்—முதலிய கருமசித்திகளும்,—யோக சித்திகளும்,—ஞானசித்திகளும்,—அவர் சந்நிதியில் விளங்கும்.—சிருஷ்டித்தல்,—காத்தல்,—அழித்தல், — மறைத்தல்,—அனுக்கிரகித்தல்,—என்கிற கிருத்தியங்களும்,—அவர் நினைத்தமாத்திரத்தில் நடக்கும்.—பஞ்ச கர்த்தாக்களும் அவர் கடைக்கண் பார்வையால் தங்கள் தங்கள் தொழில் நடத்துவார்கள்.—அவர்கள் அறிவு கடவுளறிவாக இருக்கும், அவர்கள் செய்கை கடவுள் செய்கையாக இருக்கும். அவர்கள் அனுபவம் கடவுள் அனுபவமாயிருக்கும். சர்வ சக்தியுடையவர்களாய் எக்காலத்தும் அழிவில்லாதவர்களாய், ஆணவம், மாயை, கன்மம் என்னும் மும்மலங்களும், அம்மல வாதனைகளும், இல்லாதவர்களாய், பேரருள்வண்ண முடையவர்களாய் விளங்குவார்கள். சடமாகிய ஒரு துரும்பும் அவரது திருநோக்கத்தால் உயிர்பெறும். பஞ்ச கிருத்தியங்களும் செய்யும். அவரது பெருமை வேதாந்த, சித்தாந்த கலாந்த, போதாந்த, நாதாந்த, யோகாந்தம் என்கின்ற ஆறந்தங்களிலும் விளங்கும் ; அவற்றைக் கடந்தும் விளங்குமென்று அறியவேண்டும்—இவை பேரின்பத்தை யடைந்தவர்கள் பெருமையென்று அறியவேண்டும்.

---

**3. இம் மூவகை இன்ப லாப வாழ்வையும் எதனால் பெறக் கூடும்? என்றறிய வேண்டில் :—**

**கடவுளின்** இயற்கை விளக்கமாகிய அருளின் ஏகதேசத்தைக் கொண்டும் அருட்பூரணத்தைக் கொண்டும் அடையக்கூடுமென்று அறிய வேண்டும்.

---

**4. மூவகை இன்பங்களில் அருளின் ஏகதேசத்தைக்கொண்டு அடையத்தக்கவை எவை? அருட்பூரணத்தைக்கொண்டு அடையத்தக்கது யாது? என்றறிய வேண்டில் :—**

**இம்மையின்ப லாபம்** மறுமையின்ப லாபம்: என்கின்ற இரண்டையும் அருளின் ஏகதேசத்தைக் கொண்டு அடையக்கூடுமென்றும் ;

பேரின்பலாபமென்கின்ற ஒன்றையும், அருட்பூரணத்தைக்கொண்டு அடையக்கூடுமென்றும் அறியவேண்டும்.

**5. கடவுளின் இயற்கை விளக்கமாகிய அருள் எந்த வண்ணம் உடையது? என்றறிய வேண்டில்:—**

சொல்லுவார் சொல்லும் வண்ணங்களும்,—நினைப்பார் நினைக்கும் வண்ணங்களும்,—அறிவார் அறியும் வண்ணங்களும்,—அநுபவிப்பார் அநுபவிக்கும் வண்ணங்களும்,—ஆகிய சர்வசத்தி வண்ணங்களும்,—தனது ஏகதேச வண்ணங்களாக விளங்க விளக்கி விளங்குகின்ற பூரணவிளக்க வண்ணத்தையுடையது என்று அறியவேண்டும்.

**6. அந்த அருள் எவ்விடத்து விளங்குகின்றது? என்று அறிய வேண்டில்:—**

நோக்குவார் நோக்குமிடம், நோக்கப்படுமிடம்,—கேட்பார், கேட்குமிடம், கேட்கப்படுமிடம்,—சுவைப்பார், சுவைக்குமிடம், சுவைக்கப்படுமிடம்,—முகருவார், முகருமிடம், முகரப்படுமிடம்,—பொருந்துவார், பொருந்து மிடம், பொருந்தப்படு மிடம், பேசுவார், பேசு மிடம், பேசப்படுமிடம்,—செய்வார், செய்யுமிடம், செய்யப்படுமிடம்,—நடப்பார், நடக்குமிடம், நடக்கப்படுமிடம்,—விடுவார், விடுமிடம், விடப்படுமிடம்,—நினைப்பார், நினைக்குமிடம், நினைக்கப்படுமிடம், விசாரிப்பார், விசாரிக்குமிடம், விசாரிக்கப்படுமிடம்,—துணிவார், துணியுமிடம், துணியப்படுமிடம்,—தூண்டுவார், தூண்டுமிடம், தூண்டப்படுமிடம்,—அறிவார், அறியுமிடம், அறியப்படுமிடம்,—அநுபவிப்பார், அநுபவிக்குமிடம், அநுபவிக்கப்படுமிடம்,—முதலிய எவ்விடங்களிலும் எக்காலத்தும் விளங்குகின்றதென்று அறியவேண்டும்.

**7. அந்த அருளை எதனாற் பெறக்கூடும்? என்றறிய வேண்டில்:—**

**ஜீவகாருண்ய ஒழுக்கத்தினாற்** பெறக்கூடுமென்றறியவேண்டும்.

**8. ஜீவகாருண்ய ஒழுக்கத்தினால் அருளைப் பெறக்கூடுமென்பது எப்படி? என்றறிய வேண்டில்:—**

**அருள் என்பது:**—கடவுளுடைய இயற்கை விளக்கம்—அல்லது கடவுள் தயவு. ஜீவகாருண்யமென்பது:—ஆன்மாக்களின் இயற்கை விளக்

கம்—அல்லது ஆன்மாக்கள் தயவு. இதனால், ஒருமை—ஒருமைக் காரணமாகிய சிறிய—சிறிய விளக்கத்தைக் கொண்டு பெரிய விளக்கத்தைப் பெறுதலும்,—சிறிய தயவைக்கொண்டு பெரிய தயவைப் பெறுதலும் கூடும். சிறு நெருப்பைக்கொண்டு பெருநெருப்பைப் பெறுதல் போல வென்றறியவேண்டும்.

இதனால் ஜீவகாருண்ய ஒழுக்கமே சன்மார்க்கமென்றறியப்படும்: ஜீவகாருண்யம் விளங்கும்போது,—அறிவும் அன்பும் உடனாக விளங்கும்;—அதனால், உபகாரசத்தி விளங்கும்;—அந்த உபகாரசத்தியால், எல்லா நன்மைகளும் தோன்றும்,—ஜீவகாருண்ய மறையும்போது, அறிவும் அன்பும் உடனாக நின்று மறையும்;—அதனால், உபகாரசத்தி மறையும், உபகாரசத்தி மறையவே, எல்லாத் தீமைகளுந் தோன்றும்.

ஆகலின், புண்ணியமென்பது ஜீவகாருண்ய மொன்றேயென்றும், பாவமென்பது ஜீவகாருண்யமில்லாமை யொன்றேயென்றும் அறியவேண்டும். அன்றி ஜீவகாருண்ய ஒழுக்கத்தினால் வரும் விளக்கமே கடவுள் இன்பமென்றும்,—இவ் விளக்கத்தையும் இன்பத்தையும் பலகாலறிந்து அடைந்து அனுபவித்து நிறைவுபெற்ற சாத்திய ஞானிகளே மேற்குறித்த பேரின்பலாபத்தைப் பெற்றவர்களென்றும், அவர்களே கடவுளை அறிவாலறிந்து கடவுள்மயமானவர்களென்றும் சத்தியமாக அறியவேண்டும்.

## 9. ஜீவகாருண்ய ஒழுக்கத்தின் இலக்கணம் என்ன? என்று அறியவேண்டில் :—

ஜீவர்களுக்கு ஜீவர்கள் விஷயத்தில் பொதுவாக உண்டாகின்ற ஆன்ம உருக்கத்தைக்கொண்டு கடவுள் வழிபாடுசெய்து வாழ்தல் என்று அறியவேண்டும்.

## 10. ஜீவர்கள் விஷயமாக உண்டாகின்ற ஆன்ம உருக்கத்தைக்கொண்டு கடவுள் வழிபாடு செய்வது எப்படி? என்றறிய வேண்டில் :—

ஜீவர்களுக்கு ஜீவர்கள் விஷயமாக ஆன்ம உருக்கம்—காருண்யம்—உண்டாக உண்டாக அந்த ஆன்மாவின் உள்ளிருக்கின்ற கடவுள் விளக்கமாகிய அருள் வெளிப்பட்டுப் பூரணமாக விளங்கும்; அத்திருவருள் விளங்கவே கடவுள் இன்பம் அனுபவமாகிப் பூரணமாகும்.

**11. ஆன்ம உருக்கம் உண்டாக உண்டாக ஆன்மாவின் உள்ளிருக்கின்ற கடவுள் விளக்கமாகிய அருள் வெளிப் படுவது எப்படி? என்றறிய வேண்டில் :—**

**தயிருக்கும்** கட்டைக்கும் கடைதலால் நெகிழ்ச்சி உண்டாக உண்டாக அதன் உள்ளிருக்கின்ற வெண்ணெயும் நெருப்பும் வெளிப்படுவதுபோல,—வெளிப்படுமென்று அறியவேண்டும்.

**திருவருள் விளங்குவதினால் கடவுள் இன்பம் அனுபவ மாகிப் பூரணமாவது எப்படி? என்றறிய வேண்டில் :—**

**வெண்ணெயும்** நெருப்பும் வெளிப்படவே அவற்றின் உண்மைத் தன்மை அனுபவமாகிப் பூரணமாவதுபோல,—கடவுள் இன்பம் பூரணமாகு மென்றறிய வேண்டும்.

**ஜீவர்களுக்கு ஜீவர்கள் விஷயமாக ஆன்ம உருக்கம் எப் போது வெளிப்படும்? என்றறிய வேண்டில் :—**

**பசி**, கொலை, பிணி, ஆபத்து, தாகம் பயம், இன்மை, இச்சை இவைகளால் ஜீவர்கள் துக்கத்தை அனுபவிக்கக்கண்ட போதும்,—கேட்ட போதும்,—அறிந்தபோதும்,—ஆன்ம உருக்கம் உண்டா மென்றறிய வேண்டும்.

## பசி என்பது

**பசி என்பது,**—ஆகாரம் பெறுமையினால் வயிற்றினுட்பற்றி நின்று தேகத்தின் அகத்தும் புறத்தும் உள்ள கருவி கரணங்களின் தன்மைகளைச் சுடுதல் செய்து அறிவை மெலிவித்து ஆன்மாவை வெளிப்படுத்துவிப்பதற்கு முதற்காரணமாகிய விகற்ப மாயாகாரியப் பிண்டப்பகுதி நெருப்பு.

## கொலை என்பது

**கொலை என்பது,**—தேகத்தின் அகத்தும் புறத்துமுள்ள கருவி கரணங்களைப் பல வேறு கருவிகரணப் புடைபெயர்ச்சிகளால் பகைப் புண் டாகக் கலகஞ்செய்து அறிவை மெலிவித்து ஆன்மாவை வெளிப்படுத்துவித் தற்கு நிமித்தமாகிய விகற்ப பூதகாரிய கோடுந்தோழில்.

## பிணி என்பது

**பிணி யென்பது :**—வாத பித்த சிலேத்தும விகற்பங்களால் மாறு பட்டு தேகத்தின் அகத்தும் புறத்தும் உள்ள கருவி கரணங்களை நலிவு

செய்து அறிவை மெலிவித்து ஆன்மாவை வெளிப்படுத்துவித்தற்கு நிமித்த மாகிய நிறை விகற்ப மாயா காரியப் பிண்டப்பகுதி வேற்றுமை விளைவு.

## ஆபத்து என்பது

**ஆபத்து என்பது**:—அகங்காரத்தாலும், மறதியாலும், கரும வேறுபாட்டாலும், தேகபோக அனுபவங்களைத் தடுக்கின்ற விக்கினங்கள்.

## பயம் என்பது

**பய மென்பது** தேகமுதலிய கருவிகளுக்கு நட்டஞ் செய்வதாகிய விடயங்கள் நேரிட்டபோது கரணங்களுக்கும் அறிவுக்கும் உண்டாகின்ற நடுக்கம்.

## இன்மை என்பது

**இன்மை யென்பது** கல்வி செல்வம் முதலிய கருவிகளைத் தற் சுதந்தரத்திற் பெறுமை.

## இச்சை என்பது

**இச்சை யென்பது** அடையக்கருதிய விடயங்களில் அருமை குறித்து அவற்றை மேன்மேலும் கருதச்செய்கின்ற சித்தவிருத்தி என்று அறியவேண்டும்.

## முதற்பட்டதும்—இடைப்பட்டதும்

**இவற்றுள்** பசி கொலை, என்பவை இம்மை இன்பம், மறுமை இன்பம், பேரின்பம் என்கிற மூன்றையும் தடுத்தலால் முதற்பட்ட தடையென்றும்: பிணி, பயம், ஆபத்து, இன்மை என்பவை இம்மை மறுமை இன்பங்களைச் சிறிது தடுத்தலால் இடைப்பட்டன வென்றும் அறியவேண்டும்.

## ஜீவகாருண்யத்தின் வல்லபம்

**ஜீவகாருண்யத்தின் வல்லபம் யாதென்றறிய வேண்டில் :—**

**பிற** வுயிர்களிடத்துப் பசி கொலை முதலியவற்றுள் எதனாற் காருண்யந் தோன்றியதோ அதனால் அவ்வுயிர் வருந்தாதபடி அதை நீக்குதற்கு முயல்விப்பது அதன் வல்லபமென் றறியவேண்டும்.

## ஜீவகாருண்யத்தின் பிரயோஜனம்

**ஜீவகாருண்யத்தின் பிரயோஜனம் யாதென்றறிய வேண்டில் :—**

**உயிர்களுக்கு** இன்பம் உண்டுபண்ணுவது அதன் பிரயோஜனம் என்றறியவேண்டும்.

இந்த ஜீவகாருண்யத்தின் சொரூப சுபாவ வியாபக முதலியவைகளை மூன்றாவது பிரிவுள் கண்டு கொள்க.

---

# ஜீவகாருண்ய ஒழுக்கம்

## (மூன்றாவது பிரிவு)

**ஜீவகாருண்யமாகிய ஆன்ம உருக்கம் உண்டாவதற்கு உரிமையெது? என்றறியவேண்டில் :—**

திருச்சிற்றம்பலம்



**ஜீவர்களெல்லாம்** ஒரு தன்மையாகிய கடவுளியற்கை உண்மை ஏக தேசங்களாகி கடவுளருட்சத்தியால் பூதகாரிய தேகங்களில் வருவிக்கப்பட்ட படியால் இந்த ஜீவர்களெல்லாம் ஒருரிமை இனத்தவர்களேயாகும். சகோதரருள் ஒருவர் ஒரு ஆபத்தால் துக்கப்படுவதைக் கண்டபோதும்,—கேட்டபோதும்,—அறிந்தபோதும்,—அவர்தேகம் நமது சகோதர தேக மென்றும் தெரிந்துகொண்ட,—மற்றொரு சகோதரருக்கு உருக்கமுண்டாவது தேக வுரிமையால் என்று அறிவதுபோல,—ஒரு ஜீவன் ஒரு ஆபத்தால் துக்கப்படுவதைக் கண்ட போதும்,—கேட்டபோதும்,—அறிந்தபோதும்,—அந்த ஜீவனைத் தமது ஆன்ம இனம் என்று தெரிந்துகொண்ட மற்றொரு ஜீவனுக்கு உருக்கமுண்டாவது ஆன்ம உரிமையென்று அறியவேண்டும்.

**ஜீவர்கள் துக்கப்படுவதைக்கண்டபோதும் சிலர் ஜீவகாருண்யமில்லாமல் கடின சித்தர்களாயிருக்கின்றார்களே, இவர்களுக்கு ஆன்ம உரிமையில்லாமற்போவது என்? என்றறியவேண்டில் :—**

**துக்கப்படுகின்றார்களென்றும்** துக்கப்படுவார்களென்றும், அறியத்தக்க ஆன்ம அறிவு என்கின்ற **கண்ணனது** அஞ்ஞான காசத்தால் மிகவும் ஒளிமழுங்கின படியாலும், அவைகளுக்கு உபகாரமாகக் கொண்ட மன முதலான உபநயனங்களாகிய கண்ணாடிகளும் பிரகாசப் பிரதிபலித மில்லாமல் தடிப்புள்ளவைகளாக இருந்தபடியாலும் கண்டறியக் கூடாமையாயிற்று. அதனால் ஆன்ம உரிமை இருந்தும் ஜீவகாருண்யமில்லாமல் இருந்ததென்றறியவேண்டும்.

**ஆனால் இந்த ஆன்ம உருக்கம் என்கின்ற ஜீவகாருண்யத்திற்கு ஆற்றல் எவ்விடத்து உண்டாகுமென்று அறியவேண்டில் :—**

பசி, கொலை, பிணி முதலிய தடைகளில் எந்தத் தடைப்பற்றி ஜீவகாருண்யந் தோன்றியதோ அந்தத் தடையை நிவர்த்தி செய்கின்றவிடத்துத் தான் ஜீவகாருண்யத்திற்கு ஆற்றல் இருந்ததென்று அறியவேண்டும்.

**இதனால், 'ஜீவர்களுக்குப், பசி கொலை பிணி முதலியவற்றால் வருந்துன்பங்களெல்லாம் மனம் கண் முதலிய கரணேந்திரிய அனுபவங்களே யல்லது ஆன்ம அனுபவங்களல்ல: ஆகலில், ஜீவகாருண்யத்தால் விசேஷ பிரயோஜன மில்லையே' என்பார்க்கு உத்தரம் யாது? என்றறிய வேண்டில்:—**

இந்தத் தேகத்தில் ஆன்மாவும்—அறிவுக்கறிவா யிருக்கிற கடவுள் விளக்கமுந்—தவிர, கரணம், இந்திரியம் முதலிய மற்றத் தத்துவங்களெல்லாம் மூடமாகிய கருவிகளே யல்லது அறிவாகிய ஆன்மாக்களல்ல. ஆகலில், சுகதுக்கங்களை அறிவாகிய ஆன்மாக்கள் அனுபவிக்குமேயல்லது மூடமாகிய தத்துவங்கள் அனுபவிக்க அறியா. மனம் முதலான கரணங்களும், கண் முதலிய இந்திரியங்களும் ஜீவர் வாழ்க்கைக்குக் கடவுள் அருளால் கட்டிக்கொடுக்கப்பட்ட சிறிய வீட்டின் கருவிகளாகும். இன்ப துன்பங்களை வீட்டிலிருக்கின்றவன் அனுபவிப்பானல்லது வீட்டின் கருவிகளாகிய மண் கல், மரம், கால், தீ, நீர், முதலியவைக ளனுபவிக்க அறியமாட்டா.

அன்றியும், காசத்தால் ஒளி மழுங்கப்பட்டு உபநயனங்களாகிய கண்ணாடியால் பார்க்கின்ற கண்கள் துன்ப விஷயங்களைக் கண்டபோது—அக்கண்கள் நீர் சொரியுமே யல்லது கண்ணாடி நீர் சொரியாது. ஆகலில் ஆன்மதிருஷ்டிக்கு உபநயனங்களாக இருக்கிற மனம் முதலிய கருவிகள் சுகதுக்கங்களை அனுபவிக்க அறியாவென்று அறியவேண்டும்.

**ஒரு ஜீவனுக்குச் சுகம் நேரிட்டபோது மனம் மகிழ்கின்றது, துக்கம் நேரிட்டபோது மனந்தளர்கின்றது; என்றால், சுகதுக்கங்களையும் மனம் அனுபவிப்பதாக அறியப்படாதோ என்பவர்க்கு உத்தரம் யாது? என்றறிய வேண்டில்:—**

பளிங்கு வீட்டினுள் இருக்கின்ற வீட்டுத் தலைவனுடைய தேக விளக்கமும் தேகச் சோர்வும் அந்த வீட்டிற் பிரதிபலித்துப் புறத்தில் தோன்றுவது போலவும், கண்களின் மலர்ச்சியுஞ் சோர்வும் அக்கண்களிவிட்ட உபநயனங்களில் பிரதி பலித்துப் புறத்தில் தோன்றுவதுபோலவும், சுகதுக்கங்களால் ஆன்மாவுக்கு உண்டாகின்ற மகிழ்ச்சியும் தளர்ச்சியும் மனம் கண் முதலிய கரணேந்திரியங்களிற் பிரதிபலித்துப் புறத்தில் தோற்றுகின்றது.

அன்றியும் ஒரு வீட்டினுள் வைத்த தீபமானது மிகுந்த விளக்கமுள்ளதாக விளங்குகின்றபோது, அந்த வீடும் அந்த வீட்டின் கருவிகளும்

மிகவும் விளக்கமுள்ளதாக விளங்குகின்றன. அந்தத் தீபம் விளக்கம் குறையும்போது வீடும் வீட்டிலுள்ளவைகளும் விளக்கம் குறைகின்றன.

**ஆகலில், சுகதுக்கங்கள்** மனத்துக்கு அனுபவமல்ல வென்றும்,—ஆன்மாவுக்கே அனுபவமென்றும்,—அனுபவத்திற்கு கரணேந்திரியங்கள் ஆன்மாவுக்கு உபகாரக் கருவிகளே என்றும்,—பிரமாணிப்பதே உத்தமமென்றறிய வேண்டும்.

**கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட ஜீவர்களில் அநேகர், பசி, கொலை, பிணி, முதலியவற்றால் மிகவுந் துன்பப் படுவது எதனால்? என்றறிய வேண்டில்:—**

**முன் தேகத்தில்** ஜீவகாருண்ய ஒழுக்கத்தை விரும்பாமல்விட்டுக், கடின அறிவுள்ளவர்களாகித் துன்மார்க்கத்தில் நடந்த ஜீவர்களாதலால், கடவுள் விதித்த அருளாக்கினைப்படி பசி, கொலை, பிணி முதலியவற்றால் மிகவுந் துக்கப்படுகின்றார்களென்று அறியவேண்டும்.

**முன் தேகம் உண்டென்பது எப்படி? என்றறிய வேண்டில்:—**

**ஒரு வீட்டில்** குடிக்கூலி கொடுத்துக் குடியிருக்கவந்த ஒரு சமுசாரி, அதற்கு முன்னும் வேறொரு வீட்டில் குடிக்கூலி கொடுத்துக் குடித்தனம் செய்திருந்தானென்றும்,—வீடில்லாமல் குடித்தனம் செய்யமாட்டானென்றும்,—பின்வந்த வீட்டிலும் கலகம் நேரிட்டால் திரும்ப வேறொரு வீட்டில் குடிபோவானென்றும்,—தனக்கென்று சுதந்தரமாக ஒரு வீடு கட்டிக்கொண்டால் முன்போல் குடிக்கூலி கொடுத்துக் குடிபோவதை விடுவானென்றும் அறிவதுபோல;—இந்தத் தேகத்தில் ஆகாரக் கூலி கொடுத்துக் குடியிருந்த ஜீவன், இதற்கு முன்னும் வேறொரு தேகத்தில் அந்தக் கூலி கொடுத்து ஜீவித்திருந்ததென்றும்,—தேகமில்லாமல் ஜீவித்திருக்கமாட்டாதென்றும்,—இந்தத் தேகத்திலும் கலகம் நேரிட்டால் இன்னம் வேறொரு தேகத்திற் குடிபோகுமென்றும்,—தனக்கென்று சுதந்தரமாக நித்தியமாகிய அருட்டேகத்தைப் பெற்றுக்கொண்டால் பின்பு வேறொரு தேகத்தில் குடிபோக மாட்டாதென்றும் அறியவேண்டும்.

**சிலர் முன்தேகம் எடுத்ததும் பின்தேகம் எடுப்பதும் இல்லை, இப்பொழுது எடுத்ததேகம் அழிந்தால், தேகியும் அழிந்து விடுவானென்றும் சிலர் முத்தியடைவானென்றும் சிலர் பாவபுண்ணியங்களை எக்காலத்தும் அனுபவிப்பானென்றும் சிலர் தேகம்இல்லாமல்தேகம் அழிந்த**

**விதத்திருப்பா னென்றும் பலவாறு வாதிப்பது எத ஞல்? என்றறிய வேண்டில்:—**

**அவரவர்களும்** தேகமே ஆன்மாவென்றும்,—போகமே முத்தி யென்றும்—கொள்ளப்பட்டவர்களாதலால்,—மூடமாகிய தேகத்தில்,—அறிவாகிய ஆன்மா வொருவன் உண்டென்றும்,—அவனுக்குப் பந்தமுத்தி உண்டென்றும்,—முத்தியடைகின்ற பரியந்தம் பந்த விகற்பத்தால் வேறு வேறு தேகம் எடுப்பானென்றும்,—பிரத்யட்ச அனுபவமான பிரமாணங்களால் உண்மையை அறிந்துகொள்ளப்படாதவர்களென்றும்,—அவர்கள் கொள்கைக்குப் பிரமாணமும் யுத்தியும் அனுபவமும் இல்லையென்றும்,—அறிய வேண்டும்.

**ஜீவர்கள், தங்கள்** சுதந்தரத்தாலே தேகபோகங்களை யடைகின்றார்களேன்றால்,—தங்கள் இச்சைக்கடுத்த தேகங்களையும் போகங்களையும் அடையவேண்டும்.—அப்படி யின்றிச் சிலர் இச்சைக்கடுத்த பழுதற்ற அங்கமுள்ளவர்களாகவும்,—சுகங்களை யனுபவிக்கின்றவர்களாகவும்,—சிலர், இச்சைக்கு அடாத பழுதுள்ள அங்கமுள்ளவர்களாகவும், —துக்கங்களை அனுபவிக்கின்றவர்களாகவும்,—இருக்கின்றார்கள். ஆகலில், ஜீவர்கள் தேகபோகங்களைத் தங்களிச்சையால் அடைந்தவர்களல்லவென்றும்,

**அப்படியடைவது இயற்கை என்றால்:**—இயற்கை என்பது எக்காலத்தும் வேறுபடாமல் ஒரு தன்மையாக இருத்தல் வேண்டுமென்றும்—அப்படி ஒருதன்மையாக இராமல் பலவேறு வகைப்படுதலால் இயற்கையல்லவென்றும்,

**கடவுள் இச்சையென்றால்**—கடவுள் கருணையும் நீதியும் உடையவராதலில் எல்லா ஜீவர்களுக்கும் ஒரு தன்மையாகச் சுக அனுபவங்களையே அடைவிக்கவேண்டும்:—அப்படி யடைவிக்காமையால் கடவுளிச்சை யல்ல வென்றும்,

**கடவுளருளால் சிருஷ்டித்த முதல் சிருஷ்டியில்** தமது இயற்கை அனுபவிக்கும்படி விதித்த விதிகளைப் பழகாமையால், முயற்சி தவறினபடியால், அந்த அநாதிமல வாசனையின் முயற்சி பேதங்களால் பின் பல பல தேகபோகங்கள் இரண்டாவது சிருஷ்டியில் நேரிட்டதென்றும்,—பிரமாணித்தறிய வேண்டும்.

**எடுத்துக்கொண்ட தேகம்** தவறினல் வேறு தேகம் எடுப்பதில்லை யென்றால்,—முதல் சிருஷ்டி தொடங்கி இதுவரையில் அழிந்த தேகங்களுக்கு அளவில்லை;—அப்படியே ஆன்மாக்களுக்கும் அளவில்லை;—ஆகவே இனி ஆன்மாக்கள் தேகங்களை எடுக்காம லிருக்கவேண்டும். அப்படியில்லை;—

தேகங்களை எடுத்துக்கொண்டேயிருக்கிறார்கள். ஆயின் ஆன்மாக்களை நூதனமாகச் செய்து அது வருவதற்கு நூதன நூதனமாகத் தேகங்களை வருவிப்பதென்றால்,—நூதன நூதனமாகத் தேகமாத்திரம் செய்யக்கூடும்,—தேகத்திலிருக்கிற ஆன்மாவை நூதன நூதனமாகச் செய்யப்படாது,—ஆன்மா எக்காலத்தும் உள்ளதாய் விளங்கப்பட்டது,—அது தோன்றுதலும் அழிதலுமில்லை,—அதை ஆக்கவும் அழிக்கவும்படாது.—ஆன்மாக்களும் குடத்தைப்போல் செய்யப்படுவதானால்,—சுகதுக்கங்களை அனுபவிக்கவறியாது,—புண்ணிய பாவங்களை அடையமாட்டாது.—குடம் அழிவதுபோல் அழிந்து போய்விடும்.—அழியுமானால், பந்தமுத்திகளுமில்லை ;—புண்ணிய பாவங்களுமில்லை.—ஆதலால் குடம் உடைகின்றபோது குடத்தினுள் இருந்த காற்றும் ஆகாயமும் உடையாமலிருப்பது சிறுவர்களுக்கும் தெரியும்.—ஆகலில், தேகம் அழியும்போது தேகத்தினுள் இருக்கின்ற ஆன்ம விளக்கமும் கடவுள் விளக்கமும் அழியாதென்றும்,—ஆன்மாக்கள் முயற்சி பேதத்தால் தேக போக பேதங்களை யடைவது உண்மையென்றும்,—யுத்தியால் அறிய வேண்டும்.

ஒரு தாய் தந்தைகளுக்கு ஒரு காலத்தில் இரட்டைப் பிள்ளை பிறக்கின்றது. அவற்றுள் ஒரு பிள்ளை சிவத்தது—ஒரு பிள்ளை கறுத்தது; ஒரு பிள்ளை அங்கப்பழுதுள்ளது ஒரு பிள்ளை அங்கப் பழுதில்லாதது; ஒரு பிள்ளை பால் குடிக்கின்றது ஒரு பிள்ளை பால் குடிக்கில் சத்தம் பண்ணுகின்றது; ஒரு பிள்ளை வியாதியுள்ளது ஒரு பிள்ளை வியாதியில்லாதது; ஒரு பிள்ளை இரண்டு வயதில் பேசுகின்றது; ஒரு பிள்ளை பேசத் தெரியாமலிருக்கின்றது; இந்த இரட்டைப் பிள்ளைகளுக்கு இந்த பேதம் எவ்விடத்தில் யாதொரு ஏதுக்களுமில்லாமல் வந்ததை யூன்றி விசாரிக்கில், முன்பிறப்பில் எடுத்ததேகத்தின் கர்மமாகிய முயற்சிபேதங்களென்றும்,—இந்த இரட்டைப் பிள்ளைக்கு மூன்று வயதில் விளையாடும்போது தனித்தனி தாய் தந்தைகள் கொடுத்த தின்பண்டங்களை வைத்துத் தின்கிற தருணத்தில் இவ்விரண்டு பிள்ளைகளும் தவிர வேறுபிள்ளை யொன்றுவந்தால் அதைக்கண்டு இவ்விருவரில் ஒரு பிள்ளை தன் கையிலிருக்கின்ற தின்பண்டத்தைக் கொடுக்கின்றது ; மற்றொரு பிள்ளை கொடுக்கப்படாதென்று தடுக்கின்றது; ஒரு பிள்ளை புத்தகத்தை எடுத்துச் சிறுவர் படிக்கின்றதுபோல் படிக்கின்றது மற்றொரு பிள்ளை புத்தகத்தைப் பிடுங்கி யெறிந்து படிக்கப்படாதென்று அழுகின்றது: ஒரு பிள்ளை பயப்படுகின்றது, மற்றொரு பிள்ளை பயப்படாமலிருக்கின்றது—இப்படியே இந்தப் பிள்ளைகளுக்கு தயை, அன்பு, அறிவு, செய்கை முதலியவைகள் தாய் தந்தையர்கள் கற்பிக்காத காலத்திற்றானே உள்ளதாகவும் இல்லாததாகவும் எப்படி வந்ததென்று விசாரிக்கத் தொடங்கில், இந்த இரண்டு பிள்ளைகளுக்கும் முன் பிறப்பில் எடுத்த தேகத்திலிருந்த வாசனை இந்தப் பிறப்பில் இந்தத் தேகத்தில் கற்பியாமல் வந்த

தென்றும்—அனுபவத்தால் கருதி யறியவேண்டும். இப்படி யறிந்தால் ஜீவர்களுக்கு முன்னும் பின்னும் தேகமுண்டேன்பது நன்றாகத் தெரியும். இப்படி யறியமாட்டாமையால் பிறப்பில்லை என்கிறார்களென் றறிய வேண்டும்.

**அன்றி, இந்தத் தூலதேகம்** அழியாம லிருக்கின்றபோதே சொற்பனத்தில் ஆன்மா வேறு வேறு தேகமெடுத்துப் பல பல விசித்திரங்களை யனுபவிக்கின்றதானால், இந்தத் தேகம் நீங்கும்போது வேறு தேகமெடுத்து வாசனைக்கடுத்த அனுபவங்களை அனுபவிக்குமென்பதைச் சொல்ல வேண்டுவதில்லை.

**அன்றி, சித்தி விசேஷத்தால்** இந்தத் தேகத்திலிருந்த ஒருவன் இந்தத் தேகத்தைவிட்டு வேறு தேகத்திற்குப் பிரவேசிக்கின்றான் என்றால், இந்தத் தேகம் அழியும்போது இதிலிருந்த ஆன்மா கன்மபேதத்தால் வேறு தேகத்தில் பிரவேசிக்குமென்பதைச் சொல்லவேண்டுவதில்லை.

**அன்றி, ஒரு பட்சியானது** காலவேற்றுமையாலும் குணவேற்றுமையாலும் முன் முட்டையென்கின்ற ஒரு தேகத்திலிருந்து, பின்பு குஞ்சு என்கின்ற மற்றொரு தேகத்தில் வருகிறதானால், ஆன்மாக்கள் கர்ம பேதத்தால் இந்தத் தேகத்திலிருந்து வேறு தேகத்தில் வருமென்பது சொல்ல வேண்டுவதில்லை.

**அன்றி, ஒரு குளவியால்** ஒரு கிருமி, புழுவென்கிற தேகத்திலிருந்து குளவியென்கிற தேகத்தில் வருமானால், கருமத்தினால் ஒரு ஆன்மா ஒரு தேகத்திலிருந்து மற்றொரு தேகத்தில் வருமென்பதைச் சொல்ல வேண்டுவதில்லை.

**அன்றி, ஒரு ஆன்மா** ஒரு பிறப்பிற்றானே சிசு தேகத்திலிருந்து பாலதேகத்திலும், பாலதேகத்திலிருந்து வாலிபதேகத்திலும், வாலிபதேகத்திலிருந்து வார்த்திபதேகத்திலும் வருமானால், அந்த ஆன்மா கன்மபேதத்தால் வேறு பிண்ட தேகத்தில் வருமென்பதைச் சொல்லவேண்டுவதில்லை.

**அன்றி, மந்திர தந்திரபேதத்தால்** ஒரு பிறப்பிற்றானே பெண் தேகத்திலிருந்து ஆண்தேகத்திலும், ஆண்தேகத்திலிருந்து பெண் தேகத்திலும் ஆன்மாக்கள் வருமானால், கர்மபேதத்தால் வேறு தேகம் எடுக்கும் என்பது சொல்ல வேண்டுவதில்லை.

**அன்றி, ஒரு தாபர தேகத்திலிருந்த** ஆன்மாவானது அந்தத் தேகத்திற்றானே மரகதக்கிருமி என்கின்ற புழு தேகத்தில் வருகின்றது. அன்றி, ஓர் எறும்பானது அந்தத் தேகத்திலிருந்தே பீலிகபட்சி என்கின்ற தேகத்தில் வருகின்றது. அன்றி, ஓர் பாம்பானது அந்தத் தேகத்திலிருந்தே

சர்ப்பபட்சியென்கிற வேறொரு தேகத்தில் வருகின்றது. இப்படியே மனிதர், மிருகம், பறவை, ஊர்வன, நீர் வாழ்வன, தாபர முதலிய அந்தந்த தேகங்களிலிருக்கின்ற ஆன்மாக்கள் அந்தந்த தேகத்திலிருந்தே வேறு தேகங்களை யெடுக்கின்றனவானால், அந்தந்த தேகங்களழியும் போது வேறு தேகங்களெடுக்கு மென்பது சொல்லவேண்டுவதில்லை.

**சிலர் 'முன்தேகம் உண்டென்பது உண்மையானால், அந்தத் தேகத்தில் நீ யார்? உன் சரிதமெது? சொல்' என்கின்றார்களே; அவர் கேள்விக்கு உத்தரம் என்னென்றறிய வேண்டில்:—**

**எழுபது வயதுள்ள** ஒருவனைப் பார்த்து உனக்கு ஐந்து வயதில் உன் சரித்திரம் என்னவென்று கேட்டபோது 'நேற்றைப் பொழுதில் நடந்த என் சரித்திரம் இன்றைப் பொழுதில் அவஸ்தையால் சொல்லத் தெரியாது விழிப்பேனென்றால், என் ஐந்து வயதின் சரித்திரத்தை எப்படிச் சொல்ல மாட்டுவேன்? நீயெப்படிக் கேட்கக்கூடும்?' என்கின்றான். ஒரு பிறப்பில் நடந்த அவனது சரித்திரங்களையே அவஸ்தை பேதங்களால் அறிந்து சொல்ல மாட்டாமல் திகைப்புண்டாவதென்றால், முன் தேகத்தில் நடந்த சரித்திரங்களை அநேக அவஸ்தையில் திகைக்கின்ற நாம் எப்படியறிந்து சொல்லக்கூடும் என்பதே உத்தரம் என்றறியவேண்டும்.

ஜீவகாருண்ய ஒழுக்கம் மூன்றாவது பிரிவு முற்றிற்று.

**சன்மார்க்க விளக்கத்தின் முதற்பிரிவாகிய**

ஜீவகாருண்ய ஒழுக்கம் முற்றிற்று*.

---

அறுசீரடியாசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்

மருவாணைப் பெண்ணாக்கி யொருகணத்திற் கண்விழித்து வயங்கு மப்பெண்
உருவாணை யுருவாக்கி யிறந்தவரை யெழுப்புகின்ற வுறுவ னேனும்
கருவாணை யுறவிரங்கா துயிருடம்பைக் கடிந்துண்ணுங் கருத்த னேலெங்
குருவாணை யெமதுசிவக் கொழுந்தாணை ஞானியெனக் கூறொ ணாதே.

திருச்சிற்றம்பலம்

(2-ந் திருமுறை. பக்கம் 359)

---

* சுவாமிகள் ஜீவகாருண்ய ஒழுக்கத்தை மிக்க விரிவாக எழு பிரிவில் எழுதி உபதேசித்திருப்பதாகக் கேள்வி. இன்றைய வரையில் திருவருட் செயலால் கிடைத்தவை இவ்வளவே.





உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்ஜோதி

# திருவருட்பா

## ஆறாவது திருமுறை



## 1. அருட்பெருஞ்ஜோதி அகவல்

நிலைமண்டில ஆசிரியப்பா

அருட்பெருஞ்ஜோதி

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி

அருட்சிவ நெறிசார் அருட்பெரு நிலைவாழ்
அருட்சிவ பதியாம் அருட்பெருஞ் ஜோதி
ஆகம முடிமேல் ஆரண முடிமேல்
ஆகநின் றோங்கிய அருட்பெருஞ் ஜோதி
இகநிலைப் பொருளாய்ப் பரநிலைப் பொருளாய்
அகமறப் பொருந்திய அருட்பெருஞ் ஜோதி
ஈனமின் றிகபரத் திரண்டின்மேற் பொருளாய்
[1] ஆனலின் றோங்கிய அருட்பெருஞ் ஜோதி
உரைமனங் கடந்த ஒருபெரு வெளிமேல்
அரசுசெய் தோங்கும் அருட்பெருஞ் ஜோதி

[1] ஆனல் என்பது—ஆகாயம், நீக்கம்.

ஊக்கமு முணர்ச்சியும் ஒளிதரு மாக்கையும்
ஆக்கமு மருளிய அருட்பெருஞ் ஜோதி
எல்லையில் பிறப்பெனும் இருங்கடல் கடத்தியென்
அல்லலை நீக்கிய அருட்பெருஞ் ஜோதி
ஏறா நிலைமிசை ஏற்றியென் றனக்கே
ஆறாறு காட்டிய அருட்பெருஞ் ஜோதி
ஐயமுந் திரிபும் அறுத்தென துடம்பினுள்
ஐயமு நீக்கிய அருட்பெருஞ் ஜோதி
ஒன்றென இரண்டென ஒன்றிரண் டெனவிவை
அன்றென விளங்கிய அருட்பெருஞ் ஜோதி
ஓதா துணர்ந்திட ஒளியளித் தெனக்கே
ஆதார மாகிய அருட்பெருஞ் ஜோதி
ஔவிய மாதியோர் ஆறுந் தவிர்த்தபேர்
அவ்வியல் வழுத்தும் அருட்பெருஞ் ஜோதி
திருநிலைத் தனிவெளி சிவவெளி யெனுமோர்
அருள்வெளிப் பதிவளர் அருட்பெருஞ் ஜோதி
சுத்தசன் மார்க்கச் சுகத்தனி வெளியெனும்
அத்தகைச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி
சுத்தமெய்ஞ் ஞானச் சுகோதய வெளியெனும்
அத்து விதச்சபை அருட்பெருஞ் ஜோதி
தூயக லாந்தச் சுகந்தரு வெளியெனும்
ஆயசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி
ஞானயோ காந்த நடத்திரு வெளியெனும்
ஆனியில் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி
விமலபோ தாந்தமா மெய்ப்பொருள் வெளியெனும்
அமலசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி
பெரியநா தாந்தப் பெருநிலை வெளியெனும்
அரியசிற் றம்பலத் தருட்பெருஞ் ஜோதி
சுத்தவே தாந்தத் துரியமேல் வெளியெனும்
அத்தகு சிற்சபை அருட்பெருஞ் ஜோதி
சுத்தசித் தாந்தச் சுகப்பெரு வெளியெனும்
அத்தனிச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி
தகரமெய்ஞ் ஞானத் தனிப்பெரு வெளியெனும்
அகர நிலைப்பதி அருட்பெருஞ் ஜோதி
தத்துவா தீதத் தனிப்பொருள் வெளியெனும்
அத்திரு வம்பலத் தருட்பெருஞ் ஜோதி
சச்சிதா னந்தத் தனிப்பர வெளியெனும்
அச்சிய லம்பலத் தருட்பெருஞ் ஜோதி

சாகாக் கலைநிலை தழைத்திடு வெளியெனும்
ஆகா யத்தொளிர் அருட்பெருஞ் ஜோதி

காரண காரியங் காட்டிடு வெளியெனும்
ஆரண சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

ஏக மனேகம் எனப்பகர் வெளியெனும்
ஆகம சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

வேதா கமங்களின் விளைவுகட் கெல்லாம்
ஆதார மாஞ்சபை அருட்பெருஞ் ஜோதி

என்றா தியசுடர்க் கியனிலை யாயவை
அன்றாந் திருச்சபை அருட்பெருஞ் ஜோதி

சமயங் கடந்த தனிப்பொருள் வெளியாய்
அமையுந் திருச்சபை அருட்பெருஞ் ஜோதி

முச்சுடர் களுமொளி முயங்குற வளித்தருள்
அச்சுட ராஞ்சபை அருட்பெருஞ் ஜோதி

துரியமுங் கடந்த சுகபூ ரணந்தரும்
அரியசிற் றம்பலத் தருட்பெருஞ் ஜோதி

எவ்வகைச் சுகங்களும் இனிதுற வளித்தருள்
அவ்வகைச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

இயற்கையுண் மையதாய் இயற்கையின் பமுமாம்
அயர்ப்பிலாச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

சாக்கிரா தீதத் தனிவெளி யாய்நிறை
வாக்கிய சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

சுட்டுதற் கரிதாஞ் சுகாதீத வெளியெனும்
அட்டமேற் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

நவந்தவிர் நிலைகளும் நண்ணுமோர் நிலையாய்
அவிந்தவிர் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

உபயபக் கங்களும் ஒன்றெனக் காட்டிய
அபயசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

சேகர மாம்பல சித்தி நிலைக்கெலாம்
ஆகர மாஞ்சபை அருட்பெருஞ் ஜோதி

மனாதிகட் கரிய மதாதீத வெளியாய்
அனாதிசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

ஓதிநின் றுணர்ந்துணர்ந் துணர்தற் கரிதாம்
ஆதிசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி

வாரமு மழியா வரமுந் தருந்திரு
ஆரமு தாஞ்சபை அருட்பெருஞ் ஜோதி

இழியாப் பெருநலம் எல்லா மளித்தருள்
அழியாச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி

கற்பம் பலபல கழியினு மழிவுறா
அற்புதந் தருஞ்சபை அருட்பெருஞ் ஜோதி
எனைத்துந் துன்பிலா இயலளித் தெண்ணிய
அனைத்துந் தருஞ்சபை அருட்பெருஞ் ஜோதி
பாணிப் பிலதாய்ப் பரவினோர்க் கருள்புரி
ஆணிப்பொ னம்பலத் தருட்பெருஞ் ஜோதி
எம்பல மெனத்தொழு தேத்தினோர்க் கருள்புரி
அம்பலத் தாடல்செய் அருட்பெருஞ் ஜோதி
தம்பர ஞான சிதம்பர மெனுமோர்
அம்பரத் தோங்கிய அருட்பெருஞ் ஜோதி
எச்சபை பொதுவென இயம்பின ரறிஞர்கள்
அச்சபை யிடங்கொளும் அருட்பெருஞ் ஜோதி
வாடுதல் நீக்கிய மணிமன் றிடையே
ஆடுதல் வல்ல அருட்பெருஞ் ஜோதி
நாடகத் திருச்செயல் நவிற்றிடு மொருபேர்
ஆடகப் பொதுவொளிர் அருட்பெருஞ் ஜோதி
கற்பனை முழுவதுங் கடந்தொளி தருமோர்
அற்புதச் சிற்சபை அருட்பெருஞ் ஜோதி
ஈன்றநற் றாயினும் இனிய பெருந்தய
வான்றசிற் சபையில் அருட்பெருஞ் ஜோதி
இன்புறு நானுளத் தெண்ணியாங் கெண்ணியாங்
கன்புறத் தருசபை அருட்பெருஞ் ஜோதி
எம்மையு மென்னைவிட் டிறையும் பிரியா
தம்மையப் பனுமாம் அருட்பெருஞ் ஜோதி
பிறிவுற் றறியாப் பெரும்பொரு ளாயென்
அறிவுக் கறிவாம் அருட்பெருஞ் ஜோதி
ஜாதியு மதமுஞ் சமயமுங் காணா
ஆதிய நாதியாம் அருட்பெருஞ் ஜோதி
தனுகர ணாதிகள் தாங்கடந் தறியுமோர்
அனுபவ மாகிய அருட்பெருஞ் ஜோதி
உனுமுணர் வுணர்வாய் உணர்வெலாங் கடந்த
அனுபவா தீத அருட்பெருஞ் ஜோதி
பொதுவுணர் வுணரும் போதலாற் பிரித்தே
அதுவெனிற் றோன்றா அருட்பெருஞ் ஜோதி
உளவினி லறிந்தால் ஒழியமற் றளக்கின்
அளவினி லளவா அருட்பெருஞ் ஜோதி
என்னையும் பணிகொண் டிறவா வரமளித்
தன்னையி லுவந்த அருட்பெருஞ் ஜோதி

ஓதியோ தாமல் உறவெனக் களித்த
ஆதியீ றில்லா அருட்பெருஞ் ஜோதி
படியடி வான்முடி பற்றினுந் தோற்றா
அடிமுடி யெனுமோர் அருட்பெருஞ் ஜோதி
பவனத்தி னண்டப் பரப்பினெங் கெங்கும்
அவனுக் கவனாம் அருட்பெருஞ் ஜோதி
திவளுற்ற வண்டத் திரளினெங் கெங்கும்
அவளுக் கவளாம் அருட்பெருஞ் ஜோதி
மதனுற்ற வண்ட வரைப்பினெங் கெங்கும்
அதனுக் கதுவாம் அருட்பெருஞ் ஜோதி
எப்பாலு மாய்வெளி யெல்லாங் கடந்துமேல்
அப்பாலு மாகிய அருட்பெருஞ் ஜோதி
வல்லதா யெல்லா மாகியெல் லாமும்
அல்லதாய் விளங்கும் அருட்பெருஞ் ஜோதி
எப்பொருள் மெய்ப்பொருள் என்பர்மெய் கண்டோர்
அப்பொரு ளாகிய அருட்பெருஞ் ஜோதி
தாங்ககி லாண்ட சராசர நிலைநின்
றோங்குற விளங்கும் அருட்பெருஞ் ஜோதி
சத்தர்க ளெல்லாந் தழைத்திட வகம்புறத்
தத்திசை விளங்கும் அருட்பெருஞ் ஜோதி
சத்திக ளெல்லாந் தழைக்கவெங் கெங்கும்
அத்தகை விளங்கும் அருட்பெருஞ் ஜோதி
முந்துறு மைந்தொழின் மூர்த்திகள் பலர்க்கும்
ஐந்தொழி லளிக்கும் அருட்பெருஞ் ஜோதி
பெரிதினும் பெரிதாய்ச் சிறிதினுஞ் சிறிதாய்
அரிதினு மரிதாம் அருட்பெருஞ் ஜோதி
காட்சியுங் காணாக் காட்சியு மதுதரும்
ஆட்சியு மாகிய அருட்பெருஞ் ஜோதி
இன்புறு சித்திக ளெல்லாம் புரிகவென்
றன்புட னெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி
இறவா வரமளித் தென்னைமே லேற்றிய
அறவாழி யாந்தனி அருட்பெருஞ் ஜோதி
நானந்த மில்லா நலம்பெற வெனக்கே
ஆனந்த நல்கிய அருட்பெருஞ் ஜோதி
எண்ணிய வெண்ணியாங் கியற்றுக வென்றெனை
அண்ணியுள் ளோங்கும் அருட்பெருஞ் ஜோதி
மேயினை மெய்ப்பொருள் விளங்கினை நீயது
ஆயினை யென்றருள் அருட்பெருஞ் ஜோதி

எண்ணிற் செழுந்தேன் இனியதெள் ளமுதென
அண்ணித் தினிக்கும் அருட்பெருஞ் ஜோதி

சிந்தையிற் றுன்பொழி சிவம்பெறு கெனத்தொழில்
ஐந்தையு மெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

எங்கெங் கிருந்துயிர் ஏதெது வேண்டினும்
அங்கங் கிருந்தருள் அருட்பெருஞ் ஜோதி

சகமுதல் புறப்புறந் தங்கிய வகப்புறம்
அகப்புற முற்றுமாம் அருட்பெருஞ் ஜோதி

சிகரமும் வகரமும் சேர்தனி யுகரமும்
அகரமு மாகிய அருட்பெருஞ் ஜோதி

உபரச வேதியின் உபயமும் பரமும்
அபரமு மாகிய அருட்பெருஞ் ஜோதி

மந்தண மிதுவென மறுவிலா மதியால்
அந்தணர் வழுத்தும் அருட்பெருஞ் ஜோதி

எம்புயக் கனியென எண்ணுவா ரிதய
அம்புயத் தமர்ந்த அருட்பெருஞ் ஜோதி

செடியறுத் தேதிட தேகமும் போகமும்
அடியருக் கேதரும் அருட்பெருஞ் ஜோதி

துன்பறுத் தொருசிவ துரிய சுகந்தனை
அன்பருக் கேதரும் அருட்பெருஞ் ஜோதி

பொதுவது சிறப்பது புதியது பழையதென்
றதுவது வாய்த்திகழ் அருட்பெருஞ் ஜோதி

சேதனப் பெருநிலை திகழ்தரு மொருபரை
ஆதனத் தோங்கிய அருட்பெருஞ் ஜோதி

ஓமயத் திருவுரு வுவப்புட னளித்தெனக்
காமயத் தடைதவிர் அருட்பெருஞ் ஜோதி

எப்படி யெண்ணிய தென்கருத் திங்கெனக்
கப்படி யருளிய அருட்பெருஞ் ஜோதி

எத்தகை விழைந்தன என்மன மிங்கெனக்
கத்தகை யருளிய அருட்பெருஞ் ஜோதி

இங்குறத் திரிந்துளம் இளையா வகையெனக்
கங்கையிற் கனியாம் அருட்பெருஞ் ஜோதி

பாருயப் புரிகெனப் பணித்தெனக் கருளியென்
ஆருயிர்க் குள்ளொளிர் அருட்பெருஞ் ஜோதி

தேவியுற் றொளிர்தரு திருவுரு வுடனென
தாவியிற் கலந்தொளிர் அருட்பெருஞ் ஜோதி

எவ்வழி மெய்வழி என்பவே தாகமம்
அவ்வழி யெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

டாகா,—அந்த ஜீவகாருண்யமுள்ள சமுசாரிகள்,—ஆற்று வெள்ளத்தாலும், கள்ளர்களாலும், விரோதிகளாலும், கலக்கப்படார்கள், அரசர்களாலும் அவமதிக்கப்படார்கள்,—ஜீவகாருண்யமுள்ள சமுசாரிகளது விளைநிலத்தில் பிரயாசையில்லாமலே விளைவு மேன்மேலும் உண்டாகும்,—வியாபாரத்தில் தடையில்லாமல் லாபங்களும், உத்தியோகத்தில் கெடுதியில்லாத மேன்மையும் உண்டாகும் ;—சுற்றங்களாலும் அடிமைகளாலும் சூழப்படுவார்கள் ;—துஷ்டமிருகங்களாலும், துஷ்ட ஜந்துக்களாலும், துஷ்டப் பசாசுகளாலும் துஷ்ட தேய்வங்களாலும், பயஞ்செய்யப்படார்கள்.

**ஜீவகாருண்யமுள்ள சமுசாரிகளுக்கு எப்படிப்பட்ட ஆபத்துக்களும் அஜாக்கிரதையினாலும் ஊழ்வகையினாலும் சத்தியமாக வராது.**

**பசித்தவர்களுக்குப்** பசியாற்றுவித்து இன்பத்தை உண்டு பண்ணுகின்ற ஜீவகாருண்ய ஒழுக்கமாகிய மேலான விரதமானது—தேவர்கள், மனிதர்கள், பிரமசாரிகள், சமுசாரிகள், தபசிகள், சந்யாசிகள், ஆண் ஜாதியர், பெண் ஜாதியர், வார்த்திபர், வாலிபர், உயர்ந்தோர், தாழ்ந்தோர், முதலிய யாவராலும் அவசியம் செய்யத்தக்கதேன்பது கடவுளாணை யென்றறிய வேண்டும்.

**பசித்தவர்க்குப்** பசியை நீக்குகின்ற விஷயத்தில் புருஷனைப் பெண் ஜாதி தடுத்தாலும்,—பெண்சாதியைப் புருஷன் தடுத்தாலும்—பிள்ளைகளைத் தந்தை தடுத்தாலும்,—தந்தையைப் பிள்ளைகள் தடுத்தாலும்,—சீஷரை ஆசாரியர் தடுத்தாலும்,—அடியாரை ஆண்டவன் தடுத்தாலும்,—குடிகளை அரசன் தடுத்தாலும்,—அந்தத்தடைகளால் சிறிதுந் தடைபடாமல் அவரவர் செய்த நன்மைதீமைகள் அவரவரைச் சேருமல்லது வேறிடத்திற் போகாதென்பதை உண்மையாக நம்பி ஜீவகாருண்ய வொழுக்கத்தை நடத்த வேண்டுமென்றும் அறியவேண்டும்.

**உள்ளபடி** பசியால் வருந்துகின்ற ஜீவர்களுக்கு ஆகாரங் கொடுக்க நினைத்தபோது, நினைத்த புண்ணியரது மனம் வேறு பற்றுக்களைவிட்டுச் சுத்தக்கரணமாகி நினைத்தபடியால், அந்தப் புண்ணியர்களை யோகிகளேன்றே உண்மையாக அறியவேண்டும்.—ஆகாரங்கொடுக்க நினைத்தபடி உபசரித்துக் கொடுக்கும்போது, அவருண்ணுவது தாமுண்ணுவதாக அறிந்து களிக்கின்றபடியால், ஞானிகளேன்றே உண்மையாக அறியவேண்டும்.—ஆகாரங் கொடுக்க உண்டு பசி தீர்ந்தவர்களுக்கு அத்தருணத்தில் ஆன்மாவின் உள்ளும் புறத்தும் கீழும்மேலும் நடுவும் பக்கமும் நிறைந்து கரணமுதலிய தத்துவங்க

கருமசித் திகளின் கலைபல கோடியும்
அரசுற வெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி
யோகசித் திகள்வகை யுறுபல கோடியும்
ஆகவென் றெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி
ஞானசித் தியின்வகை நல்விரி வனைத்தும்
ஆனியின் றெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி
புடையுறு சித்தியின் பொருட்டே முத்தியை
அடைவதுஎன் றருளிய அருட்பெருஞ் ஜோதி
முத்தியென் பதுநிலை முன்னுறு சாதனம்
அத்தக வென்றவென் அருட்பெருஞ் ஜோதி
சித்தியென் பதுநிலை சேர்ந்த வனுபவம்
அத்திற லென்றவென் அருட்பெருஞ் ஜோதி
ஏகசிற் சித்தியே இயலுற வனேகம்
ஆகிய தென்றவென் அருட்பெருஞ் ஜோதி
இன்பசித் தியினியல் ஏக மனேகம்
அன்பருக் கென்றவென் அருட்பெருஞ் ஜோதி
எட்டிரண் டென்பன இயலுமுற் படியென
அட்டநின் றருளிய அருட்பெருஞ் ஜோதி
இப்படி கண்டனை இனியுறு படியெலாம்
அப்படி யேயெனும் அருட்பெருஞ் ஜோதி
படிமுடி கடந்தனை பாரிது பாரென
அடிமுடி காட்டிய அருட்பெருஞ் ஜோதி
ஜோதியுட் ஜோதியின் சொரூபமே யந்தம்
ஆதியென் றருளிய அருட்பெருஞ் ஜோதி
இந்தசிற் ஜோதியின் இயலுரு வாதி
அந்தமென் றருளிய அருட்பெருஞ் ஜோதி
ஆதியு மந்தமும் அறிந்தனை நீயே
ஆதியென் றருளிய அருட்பெருஞ் ஜோதி
நல்லமு தெனவென் நாவுளங் காட்டியென்
அல்லலை நீக்கிய அருட்பெருஞ் ஜோதி
கற்பக மென்னுளங் கைதனிற் கொடுத்தே
அற்புத மியற்றெனும் அருட்பெருஞ் ஜோதி
கதிர்நல மென்னிரு கண்களிற் கொடுத்தே
அதிசய மியற்றெனும் அருட்பெருஞ் ஜோதி
அருளொளி யென்றனி அறிவினில் விரித்தே
அருணெறி விளக்கெனும் அருட்பெருஞ் ஜோதி
பரையொளி யென்மனப் பதியினில் விரித்தே
அரசது வியற்றெனும் அருட்பெருஞ் ஜோதி

வல்லப சத்திகள் வகையெலா மளித்தெனை
தல்லலை நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

ஆரிய லகம்புறம் அகப்புறம் புறப்புறம்
ஆரமு தெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

சூரிய சந்திர ஜோதியுட் ஜோதியென்
றாரியர் புகழ்தரும் அருட்பெருஞ் ஜோதி

பிறிவே தினியுனைப் பிடித்தன முனக்குநம்
அறிவே வடிவெனும் அருட்பெருஞ் ஜோதி

எஞ்சே லுலகினில் யாதொன்று பற்றியும்
அஞ்சேல் என்றருள் அருட்பெருஞ் ஜோதி

மாண்டுழ லாவகை வந்திளங் காலையே
ஆண்டுகொண் டருளிய அருட்பெருஞ் ஜோதி

பற்றுக ளனைத்தையும் பற்றறத் தவிர்த்தெனை
தற்றமு நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

சமயங் குலமுதற் சார்பெலாம் விடுத்த
அமயந் தோன்றிய அருட்பெருஞ் ஜோதி

வாய்தற் குரித்தெனும் மறையா கமங்களால்
ஆய்தற் கரிய அருட்பெருஞ் ஜோதி

எல்லாம் வல்லசித் தெனக்களித் தெனக்குனை
அல்லா திலையெனும் அருட்பெருஞ் ஜோதி

நவையிலா வுளத்தில் நாடிய நாடிய
அவையெலா மளிக்கும் அருட்பெருஞ் ஜோதி

கூற்றுதைத் தென்பாற் குற்றமுங் குணங்கொண்
டாற்றன்மிக் களித்த அருட்பெருஞ் ஜோதி

நன்றறி வறியா நாயினேன் றனையும்
அன்றுவந் தாண்ட அருட்பெருஞ் ஜோதி

நாயினுங் கடையேன் ஈயினு மிழிந்தேன்
ஆயினு மருளிய அருட்பெருஞ் ஜோதி

தோத்திரம் புகலேன் பாத்திர மல்லேன்
ஆத்திர மளித்த அருட்பெருஞ் ஜோதி

எச்சோ தனைகளும் இயற்றா தெனக்கே
[1] அச்சோ வென்றருள் அருட்பெருஞ் ஜோதி

ஏறா நிலைநடு ஏற்றியென் றனையீண்
டாறாறு கடத்திய அருட்பெருஞ் ஜோதி

தாபத் துயரந் தவிர்த்துல குறுமெலா
ஆபத்து நீக்கிய அருட்பெருஞ் ஜோதி

மருட்பகை தவிர்த்தெனை வாழ்வித் தெனக்கே
அருட்குரு வாகிய அருட்பெருஞ் ஜோதி

[1] அச்சோ என்பது—இரக்கக்குறிப்பு.

உருவமு மருவமும் உபயமு மாகிய
அருணிலை தெரித்த அருட்பெருஞ் ஜோதி
இருளறுத் தென்னுளத் தெண்ணியாங் கருளி
அருளமு தளித்த அருட்பெருஞ் ஜோதி
தெருணிலை யிதுவெனத் தெருட்டியென் னுளத்திருந்
தருணிலை காட்டிய அருட்பெருஞ் ஜோதி
பொருட்பத மெல்லாம் புரிந்துமே லோங்கிய
அருட்பத மளித்த அருட்பெருஞ் ஜோதி
உருள்சக டாகிய உளஞ்சலி யாவகை
அருள்வழி நிறுத்திய அருட்பெருஞ் ஜோதி
வெருண்மன மாயை வினையிருள் நீக்கியுள்
அருள்விளக் கேற்றிய அருட்பெருஞ் ஜோதி
சுருள்விரி வுடைமனச் சுழலெலா மறுத்தே
அருளொளி நிரப்பிய அருட்பெருஞ் ஜோதி
விருப்போ டிகலுறு வெறுப்புந் தவிர்த்தே
அருட்பே றளித்த அருட்பெருஞ் ஜோதி
அருட்பேர் தரித்துல கனைத்து மலர்ந்திட
அருட்சீ ரளித்த அருட்பெருஞ் ஜோதி
உலகெலாம் பரவவென் உள்ளத் திருந்தே
அலகிலா வொளிசெய் அருட்பெருஞ் ஜோதி.

## 1. ஐம்பூத இயல் வகை

**வி**ண்ணினுள் விண்ணாய் விண்ணடு விண்ணாய்
அண்ணி நிறைந்த அருட்பெருஞ் ஜோதி
விண்ணுறு விண்ணாய் விண்ணிலை விண்ணாய்
அண்ணி வயங்கும் அருட்பெருஞ் ஜோதி
காற்றினுட் காற்றாய்க் காற்றிடைக் காற்றாய்
ஆற்றலி னோங்கும் அருட்பெருஞ் ஜோதி
காற்றுறு காற்றாய்க் கானிலைக் காற்றாய்
ஆற்ற விளங்கும் அருட்பெருஞ் ஜோதி
அனலினு ளனலாய் அனனடு வனலாய்
அனலுற விளங்கும் அருட்பெருஞ் ஜோதி
அனலுறு மனலாய் அனனிலை யனலாய்
அனலுற வயங்கும் அருட்பெருஞ் ஜோதி
புனலினுட் புனலாய்ப் புனலிடைப் புனலாய்
அனையென வயங்கும் அருட்பெருஞ் ஜோதி
புனலுறு புனலாய்ப் புனனிலைப் புனலாய்
அனையெனப் பெருகும் அருட்பெருஞ் ஜோதி

புவியினுட் புவியாய்ப் புவிநடுப் புவியாய்
அவைதர வயங்கும் அருட்பெருஞ் ஜோதி
புவியுறு புவியாய்ப் புவிநிலைப் புவியாய்
அவைகொள விரிந்த அருட்பெருஞ் ஜோதி
விண்ணிலை சிவத்தின் வியனிலை யளவி
அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
வளிநிலைச் சத்தியின் வளர்நிலை யளவி
அளியுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
நெருப்பது நிலைநடு நிலையெலா மளவி
அருப்பிட வகுத்த அருட்பெருஞ் ஜோதி
நீர்நிலை திரைவளர் நிலைதனை யளவி
ஆர்வுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
புவிநிலை சுத்தமாம் பொற்பதி யளவி
அவையுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி.

## 2. மண்ணியல் விரி

**ம**ண்ணினிற் றிண்மையை வகுத்ததிற் கிடக்கை
அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணினிற் பொன்மை வகுத்ததி லைம்மையை
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணினி லைம்பூ வகுத்ததி லைந்திறம்
அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணினி னாற்றம் வகுத்ததிற் பல்வகை
அண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணினிற் பற்பல வகைகரு நிலையியல்
அண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணினி லைந்தியல் வகுத்ததிற் பலபயன்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணிடை யடிநிலை வகுத்ததிற் பன்னிலை
அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணிலைந் தைந்து வகையுங் கலந்துகொண்
டண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணியற் சத்திகள் மண்செயற் சத்திகள்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணுருச் சத்திகள் மண்கலைச் சத்திகள்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணொளிச் சத்திகள் மண்கருச் சத்திகள்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

மண்கணச் சத்திகள் வகைபல பலவும்
அண்கொள வமைத்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணிலைச் சத்தர்கள் வகைபல பலவும்
அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
மண்கரு வுயிர்த்தொகை வகைவிரி பலவா
அண்கொள வமைத்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணினிற் பொருள்பல வகைவிரி வெவ்வே
றண்ணுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணுறு நிலைபல வகுத்ததிற் செயல்பல
அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணிடைப் பக்குவம் வகுத்ததிற் பயன்பல
அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
மண்ணியல் பலபல வகுத்ததிற் பிறவும்
அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி.

## 3. நீரியல் விரி

நீரினிற் றண்மையும் நிகழூ றொழுக்கமும்
ஆருற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
நீரினிற் பசுமையை நிறுத்தி யதிற்பல
ஆருற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
நீரிடைப் பூவியல் நிகழுறு திறவியல்
ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி
நீரினிற் சுவைநிலை நிரைத்ததிற் பல்வகை
ஆருறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி
நீரினிற் கருநிலை நிகழ்த்திய பற்பல
ஆருற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
நீரிடை நான்கியல் நிலவுவித் ததிற்பல
ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி
நீரிடை யடிநடு நிலையுற வகுத்தனல்
ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி
நீரிடை யொளியியல் நிகழ்பல குணவியல்
ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி
நீரிடைச் சத்திகள் நிகழ்வகை பலபல
ஆர்தர வகுத்த அருட்பெருஞ் ஜோதி
நீரினிற் சத்தர்கள் நிறைவகை யுறைவகை
ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி
நீரிடை யுயிர்பல நிகழுறு பொருள்பல
ஆருற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

நீரிடை நிலைபல நிலையுறு செயல்பல
ஆர்கொள வகுத்த அருட்பெருஞ் ஜோதி
நீருறு பக்குவ நிறைவுறு பயன்பல
ஆருற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
நீரியல் பலபல நிரைத்ததிற் பிறவும்
ஆர்தரப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி.

## 4. தீயியல் விரி

தீயினிற் சூட்டியல் சேர்தரச் செலவியல்
ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
தீயினில் வெண்மைத் திகழியல் பலவாய்
ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
தீயிடைப் பூவெலாந் திகழுறு திறமெலாம்
ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
தீயிடை யொளியே திகழுற வமைத்ததில்
ஆய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி
தீயிடை யருநிலை திருநிலை கருநிலை
ஆயுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
தீயிடை மூவியல் செறிவித் ததிற்பல
வாய்வகை யமைத்த அருட்பெருஞ் ஜோதி
தீயிடை நடுநிலை திகழ்நடு நடுநிலை
ஆயுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
தீயிடைப் பெருந்திறல் சித்திகள் பலபல
வாயுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
தீயிடைச் சித்துகள் செப்புறு மனைத்தும்
ஆயுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
தீயிடைச் சத்திகள் செறிதரு சத்தர்க
ளாய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி
தீயிடை யுயிர்பல திகழுறு பொருள்பல
வாய்வகை யமைத்த அருட்பெருஞ் ஜோதி
தீயிடை நிலைபல திகழ்செயல் பலபயன்
ஆய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி
தீயினிற் பக்குவஞ் சேர்குண மியற்குணம்
ஆய்பல வகுத்த அருட்பெருஞ் ஜோதி
தீயிடை யுருக்கியல் சிறப்பியல் பொதுவியல்
ஆயுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
தீயியல் பலபல செறித்ததிற் பலவும்
ஆயுறப் புரிந்த அருட்பெருஞ் ஜோதி.

## 5. காற்றியல் விரி

**கா**ற்றிடை யசையியல் கலையிய லுயிரியல்
ஆற்றலி னமைத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றிடைப் பூவியல் சருதுறு திறவியல்
ஆற்றலின் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றினி லூறியல் காட்டுறு பலபல
ஆற்றலி னமைத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றினிற் பெருநிலை கருநிலை யளவில
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றிடை யீரியல் காட்டி யதிற்பல
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றினி லிடைநடு கடைநடு வகப்புறம்
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றினிற் குணம்பல கணம்பல வணம்பல
ஆற்றலி னமைத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றிடைச் சத்திகள் கணக்கில வுலப்பில
ஆற்றவும் அமைத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றிடைச் சத்தர்கள் கணிதங் கடந்தன
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றிடை யுயிர்பல கதிபல கலைபல
ஆற்றலி னமைத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றிடை நானிலைக் கருவிக ளனைத்தையும்
ஆற்றுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றிடை யுணரியல் கருதிய லாதிய
ஆற்றுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றிடைச் செயலெலாங் கருதிய பயனெலாம்
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றினிற் பக்குவக் கதியெலாம் விளைவித்
தாற்றலின் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றினிற் காலங் கருதுறு வகையெலாம்
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காற்றியல் பலபல கணித்ததிற் பிறவும்
ஆற்றவும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி.

## 6. வெளி இயல் விரி

**வெ**ளியிடைப் பகுதியின் விரிவிய லணுவியல்
அளியுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

வெளியிடைப் பூவெலாம் வியப்புறு திறனெலாம்
அளியுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
வெளியினி லொலிநிறை வியனிலை யனைத்தும்
அளியுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
வெளியிடைக் கருநிலை விரிநிலை யருநிலை
அளிகொள வகுத்த அருட்பெருஞ் ஜோதி
வெளியிடை முடிநிலை விளங்குற வகுத்தே
அளிபெற விளக்கும் அருட்பெருஞ் ஜோதி
வெளியினிற் சத்திகள் வியப்புறு சத்தர்கள்
அளியுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
வெளியிடை யொன்றே விரித்ததிற் பற்பல
அளியுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
வெளியிடைப் பலவே விரித்ததிற் பற்பல
அளிதர வமைத்த அருட்பெருஞ் ஜோதி
வெளியிடை யுயிரியல் வித்தியல் சித்தியல்
அளிபெற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
வெளியி னனைத்தையும் விரித்ததிற் பிறவும்
அளியுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி.

## 7. அகப்புற விரி

**புறநடு** வொடுகடை புணர்ப்பித் தொருமுதல்
அறமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
புறந்தலை நடுவொடு புணர்ப்பித் தொருகடை
அறம்பெற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
அகப்புற நடுக்கடை யணைவாற் புறமுதல்
அகப்பட வகுத்த அருட்பெருஞ் ஜோதி
அகப்புற நடுமுத லணைவாற் புறக்கடை
அகப்பட வமைத்த அருட்பெருஞ் ஜோதி
கருதக நடுவொடு கடையணைந் தகமுதல்
அருளுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
தணியக நடுவொடு தலையணைந் தகக்கடை
அணியுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
அகநடு புறக்கடை யணைந்தகப் புறமுதல்
அகமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
அகநடு புறத்தலை யணைந்தகப் புறக்கடை
அகலிடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி
அகநடு வதனா லகப்புற நடுவை
அகமற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

அகப்புற நடுவா லணிபுற நடுவை
அகப்பட வமைத்த அருட்பெருஞ் ஜோதி

புறநடு வதனாற் புறப்புற நடுவை
அறமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

புகலரு மகண்ட பூரண நடுவால்
அகநடு வகுத்த அருட்பெருஞ் ஜோதி

புறப்புறக் கடைமுதல் புணர்ப்பாற் புறப்புறம்
அறக்கணம் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

புறத்தியல் கடைமுதல் புணர்ப்பாற் புறத்துறும்
அறக்கணம் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

அகப்புறக் கடைமுத லிணைவா லக்கணம்
அகத்துற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

அகக்கடை முதல்புணர்ப் பதனா லகக்கணம்
அகத்திடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி.

## 8. ஐம்பூதக் கலப்பின் விரி

**வா**னிடைக் காற்றுங் காற்றிடை நெருப்பும்
ஆனற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நெருப்பிடை நீரும் நீரிடைப் புவியும்
அருப்பிட வகுத்த அருட்பெருஞ் ஜோதி

நீர்மேல் நெருப்பும் நெருப்பின்மே லுயிர்ப்பும்
ஆர்வுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

புனன்மேற் புவியும் புவிமேற் புடைப்பும்
அனன்மேல் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பகுதிவான் வெளியிற் படர்ந்தமா பூத
அகல்வெளி வகுத்த அருட்பெருஞ் ஜோதி.

## 9. வெளி வகை விரி

**உ**யிர்வெளி யிடையே உரைக்கரும் பகுதி
அயல்வெளி வகுத்த அருட்பெருஞ் ஜோதி

உயிர்வெளி யதனை யுணர்கலை வெளியில்
அயலற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

கலைவெளி யதனைக் கலப்பறு சுத்த
அலர்வெளி வகுத்த அருட்பெருஞ் ஜோதி

சுத்தநல் வெளியைத் துரிசறு பரவெளி
அத்திடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பரவெளி யதனைப் பரம்பர வெளியில்
அரசுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பரம்பர வெளியைப் பராபர வெளியில்
அரந்தைகெட வகுத்த அருட்பெருஞ் ஜோதி
பராபர வெளியைப் பகர்பெரு வெளியில்
அராவற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
பெருவெளி யதனைப் பெருஞ்சுக வெளியில்
அருளுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
குணமுதற் கருவிகள் கூடிய பகுதியில்
அணைவுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
மனமுதற் கருவிகள் மன்னுயிர் வெளியிடை
அனமுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காலமே முதலிய கருவிகள் கலைவெளி
ஆலுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
துரிசறு கருவிகள் சுத்தநல் வெளியிடை
அரசுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
இவ்வெளி யெல்லாம் இலங்கவண் டங்கள்
அவ்வயி னமைத்த அருட்பெருஞ் ஜோதி.

## 10. அண்டப் பகுதி விரி

**ஓங்கிய** வண்டம் ஒளிபெற முச்சுடர்
ஆங்கிடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி
சிருட்டித் தலைவரைச் சிருட்டியண் டங்களை
அருட்டிறல் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
காவல்செய் தலைவரைக் காவலண் டங்களை
ஆவகை யமைத்த அருட்பெருஞ் ஜோதி
அழித்தல்செய் தலைவரை யவரண் டங்களை
அழுக்கற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
மறைத்திடு தலைவரை மற்றுமண் டங்களை
அறத்தொடு வகுத்த அருட்பெருஞ் ஜோதி
தெளிவுசெய் தலைவரைத் திகழுமண் டங்களை
அளிபெற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
விந்துவாஞ் சத்தியை விந்தினண் டங்களை
அந்திறல் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
ஓங்கார சத்திக ளுற்றவண் டங்களை
ஆங்காங் கமைத்த அருட்பெருஞ் ஜோதி
சத்தத் தலைவரைச் சாற்றுமண் டங்களை
அத்தகை வகுத்த அருட்பெருஞ் ஜோதி
நாதமாம் பிரமம் நாதவண் டங்களும்
ஆதரம் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பகர்பரா சத்தியைப் பதியுமண் டங்களை
அகமற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
பரசிவ பதியைப் பரசிவாண் டங்களை
அரசுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
எண்ணில்பல் சத்தியை யெண்ணிலண் டங்களை
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
அளவில்பல் சத்தரை யளவிலண் டங்களை
அளவுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
உயிர்வகை யண்டம் உலப்பில வெண்ணில
அயர்வற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

## 11. கடல் வகை

**க**ளவில கடல்வகை கங்கில கரையில
அளவில வகுத்த அருட்பெருஞ் ஜோதி
கடலவை யனைத்துங் கரையின்றி நிலைபுற
அடலன லமைத்த அருட்பெருஞ் ஜோதி
கடல்களு மலைகளுங் கதிகளு நதிகளும்
அடலுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
கடலிடைப் பல்வளங் கணித்ததிற் பல்லுயிர்
அடலுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

## 12. மலை வளம்

**ம**லையிடைப் பல்வளம் வகுத்ததிற் பல்லுயிர்
அலைவற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

## 13. எண் வகை

**ஒன்**றினி லொன்றே ஒன்றிடை யாயிரம்
[1] அன்றற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
பத்திடை யாயிரம் பகரதிற் கோடி
அத்துற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
நூற்றிடை யிலக்க நுவலதி லனந்தம்
ஆற்றிடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி
கோடியி லனந்த கோடிபல் கோடி
ஆடுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

## 14. வித்தும் விளைவும்

**வி**த்திய லொன்றாய் விளைவியல் பலவாய்
அத்தகை யமைத்த அருட்பெருஞ் ஜோதி

[1] அன்று என்பது—பகை.

விளைவிய லனைத்தும் வித்திடை யடங்க
அளவுசெய் தமைத்த அருட்பெருஞ் ஜோதி

வித்தும் பதமும் விளையுப கரிப்பும்
அத்திற லமைத்த அருட்பெருஞ் ஜோதி

வித்திடை முளையும் முளையிடை விளைவும்
அத்தக வமைத்த அருட்பெருஞ் ஜோதி

வித்தினுள் வித்தும் வித்ததில் வித்தும்
அத்திறம் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

விளைவினுள் விளைவும் விளைவதில் விளைவும்
[1] அளையுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

முளையதின் முளையும் முளையினுள் முளையும்
அளைதர வமைத்த அருட்பெருஞ் ஜோதி

வித்திடைப் பதமும் பதத்திடை வித்தும்
[2] அத்துற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

பதமதிற் பதமும் பதத்தினுட் பதமும்
அதிர்வற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

## 15. ஒற்றுமை வேற்றுமை இயல்

ஒற்றுமை வேற்றுமை உரிமைக ளனைத்தும்
அற்றென வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பொருணிலை யுறுப்பியல் பொதுவகை முதலிய
அருளுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

உறவினி லுறவும் உறவினிற் பகையும்
அறனுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பகையினிற் பகையும் பகையினி லுறவும்
அகையுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

பாதியு முழுதும் பதிசெயு மந்தமும்
ஆதியும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி

துணையு நிமித்தமுந் துலங்கதி னதுவும்
அணைவுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

உருவதி லுருவும் உருவினு ளுருவும்
அருளுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி

அருவினு ளருவும் அருவதி லருவும்
அருளிய லமைத்த அருட்பெருஞ் ஜோதி

கரணமு மிடமுங் கலைமுத லணையுமோர்
அரணிலை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

1 அளை என்பது-அளைதல் என்னும் பொருள் மேல்நின்ற முதனிலைத் தொழிற்பெயர்.
2 அத்து என்பது-அது என்னும் சுட்டுப்பெயரினிடையில் தகரமெய் விரித்தல்.

உருவதி லருவும் அருவதி லுருவும்
அருளுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
வண்ணமும் வடிவு மயங்கிய வகைபல
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
சிறுமையிற் சிறுமையுஞ் சிறுமையிற் பெருமையும்
அறிதர வகுத்த அருட்பெருஞ் ஜோதி
பெருமையிற் பெருமையும் பெருமையிற் சிறுமையும்
அருணிலை வகுத்த அருட்பெருஞ் ஜோதி
திண்மையிற் றிண்மையுந் திண்மையி னொண்மையும்
[1] அண்மையின் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
மென்மையின் மென்மையும் மென்மையில் வன்மையும்
[2] அன்மையற் றமைத்த அருட்பெருஞ் ஜோதி
அடியினுள் ளடியு மடியிடை யடியும்
அடியுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
நடுவினுண் ணடுவும் நடுவதி னடுவும்
அடர்வுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
முடியினுண் முடியும் முடியினின் முடியும்
அடர்தர வமைத்த அருட்பெருஞ் ஜோதி

## 16. அகப்புறப் பூ

**அகப்பூ** வகவுறுப் பாக்க வதற்கவை
அகத்தே வகுத்த அருட்பெருஞ் ஜோதி
புறப்பூ புறத்திற் புனையுரு வாக்கிட
அறத்துடன் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
அகப்புறப் பூவகப் புறவுறுப் பியற்றிட
அகத்திடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி
புறப்புறப் பூவதன் புறப்புற வுறுப்புற
அறத்திடை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

## 17. நால்வகைத் தோற்ற விரி

**பாரிடை** வேர்வையில் பையிடை முட்டையில்
ஆருயி ரமைக்கும் அருட்பெருஞ் ஜோதி
ஊர்வன பறப்பன வுறுவன நடப்பன
ஆர்வுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
அசைவில வசைவுள ஆருயிர்த் திரள்பல
அசைவற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
அறிவொரு வகைமுதல் ஐவகை யறுவகை
அறிதர வகுத்த அருட்பெருஞ் ஜோதி

1 அண்மை என்பது—சமீபம். 2 அன்மை என்பது—தீமை.

வெவ்வே றியலொடு வெவ்வேறு பயனுற
அவ்வா றமைத்த அருட்பெருஞ் ஜோதி
சித்திர விசித்திர சிருட்டிகள் பலபல
அத்தகை வகுத்த அருட்பெருஞ் ஜோதி

## 18. ஆண் பெண் இயல்

**பெண்ணினுள்** ளாணும் ஆணினுட் பெண்ணும்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
பெண்ணினுண் மூன்றும் ஆணினுள் ளிரண்டும்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
பெண்ணிடை நான்கும் ஆணிடை மூன்றும்
அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
பெண்ணிய லாணும் ஆணியற் பெண்ணும்
அண்ணுற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
பெண்டிறற் புறத்தும் ஆண்டிற லகத்தும்
அண்டுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
பெண்ணியன் மனமும் ஆணிய லறிவும்
அண்ணுற வகுத்த அருட்பெருஞ் ஜோதி
தனித்தனி வடிவினுந் தக்கஆண் பெண்ணியல்
அனைத்துற வகுத்த அருட்பெருஞ் ஜோதி

## 19. காத்தருள் விரி

**உனற்கரு** முயிருள வுடலுள வுலகுள
அனைத்தையும் வகுத்த அருட்பெருஞ் ஜோதி
ஓவுறு மெழுவகை உயிர்முத லனைத்தும்
ஆவகை வகுத்த அருட்பெருஞ் ஜோதி
பைகளின் முட்டையிற் பாரினில் வேர்வினில்
ஐபெற வமைத்த அருட்பெருஞ் ஜோதி
தாய்கருப் பையினுள் தங்கிய வுயிர்களை
ஆய்வுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
முட்டைவாய்ப் பயிலு முழுவுயிர்த் திரள்களை
அட்டமே காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
நிலம்பெறு முயிர்வகை நீள்குழு வனைத்தும்
அலம்பெறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
வேர்வுற வுதித்த மிகுமுயிர்த் திரள்களை
ஆர்வுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
உடலுறு பிணியால் உயிருடல் கெடாவகை
அடலுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

சிசுமுதல் பருவச் செயல்களி னுயிர்களை
அசைவறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
உயிருறு முடலையும் உடலுறு முயிரையும்
அயர்வறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
பாடுறு மவத்தைகள் பலவினு முயிர்களை
ஆடுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
மூச்சுட ராதியா லெச்சக வுயிரையும்
[1] அச்சறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
வான்முகிற் சத்தியான் மழைபொழி வித்துயிர்
[2] ஆனறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
இன்புறு சத்தியா லெழின்மழை பொழிவித்
தன்புறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
எண்ணியல் சத்தியா லெல்லா வுலகினும்
அண்ணுயிர் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
அண்டப் புறப்புற அமுதம் பொழிந்துயிர்
அண்டுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
தேவரை யெல்லாந் திகழ்புற வமுதளித்
தாவகை காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
அகப்புற வமுதளித் தைவரா திகளை
அகப்படக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
தருமக வமுதாற் சத்திசத் தர்களை
அருளினிற் காக்கும் அருட்பெருஞ் ஜோதி
காலமு நியதியுங் காட்டியெவ் வுயிரையும்
[3] ஆலுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
விச்சையை யிச்சையை விளைவித் துயிர்களை
அச்சறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
போகமுங் களிப்பும் பொருந்துவித் துயிர்களை
ஆகமுட் காக்கும் அருட்பெருஞ் ஜோதி
கலையறி வளித்துக் களிப்பினி லுயிரெலாம்
அலைவறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
விடய நிகழ்ச்சியான் மிகுமுயி ரனைத்தையும்
அடைவுறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
துன்பளித் தாங்கே சுகமளித் துயிர்களை
அன்புறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி
கரணேந் தியத்தாற் களிப்புற வுயிர்களை
அரணேர்ந் தளித்தருள் அருட்பெருஞ் ஜோதி

1 அச்சு-அஞ்சுதலென்னு முதனிலைத் தொழிற்பெயர். 2 அற-மிகவும்.
3 ஆல் என்பது—அசைவு.

எத்தகை யெவ்வுயி ரெண்ணின வவ்வுயிர்க்
கத்தகை யளித்தருள் அருட்பெருஞ் ஜோதி

எப்படி யெவ்வுயி ரெண்ணின வவ்வுயிர்க்
கப்படி யளித்தருள் அருட்பெருஞ் ஜோதி

ஏங்கா துயிர்த்திர ளெங்கெங் கிருந்தன
ஆங்காங் களித்தருள் அருட்பெருஞ் ஜோதி

சொல்லுறு மசுத்தத் தொல்லுயிர்க் கவ்வகை
அல்லலிற் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

சுத்தமு மசுத்தமுந் தோயுயிர்க் கிருமையின்
அத்தகை காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

வாய்ந்திடுஞ் சுத்த வகையுயிர்க் கொருமையின்
ஆய்ந்துறக் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

எவையெலா மெவையெலா மீண்டின வீண்டின
அவையெலாங் காத்தருள் அருட்பெருஞ் ஜோதி

## 20. அடக்கி யருள் விரி

அண்டத் துரிசையு மகிலத் துரிசையும்
அண்டற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

பிண்டத் துரிசையும் பேருயிர்த் துரிசையும்
அண்டற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

உயிருறு மாயையி னுறுவிரி வனைத்தும்
அயிரற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

உயிருறு மிருவினை யுறுவிரி வனைத்தும்
அயர்வற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

காமப் புடைப்புயிர் கண்டொட ராவகை
ஆமற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

பொங்குறு வெகுளிப் புடைப்புக ளெல்லாம்
அங்கற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

மதம்புரை மோகமு மற்றவு மாங்காங்
கதம்பெற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

வடுவுறு மசுத்த வாதனை யனைத்தையும்
அடர்வற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

சுத்தமு மசுத்தமுந் தோய்ந்தவா தனைகளை
அத்தகை யடக்கும் அருட்பெருஞ் ஜோதி

நால்வயிற் றுரிசு நண்ணுயி ராதியில்
ஆலற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

நால்வயிற் படைப்பு நால்வயிற் காப்பும்
ஆலற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

மூவிடத் திருமையின் முன்னிய தொழில்களில்
ஆவிடத் தடக்கும் அருட்பெருஞ் ஜோதி
மூவிட மும்மையின் முன்னிய தொழில்களில்
ஆவிட மடக்கும் அருட்பெருஞ் ஜோதி
தத்துவச் சேட்டையுந் தத்துவத் துரிசும்
அத்தகை யடக்கும் அருட்பெருஞ் ஜோதி
சுத்தமா நிலையிற் சூழ்வுறு விரிவை
அத்தகை யடக்கும் அருட்பெருஞ் ஜோதி

## 21. திரை விளக்கம்

**கரவின்மா** மாயைக் கரும்பெருந் திரையால்
அரசது மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
பேருறு நீலப் பெருந்திரை யதனால்
ஆருயிர் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
பச்சைத் திரையாற் பரவெளி யதனை
அச்சுற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
செம்மைத் திரையாற் சித்துறு வெளியை
அம்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
பொன்மைத் திரையாற் பொருளுறு வெளியை
அன்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
வெண்மைத் திரையான் மெய்ப்பதி வெளியை
அண்மையின் மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
கலப்புத் திரையாற் கருதனு பவங்களை
அலப்புற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
விடய நிலைகளை வெவ்வேறு திரைகளால்
அடர்புற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
தத்துவ நிலைகளைத் தனித்தனித் திரையால்
அத்திற மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி
திரைமறைப் பெல்லாந் தீர்த்தாங் காங்கே
அரசுறக் காட்டும் அருட்பெருஞ் ஜோதி

## 22. அருளில் தெருட்டல்

**தோற்றமா** மாயைத் தொடர்பறுத் தருளின்
ஆற்றலைக் காட்டும் அருட்பெருஞ் ஜோதி
சுத்தமா மாயைத் தொடர்பறுத் தருளை
அத்தகை காட்டும் அருட்பெருஞ் ஜோதி
எனைத்தா ணவமுத லெல்லாந் தவிர்த்தே
அனுக்கிர கம்புரி அருட்பெருஞ் ஜோதி

விடைய மறைப்பெலாம் விடுவித் துயிர்களை
அடைவுறத் தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

சொருப மறைப்பெலாந் தொலைப்பித் துயிர்களை
அருளினிற் றெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

மறைப்பின் மறைந்தன வருவித் தாங்கே
அறத்தொடு தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

எவ்வகை யுயிர்களும் இன்புற வாங்கே
அவ்வகை தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

கடவுளர் மறைப்பைக் கடிந்தவர்க் கின்பம்
அடைவுறத் தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

சத்திகண் மறைப்பைத் தவிர்த்தவர்க் கின்பம்
அத்துறத் தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

சத்தர்கண் மறைப்பைத் தவிர்த்தவர்க் கின்பம்
அத்தகை தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

படைக்குந் தலைவர்கள் பற்பல கோடியை
அடைப்புறப் படைக்கும் அருட்பெருஞ் ஜோதி

காக்குந் தலைவர்கள் கணக்கில்பல் கோடியை
ஆக்குறக் காக்கும் அருட்பெருஞ் ஜோதி

அடக்குந் தலைவர்கள் அளவிலர் தமையும்
அடர்ப்புற வடக்கும் அருட்பெருஞ் ஜோதி

மறைக்குந் தலைவர்கள் வகைபல கோடியை
அறத்தொடு மறைக்கும் அருட்பெருஞ் ஜோதி

தெருட்டுந் தலைவர்கள் சேர்பல கோடியை
அருட்டிறந் தெருட்டும் அருட்பெருஞ் ஜோதி

ஐந்தொழி லாதிசெய் யைவரா திகளை
ஐந்தொழி லாதிசெய் அருட்பெருஞ் ஜோதி

இறந்தவ ரெல்லா மெழுந்திட வுலகில்
அறந்தலை யளித்த அருட்பெருஞ் ஜோதி

செத்தவ ரெல்லாஞ் சிரித்தாங் கெழுதிறல்
அத்தகை காட்டிய அருட்பெருஞ் ஜோதி

இறந்தவ ரெழுகவென் றெண்ணியாங் கெழுப்பிட
அறந்துணை யெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

செத்தவ ரெழுகெனச் செப்பியாங் கெழுப்பிட
அத்திற லெனக்கருள் அருட்பெருஞ் ஜோதி

சித்தெலாம் வல்ல திறலளித் தெனக்கே
அத்தனென் றோங்கும் அருட்பெருஞ் ஜோதி

## 23. தனிப் பொருள்

ஒன்றதி ரண்டது வொன்றினி ரண்டது
ஒன்றினு ளொன்றது வொன்றெனு மொன்றே
ஒன்றல விரண்டல வொன்றினி ரண்டல
ஒன்றினு ளொன்றல வொன்றெனு மொன்றே
ஒன்றினி லொன்றுள வொன்றினி லொன்றில
ஒன்றுற வொன்றிய வொன்றெனு மொன்றே

## 24. மெய்ப் பொருள்

களங்கநீத் துலகங் களிப்புற மெய்ந்நெறி
விளங்கவென் னுள்ளே விளங்குமெய்ப் பொருளே
மூவிரு நிலையின் முடிநடு முடிமேல்
ஓவற விளங்கும் ஒருமைமெய்ப் பொருளே
எழுநிலை மிசையே யின்புரு வாகி
வழுநிலை நீக்கி வயங்குமெய்ப் பொருளே
நவநிலை மிசையே நடுவுறு நடுவே
சிவமய மாகித் திகழ்ந்தமெய்ப் பொருளே
ஏகா தசநிலை யாததி னடுவே
ஏகா தனமிசை யிருந்தமெய்ப் பொருளே
திரையோ தசநிலை சிவவெளி நடுவே
வரையோ தருசுக வாழ்க்கைமெய்ப் பொருளே
ஈரெண் ணிலையென இயம்புமே னிலையிற்
பூரண சுகமாய்ப் பொருந்துமெய்ப் பொருளே
எல்லா நிலைகளு மிசைந்தாங் காங்கே
எல்லா மாகி யிலங்குமெய்ப் பொருளே
மனாதிகள் பொருந்தா வானடு வானாய்
அனாதியுண் மையதா யமர்ந்தமெய்ப் பொருளே
தானொரு தானாய்த் தானே தானாய்
ஊனுயிர் விளக்கு மொருதனிப் பொருளே
அதுவினு ளதுவா யதுவே யதுவாய்ப்
பொதுவினுள் நடிக்கும் பூரணப் பொருளே
இயல்பினு ளியல்பா யியல்பே யியல்பாய்
உயலுற விளங்கு மொருதனிப் பொருளே
அருவினு ளருவா யருவரு வருவாய்
உருவினுள் விளங்கு மொருபரம் பொருளே
அலகிலாச் சித்தா யதுநிலை யதுவாய்
உலகெலாம் விளங்கும் ஒருதனிப் பொருளே

பொருளினுட் பொருளாய்ப் பொருளது பொருளாய்
ஒருமையின் விளங்கு மொருதனிப் பொருளே
ஆடுறு சித்திகள் அறுபத்து நான்கெழு
கோடியும் விளங்கக் குலவுமெய்ப் பொருளே
கூட்டுறு சித்திகள் கோடிபல் கோடியும்
ஆட்டுற விளக்கும் அருட்பெரும் பொருளே
அறிவுறு சித்திக ளனந்தகோ டிகளும்
பிறிவற விளக்கும் பெருந்தனிப் பொருளே
வீடுக ளெல்லாம் விதிநெறி விளங்க
ஆடல்செய் தருளு மரும்பெரும் பொருளே
பற்றுக ளெல்லாம் பதிநெறி விளங்க
உற்றரு ளாடல்செய் ஒருதனிப் பொருளே

## 25. பராபர இயல்

**பரத்தினிற்** பரமே பரத்தின்மேற் பரமே
பரத்தினுட் பரமே பரம்பர பரமே
பரம்பெறும் பரமே பரந்தரும் பரமே
பரம்பதம் பரமே பரஞ்சிதம் பரமே
பரம்புகழ் பரமே பரம்பகர் பரமே
பரஞ்சுக பரமே பரஞ்சிவ பரமே
பரங்கொள்சிற் பரமே பரஞ்செய் தற்பரமே
தரங்கொள்பொற் பரமே தனிப்பெரும் பரமே
வரம்பரா பரமே வணம்பரா பரமே
பரம்பரா பரமே பதம்பரா பரமே

## 26. பதவியல்

**சத்திய** பதமே சத்துவ பதமே
நித்திய பதமே நிர்க்குண பதமே
தத்துவ பதமே தற்பத பதமே
சித்துறு பதமே சிற்சுக பதமே
தம்பரம் பதமே தனிச்சுகம் பதமே
அம்பரம் பதமே அருட்பரம் பதமே
தந்திர பதமே சந்திர பதமே
மந்திர பதமே மந்தண பதமே
நவந்தரு பதமே நடந்தரு பதமே
சிவந்தரு பதமே சிவசிவ பதமே

## 27. சிவ ரகசியம்

**பிரமமெய்க்** கதியே பிரமமெய்ப் பதியே
பிரமநிர்க் குணமே பிரமசிற் குணமே

பிரமமே பிரமப் பெருநிலை மிசையுறும்
பரமமே பரம பதந்தருஞ் சிவமே

அவனோ டவளா யதுவா யலதாய்
நவமா நிலைமிசை நண்ணிய சிவமே

எம்பொரு ளாகி யெமக்கருள் புரியுஞ்
செம்பொரு ளாகிய சிவமே சிவமே

ஒருநிலை யிதுவே உயர்நிலை யெனுமொரு
திருநிலை மேவிய சிவமே சிவமே

மெய்வைத் தழியா வெறுவெளி நடுவுறு
தெய்வப் பதியாஞ் சிவமே சிவமே

புரைதவிர்த் தெனக்கே பொன்முடி சூட்டிச்
சிரமுற நாட்டிய சிவமே சிவமே

கல்வியுஞ் சாகாக் கல்வியு மழியாச்
செல்வமு மளித்த சிவமே சிவமே

அருளமு தெனக்கே அளித்தரு ளறிவாய்த்
தெருளுற வளர்க்குஞ் சிவமே சிவமே

சத்தெலா மாகியுந் தானொரு தானாஞ்
சித்தெலாம் வல்லதோர் திருவருட் சிவமே

எங்கே கருணை இயற்கையி னுள்ளன
அங்கே விளங்கிய அருட்பெருஞ் சிவமே

யாரே யென்னினும் இரங்கு கின்றார்க்குச்
சீரே யளிக்குஞ் சிதம்பர சிவமே

பொய்ந்நெறி யனைத்தினும் புகுத்தா தெனையருட்
செந்நெறி செலுத்திய சிற்சபைச் சிவமே

கொல்லா நெறியே குருவருள் நெறியெனப்
பல்கா லெனக்குப் பகர்ந்தமெய்ச் சிவமே

உயிரெலாம் பொதுவின் உளம்பட நோக்குக
செயிரெலாம் விடுகெனச் செப்பிய சிவமே

[I] பயிர்ப்புறு கரணப் பரிசுகள் பற்பல
உயிர்த்திர ளொன்றென வுரைத்தமெய்ச் சிவமே

உயிருள்யா மெம்மு ளுயிரிவை யுணர்ந்தே
உயிர்நலம் பரவுகென் றுரைத்தமெய்ச் சிவமே

இயலரு ளொளியோ ரேகதே சத்தினும்
உயிரொளி காண்கவென் றுரைத்தமெய்ச் சிவமே

## 28. திருவருள் வல்லபம்

அருளலா தணுவும் அசைந்திடா ததனால்
அருணலம் பரவுகென் றறைந்தமெய்ச் சிவமே

[I] பயிர்ப்பு என்பது—அருவருப்பு.

அருளுறி னெல்லாம் ஆகுமீ துண்மை
அருளுற முயல்கவென் றருளிய சிவமே
அருணெறி யொன்றே தெருணெறி மற்றெலாம்
இருணெறி யெனவெனக் கியம்பிய சிவமே
அருள்பெறிற் றுரும்புமோ ரைந்தொழில் புரியும்
தெருளிது வெனவே செப்பிய சிவமே
அருளறி வொன்றே யறிவுமற் றெல்லாம்
மருளறி வென்றே வகுத்தமெய்ச் சிவமே
அருட்சுக மொன்றே யரும்பெறற் பெருஞ்சுகம்
மருட்சுகம் பிறவென வகுத்தமெய்ச் சிவமே
அருட்பே றதுவே யரும்பெறற் பெரும்பே
றிருட்பே றறுக்கவென் றியம்பிய சிவமே
அருட்டனி வல்லப மதுவே யெலாஞ்செய்
பொருட்டனிச் சித்தெனப் புகன்றமெய்ச் சிவமே
அருளறி யார்தமை யறியா ரெம்மையும்
பொருளறி யாரெனப் புகன்றமெய்ச் சிவமே
அருணிலை யொன்றே யனைத்தும் பெறுநிலை
பொருணிலை காண்கெனப் புகன்றமெய்ச் சிவமே
அருள்வடி வதுவே யழியாத் தனிவடி
வருள்பெற முயலுகென் றருளிய சிவமே
அருளே நம்மிய லருளே நம்முரு
அருளே நம்வடி வாமென்ற சிவமே
அருளே நம்மடி யருளே நம்முடி
அருளே நம்நடு வாமென்ற சிவமே
அருளே நம்மறி வருளே நம்மனம்
அருளே நங்குண மாமென்ற சிவமே
அருளே நம்பதி யருளே நம்பதம்
அருளே நம்மிட மாமென்ற சிவமே
அருளே நந்துணை யருளே நந்தொழில்
அருளே நம்விருப் பாமென்ற சிவமே
அருளே நம்பொரு ளருளே நம்மொளி
அருளே நாமறி வாயென்ற சிவமே
அருளே நங்குல மருளே நம்மினம்
அருளே நாமறி வாயென்ற சிவமே
அருளே நஞ்சுக மருளே நம்பெயர்
அருளே நாமறி வாயென்ற சிவமே
அருளொளி யடைந்தனை யருளமு துண்டனை
அருண்மதி வாழ்கவென் றருளிய சிவமே

அருணிலை பெற்றனை யருள்வடி வுற்றனை
அருளர சியற்றுகென் றருளிய சிவமே

## 29. சிவபதி

**உள்ளகத்** தமர்ந்தென துயிரிற் கலந்தருள்
வள்ளல்சிற் றம்பலம் வளர்சிவ பதியே
நிகரிலா வின்ப நிலைநடு வைத்தெனைத்
தகவொடு காக்குந் தனிச்சிவ பதியே
சுத்தசன் மார்க்க சுகநிலை தனிலெனைச்
சத்திய னாக்கிய தனிச்சிவ பதியே
ஐவருங் காண்டற் கரும்பெரும் பொருளென்
கைவரப் புரிந்த கதிசிவ பதியே
துன்பந் தொலைத்தருட் ஜோதியால் நிறைந்த
இன்ப மெனக்கரு ளெழிற்சிவ பதியே
சித்தமும் வாக்குஞ் செல்லாப் பெருநிலை
ஒத்துற வேற்றிய வொருசிவ பதியே
கையற வனைத்துங் கடிந்தெனைத் தேற்றி
வையமேல் வைத்த மாசிவ பதியே
இன்புறச் சிறியே னெண்ணுதோ றெண்ணுதோ
றன்பொடென் கண்ணுறும் அருட்சிவ பதியே
பிழையெலாம் பொறுத்தெனுட் பிறங்கிய கருணை
மழையெலாம் பொழிந்து வளர்சிவ பதியே
உளத்தினுங் கண்ணினு முயிரினு மெனது
குளத்தினு நிரம்பிய குருசிவ பதியே

## 30. அருள் குரு

**பரமுட** னபரம் பகர்நிலை யிவையெனத்
திறமுற வருளிய திருவருட் குருவே
மதிநிலை யிரவியின் வளர்நிலை யனலின்
றிதிநிலை யனைத்துந் தெரித்தசற் குருவே
கணநிலை யவற்றின் கருநிலை யனைத்துங்
குணமுறத் தெரித்துட் குலவுசற் குருவே
பதிநிலை பசுநிலை பாச நிலையெலாம்
மதியுறத் தெரித்துள் வயங்குசற் குருவே
பிரம ரகசியம் பேசியென் னுளத்தே
தரமுற விளங்குஞ் சாந்தசற் குருவே
பரம ரகசியம் பகர்ந்தென துளத்தே
வரமுற வளர்த்து வயங்குசற் குருவே

சிவரக சியமெலாந் தெரிவித் தெனக்கே
நவநிலை காட்டிய ஞானசற் குருவே

சத்திய லனைத்துஞ் சித்தியன் முழுதும்
அத்தகை தெரித்த அருட்சிவ குருவே

அறிபவை யெல்லாம் அறிவித் தென்னுள்ளே
பிறிவற விளங்கும் பெரியசற் குருவே

கேட்பவை யெல்லாங் கேட்பித் தென்னுளே
வேட்கையின் விளங்கும் விமலசற் குருவே

காண்பவை யெல்லாங் காட்டுவித் தெனக்கே
மாண்பத மளித்து வயங்குசற் குருவே

செய்பவை யெல்லாஞ் செய்வித் தெனக்கே
உய்பவை யளித்தெனுள் ஓங்குசற் குருவே

உண்பவை யெல்லா முண்ணுவித் தென்னுள்
பண்பினில் விளங்கும் பரமசற் குருவே

சாகாக் கல்வியின் றரமெலாங் கற்பித்
தேகாக் கரப்பொரு ளீந்தசற் குருவே

சத்திய மாஞ்சிவ சித்திக ளனைத்தையும்
மெய்த்தகை யளித்தெனுள் விளங்குசற் குருவே

எல்லா நிலைகளு மேற்றிச் சித்தெலாம்
வல்லா னெனவெனை வைத்தசற் குருவே

## 31. உயிர்த் தாய்

சீருற வருளாந் தேசுற வழியாப்
பேருற வென்னைப் பெற்றநற் றாயே

பொருந்திய வருட்பெரும் போகமே யுறுகெனப்
பெருந்தய வாலெனைப் பெற்றநற் றாயே

ஆன்றசன் மார்க்கம் அணிபெற வெனைத்தான்
ஈன்றமு தளித்த இனியநற் றாயே

பசித்திடு தோறுமென் பாலணைந் தருளால்
வசித்தமு தருள்புரி வாய்மைநற் றாயே

தளர்தோ றடியேன் சார்பணைந் தென்னை
உளந் தெளிவித்த ஒருமைநற் றாயே

அருளமு தேமுத லைவகை யமுதமும்
தெருளுற வெனக்கருள் செல்வநற் றாயே

இயலமு தேமுத லெழுவகை யமுதமும்
உயலுற வெனக்கரு ளுரியநற் றாயே

நண்புறு மெண்வகை நவவகை யமுதமும்
பண்புற வெனக்கருள் பண்புடைத் தாயே

மற்றுள வமுத வகையெலா மெனக்கே
உற்றுண வளித்தரு ளோங்குநற் றாயே

கலக்கமு மச்சமுங் கடிந்தெனை யுளத்தே
அலக்கணுந் தவிர்த்தரு ளன்புடைத் தாயே

துய்ப்பினி லனைத்துஞ் சுகம்பெற வளித்தெனக்
கெய்ப்பெலாந் தவிர்த்த இன்புடைத் தாயே

சித்திக ளெல்லாந் தெளிந்திட வெனக்கே
சத்தியை யளித்த தயையுடைத் தாயே

சத்தினி பாதந் தனையளித் தெனைமேல்
வைத்தமு தளித்த மரபுடைத் தாயே

சத்திசத் தர்களெலாஞ் சார்ந்தெனை தேவல்செய்
சித்தியை யளித்த தெய்வநற் றாயே

தன்னிக ரில்லாத் தலைவனைக் காட்டியே
என்னைமே லேற்றிய வினியநற் றாயே

வெளிப்பட விரும்பிய விளைவெலா மெனக்கே
அளித்தளித் தின்புசெய் யன்புடைத் தாயே

எண்ணகத் தொடுபுறத் தென்னையெஞ் ஞான்றுங்
கண்ணெனக் காக்குங் கருணைநற் றாயே

இன்னரு ளமுதளித் திறவாத் திறல்புரிந்
தென்னை வளர்த்திடு மின்புடைத் தாயே

என்னுட லென்னுயி ரென்னறி வெல்லாம்
[1] தன்னவென் றாக்கிய தயையுடைத் தாயே

தெரியா வகையாற் சிறியேன் றளர்ந்திடத்
தரியா தணைத்த தயையுடைத் தாயே

சினமுத லனைத்தையுந் தீர்த்தெனை நனவினுங்
கனவினும் பிரியாக் கருணைநற் றாயே

தூக்கமுஞ் சோம்புமென் றுன்பமு மச்சமும்
ஏக்கமு நீக்கிய என்றனித் தாயே

## 32. உயிர்த் தந்தை

**துன்பெலாந்** தவிர்த்துளே யன்பெலா நிரம்ப
இன்பெலா மளித்த என்றனித் தந்தையே

எல்லா நன்மையு மென்றனக் களித்த
எல்லாம் வல்லசித் தென்றனித் தந்தையே

நாயிற் கடையே னலம்பெறக் காட்டிய
தாயிற் பெரிதுந் தயவுடைத் தந்தையே

1 தன்ன — அஃறிணைப் பலவின்பாற் படர்க்கைப்பெயர்.

அறிவிலாப் பருவத் தறிவெனக் களித்தே
பிறிவிலா தமர்ந்த பேரருட் டந்தையே
புன்னிக ரில்லேன் பொருட்டிவ ணடைந்த
தன்னிக ரில்லாத் தனிப்பெருந் தந்தையே
அகத்தினும் புறத்தினு மமர்ந்தருட் ஜோதி
ஜகத்தினி லெனக்கே தந்தமெய்த் தந்தையே
இணையிலாக் களிப்புற் றிருந்திட வெனக்கே
துணையடி சென்னியிற் சூட்டிய தந்தையே
ஆதியீ றறியா வருளர சாட்சியிற்
ஜோதிமா மகுடஞ் சூட்டிய தந்தையே
எட்டிரண் டறிவித் தெனைத்தனி யேற்றிப்
பட்டிமண் டபத்திற் பதித்தமெய்த் தந்தையே
தங்கோ லளவது தந்தருட் ஜோதிச்
செங்கோல் செலுத்தெனச் செப்பிய தந்தையே
தன்பொரு ளனைத்தையுந் தன்னர சாட்சியில்
என்பொரு ளாக்கிய வென்றனித் தந்தையே
தன்வடி வனைத்தையுந் தன்னர சாட்சியில்
என்வடி வாக்கிய வென்றனித் தந்தையே
தன்சித் தனைத்தையுந் தன்சமு கத்தினில்
என்சித் தாக்கிய வென்றனித் தந்தையே
தன்வச மாகிய தத்துவ மனைத்தையும்
என்வச மாக்கிய வென்னுயிர்த் தந்தையே
தன்கையிற் பிடித்த தனியருட் ஜோதியை
என்கையிற் கொடுத்த வென்றனித் தந்தையே
தன்னையுந் தன்னருட் சத்தியின் வடிவையும்
என்னையு மொன்றென வியற்றிய தந்தையே
தன்னிய லென்னியல் தன்செய லென்செயல்
என்ன வியற்றிய வென்றனித் தந்தையே
தன்னுரு வென்னுரு தன்னுரை யென்னுரை
என்ன வியற்றிய வென்றனித் தந்தையே
சதுரப் பேரருட் டனிப்பெருந் தலைவனென்
றெதிரற் றோங்கிய வென்னுடைத் தந்தையே
மனவாக் கறியா வரைப்பினி லெனக்கே
இனவாக் கருளிய வென்னுயிர்த் தந்தையே
உணர்ந்துணர்ந் துணரினு முணராப் பெருநிலை
அணைந்திட வெனக்கே யருளிய தந்தையே
துரியவாழ் வுடனே சுகபூ ரணமெனும்
பெரியவாழ் வளித்த பெருந்தனித் தந்தையே

ஈறிலாப் பதங்கள் யாவையுங் கடந்த
பேறளித் தாண்ட பெருந்தகைத் தந்தையே

எவ்வகைத் திறத்தினு மெய்துதற் கரிதாம்
அவ்வகை நிலையெனக் களித்தநற் றந்தையே

இனிப்பிற வாநெறி யெனக்களித் தருளிய
தனிப்பெருந் தலைமைத் தந்தையே தந்தையே

## 33. உயிர்த் துணை

**பற்றயர்ந்** தஞ்சிய பரிவுகண் டணைந்தெனைச்
சற்றுமஞ் சேலெனத் தாங்கிய துணையே

தளர்ந்தவத் தருணமென் றளர்வெலாந் தவிர்த்துட்
கிளர்ந்திட வெனக்குக் கிடைத்தமெய்த் துணையே

துறையிது வழியிது துணிவிது நீசெயும்
முறையிது வெனவே மொழிந்தமெய்த் துணையே

எங்குறு தீமையு மெனைத்தொட ராவகை
கங்குலும் பகலுமெய்க் காவல்செய் துணையே

வேண்டிய வேண்டிய விருப்பெலா மெனக்கே
யீண்டிருந் தருள்புரி யென்னுயிர்த் துணையே

இகத்தினும் பரத்தினு மெனக்கிடர் சாரா
தகத்தினும் புறத்தினு மமர்ந்தமெய்த் துணையே

## 34. உயிர் நட்பு

**அயர்வற** வெனக்கே யருட்டுணை யாகியென்
உயிரினுஞ் சிறந்த வொருமைஎன் னட்பே

அன்பினிற் கலந்தென தறிவினிற் பயின்றே
இன்பினி லளைந்தவென் னின்னுயிர் நட்பே

நான்புரி வனவெலாந் தான்புரிந் தெனக்கே
வான்பத மளிக்க வாய்த்தநன் னட்பே

உள்ளமு முணர்ச்சியு முயிருங் கலந்துகொண்
டெள்ளுறு நெய்யிலென் னுள்ளுறு நட்பே

செற்றமுந் தீமையுந் தீர்த்துநான் செய்த
குற்றமுங் குணமாக் கொண்டவென் னட்பே

குணங்குறி முதலிய குறித்திடா தெனையே
அணங்கறக் கலந்த அன்புடை நட்பே

பிணக்கும் பேதமும் பேயுல கோர்புகல்
கணக்குந் தீர்த்தெனைக் கலந்தநன் னட்பே

சவலைநெஞ் சகத்தின் றளர்ச்சியு மச்சமுங்
கவலையுந் தவிர்த்தெனைக் கலந்தநன் னட்பே

## 35. உயிர் உறவு

**க**ளைப்பறிந் தெடுத்துக் கலக்கந் தவிர்த்தெனக்
கிளைப்பறிந் துதவிய என்னுயி ருறவே

தன்னைத் தழுவுறு தாஞ்சிறி தறியா
தென்னைத் தழுவிய வென்னுயி ருறவே

மனக்குறை நீக்கிநல் வாழ்வளித் தென்றும்
எனக்குற வாகிய வென்னுயி ருறவே

துன்னு மனாதியே சூழ்ந்தெனைப் பிரியா
தென்னுற வாகிய என்னுயி ருறவே

## 36. இயற்கை உண்மை (சத்து)

**என்றுமோர்** நிலையா யென்றுமோ ரியலாய்
என்றுமுள் ளதுவா மென்றனிச் சத்தே

அனைத்துல கவைகளு மாங்காங் குணரினும்
இனைத்தென வறியா வென்றனிச் சத்தே

பொதுமறை முடிகளும் புகலவை முடிகளும்
இதுவெனற் கரிதா மென்றனிச் சத்தே

ஆகம முடிகளு மவைபுகல் முடிகளும்
ஏகுதற் கரிதா மென்றனிச் சத்தே

சத்தியஞ் சத்தியஞ் சத்திய மெனவே
இத்தகை வழுத்து மென்றனிச் சத்தே

துரியமுங் கடந்ததோர் பெரியவான் பொருளென
உரைசெய்வே தங்க ளுன்னுமெய்ச் சத்தே

அன்றத னப்பா லதன்பரத் ததுதான்
என்றிட நிறைந்த வென்றனிச் சத்தே

## 37. இயற்கை விளக்கம் (சித்து)

**என்றுமுள்** ளதுவா யெங்குமோர் நிறைவாய்
என்றும் விளங்கிடு மென்றனிச் சித்தே

சத்திகள் பலவாய்ச் சத்தர்கள் பலவாய்
இத்தகை விளங்கு மென்றனிச் சித்தே

தத்துவம் பலவாய்த் தத்துவி பலவாய்
இத்தகை விளங்கு மென்றனிச் சித்தே

படிநிலை பலவாய்ப் பதநிலை பலவாய்
இடிவற விளங்கிடு மென்றனிச் சித்தே

மூர்த்தர்கள் பலவாய் மூர்த்திகள் பலவாய்
ஏற்பட விளக்கிடு மென்றனிச் சித்தே

உயிர்வகை பலவா யுடல்வகை பலவாய்
இயலுற விளக்கிடு மென்றனிச் சித்தே
அறிபவை பலவா யறிவன பலவாய்
எறிவற விளக்கிடு மென்றனிச் சித்தே
நினைபவை பலவாய் நினைவன பலவாய்
இனைவற விளக்கிடு மென்றனிச் சித்தே
காட்சிகள் பலவாய்க் காண்பன பலவாய்
ஏட்சியின் விளக்கிடு மென்றனிச் சித்தே
செய்வினை பலவாய்ச் செய்வன பலவாய்
எய்வற விளக்கிடு மென்றனிச் சித்தே
அண்ட சராசர மனைத்தையும் பிறவையும்
எண்டர விளக்கு மென்றனிச் சித்தே
எல்லாம் வல்லசித் தெனமறை புகன்றிட
எல்லாம் விளக்கிடு மென்றனிச் சித்தே

## 38. இயற்கை இன்பம் (ஆனந்தம்)

**ஒன்றதி** லொன்றென் றுரைக்கவும் படாதாய்
என்றுமோர் படித்தா மென்றனி இன்பே
இதுவது வென்னு மியலுடை யதுவாய்
எதிரற நிறைந்த வென்றனி யின்பே
ஆக்குறு மவத்தைக ளனைத்தையுங் கடந்துமேல்
ஏக்கற நிறைந்த வென்றனி யின்பே
அறிவுக் கறிவினி லதுவது வதுவாய்
எறிவற் றோங்கிய வென்றனி யின்பே
விடய மவற்றினு மேன்மேல் விளைந்தவை
இடையிடை யோங்கிய வென்றனி யின்பே
இம்மையு மறுமையு மியம்பிடு மொருமையும்
எம்மையு நிரம்பிடு மென்றனி யின்பே
முத்தர்கள் சித்தர்கள் சத்திகள் சத்தர்கள்
எத்திறத் தவர்க்குமா மென்றனி யின்பே
எல்லா நிலைகளி னெல்லா வுயிருறும்
எல்லா வின்புமா மென்றனி இன்பே

## 39. அருள் அமுதம்

**கரும்புறு** சாறுங் கனிந்தமுக் கனியின்
விரும்புறு மிரதமு மிக்கதீம் பாலும்
குணங்கொள் கோற்றேனுங் கூட்டியொன் றாக்கி
மணங்கொளப் பதஞ்செய் வகையுற வியற்றிய

உணவெனப் பலகா லுரைக்கினு நிகரா
வணமுறு மின்ப மயமே யதுவாய்க்
கலந்தறி வுருவாய்க் கருதுதற் கரிதாய்
நலந்தரு விளக்கமு நவிலருந் தண்மையும்
உள்ளதா யென்று முள்ளதா யென்னுள்
உள்ளதா யென்றன் உயிருள முடம்புடன்
எல்லா மினிப்ப இயலுறு சுவையளித்
தெல்லாம் வல்லசித் தியற்கைய தாகிச்
சாகா வரமுந் தனித்தபே ரறிவும்
மாகா தலிற்சிவ வல்லப சத்தியும்
செயற்கரு மனந்த சித்தியு மின்பமும்
மயக்கறத் தருந்திறல் வண்மைய தாகிப்
பூரண வடிவாய்ப் பொங்கிமேற் றதும்பி
ஆரண முடியுட னாகம முடியுங்
கடந்தென தறிவாங் கனன்மேற் சபைநடு
நடந்திகழ் கின்றமெய்ஞ் ஞானவா ரமுதே
சத்திய வமுதே தனித்திரு வமுதே
நித்திய வமுதே நிறைசிவ வமுதே
சச்சிதா னந்தத் தனிமுத லமுதே
மெய்ச்சிதா காச விளைவரு ளமுதே
ஆனந்த வமுதே யருளொளி யமுதே
தானந்த மில்லாத் தத்துவ வமுதே
நவநிலை தருமோர் நல்லதெள் ளமுதே
சிவநிலை தனிலே திரண்டவுள் ளமுதே
பொய்படாக் கருணைப் புண்ணிய வமுதே
கைபடாப் பெருஞ்சீர்க் கடவுள்வா னமுதே
அகம்புற மகப்புற மாகிய புறப்புறம்
உகந்த நான்கிடத்து மோங்கிய வமுதே
பனிமுத னீக்கிய பரம்பர வமுதே
தனிமுத லாய சிதம்பர வமுதே
உலகெலாங் கொள்ளினும் [1] உலப்பிலா வமுதே
அலகிலாப் பெருந்திற லற்புத வமுதே

## 40. மணி

அண்டமு மதன்மே லண்டமு மவற்றுள்
பண்டமுங் காட்டிய பரம்பர மணியே
பிண்டமு மதிலுறு பிண்டமு மவற்றுள்
பண்டமுங் காட்டிய பராபர மணியே

1. உலப்பு—குறைவு.

நினைத்தவை நினைத்தவை நினைத்தாங் கெய்துற
அனைத்தையுந் தருமோ ரரும்பெறன் மணியே

விண்பத மனைத்து மேற்பத முழுவதுங்
கண்பெற நடத்துங் ககனமா மணியே

பார்பத மனைத்தும் பகரடி முழுவதுஞ்
சார்புற நடத்துஞ் சரவொளி மணியே

அண்டகோ டிகளெலா மரைக்கணத் தேகிக்
கண்டுகொண் டிடவொளிர் கலைநிறை மணியே

சராசர வுயிர்தொறுஞ் சாற்றிய பொருடொறும்
விராவியுள் விளங்கும் வித்தக மணியே

மூவரு முனிவரு முத்தருஞ் சித்தருந்
தேவரு மதிக்குஞ் சித்திசெய் மணியே

தாழ்வெலாந் தவிர்த்துச் சகமிசை யழியா
வாழ்வெனக் களித்த வளரொளி மணியே

நவமணி முதலிய நலமெலாந் தருமொரு
சிவமணி யெனுமருட் செல்வமா மணியே

## 41. மந்திரம்

**வான்பெறற்** கரிய வகையெலாம் விரைந்து
நான்பெற வளித்த நாதமந் திரமே

கற்பம் பலபல கழியினு மழியாப்
பொற்புற வளித்த புனிதமந் திரமே

அகரமு முகரமு மழியாச் சிகரமும்
வகரமு மாகிய வாய்மைமந் திரமே

ஐந்தென எட்டென ஆறென நான்கென
முந்துறு மறைமுறை மொழியுமந் திரமே

வேதமு மாகம விரிவுக ளனைத்தும்
ஓதநின் றுலவா தோங்குமந் திரமே

## 42. மருந்து

**உடற்பிணி** யனைத்தையு முயிர்ப்பிணி யனைத்தையும்
அடர்ப்பறத் தவிர்த்த அருட்சிவ மருந்தே

சித்திக்கு மூலமாஞ் சிவமருந் தெனவுளந்
தித்திக்கு ஞானத் திருவருண் மருந்தே

இறந்தவ ரெல்லா மெழுந்திடப் புரியுஞ்
சிறந்தவல் லபமுறு திருவருண் மருந்தே

மரணப் பெரும்பிணி வாரா வகைமிகு
கரணப் பெருந்திறல் காட்டிய மருந்தே

நரைதிரை மூப்பவை நண்ணா வகைதரும்
உரைதரு பெருஞ்சீ ருடையதன் மருந்தே
என்றே யென்னினு மிளமையோ டிருக்க
நன்றே தருமொரு ஞானமா மருந்தே
மலப்பிணி தவிர்த்தருள் வலந்தரு கின்றதோர்
நலத்தகை யதுவென நாட்டிய மருந்தே
சிற்சபை நடுவே திருநடம் புரியும்
அற்புத மருந்தெனும் ஆனந்த மருந்தே

## 43. மாற்றறியாப் பொன்

இடையுறப் படாத வியற்கை விளக்கமாய்த்
தடையொன்று மில்லாத் தகவுடை யதுவாய்
மாற்றிவை யென்ன மதித்தளப் பரிதாய்
ஊற்றமும் வண்ணமு மொருங்குடை யதுவாய்
காட்சிக் கினியதற் கலையுடை யதுவாய்
ஆட்சிக் குரியபன் மாட்சியு முடைத்தாய்க்
கைதவர் கனவினுங் காண்டற் கரிதாய்ச்
செய்தவப் பயனுந் திருவருள் வலத்தால்
உளம்பெறு மிடமெலா முதவுக வெனவே
வளம்பட வாய்த்து மன்னிய பொன்னே
புடம்படாத் தரமும் விடம்படாத் திறமும்
வடம்படா நலமும் வாய்த்தசெம் பொன்னே
மும்மையுந் தருமொரு செம்மையை யுடைத்தாய்
இம்மையே கிடைத்திங் கிலங்கிய பொன்னே
எடுத்தெடுத் துதவினு மென்றுங் குறையா
தடுத்தடுத் தோங்குமெய் யருளுடைப் பொன்னே
தளர்ந்திடே லெடுக்கின் வளர்ந்திடு வேமெனக்
கிளர்ந்திட வுரைத்துக் கிடைத்தசெம் பொன்னே
எண்ணிய தோறு மியற்றுக வென்றெனை
அண்ணியென் கரத்தி லமர்ந்தபைம் பொன்னே
நீகேண் மறக்கினு நின்னையாம் விட்டுப்
போகே மெனவெனைப் பொருந்திய பொன்னே
எண்ணிய வெண்ணியாங் கெய்திட வெனக்குப்
பண்ணிய தவத்தாற் பழுத்தசெம் பொன்னே
விண்ணியற் றலைவரும் வியந்திட வெனக்குப்
புண்ணியப் பயனாற் பூத்தசெம் பொன்னே
நால்வகை நெறியினு நாட்டுக வெனவே
பால்வகை முழுதும் பணித்தபைம் பொன்னே

எழுவகை நெறியினு மியற்றுக வெனவே
முழுவகை காட்டி முயங்கிய பொன்னே

## 44. உலவா நிதி

**எண்ணிய** படியெலா மியற்றுக வென்றெனைப்
புண்ணிய பலத்தாற் பொருந்திய நிதியே
ஊழிதோ றூழி யுலப்புறு தோங்கி
வாழியென் றெனக்கு வாய்த்தநன் னிதியே
இதமுற வூழிதோ றெடுத்தெடுத் துலகோர்க்
குதவினு முலவா தோங்குநன் னிதியே
இருநிதி யெழுநிதி யியனவ நிதிமுதல்
திருநிதி யெல்லாந் தருமொரு நிதியே
எவ்வகை நிதிகளு மிந்தமா நிதியிடை
அவ்வகை கிடைக்குமென் றருளிய நிதியே
அற்புதம் விளங்கு மருட்பெரு நிதியே
கற்பனை கடந்த கருணைமா நிதியே
நற்குண நிதியே சற்குண நிதியே
நிற்குண நிதியே சிற்குண நிதியே

## 45. சோதிமலை

**ப**ளகிலா தோங்கும் பளிக்குமா மலையே
வளமெலா நிறைந்த மாணிக்க மலையே
மதியுற விளங்கு மரகத மலையே
வதிதரு பேரொளி வச்சிர மலையே
உரைமனங் கடந்தாங் கோங்குபொன் மலையே
துரியமேல் வெளியிற் சோதிமா மலையே

## 46. இயற்கைப் பொருண்மை

புற்புதந் திரைநுரை புரைமுத லிலதோர்
அற்புதக் கடலே அமுதத்தெண் கடலே
இருட்கலை தவிர்த்தொளி யெல்லாம் வழங்கிய
அருட்பெருங் கடலே யானந்தக் கடலே
பவக்கடல் கடந்துநான் பார்த்தபோ தருகே
உவப்புறு வளங்கொண் டோங்கிய கரையே
என்துயர்ச் சோடைக ளெல்லாந் தவிர்த்துளம்
நன்றுற விளங்கிய நந்தனக் காவே
சேற்றுநீ ரின்றிநற் றீஞ்சுவை தருமோர்
ஊற்றுநீர் நிரம்ப வுடையபூந் தடமே

கோடைவாய் விரிந்த குளிர்தரு நிழலே
மேடைவாய் வீசிய மெல்லிய காற்றே
களைப்பறக் கிடைத்த கருணைநன் னீரே
இளைப்பற வாய்த்த இன்சுவை யுணவே
தென்னைவாய்க் கிடைத்த செவ்விள நீரே
தென்னைவான் பலத்தின் திருகுதீம் பாலே
நீர்நசை தவிர்க்கு நெல்லியங் கனியே
வேர்விளை பலவின் மென்சுவைச் சுளையே
கட்டுமாம் பழமே கதலிவான் பழமே
இட்டநற் சுவைசெய் இலந்தையங் கனியே
புனிதவான் றருவிற் புதுமையாம் பலமே
கனியெலாங் கூட்டிக் கலந்ததீஞ் சுவையே
இதந்தரு கரும்பி லெடுத்ததீஞ் சாறே
பதந்தரு வெல்லப் பாகினின் சுவையே
சாலவே யினிக்குஞ் சர்க்கரைத் திரளே
ஏலவே நாவுக் கினியகற் கண்டே
உலப்புறா தினிக்கு முயர்மலைத் தேனே
கலப்புறா மதுரங் கனிந்தகோற் றேனே
நவையிலா தெனக்கு நண்ணிய நறவே
சுவையெலாந் திரட்டிய தூயதீம் பதமே
பதம்பெறக் காய்ச்சிய பசுநறும் பாலே
இதம்பெற வுருக்கிய இளம்பசு நெய்யே
உலர்ந்திடா தென்று மொருபடித் தாகி
மலர்ந்துநல் வண்ணம் வயங்கிய மலரே
இகந்தரு புவிமுத லெவ்வுல குயிர்களும்
உகந்திட மணக்குஞ் சுகந்தநன் மணமே
யாழுறு மிசையே யினியவின் னிசையே
ஏழுறு மிசையே யியலரு ளிசையே
திவளொளிப் பருவஞ் சேர்ந்தநல் லவளே
அவளொடுங் கூடி யடைந்ததோர் சுகமே
நாதநல் வரைப்பில் நண்ணிய பாட்டே
வேதகீ தத்தில் விளைதிருப் பாட்டே
நன்மார்க்கர் நாவில் நவிற்றிய பாட்டே
சன்மார்க்க சங்கந் தழுவிய பாட்டே
நம்புறு மாகம நவிற்றிய பாட்டே
எம்பல மாகிய வம்பலப் பாட்டே
என்மனக் கண்ணே என்னருட் கண்ணே
என்னிரு கண்ணே யென்கணுண் மணியே

என்பெருங் களிப்பே யென்பெரும் பொருளே
என்பெருந் திறலே யென்பெருஞ் செயலே
என்பெருந் தவமே யென்றவப் பலனே
என்பெருஞ் சுகமே யென்பெரும் பேறே
என்பெரு வாழ்வே யென்றன்வாழ் முதலே
என்பெரு வழக்கே யென்பெருங் கணக்கே
என்பெரு நலமே யென்பெருங் குலமே
என்பெரு வலமே யென்பெரும் புலமே
என்பெரு வரமே யென்பெருந் தரமே
என்பெரு நெறியே யென்பெரு நிலையே
என்பெருங் குணமே யென்பெருங் கருத்தே
என்பெருந் தயவே யென்பெருங் கதியே
என்பெரும் பதியே யென்னுயி ரியலே
என்பெரு நிறைவே யென்றனி யறிவே

## 47. தனி அன்பு

தோலெலாங் குழைந்திடச் சூழ்நரம் பனைத்தும்
மேலெலாங் கட்டவை விட்டுவிட் டியங்கிட
என்பெலா நெக்குநெக் கியலிடை நெகிழ்ந்திட
மென்புடைத் தசையெலா மெய்யுறத் தளர்ந்திட
இரத்த மனைத்துமுள் ளிறுகிடச் சுக்கிலம்
உரத்திடை பந்தித் தொருதிர ளாயிட
மடலெலா மூளை மலர்ந்திட அமுதம்
உடலெலா மூற்றெடுத் தோடி நிரம்பிட
ஒண்ணுதல் வியர்த்திட ஒளிமுக மலர்ந்திடத்
தண்ணிய வுயிர்ப்பினிற் சாந்தந் ததும்பிட
உண்ணகை தோற்றிட வுரோமம் பொடித்திடக்
கண்ணினீர் பெருகிக் கால்வழிந் தோடிட
வாய்துடித் தலறிட வளர்செவித் துணைகளிற்
கூயிசைப் பொறியெலாங் கும்மெனக் கொட்டிட
மெய்யெலாங் குளிர்ந்திட மென்மார் பசைந்திடக்
கையெலாங் குவிந்திடக் காலெலாஞ் சுலவிட
மனங்கனிந் துருகிட மதிநிறைந் தொளிர்ந்திட
இனம்பெறு சித்த மியைந்து களித்திட
அகங்கார மாங்காங் கதிகரிப் பமைந்திடச்
சகங்காண வுள்ளந் தழைத்து மலர்ந்திட
அறிவுரு வனைத்து மானந்த மாயிடப்
பொற்புறு மான்மதற் போதமும் போயிடத்

தத்துவ மனைத்துஞ் சாமொருங் கொழிந்திடச்
சத்துவ மொன்றே தனித்துநின் றோங்கிட

உலகெலாம் விடய முளவெலா மறைந்திட
அலகிலா வருளி னாசைமேற் பொங்கிட

என்னுளத் தெழுந்துயி ரெல்லா மலர்ந்திட
என்னுளத் தோங்கிய என்றனி அன்பே

பொன்னடி கண்டருட் புத்தமு துணவே
என்னுளத் தெழுந்த என்னுடை யன்பே

தன்னையே யெனக்குத் தந்தரு ளொளியால்
என்னை வேதித்த என்றனி யன்பே

என்னுளே யரும்பி யென்னுளே மலர்ந்து
என்னுளே விரிந்த என்னுடை யன்பே

என்னுளே விளங்கி யென்னுளே பழுத்து
என்னுளே கனிந்த என்னுடை யன்பே

தன்னுளே நிறைவுறு தரமெலா மளித்தே
என்னுளே நிறைந்த என்றனி யன்பே

துன்புள வனைத்துந் தொலைத்தென துருவை
இன்புரு வாக்கிய என்னுடை யன்பே

[1] பொன்னுடம் பெனக்குப் பொருந்திடும் பொருட்டாய்
என்னுளங் கலந்த என்றனி யன்பே

தன்வச மாகித் ததும்பிமேற் பொங்கி
என்வசங் கடந்த என்னுடை யன்பே

தன்னுளே பொங்கிய தண்ணமு துணவே
என்னுளே பொங்கிய என்றனி யன்பே

## 48. நித்திய விளக்கு

அருளொளி[2] விளங்கிட ஆணவ மெனுமோர்
இருளற வென்னுளத் தேற்றிய விளக்கே

துன்புறு தத்துவத் துரிசெலா நீக்கிநல்
இன்புற வென்னுளத் தேற்றிய விளக்கே

மயலற வழியா வாழ்வுமேன் மேலும்
இயலுற வென்னுளத் தேற்றிய விளக்கே

இடுவெளி யனைத்து மியலொளி விளங்கிட
நடுவெளி நடுவே நாட்டிய விளக்கே

கருவெளி யனைத்துங் கதிரொளி விளங்கிட
உருவெளி நடுவே யொளிதரு விளக்கே

1 சுத்த தேகம். 2 பிரணவ தேகம்.

தேற்றிய வேதத் திருமுடி விளங்கிட
ஏற்றிய ஞான வியலொளி விளக்கே

ஆகம முடிமே லருளொளி விளங்கிட
வேகம தறவே விளங்கொளி விளக்கே

ஆரியர் வழுத்திய வருணிலை யனுதி
காரியம் விளக்குமோர் காரண விளக்கே 1510

## 49. நிறைமதி

**தண்ணிய** வமுதே தந்தெனை துளத்தே
புண்ணியம் பலித்த பூரண மதியே

உய்தர வமுத முதவியென் னுளத்தே
செய்தவம் பலித்த திருவளர் மதியே

பதியெலாந் தழைக்கப் பதம்பெறு மமுத
நிதியெலா மளித்த நிறைதிரு மதியே

பாலெனத் தண்கதிர் பரப்பியெஞ் ஞான்றும்
மேல்வெளி விளங்க விளங்கிய மதியே

## 50. கருணை மழை

**உயங்கிய** உள்ளமு முயிருந் தழைத்திட
வயங்கிய கருணை மழைபொழி மழையே 1520

என்னையும் பணிகொண் டென்னுளே நிரம்ப
மன்னிய கருணை மழைபொழி மழையே

உளங்கொளு மெனக்கே வுவகைமேற் பொங்கி
வளங்கொளக் கருணை மழைபொழி மழையே

நலந்தர வுடலுயிர் நல்லறி வெனக்கே
மலர்ந்திடக் கருணை மழைபொழி மழையே

தூய்மையா லெனது துரிசெலா நீக்கிநல்
வாய்மையாற் கருணை மழைபொழி மழையே

## 51. செஞ்சுடர்

**வெம்மல** விரவது விடிதரு ணந்தனிற்
செம்மையி லுதித்துளந் திகழ்ந்த செஞ்சுடரே 1530

திரையெலாந் தவிர்த்துச் செவ்வியுற் றுங்கே
வரையெலாம் விளங்க வயங்குசெஞ் சுடரே

அலகிலாத் தலைவர்க ளரசுசெய் தத்துவ
உலகெலாம் விளங்க வோங்குசெஞ் சுடரே

முன்னுறு மலவிருள் முழுவது நீக்கியே
யென்னுள வரைமே லெழுந்தசெஞ் சுடரே

ஆதியு நடுவுட னந்தமுங் கடந்த
ஜோதியா யென்னுளஞ் சூழ்ந்த மெய்ச்சுடரே

## 52. அருட் கனல்

உள்ளொளி யோங்கிட வுயிரொளி விளங்கிட
வெள்ளொளி காட்டிய மெய்யருட் கனலே
நலங்கொளப் புரிந்திடு ஞானயா கத்திடை
வலஞ்சுழித் தெழுந்து வளர்ந்தமெய்க் கனலே
வேதமு மாகம விரிவும் பரம்பர
நாதமுங் கடந்த ஞானமெய்க் கனலே
எண்ணிய வெண்ணிய வெலாந்தர வென்னுள்
நண்ணிய புண்ணிய ஞானமெய்க் கனலே
வலமுறு சுத்தசன் மார்க்க நிலைபெறு
நலமெலா மளித்த ஞானமெய்க் கனலே

## 53. பரஞ்சுடர்

இரவொடு பகலிலா வியல்பொது நடமிடு
பரமவே தாந்தப் பரம்பரஞ் சுடரே
வரநிறை பொதுவிடை வளர்திரு நடம்புரி
பரமசித் தாந்தப் பதிபரஞ் சுடரே
சமரச சத்தியச் சபையி னடம்புரி
சமரச சத்தியத் தற்சயஞ் சுடரே

## 54. அருட்பெருஞ்ஜோதி

சபையென துளமெனத் தானமர்ந் தெனக்கே
அபய மளித்ததோர் அருட்பெருஞ் ஜோதி
மருளெலாந் தவிர்த்து வரமெலாங் கொடுத்தே
அருளமு தருத்திய அருட்பெருஞ் ஜோதி
வாழிநின் பேரருள் வாழிநின் பெருஞ்சீர்
ஆழியொன் றளித்த அருட்பெருஞ் ஜோதி
என்னையும் பொருளென வெண்ணியென் னுளத்தே
அன்னையு மப்பனு மாகிவீற் றிருந்து
உலகியற் சிறிதும் உளம்பிடி யாவகை
அலகில்பே ரருளா லறிவது விளக்கிச்
சிறுநெறி செல்லாத் திறனளித் தழியா
துறுநெறி யுணர்ச்சிதந் தொளியுறப் புரிந்து
சாகாக் கல்வியின் தரமெலா முணர்த்திச்
சாகா வரத்தையுந் தந்துமேன் மேலும்

அன்பையும் விளைவித் தருட்பே ரொளியால்
இன்பையு நிறைவித் தென்னையு நின்னையும்

ஒருரு வாக்கியா னுன்னிய படியெலாஞ்
சீருறச் செய்துயிர்த் திறம்பெற வழியா

அருளமு தளித்தனை யருணிலை யேற்றினை
அருளறி வளித்தனை அருட்பெருஞ் ஜோதி

வெல்கநின் பேரருள் வெல்கநின் பெருஞ்சீர்
[1] அல்கலின் றோங்கிய அருட்பெருஞ் ஜோதி

உலகுயிர்த் திரளெலா மொளிநெறி பெற்றிட
இலகுமைந் தொழிலையும் யான்செயத் தந்தனை

போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலி னோங்கிய அருட்பெருஞ் ஜோதி

மூவருந் தேவரு முத்தருஞ் சித்தரும்
யாவரும் பெற்றிடா இயலெனக் களித்தனை

போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலி னோங்கிய அருட்பெருஞ் ஜோதி

சித்திக ளனைத்தையுந் தெளிவித் தெனக்கே
சத்திய நிலைதனைத் தயவினிற் றந்தனை

போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலி னோங்கிய அருட்பெருஞ் ஜோதி

உலகினி லுயிர்களுக் குறுமிடை யூறெலாம்
விலகநீ யடைந்து விலக்குக மகிழ்க

சுத்தசன் மார்க்கச் சுகநிலை பெறுக
உத்தம னாகுக வோங்குக வென்றனை

போற்றிநின் பேரருள் போற்றிநின் பெருஞ்சீர்
ஆற்றலி னோங்கிய அருட்பெருஞ் ஜோதி

அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி
அருட்பெருஞ் ஜோதி அருட்பெருஞ் ஜோதி.

அருட்பெருஞ்ஜோதி

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

அருட்பெருஞ்ஜோதி

---

1 அல்கல் என்பது—குறைதல்.

உ
சிவமயம்
திருச்சிற்றம்பலம்
அருட்பெருஞ்ஜோதி

# 2. பரசிவ வணக்கம்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்
அருட்பெருஞ்ஜோதி

திருவிளங்கச் சிவயோகச் சித்தியெலாம் விளங்கச்
சிவஞான நிலைவிளங்கச் சிவானுபவம் விளங்கத்
தெருவிளங்கு திருத்தில்லைத் திருச்சிற்றம் பலத்தே
திருக்கூத்து விளங்கவொளி சிறந்ததிரு விளக்கே
உருவிளங்க வுயிர்விளங்க வுணர்ச்சியது விளங்க
உலகமெலாம் விளங்கஅரு ளுதவுபெருந் தாயாம்
மருவிளங்கு குழல்வல்லி மகிழ்ந்தொருபால் விளங்க
வயங்குமணிப் பொதுவிளங்க வளர்ந்தசிவக் கொழுந்தே 1

எழுசீரடி ஆசிரிய விருத்தம்
அருட்பெருஞ்ஜோதி

அன்பெனும் பிடியு ளகப்படு மலையே
அன்பெனுங் குடில்புகு மரசே
அன்பெனும் வலைக்குட் படுபரம் பொருளே
அன்பெனுங் கரத்தம ரமுதே
அன்பெனுங் கடத்து ளடங்கிடுங் கடலே
அன்பெனு முயிரொளி ரறிவே
அன்பெனு மணுவு ளமைந்தபே ரொளியே
அன்புரு வாம்பர சிவமே. 2

அருட்பெருஞ்ஜோதி

# 3. பதிவிளக்கம்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்
அருட்பெருஞ்ஜோதி

அகர நிலை விளங்குசத்த ரனைவருக்கு மவர்பால்
அமர்ந்தசத்தி மாரவர்க ளனைவருக்கு மவராற்
பகரவரு மண்டவகை யனைத்தினுக்கும் பிண்டப்
பகுதிகளங் கனைத்தினுக்கும் பதங்களனைத் தினுக்கும்

இகரமுறு முயிரெவைக்குங் கருவிகளங் கெவைக்கும்
எப்பொருட்கு மனுபவங்க ளெவைக்குமுத்தி யெவைக்கும்
சிகரமுதல் சித்திவகை யெவைக்குமொளி வழங்குந்
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர். 1

வண்ணமிகு பூதவெளி பகுதிவெளி முதலா
வகுக்குமடி வெளிகளெலாம் வயங்குவெளி யாகி
எண்ணமுறு மாமவுன வெளியாகி யதன்மேல்
இசைத்தபர வெளியாகி யியலுபய வெளியாய்
அண்ணுறுசிற் பரவெளியாய்த் தற்பரமாம் வெளியாய்
அமர்ந்தபெரு வெளியாகி யருளின்ப வெளியாய்த்
திண்ணமுறுந் தனியியற்கை யுண்மைவெளி யான
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர். 2

சார்பூத விளக்கமொடு பகுதிகளின் விளக்கந்
தத்துவங்கள் விளக்கமெலாந் தருவிளக்க மாகி
நேராதி விளக்கமதாய்ப் பரைவிளக்க மாகி
நிலைத்தபரா பரைவிளக்க மாகியகம் புறமும்
பேராசை விளக்கமதாய்ச் சுத்தவிளக் கமதாய்ப்
பெருவிளக்க மாகியெலாம் பெற்றவிளக் கமதாய்ச்
சீராட விளங்குகின்ற வியற்கைவிளக் கமதாந்
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர். 3

இடம்பெறுமிந் திரியவின்பங் கரணவின்ப முலக
இன்பமுயி ரின்பமுத லெய்துமின்ப மாகித்
தடம்பெறுமோ ரான்மவின்பந் தனித்தவறி வின்பஞ்
சத்தியப்பே ரின்பமுத்தி யின்பமுமா யதன்மேல்
நடம்பெறுமெய்ப் பொருளின்பம் நிரதிசய வின்பம்
ஞானசித்திப் பெரும்போக நாட்டரசின் பமுமாய்த்
திடம்பெறவோங் கியவியற்கைத் தனியின்ப மயமாந்
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர். 4

எல்லாந்தா னுடையதுவா யெல்லாம்வல் லதுவாய்
எல்லாந்தா னனதுவா யெல்லாந்தா னலதாய்ச்
சொல்லாலும் பொருளாலுந் தோன்றுமறி வாலுந்
துணிந்தளக்க முடியாதாய்த் துரியவெளி கடந்த
வல்லாள ரனுபவத்தே யதுவதுவா யவரும்
மதித்திடுங்கா லரியதுவாய்ப் பெரியதுவா யணுவுஞ்
செல்லாத நிலைகளினுஞ் செல்லுவதாய் விளங்குந்
திருச்சிற்றம் பலந்தனிலே தெய்வமொன்றே கண்டீர். 5

அயர்வறுபே ரறிவாகி யவ்வறிவுக் கறிவாய்
அறிவறிவுள் ளறிவாயாங் கதனுள்ளோ ரறிவாய்
மயர்வறுமோ ரியற்கையுண்மைத் தனியறிவாய்ச் செயற்கை
மன்னுமறி வனைத்தினுக்கும் வயங்கியதா ரகமாய்த்
துயரறுதா ரகமுதலா யம்முதற்கோர் முதலாய்த்
துரியநிலை கடந்ததன்மேல் சுத்தசிவ நிலையாய்
உயர்வுறுசிற் றம்பலத்தே யெல்லாந்தா மாகி
ஓங்குகின்ற தனிக்கடவு ளொருவருண்டே கண்டீர். 6

அண்டமெலாம் பிண்டமெலா முயிர்களெலாம் பொருள்கள்
ஆனவெலா மிடங்களெலாம் நீக்கமற நிறைந்தே
கொண்டவெலாங் கொண்டவெலாங் கொண்டுகொண்டு மேலுங்
கொள்வதற்கே யிடங்கொடுத்துக் கொண்டுசலிப் பின்றிக்
கண்டமெலாங் கடந்துநின்றே யகண்டமதா யதுவாய்
கடந்தவெளி யாயதுவுங் கடந்ததனி வெளியாம்
ஒண்டகுசிற் றம்பலத்தே யெல்லாம்வல் லவராய்
ஓங்குகின்ற தனிக்கடவு ளொருவருண்டே கண்டீர். 7

பாரோடுநீர் கனல்காற்று காயமெனும் பூதப்
பகுதிமுதல் பகர்நாதப் பகுதிவரை யான
ஏர்பெறுதத் துவவுருவாய்த் தத்துவகா ரணமாய்
இயம்பியகா ரணமுதலாய்க் காரணத்தின் முடிவாய்
நேருறுமம் முடிவனைத்து நிகழ்ந்திடுபூ ரணமாய்
நித்தியமாய்ச் சத்தியமாய் நிர்க்குணசிற் குணமாய்
ஓர்தருசன் மாத்திரமாந் திருச்சிற்றம் பலத்தே
ஓங்குகின்ற தனிக்கடவு ளொருவருண்டே கண்டீர். 8

இரவிமதி யுடுக்கண்முதல் கலைகளெலாந் தம்மோர்
இலேசமதா யெண்கடந்தே யிலங்கியபிண் டாண்டம்
பரவுமற்றைப் பொருள்களுயிர்த் திரள்கண்முத லெல்லாம்
பகரகத்தும் புறத்துமகப் புறத்துடனப் புறத்தும்
விரவியெங்கு நீக்கமற விளங்கியந்த மாதி
விளம்பரிய பேரொளியா யவ்வொளிப்பே ரொளியாய்
உரவுறுசின் மாத்திரமாந் திருச்சிற்றம் பலத்தே
ஓங்குகின்ற தனிக்கடவு ளொருவருண்டே கண்டீர். 9

ஆற்றுவிட யானந்தந் தத்துவவா னந்தம்
அணியோகா னந்தமதிப் பருஞான னந்தம்
பேற்றுறுமான் மானந்தம் பரமானந் தஞ்சேர்
பிரமானந் தஞ்சாந்தப் பேரானந் தத்தே

என்புடைவந் தணைகவென வியம்புகின்றே னுலகோர்
　　என்சொலினுஞ் சொல்லுகவென் னிலச்சையெலாம் விடுத்தேன்
தென்புடையோர் முகநோக்கித் திருப்பொதுவிற் கின்றோய்
　　சித்தசிகா மணியேயென் திருநடநா யகனே. 4

இறந்திறந்தே யிளைத்தவெலாம் போதுமிந்த வுடம்பே
　　இயற்கையுடம் பாகவரு ளின்னமுத மளித்தென்
புறந்தழுவி யகம்புணர்ந்தே கலந்துகொண்டெந் நாளும்
　　பூரணமாஞ் சிவபோகம் பொங்கியிட விழைந்தேன்
பிறந்திறந்து பொய்க்கதியைப் பெறநினைத்தே மாந்த
　　பேதையர்போ லெனைநினையேல் பெரியதிருக் கதவந்
திறந்தருளி யணைந்திடுவாய் சிற்சபைவா ழரசே
　　சித்தசிகா மணியேயென் திருநடநா யகனே. 5

பொய்யுடையார் விழைகின்ற புணர்ச்சிவிழைந் தேனோ
　　பூணவிழைந் தேனோவான் காணவிழைந் தேனோ
மெய்யுடையா யென்னொடுநீ விளையாட விழைந்தேன்
　　விளையாட்டென் பதுஞானம் விளையும்விளை யாட்டே
பையுடைப்பாம் பனையரொடு மாடுகின்றோ யெனது
　　பண்பறிந்தே நண்புவைத்த பண்புடையோ யின்னே
செய்யுடையென் னொடுகூடி யாடவெழுந் தருள்வாய்
　　சித்தசிகா மணியேயென் திருநடநா யகனே. 6

கூறுகின்ற சமயமெலா மதங்களெலாம் பிடித்துக்
　　கூவுகின்றார் பலனொன்றுங் கொண்டறியார் வீணே
நீறுகின்றார் மண்ணாகி நாறுகின்றா ரவர்போல்
　　நீடுலகி லழிந்துவிட நினைத்தேனோ நிலைமேல்
ஏறுகின்ற திறம்விழைந்தே னேற்றுவித்தா யாங்கே
　　இலங்குதிருக் கதவுதிறந் தின்னமுத மளித்தே
தேறுகின்ற மெய்ஞ்ஞான சித்தியுறப் புரிவாய்
　　சித்தசிகா மணியேயென் திருநடநா யகனே. 7

வேதநெறி யாகமத்தி னெறிபவுரா ணங்கள்
　　விளம்புநெறி இதிகாசம் விதித்தநெறி முழுதும்
ஓதுகின்ற சூதனைத்து முளவனைத்துங் காட்டி
　　உள்ளதனை யுள்ளபடி யுணரவுணர்த் தினையே
ஏதமற வுணர்ந்தனன்வீண் போதுகழிப் பதற்கோர்
　　எள்ளளவு மெண்ணமிலே னென்னொடுநீ புணர்ந்தே
தீதறவே யனைத்தும்வல்ல சித்தாடல் புரிவாய்
　　சித்தசிகா மணியேயென் திருநடநா யகனே. 8

கலையுரைத்த கற்பனையே நிலையெனக்கொண் டாடும்
கண்மூடி வழக்கமெலா மண்மூடிப் போக
மலைவறுசன் மார்க்கமொன்றே நிலைபெறவெவ் வுலகும்
வாழ்ந்தோங்கக் கருதியருள் வழங்கினையென் றனக்கே
உலைவறுமிப் பொழுதேநற் றருணமென நீயே
உணர்த்தினைவந் தணைந்தருள்வா யுண்மையுரைத் தவனே
சிலைநிகர்வன் மனங்கரைத்துத் திருவமுத மளித்தோய்
சித்தசிகா மணியேயென் திருநடநா யகனே. 9

திருத்தகுமோர் தருணமிதிற் றிருக்கதவந் திறந்தே
திருவருட்பே ரொளிகாட்டித் திருவமுத மூட்டிக்
கருத்துமகிழ்ந் தென்னுடம்பிற் கலந்துளத்திற் கலந்து
கனிந்துயிரிற் கலந்தறிவிற் கலந்துலக மனைத்தும்
உருத்தகவே யடங்குகின்ற வூழிதொறும் பிறியா
தொன்றாகிக் காலவரை யுரைப்பவெலாங் கடந்தே
திருத்தியொடு விளங்கியரு ளாடல்செய வேண்டுஞ்
சித்தசிகா மணியேயென் திருநடநா யகனே. 10

அருட்பெருஞ்ஜோதி

## 20. பிள்ளைச்சிறு விண்ணப்பம்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**தடித்தவோர்** மகனைத் தந்தையீண் டடித்தாற் றாயுட னணைப்பள் தாயடித்தாற்
பிடித்தொரு தந்தை யணைப்பனிங் கெனக்குப் பேசிய தந்தையுந் தாயும்
பொடித்திரு மேனி யம்பலத் தாடும் புனிதநீ யாதலா லென்னை
அடித்தது போது மணைத்திடல் வேண்டும் அம்மையப் பாவினி யாற்றேன். 1

பெற்றதம் பிள்ளைக் குணங்களை யெல்லாம் பெற்றவ ரறிவரே யல்லால்
மற்றவ ரறியா ரென்றனை யீன்ற வள்ளலே மன்றிலே நடிக்குங்
கொற்றவ வோரெண் குணத்தவ நீதான் குறிக்கொண்ட கொடியனேன் குணங்கள்
முற்றுநன் கறிவா யறிந்துமென் றனைநீ முனிவதென் முனிவுதீர்ந் தருளே. 2

வெம்மதிக் கொடிய மகன்கொடுஞ் செய்கை விரும்பினு மங்ஙனம் புரியச்
சம்மதிக் கின்றா ரவன்றனைப் பெற்ற தந்தைதாய் மகன்விருப் பாலே
இம்மதிச் சிறியேன் விழைந்ததொன் றிலைநீ யென்றனை விழைவிக்க விழைந்தேன்
செம்மதிக் கருணைத் திருநெறி யிதுநின் திருவுள மறியுமே யெந்தாய். 3

பொய்பிழை யனந்தம் புகல்கின்றே னதிலோர் புன்மொழி யாயினும் பிறர்க்கு
நைபிழை யுளதேல் நவின்றிடேன் பிறர்பால் நண்ணிய கருணையாற் பலவே
கைபிழை யாமை கருதுகின் றேனின் கழற்பதம் விழைகின்றே னல்லாற்
செய்பிழை வேறொன் றறிகிலே னந்தோ திருவுள மறியுமே யெந்தாய். 4

அப்பணி முடியென் னப்பனே மன்றில் ஆனந்த நடம்புரி யரசே
இப்புவி தனிலே யறிவுவந் ததுதொட் டிந்தநாள் வரையுமென் றனக்கே
எப்பணி யிட்டா யப்பணி யலதென் இச்சையாற் புரிந்ததொன் றிலையே
செப்புவ தென்னுன் செய்தவை யெல்லாந் திருவுள மறியுமே யெந்தாய். 5

மூன்றொடு பின்னு நீதரு மடவார் முயக்கினிற் பொருந்தினே னதுவும்
பொன்றொடு விளங்குஞ் சபைநடத் தரசுன் புணர்ப்பலா லென்புணர்ப் பலவே
என்றொடு மிருந்திங் கறிகின்ற நினக்கே யெந்தைவே றியம்புவ தென்னோ
சொன்னெடு வானத் தரம்பைய ரெனினுந் துரும்பெனக் காண்கின்றேன் றனித்தே. 6

இன்னுமிங் கெனைநீ மடந்தையர் முயக்கி லெய்துவித் திடுதியே லதுவுன்
தன்னுளப் புணர்ப்பிங் கெனக்கொரு சிறிதுஞ் சம்மத மன்றுநா னிதனைப்
பன்னுவ தென்னே யிதிலரு வருப்புப் பாலுனுங் காலையே யுளதால்
மன்னுமம் பலத்தே நடம்புரி வோயென் மதிப்பெலாந் திருவடி மலர்க்கே. 7

அறிவிலாச் சிறிய பருவத்திற் றனே யருந்தலி லெனக்குள வெருப்பைப்
பிறிவிலா தென்னுட் கலந்தநீ யறிதி யின்றுநான் பேசுவ தென்னே
செறிவிலாக் கடையே னென்னினு மடியேன் றிருவரு ளமுதமே விழைந்தேன்
எறிவிலாச் சுவைவே றெவற்றினும் விழைவோ ரெட்டுணை யேனுமின் றெந்தாய். 8

இன்சுவை யுணவு பலபல வெனக்கிங் கெந்தைநீ கொடுப்பிக்கச் சிறியேன்
நின்சுவை யுணவென் றுண்கின்றே னின்னு நீதரு வித்திடி லதுநின்
தன்சுதந் தரமிங் கெனக்கதி லிறையுஞ் சம்மத மில்லைநான் றனே
என்சுதந் தரத்திற் றேடுவே னல்லேன் தேடிய தும்மிலை யீண்டே. 9

சேறிவதின் மனத்தேன் காசிலே யாசை செய்திலே னிந்தநா ளன்றி
அறிவதில் லாத சிறுபரு வத்து மடுத்தவர் கொடுத்தகா சவர்மேல்
எறிவது மேட்டி லெறிந்தது மெனக்குள் ளிருக்கின்ற நீயறிந் ததுவே
பிறிவதில் லாநின் னருட்பெரும் பொருளைப் பெற்றனன் பேசுவ தென்னே. 10

பணத்திலே சிறிது மாசையொன் றிலைநான் படைத்தவப் பணங்களைப் பலகால்
கிணற்றிலே யெறிந்தேன் குளத்திலு மெறிந்தேன் கேணியி லெறிந்தன னெந்தாய்
குணத்திலே நீதான் கொடுக்கின்ற பொருளை யெறிகலேன் கொடுக்கின்றேன் பிறர்க்கே
கணத்திலே யெல்லாங் காட்டுநின் னருளைக் கண்டன னினிச் சொல்வ தென்னே. 11

கிளைத்தவிவ் வுடம்பி லாசையெள் ளளவுங் கிளைத்திலேன் பசியற வுணவு
திளைத்திடுந் தோறும் வெறுப்பொடு முண்டே னின்றுமே வெறுப்பிலுண் கின்றேன்
தளைத்திடு முடையூ னுடம்பொரு சிறிதுந் தடித்திட நினைத்திலே னின்றும்
இளைத்திட விழைகின் றேனிது நான்ற னியம்பலென் னீயறிந் ததுவே. 12

இவ்வுல கதிலே யிறையர சாட்சி யின்பத்து மற்றையின் பத்தும்
எவ்வள வெனினு மிச்சையொன் றறியே னெண்ணுதோ றருவருக் கின்றேன்
அவ்வுல கதிலே யிந்திரர் பிரம ரரிமுத லோரடை கின்ற
கவ்வையின் பத்து மாசைசற் றறியே னெந்தைநின் கருத்தறிந் ததுவே. 13

சரியையோர் நான்குங் கிரியையோர் நான்குஞ் சாற்றிடும் யோகமோர் நான்கும்
புரியவும் பதங்கள் பொருந்தவு மெனது புந்தியி லாசைசற் றறியேன்
பெரியதோர் ஞான நான்கினும் ஆசை பெற்றிலேன் முத்திபெற் றிடவும்
உரியதோ ரிச்சை யெனக்கிலை யென்ற னுள்ளநீ யறிந்ததே யெந்தாய். 14

இறக்கவு மாசை யில்லையிப் படிநா னிருக்கவு மாசையின் றினிநான்
பிறக்கவு மாசை யிலையுல கெல்லாம் பெரியவர் பெரியவ ரெனவே
சிறக்கவு மாசை யிலைவிசித் திரங்கள் செய்யவு மாசையொன் றில்லை
துறக்கவு மாசை யிலைதுய ரடைந்து தூங்கவு மாசையொன் றிலையே 15

சற்சபைக் குறியார் தம்மொடுங் கூடித் தனித்தபே ரன்புமெய் யறிவும்
நற்சபைக் குறிய வொழுக்கமு மழியா நல்லமெய் வாழ்க்கையும் பெற்றே
சிற்சபை நடமும் பொற்சபை நடமுந் தினந்தொறும் பாடிநின் றாடித்
தெற்சபை யுலகத் துயிர்க்கெலா மின்பஞ் செய்வதென் னிச்சையா மெந்தாய். 16

உருமலி யுலகி லுன்னைநான் கலந்தே யூழிதோ றூழியும் பிரியா
தொருமையுற் றழியாப் பெருமைபெற் றடியே னுன்னையே பாடிநின் றாடி
இருநிலத் தோங்கிக் களிக்கவும் பிறருக் கிடுக்கணுற் றுலவை தவிர்த்தே
திருமணி பொதுவி லன்புடை யவராய்ச் செய்யவு மிச்சைகா ணெந்தாய். 17

எவ்வுயிர்த் திரளு மென்னுயி ரெனவே யெண்ணிநல் லின்புறச் செயவும்
அவ்வுயிர் களுக்கு வருமிடை யூற்றை யகற்றியே யச்சநீக் கிடவுஞ்
செவ்வையுற் றுனது திருப்பதம் பாடிச் சிவசிவ வென்றுகூத் தாடி
ஒவ்வுறு களிப்பா லழிவுறு திங்கே யோங்கவு மிச்சைகா ணெந்தாய். 18

உலகறி வெனக்கிங் குற்றநாள் தொடங்கி யுன்னறி வடையுநாள் வரையில்
இலகியென் னோடு பழகியு மெனைத்தா னெண்ணியும் நண்ணியும் பின்னர்
விலகிய மாந்த ரனைவரு மிங்கே மெய்யுறக் கூடிநின் றனையே
அலகில்பே ரன்பிற் போற்றிவாழ்ந் திடவு மடியனேற் கிச்சைகா ணெந்தாய். 19

திருவளர் திருச்சிற் றம்பல மோங்குஞ் சிதம்பர மெனும்பெருங் கோயில்
உருவளர் மறையு மாகமக் கலையு முறைத்தவா றியல்பெறப் புதுக்கி
மருவளர் மலரின் விளக்கிநின் மேனி வண்ணங்கண் டுளங்களித் திடவுங்
கருவள றுலகிற் றிருவிழாக் காட்சி காணவு மிச்சைகா ணெந்தாய். 20

தங்கமே யனையார் கூடிய ஞான சமரச சுத்தசன் மார்க்கச்
சங்கமே கண்டு களிக்கவுஞ் சங்கஞ் சார்திருக் கோயில் கண்டிடவுந்
துங்கமே பெறுஞ்சற் சங்கநீ டூழி துலங்கவுஞ் சங்கத்தி லடியேன்
அங்கமே குளிர நின்றனைப் பாடி யாடவு மிச்சைகா ணெந்தாய். 21

கருணையே வடிவாய்ப் பிறர்களுக் கடுத்த கடுந்துய ரச்சமா திகளைத்
தருணநின் னருளாற் றவிர்த்தவர்க் கின்பந் தரவும்வன் புலைகொலை யிரண்டும்
ஒருவிய நெறியி னுலகெலா நடக்க வுளுற்றவும் அம்பலந் தனிலே
மருவிய புகழை வழுத்தவும் நின்னை வாழ்த்தவு மிச்சைகா ணெந்தாய். 22

மண்ணுல கதிலே யுயிர்கள்தாம் வருந்தும் வருத்தத்தை யொருசிறி தெனினுங்
கண்ணுறப் பார்த்துஞ் செவியுறக் கேட்டுங் கணமும்நான் சகித்திட மாட்டேன்
எண்ணுறு மெனக்கே நின்னருள் வலத்தா லிசைத்தபோ திசைத்தபோ தெல்லாம்
நண்ணுமவ் வருத்தந் தவிர்க்கநல் வரந்தான் நல்குத லெனக்கிச்சை யெந்தாய். 23

இவையலாற் பிறிதோர் விடயத்தி லிச்சை யெனக்கிலை யிவையெலா மென்னுட்
சிவையொடு மமர்ந்த பெருந்தயா நிதிநின் றிருவுள மறிந்தது தானே
தவமிலே னெனினு மிச்சையின் படிநீ தருதலே வேண்டுமிவ் விச்சை
நவையிலா விச்சை யெனவறி விக்க வறிந்தன னவின்றன னெந்தாய். 24

தனிப்பெருஞ் ஜோதித் தலைவனே யெனது தந்தையே திருச்சிற்றம் பலத்தே
கனிப்பெருங் கருணைக் கடவுளே யடியேன் கருதிநின் றுரைக்கும்விண் ணப்பம்
இனிப்புற நினது திருவுளத் தடைத்தே யெனக்கருள் புரிகநீ விரைந்தே
இனிச்சிறு பொழுதுந் தரித்திடே னுன்ற னிணைமலர்ப் பொன்னடி யாணை. 25

திரிபிலாப் பொருளே திருச்சிற்றம் பலத்தே திகழ்கின்ற தெய்வமே யன்பர்
பரிவுறுந் தோறும் விரைந்துவந் தருளும் பண்பனே பரையிடப் பாகா
பெரியபொற் சபையி னடம்புரி கின்ற பேரருட் ஜோதியே யெனக்கே
உரியநற் றந்தை வள்ளலே யடியே னுரைக்கின்றேன் கேட்டரு ளிதுவே. 26

தானலா திறையு முயிர்க்கசை வில்லாத் தலைவனே திருச்சிற்றம் பலத்தே
வானலால் வேறொன் றிலையென வுரைப்ப வயங்கிய மெய்யின்ப வாழ்வே
ஊனலா வுயிரு முளமுமுள் ளுணர்வு முவப்புற வினிக்குந்தெள் ளமுதே
ஞானநா டகஞ்செய் தந்தையே யடியே னவில்கின்றேன் கேட்டரு ளிதுவே. 27

என்னுயிர்க் குயிராந் தெய்வமே யென்னை யெழுமையுங் காத்தரு ளிறைவா
என்னுளத் தினிக்குந் தீஞ்சுவைக் கனியே யெனக்கறி வுணர்த்திய குருவே
என்னுடை யன்பே திருச்சிற்றம் பலத்தே யெனக்கருள் புரிந்தமெய் யின்பே
என்னையின் றெடுத்த தந்தையே யடியே னிசைக்கின்றேன் கேட்கவிம் மொழியே.

அருட்பெருஞ்ஜோதி

# 21. பிள்ளைப்பெரு விண்ணப்பம்.

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**கருணையா** ரமுதே யென்னுயிர்க் குயிரே கனிந்தசிற் றம்பலக் கனியே
வருணமா மறையின் மெய்ப்பொரு ளாகி வயங்கிய வள்ளலே யன்பர்
தெருணிறை யுளத்தே திகழ்தனித் தலைமைத் தெய்வமே திருவருட் சிவமே
தருணமென் றொருமைத் தந்தையே தாயே தரித்தருள் திருச்செவிக் கிதுவே. 1

என்னையாண் டருளி யென்பிழை பொறுத்த விறைவனே திருச்சிற்றம் பலத்தே
என்னையாண் டஞ்சே லுனக்குநல் லருளிங் கீகுது மென்றவென் குருவே
என்னைவே றெண்ணா துள்ளதே யுணர்த்தி யெனக்குளே விளங்குபே ரொளியே
என்னையீன் றளித்த தந்தையே விரைந்திங் கேற்றருள் திருச்செவிக் கிதுவே. 2

இரும்புநேர் மனத்தேன் பிழையெலாம் பொறுத்தென் னிதயத்தி லெழுந்திருந் தருளி
விரும்புமெய்ப் பொருளாந் தன்னிய லெனக்கு விளங்கிட விளக்கியுட் கலந்தே
கருப்புமுக் கனிபா லமுதொடு செழுந்தேன் கலந்தென வினிக்கின்றோய் பொதுவில்
அரும்பெருஞ் ஜோதி யப்பனே யுளத்தே யடைத்தரு ளென்மொழி யிதுவே. 3

மலத்திலே கிடந்தேன் றனையெடுத் தருளி மன்னிய வடிவளித் தறிஞர்
குலத்திலே பயிலுந் தரமுமிங் கெனக்குக் கொடுத்துளே விளங்குசற் குருவே
பலத்திலே சிற்றம் பலத்திலே பொன்னம் பலத்திலே யன்பர்தம் மறிவாந்
தலத்திலே யோங்குந் தலைவனே யெனது தந்தையே கேட்கவென் மொழியே. 4

விண்டபோ தகரு மறிவரும் பொருளே மெய்யனே யையனே யுலகில்
தொண்டனேன் றன்னை யடுத்தவர் நேயர் சூழ்ந்தவ ருறவினர் தாயர்
கொண்டுடன் பிறந்தோ ரயலவ ரெனுமிக் குறிப்பினர் முகங்களி விளைப்பைக்
கண்டபோ தெல்லா மயங்கியென் னுள்ளங் கலங்கிய கலக்கநீ யறிவாய். 5

சீர்த்தசிற் சபையென் னப்பனே யெனது தெய்வமே யென்பெருஞ் சிறப்பே
ஆர்த்தவிவ் வுலகி லம்மையர் துணைவ ரடுத்தவ ருறவினர் நேயர்
வேர்த்தமற் றயலார் பசியினாற் பிணியால் மெய்யுளம் வெதும்பிய வெதுப்பைப்
பார்த்தபோ தெல்லாம் பயந்தென துள்ளம் பதைத்ததுன் னுளமறி யாதோ. 6

பரைத்தனி வெளியில் நடம்புரிந் தருளும் பரமனே யரும்பெரும் பொருளே
தரைத்தலத் தியன்ற வாழ்க்கையில் வறுமைச் சங்கடப் பாவியால் வருந்தி
நரைத்தவ ரிளையர் முதலினோ ரெனையோர் நண்பனென் றவரவர் குறைகள்
உரைத்தபோ தெல்லா நடுங்கியென் னுள்ள முடைந்ததுன் னுளமறி யாதோ. 7

அன்னையே யப்பா திருச்சிற்றம் பலத்தென் னையனே யிவ்வுல கதிலே
பொன்னையே யுடையார் வறியவர் மடவார் புகலுமா டவரிவர் களுக்குள்
தன்னையே யறியாப் பிணியினா லாவி தளர்கின்றார் தருணமீ தெனவே
சொன்னபோ தெல்லாம் பயந்துநா னடைந்த சோபத்தை நீயறி யாயோ. 8

உண்டதோ றெல்லா மமுதென வினிக்கு மொருவனே சிற்சபை யுடையாய்
விண்டபே ருலகி லம்மவிவ் வீதி மேவுமோ ரகத்திலே யொருவர்
ஒண்டுயிர் மடிந்தா ரலறுகின் றாரென் றொருவரோ டொருவர்தாம் பேசிக்
கொண்டபோ தெல்லாங் கேட்டென துள்ளங் குலைநடுங் கியதறிந் திலையோ. 9

காவியல் கருணை வடிவனே தலைமைக் கடவுளே சிற்சபை தனிலே
மேவிய வொளியே யிவ்வுல கதிலூர் வீதியா திகளிலே மனிதர்
ஆவிபோ னதுகொண் டுறவின ரழுத வழுகுரல் கேட்டபோ தெல்லாம்
பாவியே னுள்ளம் பகீரென நடுங்கிப் பதைத்ததுன் னுளமறி யாதோ. 10

நாதனே யென்னை நம்பிய மாந்தர் ஞாலத்திற் பிணிபல வடைந்தே
ஏதநேர்ந் திடக்கண் டையகோ வடியே னெய்திய சோபமு மிளைப்பும்
ஓதநே ருள்ள நடுக்கமுந் திகைப்பு முற்றபே ரேக்கமா திகளுந்
தீதனே னின்று நினைத்திட வுள்ளந் திடுக்கிட னீயறிந் திலைபோ. 11

கற்றவ ருளத்தே கரும்பினி வினிக்குங் கண்ணுதற் கடவுளே யென்னைப்
பெற்றதாய் நேய ருறவினர் துணைவர் பெருகிய பழக்கமிக் குடையோர்
மற்றவ ரிங்கே தனித்தனி பிரிந்து மறைந்திட்ட தோறுமப் பிரிவை
உற்றுநா னினைக்குந் தோறுமுண் ணடுங்கி யுடைந்தன னுடைகின்றே னெந்தாய்.

என்றுநா டுறுவோர்க் கின்பமே புரியு மெந்தையே யென்றனைச் சூழ்ந்தே
நன்றுநா டியநல் லோருயிர்ப் பிரிவை நாயினேன் கண்டுகேட் டுற்ற
அன்றுநா னடைந்த நடுக்கமுந் துயரு மளவிலை யளவிலை யறிவாய்
இன்றவர் பிரிவை நினைத்திடுந் தோறு மெய்திடுந் துயருநீ யறிவாய். 13

நிலைபுரிந் தருளு நித்தனே யுலகி னெறியலா நெறிகளிற் சென்றே
கொலைபுரிந் திட்ட கொடியவ ரிவரென் றயலவர் குறித்தபோ தெல்லாம்
உலைபுரிந் திடுவெந் தீவயிற் றுள்ளே யுற்றென நடுநடுக் குற்றே
தொலைபுரிந் தோடிக் கண்களை மூடித் துயர்ந்ததும் நீயறிந் ததுவே. 14

ஓர்ந்தவுள் ளகத்தே நிறைந்தொளிர் கின்ற வொருவனே யுலகிய லதிலே
மாந்தர்க ளிறப்பைக் குறித்திடும் பறையின் வல்லொலி கேட்டபோ தெல்லாம்
காந்தியென் னுள்ளங் கலங்கிய கலக்கங் கடவுணீ யேயறிந் திடுவாய்
ஏந்துமிவ் வுலகி லிறப்பெனி லெந்தா யென்னுள நடுங்குவ தியல்பே. 15

மறைமுடி வயங்கு மொருதனித் தலைமை வள்ளலே யுலகர சாள்வோர்
உறையுறு வாள்கொண் டொருவரை யொருவ ருயிரறச் செய்தன ரெனவே
தறையுறச் சிறியேன் கேட்டபோ தெல்லாந் தளர்ந்துள நடுங்கிநின் றயர்ந்தேன்
இறையு மிவ்வுலகிற் கொலையெனி லெந்தா யென்னுள நடுங்குவ தியல்பே. 16

தாய்மொழி குறித்தே கணக்கிலே மற்றோர் தாய்க்குநா லென்பதை யிரண்டா
வாய்மொழி வஞ்சம் புகன்றனன் வரைந்தே னடுங்கினே னினைத்ததை மனத்தே
தூய்மொழி நேயர் நம்பினோ ரில்லிற் சூழ்ந்தன னினைத்தது துயர்ந்தேன்
காய்மொழி புகன்றேன் பொய்மொழி புகன்றேன் கலங்கினே னதுநினைத் தெந்தாய்.17

எட்டரும் பொருளே திருச்சிற்றம் பலத்தே யிலகிய விறைவனே யுலகிற்
பட்டினி யுற்றோர் பசித்தனர் களையால் பரதவிக் கின்றன ரென்றே
ஒட்டிய பிறராற் கேட்டபோ தெல்லாம் உளம்பகீ ரெனநடுக் குற்றேன்
இட்டவிவ் வுலகிற் பசியெனி லெந்தா யென்னுள நடுங்குவ தியல்பே. 18

பல்லிகள் பலவா யிடத்துமுச் சியினும் பகருநேர் முதற்பல வயினும்
சொல்லிய தோறும் பிறர்துயர் கேட்கச் சொல்கின்ற வோவெனச் சூழ்ந்தே
மெல்லிய மனநொந் திளைத்தன னெந்தாய் கூகை வெங்குரல் செயுந்தோறும்
வல்லியக் குரல்கேட் டயர்பசுப் போல வருந்தினே னெந்தைநீ யறிவாய். 19

காக்கைகள் கூவக் கலங்கினேன் பருந்தின் கடுங்குரல் கேட்டுளங் குலைந்தேன்
தாக்கிய வாந்தை குரல்செயப் பயந்தேன் சாக்குரற் பறவையாற் றளர்ந்தேன்
வீக்கிய வேறு கொடுஞ்சகு னஞ்செய் வீக்களால் மயங்கினேன் விடத்தில்
ஊக்கிய பாம்பைக் கண்டபோ துள்ள மொடுங்கினே னடுங்கினே னெந்தாய்.20

வேறுபல் விடஞ்செய் யுயிர்களைக் கண்டு வெருவினேன் வெய்யநாய்க் குழுவின்
சீறிய குரலோ டழுகுரல் கேட்டுத் தியங்கினேன் மற்றைவெஞ் சகுனக்
கூறதாம் விலங்கு பறவையூர் வனவெங் கோள்செயு மாடவர் மடவார்
ஊறுசெய் கொடுஞ்சொல் விவைக்கெலா முள்ள முயங்கினேன் மயங்கினே னெந்தாய்.21

நிறமுறு விழிக்கீழ்ப் புறத்தொடு தோளும் நிறையுடம் பிற்சில வுறுப்பும்
உறவுதோற் றடித்துத் துடித்திடுந் தோறு முன்னிமற் றவைகளை யந்தோ
பிறர்துயர் காட்டத் துடித்தவோ வென்று பேதுற்று மயங்கிநெஞ் சுடைந்தேன்
நறுவிய துகிலிற் கறையுறக் கண்டே நடுங்கினே னெந்தைநீ யறிவாய். 22

மங்கைய ரெனைத்தாம் வலிந்துறுந் தோறும் மயங்கினா மிவரொடு முயங்கி
இங்குளங் களித்தாற் களித்தவர்க் குடனே யின்னலுற் றிடுநமக் கின்னல்
தங்கிய பிறர்தந் துயர்தனைக் காண்ட லாகுமத் துயருறத் தரியேம்
பங்கமீ தெனவே யெண்ணிநா னுள்ளம் பயந்தது மெந்தைநீ யறிவாய். 23

வலிந்தெனை யழைக்கு மடந்தையர் தெருவில் மறந்துவந் தடுத்தபின் னினைந்தே
மலிந்திவர் காணில் விடுவரன் றிவரால மயங்கியுண் மகிழ்ந்தன மெனிலோ
நலிந்திடு பிறர்தந் துயர்தனைக் கண்டே நடுங்குற வருமெனப் பயந்தே
மெலிந்துட னொளித்து வீதிவே றொன்றின் மேவினே னெந்தைநீ யறிவாய்.24

களிப்புறு சுகமா முணவினைக் கண்ட காலத்து முண்டகா லத்தும்
தெளிப்புறு மனத்தோ டஞ்சினே னெனைத்தான் நேர்ந்தபல் சுபங்களில் நேயர்
அளிப்புறு விருந்துண் டமர்கவென் றழைக்க வவர்களுக் கன்பினோ டாங்கே
ஒளிப்புறு வார்த்தை வுரைத்துய லொளித்தே பயத்தொடு முற்றன னெந்தாய்.25

இன்புறு முணவு கொண்டபோ தெல்லா மிச்சுகத் தாலினி யாது
துன்புறுங் கொல்லோ வென்றுள நடுங்கிச் சூழ்ந்தெவு வயிற்றொடு மிருந்தேன்
அன்பிலே யன்பர் கொடுத்தவை யெல்லா மையகோ தெய்வமே யிவற்றால்
வன்புறச் செய்யே லென்றுளம் பயந்து வாங்கியுண் டிருந்தன னெந்தாய். 26

உற்றதா ரணியி லெனக்குல குணர்ச்சி யுற்றநாண் முதலொரு சிலநாள்
பெற்றதாய் வாட்டம் பார்ப்பதற் கஞ்சிப் பேருண வுண்டனன் சிலநாள்
உற்றவர் நேய ரன்புளார் வாட்ட முறுவதற் கஞ்சினே னுண்டேன்
மற்றிவை யல்லாற் சுகவுணுக் கொள்ள மனநடுங் கியதுநீ யறிவாய். 27

தொழுந்தகை யுடைய ஜோதியே யடியேன் சோம்பலால் வருந்திடு தோறும்
அழுந்தவென் னுள்ளம் பயந்ததை யென்னு ளவிடற் கெய்துமோ பகலில்
விழுந்துறு தூக்கம் வரவது தடுத்தும் விட்டிடா வன்மையாற் றூங்கி
எழுந்தபோ தெல்லாம் பயத்தொடு மெழுந்தே னென்செய்வே னென்செய்வே னென்றே. 28

அந்தமோ டாதி யில்லதோர் பொதுவி லரும்பெருஞ் ஜோதியே யடியேன்
சொந்தமோ வறியேன் பகலிரவெல்லாந் தூக்கமே கண்டனன் தூக்கம்
வந்தபோ தெல்லாம் பயத்தொடும் படுத்தேன் மற்றுநா னெழுந்தபோ தெல்லாந்
தொந்தமாம் பயத்தாற் சிவசிவ தூக்கந் தொலைவதெக் காலமென் றெழுந்தேன். 29

உடையவம் பலத்தி லொருவனே யென்ற னுயிர்க்குயி ராகிய வொளியே
கடையனு னனவில் நடுங்கிய நடுக்கங் கணக்கிலே சிறிதுறுங் கனவில்
இடையுறு நடுக்கங் கருதவுஞ் சொலவு மெண்ணவு மெழுதவும் படுமோ
நடையறு சிறியேன் கனவுகண் டுள்ள நடுங்கிடா நாளுமொன் றுளதோ. 30

பகலிர வடியேன் படுத்தபோ தெல்லாந் தூக்கமாம் பாவிவந் திடுமே
இகலுறு கனவாங் கொடியவெம் பாவி யெய்துமே யென்செய்வோ மென்றே
உகலுற வுள்ளே நடுங்கிய நடுக்க முன்னுள மறியுமே யெந்தாய்
நகலுறச் சிறியேன் கனவுகண் டுள்ள நடுங்கிடா நாளுமொன் றுளதோ. 31

தொகுப்புறு சிறுவர் பயிலுங்காற் பயிற்றுந் தொழிலிலே வந்தகோ பத்திற்
சகிப்பிலா மையினு லடித்தன னடித்த தருணநான் கலங்கிய கலக்கம்
வகுப்புற நினது திருவுள மறிபு மற்றுஞ்சில் லுயிர்களிற் கோபம்
மிகப்புகுந் தடித்துப் பட்டபா டெல்லா மெய்யநீ யறிந்ததே யன்றே. 32

ஒடித்தவிவ் வுலகிற் சிறுவர்பாற் சிறிய வுயிர்கள்பாற் றீமைகண் டாங்கே
அடித்திடற் கஞ்சி யுளேந்தன னென்னு லாற்றிடாக் காலத்திற் சிறிதே
பொடித்துநான் பயந்த பயமெலா முனது புந்தியி லறிந்ததே யெந்தாய்
வெடித்தவெஞ் சினமென் னுளமுறக் கண்டே வெதும்பிய நடுக்கநீ யறிவாய். 33

கோபமே வருமோ காமமே வருமோ கொடிய மோகங்களே வருமோ
சாபமே யனைய தடைமதம் வருமோ தாமதப் பாவிவந் திடுமோ
பாபமே புரியும் லோபமே வருமோ பயனில்மாற் சரியம்வந் திடுமோ
தாபஆங் கார மேபுறுமோ வென் றையநான் றளர்ந்தது மறிவாய். 34

காமமா மதமாங் காரமா திகளென் கருத்திலே யுற்றபோ தெல்லாம்
நாமமா ருளத்தே தையகோ நான்று னடுங்கிய நடுக்கநீ யறிவாய்
சேமமா ருலகிற் காமமா திகளைச் செறிந்தவர் தங்களைக் கண்டே
ஆமைபோ லொடுங்கி யடங்கினே னதுவு மையநின் றிருவுள மறியும். 35

கருத்துவே றுகிக் கோயிலிற் புகுந்துன் காட்சியைக் கண்டபோ தெல்லாம்
வருத்தமே யடைந்தேன் பயத்தொடுந் திரும்பி வந்துநொந் திளைத்தன னெந்தாய்
நிருத்தனே நின்னைத் துதித்தபோ தெல்லாம் நெகிழ்ச்சியில் லாமையால் நடுங்கிப்
பருத்தவென் னுடம்பைப் பார்த்திடா தஞ்சிப் படுத்தது மையநீ யறிவாய். 36

புன்புலா லுடம்பி னசுத்தமு மிதனிற் புகுந்துநா னிருக்கின்ற புணர்ப்பும்
என்பொலா மணியே யெண்ணிநா னெண்ணி யேங்கிய வேக்கநீ யறிவாய்
வன்புலா லுண்ணு மனிதரைக் கண்டு மயங்கியுள் நடுங்கி யாற்றுமல்
என்பெலாங் கருக இளைத்தன னந்த இளைப்பையு மையநீ யறிவாய். 37

இந்தவிர் வடிவெம் மிறைவனே யென்றே டியல்கலைத் தருக்கஞ்செய் திடவே
வந்தவர் தம்மைக் கண்டபோ தெல்லாம் மனமிக நடுங்கினே னறிவாய்
சந்தியுற் றொருகாற் படித்தசாத் திரத்தைத் தமியனேன் மீளவுங் கண்டே
நொந்தது முலகப் படிப்பிலென் னுள்ள நொந்தது மையநீ யறிவாய். 38

முனித்தவெவ் வினைபோ நின்னருட் செயலோ தெரிந்திலேன் மோகமே யின்றித்
தனித்தனி யொருசார் மடந்தையர் தமக்கு ளொருத்தியைக் கைதொடச் சார்ந்தேன்
குனித்தமற் றவரைத் தொட்டன னன்றிக் கலப்பிலேன் மற்றிது குறித்தே
பனித்தன னினைக்குந் தோறுமுள் ளுடைந்தேன் பகர்வதென் னெந்தைநீ யறிவாய். 39

பதியனே பொதுவிற் பரமநா டகஞ்செய் பண்பனே நண்பனே யுலகில்
ஓதியனேன் பிறர்பா லுரத்தவார்த் தைகளா லொருசில வாதங்கள் புரிந்தே
மதியிலா மையினு லகங்கரித் ததன்பின் வள்ளலுன் னருளினு லறிந்தே
விதியைநா னொந்து நடுங்கிய தெல்லா மெய்யனே நீயறிந் ததுவே. 40

அருளினை யளிக்கு மப்பனே யுலகி லன்புளார் வலிந்தெனக் கீந்த
பொருளினை வாங்கிப் போனபோ தெல்லாம் புழுங்கிய புழுக்கநீ யறிவாய்
மருளுமப் பொருளைச் சாலகத் தெறிந்து மனமிக விளைத்ததும் பொருளால்
இருளுறு மெனநா னுளநடுங் கியது மெந்தைநின் றிருவுள மறியும். 41

பொருளிலே யுலக மிருப்பதா தலினுல் புரிந்துநா மொருவர்பாற் பலகால்
மருவினுற் பொருளி னிச்சையாற் பலகால் மருவுகின் றுனெனக் கருதி
வெருவுவ ரெனநா னஞ்சியெவ் விடத்து மேவிலே னெந்தைநீ யறிவாய்
ஒருவுமப் பொருளை நினைத்தபோ தெல்லா முவட்டினே னிதுவுநீ யறிவாய். 42

தகைத்தபே ருலகி லையனே யடியேன் தடித்தவுள் ளத்தொடு களித்தே
நகைத்தபோ தெல்லாம் நடுங்கினே னிங்கே நல்லவா கனங்களி லேறி
உகைத்தபோ தெல்லாம் நடுங்கினேன் விரைந்தே யோடிய போதெலாம் பயந்தேன்
பகைத்தபோ தயலார் பகைகளுக் கஞ்சிப் பதுங்கினே னுதுங்கினே னெந்தாய். 43

சகப்புற வாழ்வைப் பார்த்திடிற் கேட்கிற் சஞ்சல முறுமெனப் பயந்தே
நகர்ப்புறத் திருக்குந் தோட்டங்க டோறும் நண்ணியும் பிறவிடத் தலைந்தும்
பகற்பொழு தெல்லா நாடொறுங் கழித்தேன் பகலன்றி யிரவுமப் படியே
மிகப்பல விடத்துந் திரிந்தன னடியேன் விளம்பலென் னீயறிந் ததுவே. 44

உருவுள மடவார் தங்களை நான்கண் ணுற்றபோ துளநடுக் குற்றேன்
ஒருவுளத் தவரே வலிந்திட வேறோ ருவளகத் தொளித்தய லிருந்தேன்
கருவுளச் சண்டைக் கூக்குரல் கேட்ட காலத்தி லுளுற்ற கலக்கந்
திருவுள மறியு முரத்தசொல் லெனது செவிபுகிற் கனல்புகு வதுவே. 45

பண்ணிகா ரங்கள் போசித்தவப் போதும் பராக்கிலே செலுத்திய போதும்
எண்ணிய மடவார் தங்களை விழைந்தே யிசைந்தனு பவித்தவப் போதும்
நண்ணிய தயில முழுக்குற்ற போது நவின்றசங் கீதமு நடமுங்
கண்ணுறக் கண்டு கேட்டவப் போதுங் கலங்கிய கலக்கநீ யறிவாய். 46

நயந்தபோற் சரிகைத் துகிலெனக் கெனது நண்பின ருடுத்திய போது
பயந்தவப் பயத்தை யறிந்தவ ரெல்லாம் பயந்தனர் வெய்யிலில் கவிகை
வியந்துமேற் பிடித்த போதெலா முள்ளம் வெருவினேன் கைத்துகில் வீசி
அயந்தரு தெருவில் நடப்பதற் கஞ்சி அரைக்குமேல் வீக்கின னெந்தாய். 47

கையுற வீசி நடப்பதை நாணிக் கைகளைக் கட்டியே நடந்தேன்
மெய்யுறக் காட்ட வெருவியென் றுகிலால் மெய்யெலா மையகோ மறைத்தேன்
வையமேற் பிறர்தங் கோலமு நடையும் வண்ணமு மண்ணலே சிறிதும்
பையநா னின்றிப் பார்த்ததே யில்லை பார்ப்பனேல் பயமிகப் படைப்பேன். 48

வைசிய நகரி லெழிலுடை மடவார் வலிந்தெனைக் கைபிடித் திழுத்தும்
சைகைவே றுரைத்துஞ் சரசவார்த் தைகளாற் றனித்தெனைப் பலவிசை யறிந்தும்
பொய்கரைந் தாணை புகன்றுமேல் விழுந்தும் பொருண்முத லியகொடுத் திசைத்துங்
கைகலப் பறியே னடுங்கினே னவரைக் கடிந்தது மில்லைநீ யறிவாய். 49

எளியரை வலியா ரடித்தபோ தையோ வென்மனங் கலங்கிய கலக்கம்
தெளியநா னுரைக்க வல்லவ னல்லேன் றிருவுள மறியுமே யெந்தாய்
களியரைக் கண்டு பயந்தவென் பயந்தான் கடலினும் பெரியது கண்டாய்
அளியர்பாற் கொடியர் செய்தவெங் கொடுமை யறிந்தவென் னடுக்கமா ரறிவார். 50

இரவிலே பிறர்தம் மிடத்திலே யிருந்த இருப்பெலாங் கள்ளர்கள் கூடிக்
கரவிலே கவர்ந்தார் கொள்ளையென் றெனது காதிலே விழுந்தபோ தெல்லாம்
விரைவிலே நெருப்பை மெய்யிலே மூட்டி வெதுப்பல்போல் வெதும்பினே னெந்தாய்
உரவிலே யொருவர் திடுக்கென வரக்கண் டுளநடுக் குற்றனன் பலகால். 51

உரத்தொரு வருக்கங் கொருவர்பே சியபோ துள்ளக நடுங்கினேன் பலகால்
கரத்தினு லுரத்துக் கதவுதட் டியபோ தையகோ கலங்கினேன் கருத்தில்
புரத்திலே யம்மா வப்பனே யையோ வெனப்பிறர் புகன்றசொல் புகுந்தே
தரத்திலென் னுளத்தைக் கலக்கிய கலக்கந் தந்தைநீ யறிந்தது தானே. 52

மண்ணினீ ணடையில் வந்தறிவன் துயரை மதித்துளம் வருந்திய பிறர்தங்
கண்ணினீர் விடக்கண் டையகோ நானுங் கண்ணினீர் விட்டுளங் கவன்றேன்
அண்ணிநின் றுருவ ரசப்பிலே யென்னை யழைத்தபோ தடியனே னெண்ணு
தெண்ணியா துற்ற தோவெனக் கலங்கி யேனெனல் மறந்தன னெந்தாய். 53

தேட்டிலே மிகுந்த சென்னையி லிருந்தாற் சிறுகுறு மென்றுளம் பயந்தே
நாட்டிலே சிறிய வூர்ப்புறங் களிலே நண்ணினே னூர்ப்புற மடுத்த
காட்டிலே பருக்கைக் கல்லிலே புன்செய்க் களத்திலே திரிந்துற்ற விளைப்பை
ஏட்டிலே யெழுத முடியுமோ விவைக ளெந்தைநீ யறிந்தது தானே. 54

என்புடை வந்தார் தம்முக நோக்கி யென்கொலோ வென்கொலோ விவர்தாந்
துன்புடை யவரோ இன்புடை யவரோ சொல்லுவ தென்னையோ வென்றே
வன்புடை மனது கலங்கியங் கவரை வாவெனல் மறந்தன னெந்தாய்
அன்புடை யவரைக் கண்டபோ தெல்லா மென்கொலோ வென்றயர்ந் தேனே. 55

காணுறு பசுக்கள் கன்றுகளாதி கதறிய போதெலாம் பயந்தேன்
ஏணுறு மாடு முதல்பல மிருக மிளைத்தவை கண்டுள மிளைத்தேன்
கோணுறு கோழி முதல்பல பறவை கூவுதல் கேட்டுளங் குலைந்தேன்
வீணுறு கொடியர் கையிலே வாளை விதிர்த்தல்கண் டென்னென வெருண்டேன்.

பிதிர்ந்தமண் ணுடம்பை மறைத்திட வலியார் பின்முன்னுக் காதுமேல் நோக்கி
அதிர்ந்திட நடந்த போதெலாம் பயந்தே னவர்புகன் றிட்டதீ மொழிகள்
பொதிந்திரு செவியிற் புகுந்தொறும் பயந்தேன் புண்ணியா நின்றுதி யெனுமோர்
முதிர்ந்த தீங்கனியைக் கண்டிலேன் வேர்த்து முறிந்தகாய் கண்டுளந் தளர்ந்தேன். 57

வாடிய பயிரைக் கண்டபோ தெல்லாம் வாடினேன் பசியினு லிளைத்தே
வீடுதோ றிரந்தும் பசியறு தயர்ந்த வெற்றரைக் கண்டுளம் பதைத்தேன்
நீடிய பிணியால் வருந்துகின் றோரென் னேருறக் கண்டுளந் துடித்தேன்
[1]ஈடின்மா னிகளா யேழைக ளாய்நெஞ் சிளைத்தவர் தமைக்கண்டே யிளைத்தேன்.

நலிதரு சிறிய தெய்வமென் றையோ நாட்டிலே பலபெயர் நாட்டிப்
பலிதர ஆடு பன்றிகுக் குடங்கள் பலிக்கடா முதலிய வுயிரைப்
பொலிவுறக் கொண்டே போகவுங் கண்டே புந்திநொந் துளநடுக் குற்றேன்
கலியுறு சிறிய தெய்வவெங் கோயில் கண்டகா லத்திலும் பயந்தேன். 59

துண்ணெனக் கொடியோர் பிறவுயிர் கொல்லத் தொடங்கிய போதெலாம் பயந்தேன்
கண்ணினு லையோ பிறவுயிர் பதைக்கக் கண்டகா லத்திலும் பதைத்தேன்
மண்ணினில் வலையுந் தூண்டிலுங் கண்ணி வகைகளுங் கண்டபோ தெல்லாம்
எண்ணியென் னுள்ள நடுங்கிய நடுக்க மெந்தைநின் திருவரு ளறியும். 60

நடுநிலை யில்லாக் கூட்டத்தைக் கருணை நண்ணிடார் தமையரை நாளுங்
கெடுநிலை நினைக்குஞ் சிற்றதி காரக் கேடரைப் பொய்யலாற் கிளத்தாப்

1. ஈடு என்பது—ஒப்பு.

படுகிலை யவரைப் பார்த்தபோ தெல்லாம் பயந்தனன் சுத்தசன் மார்க்கம்
விடுகிலை யுலக நடையெலாங் கண்டே வெருவினேன் வெருவினே னெந்தாய். 61

ஓங்கிய திருச்சிற் றம்பல முடைய வொருதனித் தலைவனே யென்னைத்
தாங்கிய தாயே தந்தையே குருவே தயாநிதிக் கடவுளே நின்பால்
நீங்கிய மனத்தார் யாவரே யெனினு மவர்தமை நினைத்தபோ தெல்லாந்
தேங்கிய வுள்ளம் பயந்தன னதுநின் றிருவுள மறியுமே யெந்தாய். 62

காட்டுயே ரணைமே லிருக்கவும் பயந்தேன் காலின்மேற் கால்வைக்கப் பயந்தேன்
பாட்டயல் கேட்கப் பாடவும் பயந்தேன் பஞ்சணை படுக்கவும் பயந்தேன்
நாட்டிய வுயர்ந்த திண்ணைமே லிருந்து நன்குறக் களித்துக்கால் கீழே
நீட்டவும் பயந்தே னீட்டிப் பேசுதலை நினைக்கவும் பயந்தன னெந்தாய். 63

தலைநேறி ஞான சுத்தசன் மார்க்கஞ் சார்ந்திட முயலுறு தந்தோ
கலைநெறி யுலகக் கதியிலே கருத்தைக் களிவுற வைத்தன ராகிப்
புலைநெறி விரும்பி ஞருல குயிர்கள் பொதுவெனக் கண்டிரங் காது
கொலைநெறி நின்றார் தமக்குளம் பயந்தே னெந்தைநான் கூறுவ தென்னே. 64

இவ்வணஞ் சிறியேற் குலகிய லறிவிங் கெய்திய நாளது தொடங்கி
நைவணா மிற்றைப் பகல்வரை யடைந்த நடுக்கமுந் துன்பமு முரைக்க [யும்
எவ்வணத் தவர்க்கும் [1]அல்குறு தெனில்யா னிசைப்பதென் னிசைத்ததே யமை
செவ்வணத் தருணா மிதுதலை வாநின் றிருவுள மறிந்ததே யெல்லாம். 65

தரைத்தலத் தெனைநீ யெழுமையும் பிரியாத் தம்பிரா னல்லையோ மனத்தைக்
கரைத்துளே புகுந்தென் னுயிரினுட் கலந்த கள்வனீ யல்லையோ வெனைத்தான்
இசைத்திவ ணளித்த சிற்சபை விளங்கு மெந்தைநீ யல்லையோ நின்பால்
உரைத்தலென் னொழுக்க மாதலா லுரைத்தே னீயறி யாததொன் றுண்டோ. 66

கைதலத் தோங்குங் கனியினென் னுள்ளே கனிந்தவென் களைகணீ யலையோ
மெய்தலத் தகத்தும் புறத்தும்விட் டகலா மெய்யனீ யல்லையோ வெனது
பைதறீர்த் தருளுந் தந்தைநீ யலையோ பரிந்துநின் றிருமுன்விண் ணப்பஞ்
செய்தலென் னொழுக்க மாதலாற் செய்தேன் திருவுள மறிந்ததே யெல்லாம். 67

இன்னவா றடியே னச்சமுந் துயரு மெய்திநின் றிளைத்தன னந்தோ
துன்னவா ணவமு மாயையும் வினையுஞ் சூழ்ந்திடு மறைப்புமிங் குனைத்தான்
உன்னவா சற்றே யுரைக்கவா வொட்டே மென்பவா லென்செய்வே னெனது
மன்னவா ஞான மன்றவா வெல்லாம் வல்லவா விதுதகு மேயோ. 68

எள்ளலாம் பயத்தாற் றுயரினு லடைந்த விளைப்பெலா மிங்குநா னுற்றிக்
கொள்ளவே யடுத்தேன் மாயையா திகளென் கூடவே யடுத்தன னந்தோ
வள்ளலே யெனது வாழ்முதற் பொருளே மன்னவா நின்னலா லறியேன்
உள்ளல்வே றிலையென் னுடல்பொரு ளாவி யுன்னவே யென்னவன் றெந்தாய். 69

1. அல்குறுது என்பது—குறைவுபடாது.

என்சுதந் தரமோ ரெட்டுணை யேனு மில்லையே யெந்தையெல் லாமுன்
தன்சுதந் தரமே யடுத்தவித் தருணந் தமியனேன் றனைப்பல துயரும்
வன்சுவை மயக்கு மச்சமு மறைப்பு மாயையும் வினையுமா ணவமும்
இன்சுவைக் கனிபோ லுண்கின்ற தழகோ விவைக்கெலா நானிலக் கலவே. 70

அறிவொரு சிறிதிங் கறிந்தநாண் முதலென் னப்பனே நினைமறந் தறியேன்
செறிவிலாச் சிறிய பருவத்தும் வேறு சிந்தைசெய் தறிந்திலே னுலகிற்
பிறிதொரு பிழையுஞ் செய்திலே னந்தோ பிழைத்தன னெனினு மென்னைக்
குறியுறக் கொண்டே குலங்குறிப் பதுநின் குணப்பெருங் குன்றினுக் கழகோ. 71

ஐயநா னாடும் பருவத்திற் றானே யடுத்தநன் னேயனோ டப்பா
பொய்யுல காசை யெனக்கிலை யுனக்கென் புகலென வவனுமங் கிசைந்தே
மெய்யுறத் துறப்போ மென்றுபோய் நினது மெய்யருள் மீட்டிட மீண்டேம்
துய்யநின் னுள்ள மறிந்ததே யெந்தா யின்றுநான் சொல்லுவ தென்னே. 72

தேர்விலாச் சிறிய பருவத்திற் றானே தெய்வமே தெய்வமே யெனநின்
சார்வுகொண் டெல்லாச் சார்வையும் விடுத்தேன் தந்தையுங் குருவுநீ யென்றேன்
பேர்விலா துளத்தே வந்தவா பாடிப் பிதற்றினேன் பிறர்மதிப் பறியேன்
ஓர்விலாப் பிழைக ளொன்றையு மறியே னின்றுநா னுரைப்பதிங் கென்னே. 73

பொறித்துனைப் பதியாப் பெற்றநா ளடிமை புரிந்தது போலவே யின்றுஞ்
செறித்து நிற்கின்றே னன்றியென் னுரிமைத் தெய்வமுங் குருவுமெய்ப் பொருளும்
நெறித்தநற் றாயுந் தந்தையு மின்பு நேயமு நீயெனப் பெற்றே
குறித்தறிந் ததன்பி னெந்தைநா னேறிக் குதித்ததென் கூறுக நீயே. 74

பரிந்துனைப் பதியாப் பெற்றநா ளடிமைப் பணிபுரிந் தாங்கிது வரையில்
புரிந்துறு கின்றே னன்றியென் னுயிரும் பொருளுமென் புணர்ப்புமென் னறிவும்
விரிந்தவென் சுகமுந் தந்தையுங் குருவு மெய்ம்மையும் யாவுநீ யென்றே
தெரிந்தபின் னந்தோ வேறுநான் செய்த செய்கையென் செப்புக நீயே. 75

மைதவழ் முகில்போன் றருள்பொழி கருணை வள்ளலே நின்னையன் பாலும்
வைதவர் தமைநான் மதித்திலே னன்பால் வாழ்த்துகின் றோர்தமை வாழ்த்தி
உய்தவ ரிவரென் றுறுகின்றே னல்லா லுன்னரு ளறியநான் வேறு
செய்ததொன் றிலையே செய்தன னெனினுந் திருவுளத் தடைத்திட லழகோ. 76

ஆரண முரைத்த வரைப்பெலாம் பலவா மாகம முரைவரைப் பெல்லாங்
காரண நினது திருவருட் செங்கோல் கணிப்பருங் களிப்பிலே யோங்கி
நாரணர் முதலோர் போற்றிட விளங்கி நடக்கின்ற பெருமைநா னறிந்துந்
தாரணி யிடையித் துன்பமா திகளாற் றனையனேன் றளருத லழகோ. 77

பார்முதல் நாதப் பதியெலாங் கடந்தப் பாலுமப் பாலுமப் பாலும்
ஓர்முத லாகித் திருவருட் செங்கோ லுரைப்பரும் பெருமையி னோங்கிச்
சீர்பெற விளங்க நடத்திமெய்ப் பொதுவிற் சிறந்தமெய்த் தந்தைநீ யிருக்க
வார்கட லுலகி லச்சமா திகளான் மகன்மனம் வருந்துத லழகோ. 78

ஆர்ந்தவே தாந்தப் பதிமுதல் யோகாந் தப்பதி வரையுமப் பாலுந்
தேர்ந்தரு ளாணைத் திருநெறிச் செங்கோல் செல்லவோர் சிற்சபை யிடத்தே
சார்ந்தபே ரின்பத் தனியர சியற்றுந் தந்தையே தனிப்பெருந் தலைவா
பேர்ந்திடே னெந்த விதத்தினு நினக்கே பிள்ளைநான் வருந்துத லழகோ. 79

சித்திக ளெல்லாம் வல்லதோர் ஞானத் திருச்சபை தன்னிலே திகழுஞ்
சத்திக ளெல்லாஞ் சத்தர்க ளெல்லாந் தழைத்திடத் தனியருட் செங்கோல்
சத்திய ஞானம் விளக்கியே நடத்துந் தனிமுதற் றந்தையே தலைவா
பித்திய லுடையே னெனினுநின் றனக்கே பிள்ளைநான் வாடுத லழகோ. 80

சாற்றுபே ரண்டப் பகுதிக ளனைத்துந் தனித்தனி யவற்றுளே நிரம்பித்
தோற்றுமா பிண்டப் பகுதிக ளனைத்துஞ் ஜோதியால் விளக்கியா னந்த
ஆற்றிலே நனைத்து வளர்த்திடும் பொதுவி லரும்பெருந் தந்தையே யின்பப்
பேற்றிலே விழைந்தேன் றலைவநின் றனக்கே பிள்ளைநான் பேதுற லழகோ. 81

சிறந்ததத் துவங்க ளனைத்துமா யலவாய்த் திகழொளி யாயொளி யெல்லாம்
பிறங்கிய வெளியாய் வெளியெலாம் விளங்கும் பெருவெளி யாயதற் கப்பால்
நிறைந்தசிற் சபையி லருளர சியற்று நீதிநற் றந்தையே யினிமேற்
பிறந்திடே னிறவே னின்னைவிட் டகலேன் பிள்ளைநான் வாடுத லழகோ. 82

எண்ணிய வெல்லாம் வல்லபே ரருளா மிணையிலாத் தனிநெடுஞ் செங்கோல்
நண்ணிய திருச்சிற் றம்பலத் தமர்ந்தே நடத்துமோர் ஞானநா யகனே
தண்ணரு ளளிக்குந் தந்தையே யுலகிற் றனையனுன் பயத்தினுற் றுயரால்
அண்ணிய மலங்க ளோந்தினு மின்னு மையகோ வாடுத லழகோ. 83

கலையெலாம் புகலுங் கதியெலாங் கதியிற் காண்கின்ற காட்சிக ளெல்லாம்
நிலையெலா நிலையி னோர்ந்தனு பவஞ்செய் நிறைவெலாம் விளங்கிடப் பொதுவின்
மலைவிலாச் சோதி யருட்பெருஞ் செங்கோல் வாய்மைபா னடத்துமோர் தனிமைத்
தலைவனே யெனது தந்தையே நினது தனையனுன் றளருத லழகோ. 84

ஆதியே நடுவே யந்தமே யெனுமிவ் வடைவெலா மின்றியொன் றான
ஜோதியே வடிவாய்த் திருச்சிற்றம் பலத்தே தூயபே ரருட்டனிச் செங்கோல்
நீதியே நடத்துந் தனிப்பெருந் தலைமை நிருத்தனே யொருத்தனே நின்னை
ஓதியே வழுத்துந் தனையனு னிங்கே யுறுகணுற் றளருத லழகோ. 85

அத்தனே திருச்சிற் றம்பலத் தரசே யரும்பெருஞ் ஜோதியே யடியார்
பித்தனே யெனினும் பேயனே யெனினும் பெரிதருள் புரிதனித் தலைமைச்
சித்தனே யெல்லாஞ் செய்திட வல்ல செல்வனே சிறப்பனே சிவனே
சுத்தனே நினது தனையனுன் மயங்கித் துயர்ந்துளம் வாடுத லழகோ. 86

உற்றதோர் திருச்சிற் றம்பலத் தோங்கு மொருதனித் தந்தையே நின்பாற்
குற்றநான் புரிந்திங் கறிந்திலேன் குற்றங் குயிற்றினே னென்னிலக் குற்றம்
இற்றென வறிவித் தறிவுதந் தென்னை யின்புறப் பயிற்றுதல் வேண்டும்
மற்றய லார்போன் றிருத்தலோ தந்தை வழக்கிது நீயறி யாயோ. 87

குற்றமோ குணமோ நானறி யேனென் குறிப்பெலாந் திருச்சிற்றம் பலத்தே
உற்றதா தலினு லுலகியல் வழக்கி லுற்றிடின் மற்றென தலைவ
1 தெற்றென வருட்கே குற்றமென் பதுதான் செய்திடிற் றிருத்தலை யன்றி
மற்றய லார்போன் றிருப்பதோ தந்தை மரபிது நீயறி யாயோ. 88

மாயையால் வினையா லரிபிர மாதி வானவர் மனமதி மயங்கித்
தீயகா ரியங்கள் செய்திடி லந்தோ சிறியனேன் செய்வது புதிதோ
ஆயினுந் தீய விவையென வறியே னறிவித்துத் திருத்துத லன்றி
நீயிவண் பிறர்போன் றிருப்பது தந்தை நெறிக்கழ கல்லவே யெந்தாய். 89

கருணையுஞ் சிவமே பொருளெனக் காணுங் காட்சியும் பெருகமற் றெல்லாம்
மருணெறி யெனநீ யெனக்கறி வித்த வண்ணமே பெற்றிருக் கின்றேன்
இருணெறி மாயை வினைகளாற் கலக்க மெய்திய தென்செய்வே னெந்தாய்
தெருணிலை யின்றிக் கலங்கினே னெனினுஞ் சிறுநெறி பிடித்ததொன் றிலையே. 90

கலங்கிய போதுந் திருச்சிற்றம் பலத்திற் கருணையங் கடவுளே நின்பால்
இலங்கிய நேயம் விலங்கிய திலையே யெந்தைநின் னுளமறி யாதோ
மலங்கிய மனத்தேன் புகல்வதென் வினையால் மாயையால் வரும்பிழை யெல்லாம்
அலங்குமென் பிழைக ளல்லவென் றுன்றே டடிக்கடி யறைந்தன னுண்டே. 91

இரும்பினுங் கொடிய மனஞ்செயும் பிழையு மென்பிழை யன்றெனப் பலகால்
விரும்பிநின் னடிக்கே விண்ணப்பித் திருந்தேன் வேறுநான் செய்ததிங் கென்னே
அரும்பொனே திருச்சிற் றம்பலத் தமுதே யப்பனே யென்றிருக் கின்றேன்
துரும்பினுஞ் சிறியேன் புகல்வதென் னினது தூயதாந் திருவுள மறியும், 92

வருமுயி ரிரக்கம் பற்றியே யுலக வழக்கிலென் மனஞ்சென்ற தோறும்
வெருவிநின் னடிக்கே விண்ணப்பித் திருந்தேன் விண்ணப்பஞ் செய்கின்றே னின்றும்
உருவவென் னுயிர்தா னுயிரிரக் கந்தா னொன்றதே யிரண்டிலை இரக்கம்
ஒருவிலென் னுயிரு மொருவும் என்னுள்ளத் தொருவனே நின்பதத் தாணை. 93

தலைவர்க ளெல்லாந் தனித்தனி வணங்குந் தலைவனே யின்றுமென் னுளமும்
மலைவிலென் னறிவு நானுமிவ் வுலக வழக்கிலே யுயிரிரக் கத்தால்
இலகுகின் றனநா னென்செய்வே னிரக்க மென்னுயி ரென்னவே யிலையே
நிலைபெறு மிரக்கம் நீங்கிலென் னுயிரும் நீங்குநின் றிருவுள மறியும். 94

ஆதலா லிரக்கம் பற்றிநா னுலகி லாடலே யன்றியோர் விடயக்
காதலா லாடல் கருதிலேன் விடயக் கருத்தெனக் கில்லையென் றிடலிப்
போதலாற் சிறிய போதுமுண் டதுநின் புந்தியி லறிந்தது தானே
ஈதலால் வேறோர் தீதென திடத்தே யில்லைநா னிசைப்பதென் னினக்கே. 95

என்னையு மிரக்கந் தன்னையு மொன்றா யிருக்கவே யிசைவித்திவ் வுலகில்
மன்னிவாழ் வுறவே வருவித்த கருணை வள்ளல்நீ நினக்கிது விடயம்

1 தெற்றென என்பது—விரைந்து.

பன்னலென் னடியே னாயினும் பிள்ளைப் பாங்கினு லுரைக்கின்றே னெந்தாய்
இன்னவா றெனநீ சொன்னவா றியற்று திருந்தேதா ரிறையுமிங் கிலையே. 96

உறுவினை தவிர்க்கு மொருவனே யுலகி லோடியு மாடியு முழன்றும்
சிறுவர்தாந் தந்தை வெறுப்பவாக் கின்றார் சிறியனே னொருதின மேனும்
மறுகினின் றாடி யார்த்ததிங் குண்டோ நின்பணி மதிப்பலா லெனக்குச்
சிறுவிளை யாட்டிற் சிந்தையே யிலைநின் திருவுள மறியுமே யெந்தாய். 97

தந்தையர் வெறுப்ப மக்கடாம் பபனில் சழக்குரை யாடிவெங் காமச்
சிந்தைய ராகித் திரிகின்ற ரந்தோ சிறியனே னொருதின மேனும்
எந்தைநின் னுள்ளம் வெறுப்பநின் பணிவிட் டிவ்வுல கியலிலவ் வாறு
தெந்தன வென்றே திரிந்ததுண் டேயோ திருவுள மறியநா னறியேன். 98

அம்புவி தனிலே தந்தையர் வெறுப்ப வடிக்கடி யயலவ ருடனே
வம்புறு சண்டை விளைக்கின்றார் சிறுவர் வள்ளலே நின்பணி விடுத்தே
இம்பரிவ் வுலகி லொருதின மேனு மேழையேன் பிறரொடு வெகுண்டே
வெம்புறு சண்டை விளைத்ததுண் டேயோ மெய்யநின் னாணைநா னறியேன். 99

வள்ளலிவ் வுலகிற் றந்தையர் வெறுப்ப மக்கடா மொழுக்கத்தை மறந்தே
கள்ளருந் துதல்சூ தாடுதல் காமக் கடைதொறு மயங்குதல் பொய்யே
விள்ளுதல் புரிவா ரையகோ வடியேன் மெய்யநின் றிருப்பணி விடுத்தே
எள்ளியவ் வாறு புரிந்ததொன் றுண்டோ யெந்தைநின் னாணைநா னறியேன்.100

மலைவி லாத்திருச் சிற்றம்பலத் தமர்ந்த வள்ளலே யுலகினிற் பெற்றோர்
குலைநடுக் குறவே கடுகடுத் தோடிக் கொடியதீ நெறியிலே மக்கள்
புலைகொலை களவே புரிகின்ற ரடியேன் புண்ணிய நின்பணி விடுத்தே
உலையவவ் வாறு புரிந்ததொன் றுண்டோ யுன்பதத் தாணைநா னறியேன். 101

தனிப்பெருஞ் ஜோதித் தந்தையே யுலகிற் றந்தையர் பற்பல காலும்
இனிப்புறு மொழியா லறிவுற மக்கட் கேற்கவே பயிற்றிடுந் தோறும்
பணிப்புற வோடிப் பதுங்கிடு கின்றார் பண்பனே யென்னைநீ பயிற்றத்
தினைத்தனை யேனும் பதுங்கிய துண்டோ திருவுள மறியநா னறியேன். 102

தன்னைநே ரில்லாத் தந்தையே யுலகிற் றந்தையர் தங்களை யழைத்தே
சொன்னசொன் மறுத்தே மக்கடம் மனம்போஞ் சூழலே போகின்ற ரடியேன்
என்னைநீ யுணர்த்தல் யாதது மலையி னிலக்கெனக் கொள்கின்றே னல்லாற்
பின்னையோ ரிறையு மறுத்ததொன் றுண்டோ பெரியநின் னாணைநா னறியேன். 103

போற்றுவார் போற்றும் புனிதனே மக்கள் பொருந்துதன் தந்தையர் தமையே
வேற்றுவாழ் வடைய விடுதா பணந்தா மெல்லிய சரிகைவத் திரந்தா
ஏற்றவா பரணந் தாவெனக் கேட்டே யிரங்குவா ரிவைகுறித் தடியேன்
தேற்றுவாய் நின்னைக் கேட்டதொன் றுண்டோ திருவுள மறியநா னறியேன். 104

குணம்புரி யெனது தந்தையே யுலகிற் கூடிய மக்கள்தந் தையரைப்
பணம்புரி காணி பூமிகள் புரிநற் பதிபுரியேற்ற பெண் பார்த்தே
மணம்புரி யெனவே வருத்துகின் றாரென் மனத்திலே யொருசிறி தேனும்
எணம்புரிந் துனைநான் வருத்திய துண்டோ வெந்தைநின் றுணைநா னறியேன்.

இகத்திலே யெனைவந் தாண்டமெய்ப் பொருளே யென்னுயிர்த் தந்தையே யிந்தச்
சகத்திலே மக்கள் தந்தைய ரிடத்தே தாழ்ந்தவ ராய்ப்புறங் காட்டி
அகத்திலே வஞ்சம் வைத்திருக் கின்றா ரையகோ வஞ்சம்நின் னளவில்
முகத்திலே யென்ற னகத்திலே யுண்டோ முதல்வநின் றுணைநா னறியேன்.

தன்மைகாண் பரிய தலைவனே யெனது தந்தையே சகத்திலே மக்கள்
வன்மைவார்த் தைகளாற் றந்தையர் தம்மை வைகின்றார் வள்ளலே மருந்தே
என்மனக் கனிவே யென்னிரு கண்ணே யென்னுயிர்க் கிசைந்தமெய்த் துணையே
நின்மனம் வெறுப்பப் பேசிய துண்டோ நின்பதத் தாணைநா னறியேன். 107

ஒப்பிலா மணியென் னப்பனே யுலகி லுற்றிடு மக்கள்தந் தையரை
வைப்பில்வே றொருவர் வைதிடக் கேட்டு மனம்பொறுத் திருக்கின்றா ரடியேன்
தப்பிலா நினைவே றுரைத்திடக் கேட்டாற் றரிப்பனோ தரித்திடே னன்றி
வெப்பிலென் னுயிர்தான் தரிக்குமோ யாதாய் விளையுமோ வறிந்திலே னெந்தாய்.

இத்தகை யுலகி லிங்ஙனஞ் சிறியே னெந்தைநின் றிருப்பணி விடுத்தே
சித்தம்வே றாகித் திரிந்ததே யிலைநான் தெரிந்தநாண் முதலிது வரையும்
அத்தனே யரசே யையனே யமுதே யப்பனே யம்பலத் தாடுஞ்
சித்தனே சிவனே யென்றென துளத்தே சிந்தித்தே யிருக்கின்றே னின்றும். 109

போய்வகை மனத்தே னென்னினு மெந்தாய் பொய்புல காசைசற் றறியேன்
நைவகை தவிரத் திருச்சிற் றம்பலத்தே நண்ணிய மெய்ப்பொரு ளமது
கைவகைப் படலெக் கணத்திலோ வெனநான் கருதினேன் கருத்தினை முடிக்கச்
செய்வகை யறியே னென்செய்வே னையோ தெய்வமே யென்றிருக் கின்றேன். 110

அன்னையே யென்ற னப்பனே திருச்சிற் றம்பலத் தமுதனே யெனநான்
உன்னையே கருதி யுன்பணி புரிந்திங் குலகிலே கருணையென் பதுதான்
என்னையே நிலையா யிருந்தவுள் வருந்தி யிருக்கின்றே னென்னுள மெலிவும்
மன்னுமென் னுடம்பின் மெலிவுநா னிருக்கும் வண்ணமுந் திருவுள மறியும். 111

போய்படாப் பயனே பொற்சபை நடஞ்செய் புண்ணியா கண்ணினுண் மணியே
கைபடாக் கனலே கறைபடா மதியே கணிப்பருங் கருணையங் கடலே
தெய்வமே யெனநான் நின்னையே கருதித் திருப்பணி புரிந்திருக் கின்றேன்
மைபடா வுள்ள மெலிவும்நா னிருக்கும் வண்ணமுந் திருவுள மறியும். 112

தன்னிக ரறியாத் தலைவனே தாயே தந்தையே தாங்குநற் றுணையே
என்னிரு கண்ணே யென்னுயிர்க் குயிரே யென்னுடை யெய்ப்பினில் வைப்பே
உன்னுதற் கினிய வொருவனே யெனநா னுன்னையே நினைத்திருக் கின்றேன்
மன்னுமென் னுள்ள மெலிவுநா னிருக்கும் வண்ணமுந் திருவுள மறியும். 113

திருவளர் திருவம் பலத்திலே யந்நாள் செப்பிய மெய்ம்மொழிப் பொருளும்
உருவளர் திருமந் திரத்திரு முறையா லுணர்த்திய மெய்ம்மொழிப் பொருளுங்
கருவள ரடியே னுளத்திலே நின்று காட்டிய மெய்ம்மொழிப் பொருளும்
மருவியென் னுளத்தே நம்பிரா னிருக்கும் வண்ணமுந் திருவுள மறியும். 114

உவந்தென துளத்தே புணர்த்திய வெல்லா முறுமலை யிலக்கென நம்பி
நிவந்ததோள் பணைப்ப மிகவுளங் களிப்ப நின்றதும் நிலைத்தமெய்ப் பொருளிப்
பவந்தனிற் பெறுதல் சத்திய மெனவே பற்பல குறிகளா லறிந்தே
சிவந்தபொன் மலைபோ லிருந்தது மிந்நாள் திகைப்பதுந் திருவுள மறியும். 115

ஏய்ந்தபொன் மலைமேற் றம்பத்தி லேறி யேகவு மேகவு நுணுகித்
தேய்ந்தபோ தடியேன் பயந்தவெம் பயத்தைத் தீர்த்துமே லேற்றிய திறத்தை
வாய்ந்துளே கருதி மலையெனப் பணைத்தே மனங்களிப் புற்றுமெய் யின்பந்
தோய்ந்துநின் றுடிச் சுழன்றது மிந்நாள் சுழல்வதுந் திருவுள மறியும். 116

வாட்டமோ டிருந்த சிறியனேன் றனது வாட்டமு மாயைமா திகளின்
ஈட்டமுந் தவிர்க்கத் திருவுளத் திரங்கி யென்னையோர் பொருளென மதித்தே
தேட்டரும் புகழ்சேர் திருவடித் துணைகள் செலுத்திய திருச்சிலம் பொலிநான்
கேட்டபோ திருந்த கிளர்ச்சியு மிந்நாள் கிலேசமுந் திருவுள மறியும். 117

கற்றவர் கல்லார் பிறர்பிறர் குரலென் காதிலே கிடைத்தபோ தெல்லாம்
மற்றவர் தமக்கென் னுற்றதோ வவர்தம் மரபின ருறவினர் தமக்குள்
உற்றதிங் கெதுவோ வென்றுள நடுங்கி யோடிப்பார்த் தோடிப்பார்த் திரவும்
எற்றரும் பகலு மேங்கிநா னடைந்த வேக்கமுந் திருவுள மறியும். 118

கருணையம் பதிநங் கண்ணுண்மா மணிநங் கருத்திலே கலந்தெழு மமுதம்
மருணெறி தவிர்க்கு மருந்தெலாம் வல்ல வள்ளல்சிற் றம்பல மன்னும்
பொருணிறை யின்பம் நம்மையாண் டளித்த புண்ணியம் வருகின்ற தருணந்
தருணமிப் போதென் றெண்ணிநா னிருக்குந் தன்மையுந் திருவுள மறியும். 119

இமையவர் பிரமர் நாரணர் முதலோ ரெய்துதற் கரியபே ரின்பந்
தமையறிந் தவருட் சார்ந்தபே ரொளிநந் தயாநிதித் தனிப்பெருந் தந்தை
அமையுநம் முயிர்க்குத் துணைதிருப் பொதுவி லையர்தாம் வருகின்ற சமயம்
சமயமிப் போதென் றெண்ணிநா னிருக்குந் தன்மையுந் திருவுள மறியும். 120

அடியனே னுள்ளந் திருச்சிற்றம் பலத்தென் னமுதநின் மேல்வைத்த காதல்
நெடியவேழ் கடலிற் பெரிதெனக் கிந்நாள் நிகழ்கின்ற வாவலும் விரைவும்
படியவென் றன்னாற் சொலமுடி யாது பார்ப்பறப் பார்த்திருக் கின்றேன்
செடியனே னிருக்கும் வண்ணங்க ளெல்லாந் திருவுளங் கண்டதே யெந்தாய். 121

பன்னிரண் டாண்டு தொடங்கிநா னிற்றைப் பகல்வரை யடைந்தவை யெல்லாம்
உன்னிநின் றுரைத்தா லுலப்புறா ததனா லொருசில வுரைத்தன னெனினும்
என்னுளத் தகத்தும் புறத்துமுட் புறத்து மியல்புறப் புறத்தினும் விளங்கி
மன்னிய ஜோதி யாவுநீ யறிந்த வண்ணமே வகுப்பதென் னினக்கே. 122

இதுவரை யடியே னடைந்தவெம் பயமு மிடர்களுந் துன்பமு மெல்லாம்
பொதுவளர் பொருளே பிறர்பொருட் டல்லாற் புலையனேன் பொருட்டல விதுநின்
மதுவளர் மலர்ப்பொற் பதத்துணை யறிய வகுத்தன னடியனேன் றனக்கே
எதிலுமோ ராசை யிலையிலை பயமு மிடருமற் றிலையிலை யெந்தாய். 123

என்னள விலையே யென்னினும் பிறர்பா லெய்திய கருணையால் எந்தாய்
உன்னுறு பயமு மிடருமென் றன்னை யுயிரொடுந் தின்கின்ற தந்தோ
இன்னுமென் றனக்கிவ் விடரொடு பயமு மிருந்திடி லென்னுயிர் தரியா
தன்னையுங் குருவு மப்பனு மான வமுதனே யளித்தரு ளெனையே. 124

பயத்தொடு துயரு மறைப்புமா மாயைப் பற்றொடு வினையுமா ணவமும்
கயத்தவன் மயக்கு மருட்சியு மெனது கருத்திலை யினியொரு கணமும்
வியத்திடத் தரியே னிவையெலாந் தவிர்த்துன் மெய்யரு ளளித்திடல் வேண்டும்
உயத்தரு வாயே லிருக்கின்றே னிலையே லுயிர்விடு கின்றன னின்றே. 125

ஐயநான் பயத்தாற் றுயரினா லடைந்த வடைவையுண் ணினைத்திடுந் தோறும்
வெய்யதீ மூட்டி விடுத்தலொப் பதுநான் மிகவிவற் றாலிளைத் திட்டேன்
வையமே லினிநா னிவைகளா லிளைக்க வசமிலே னிவையெலாந் தவிர்த்தே
உய்யவைப் பாயே லிருக்கின்றே னிலையே லுயிர்விடு கின்றன னின்றே. 126

பயந்துய ரிடருண் மருட்சியா தியவிப் பகையெலாம் பற்றறத் தவிர்த்தே
நயந்தநின் னருளா மமுதளித் தடியே னாடியீண் டெண்ணிய வெல்லாம்
வியந்திடத் தருதல் வேண்டுமீ தெனது விண்ணப்ப நின்றிரு வுளத்தே
வயந்தரக் கருதித் தயவுசெய் தருள்க வள்ளலே சிற்சபை வாழ்வே. 127

என்னுயிர்க் காத்தல் கடனுனக் கடியே னிசைத்தவிண் ணப்பமேற் றருளி
உன்னுமென் னுள்ளத் துறும்பயமிடர்க ளூறுகண் மற்றிவையெலா மொழித்தே
நின்னரு ளமுத மளித்தென தெண்ண நிரப்பியாட் கொள்ளுதல் வேண்டும்
மன்னுபொற் சபையில் வயங்கிய மணியே வள்ளலே சிற்சபை வாழ்வே. 128

பரிக்கிலேன் பயமு மிடரும்வெந் துயரும் பற்றறத் தவிர்த்தரு ளினிநான்
தரிக்கிலேன் சிறிதுந் தரிக்கிலே னுள்ளந் தரிக்கிலேன் தரிக்கிலே னந்தோ
புரிக்கிலே சத்தை யகற்றியாட் கொள்ளும் பொற்சபை யண்ணலே கருணை
வரிக்கணே ரின்ப வல்லியை மணந்த வள்ளலே சிற்சபை வாழ்வே. 129

அருட்பெருஞ்ஜோதி

# 22. சுத்தசன்மார்க்க வேண்டுகோள்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அப்பாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாநா னன்புசெயல் வேண்டும்
எப்பாரு மெப்பதமு மெங்கணுநான் சென்றே
எந்தைநின தருட்புகழை இயம்பியிடல் வேண்டும்
செப்பாத மேனிலைமேற் சுத்தசிவ மார்க்கந்
திகழ்ந்தோங்க அருட்ஜோதி செலுத்தியிடல் வேண்டும்
தப்பேது நான்செயினு நீபொறுத்தல் வேண்டும்
தலைவநினைப் பிரியாத நிலைமையும்வேண் டுவனே. 1

ஐயாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அடிமுடிகண் டெந்நாளு மனுபவித்தல் வேண்டும்
பொய்யாத வாய்மைகளே புகன்றிடுதல் வேண்டும்
புகன்றபடி புகன்றபடி புரிந்திடுதல் வேண்டும்
[1] எய்யாத அருட்ஜோதி யென்கையுறல் வேண்டும்
இறந்தவுயிர் தமைமீட்டு மெழுப்பியிடல் வேண்டும்
நையாத வண்ணமுயிர் காத்திடுதல் வேண்டும்
நாயகநின் றனைப்பிரியா துறுதலும்வேண் டுவனே. 2

அண்ணாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அழியாத தனிவடிவம் யானடைதல் வேண்டும்
கண்ணார நினையெங்குங் கண்டுவத்தல் வேண்டும்
காணாத காட்சியெலாங் கண்டுகொளல் வேண்டும்
பண்ணார நின்றனையே பாடியுறல் வேண்டும்
பரமானந் தப்பெருங்கூத் தாடியிடல் வேண்டும்
உண்ணாடி யுயிர்களுறுந் துயர்தவிர்த்தல் வேண்டும்
உன்னைப்பிரியா துறுகின்ற வுறவதுவேண் டுவனே. 3

அத்தாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அருட்பெருஞ்ஜோ தியைப்பெற்றே யகங்களித்தல் வேண்டும்
செத்தாரை மீட்டுமிங்கே யெழுப்பியிடல் வேண்டும்
திருச்சபைக்கே யடிமைகளாச் செய்வித்தல் வேண்டும்
ஒத்தாரு முயர்ந்தாருந் தாழ்ந்தாரு மெவரும்
ஒருமையுள ராகியுல கியல்நடத்தல் வேண்டும்
எத்தாலு மழியாத வடிவதிலே நானும்
எந்தாயு மொன்றாக வினிதுறல்வேண் டுவனே. 4

1 எய்யாத என்பது—அறியாத

அரைசேநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அருட்பெருஞ்ஜோ தியைப்பெற்றே அகமகிழ்தல் வேண்டும்
வரைசேரெவ் வுலகமுமோ ரொழுக்கமுறல் வேண்டும்
மடிந்தாரை மீளவுநான் வருவித்தல் வேண்டும்
புரைசேருங் கொலைநெறியும் புலைநெறியுஞ் சிறிதும்
பொருந்தாம லெவ்வுயிரும் புரிந்துவத்தல் வேண்டும்
உரைசேர்மெய்த் திருவடிவி லெந்தாயு நானும்
ஒன்றாகி யெஞ்ஞான்று மோங்குதல்வேண் டுவனே. 5

அடிகேள்நான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அண்டமெலாம் பிண்டமெலாம் கண்டுகொளல் வேண்டும்
துடிசேரெவ் வுலகமுமெத் தேவருமெவ் வுயிரும்
சுத்தசிவ சன்மார்க்கம் பெற்றிடுதல் வேண்டும்
படிவானும் படைத்தன்முத லைந்தொழிலும் ஞானம்
படைத்தன்முத லைந்தொழிலும் நான்புரிதல் வேண்டும்
ஒடியாத திருவடிவி லெந்தாயு நானும்
ஒன்றாகி யெஞ்ஞான்று மோங்குதல்வேண் டுவனே. 6

அம்மாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆணவமா தியமுழுது மறுத்துநிற்றல் வேண்டும்
இம்மாலைத் தத்துவங்க ளெல்லாமென் வசத்தே
இயங்கியொரு தீமையுமில் லாதிருத்தல் வேண்டும்
எம்மானுன் வேண்டுதல்வேண் டாமையறல் வேண்டும்
ஏகசிவ போகமனு போகமுறல் வேண்டும்
தம்மானத் திருவடிவி லெந்தாயு நானும்
சார்ந்துகலந் தோங்குகின்ற தன்மையும்வேண் டுவனே. 7

அச்சாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆறந்த நிலைகளெல்லா மறிந்தடைதல் வேண்டும்
எச்சார்பு மாகியுயிர்க் கிதம்புரிதல் வேண்டும்
எனையடுத்தார் தமக்கெல்லா மின்புதரல் வேண்டும்
இச்சாதி சமயவிகற் பங்களெலாந் தவிர்ந்தே
எவ்வுலகுஞ் சன்மார்க்கப் பொதுவடைதல் வேண்டும்
உச்சாதி யந்தமிலாத் திருவடிவில் யானும்
உடையாயுங் கலந்தோங்கு மொருமையும்வேண் டுவனே. 8

அறிவாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஐந்தொழில்நான் புரிந்துலகி லருள்விளக்கல் வேண்டும்
செறியாத கரணமெலாஞ் செறித்தடக்கல் வேண்டும்
சித்தாந்த வேதாந்தப் பொதுசிறத்தல் வேண்டும்
எறியாதென் னெண்ணமெலா மினிதருளல் வேண்டும்
எல்லாஞ்செய் வல்லசித்தே யெனக்களித்தல் வேண்டும்
பிறியாதென் னுடன்கலந்து நீயிருத்தல் வேண்டும்
பெருமானின் றனைப்பாடி யாடுதல்வேண் டுவனே. 9

அருளாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
அணுத்துணையுஞ் சினங்காம மடையாமை வேண்டும்
மருளாய வுலகமெலா மருணீங்கி ஞான
மன்றிடத்தே வள்ளலுனை வாழ்த்திபிடல் வேண்டும்
இருளாமை யுறல்வேண்டு மெனையடுத்தார் சுகம்வாய்ந்
திடல்வேண்டு மெவ்வுயிரு மின்படைதல் வேண்டும்
பொருளாமோர் திருவடிவி லுடையாயும் நானும்
புணர்ந்துகலந் தொன்றாகிப் பொருந்துதல்வேண் டுவனே. 10

அமலாநான் வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆடிநிற்குஞ் சேவடியைப் பாடிநிற்க வேண்டும்
எமனுதித் தடையென்று மெய்தாமை வேண்டும்
எல்லாஞ்செய் வல்லதிற னெனக்களித்தல் வேண்டும்
[1] கமையாதி யடைந்துயிர்க ளெல்லாஞ்சன் மார்க்கம்
காதலித்தே திருப்பொதுவைக் களித்தேத்தல் வேண்டும்
விமலாதி யுடையவொரு திருவடிவில் யானும்
விமலாநீ யுங்கலந்தே விளங்குதல்வேண் டுவனே. 11

அருட்பெருஞ்ஜோதி

---

# 23. ஆன்மதரிசனம்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

திருவெலாந் தருமோர் தெய்வமா மொருவன் திருச்சிற்றம் பலந்திகழ் கின்றான்
உருவெலா முணர்ச்சி யுடல்பொரு ளாவி யுளமெலா மாங்கவன் றனக்கே
தெருவெலா மறியக் கொடுத்தனன் வேறு செயலிலே னெனநினைத் திருந்தேன்
அருவெலா முடையாய் நீயறிந் ததுவே யடிக்கடி யுரைப்பதென் னினக்கே. 1

நினைத்தபோ தெல்லா நின்னையே நினைத்தே னினைப்பற நின்றபோ தெல்லாம்
எனைத்தனி யாக்கி நின்கணே நின்றே னென்செய லென்னவோர் செயலுந்
தினைத்தனை யெனினும் புரிந்திலே னெல்லாஞ் சிவன்செய லாமெனப் புரிந்தேன்
அனைத்துமென் னரசே நீயறிந் ததுவே யடிக்கடி யுரைப்பதென் னினக்கே. 2

---

1 கமை என்பது—பொறுமை.

களித்தபோ தெல்லா நின்னிய லுணர்ந்தே களித்தனன் கண்கணீர் ததும்பித்
துளித்த போதெல்லா நின்னருள் நினைத்தே துளித்தனன் சூழ்ந்தவ ருளத்தைத்
தெளித்தபோ தெல்லா நின்றிறம் புகன்றே தெளித்தனன் செய்கைவே றறியேன்
ஒளித்திரு வுளமே யறிந்ததிவ் வனைத்து முரைப்பதென் னடிக்கடி யுனக்கே. 3

உண்டதும் பொருந்தி யுவந்தது முறங்கி யுணர்ந்தது முலகிய லுணர்வாற்
கண்டதுங் கருதிக் களித்ததுங் கலைகள் கற்றதுங் கரைந்ததுங் காதல்
கொண்டது நின்னோ டன்றிநான் றனித்தென் குறிப்பினிற் குறித்ததொன் றிலையே
ஒண்டகு முனது திருவுள மறிந்த துரைப்பதென் னடிக்கடி யுனக்கே. 4

களவிலே களித்த காலத்து நீயே களித்தனை நான்களித் தறியேன்
உளவிலே யுவந்த போதுநீ தானே யுவந்தனை நானுவந் தறியேன்
கொளவிலே சமுமோர் குறிப்பிலே னனைத்துங் குறித்தனை கொண்டனை நீயே
அளவிலே யெல்லா மறிந்தனை யரசே யடிக்கடி யுரைப்பதென் னினக்கே. 5

திலதவா ணுதலார் தமைக்கன விடத்துஞ் சிறிதுநான் விழைந்திலே னிந்த
உலகவாழ் வதிலோ ரணுத்துணை யெனினு முவப்பிலே னுலகுறு மாயைக்
கலகவா தனைதீர் காலமென் றுறுமோ கடவுளே யெனத்துயர்ந் திருந்தேன்
அலகிலாத் திறலோய் நீயறிந் ததுநா னடிக்கடி யுரைப்பதென் னினக்கே. 6

சாதியு மதமுஞ் சமயமுந் தவிர்ந்தேன் சாத்திரக் குப்பையுந் தணந்தேன்
நீதியு நிலையுஞ் சத்தியப் பொருளு நித்திய வாழ்க்கையுஞ் சுகமும்
ஆதியு நடுவு மந்தமு மெல்லாம் அருட்பெருஞ் ஜோதியென் றறிந்தேன்
ஓதிய வனைத்து நீயறிந் ததுநா னுரைப்பதென் னடிக்கடி யுனக்கே. 7

பித்தெலா முடைய வுலகர்தங் கலகப் பிதற்றெலா மென்றொழிந் திடுமோ
சத்தெலா மொன்றென் றுணர்ந்தசன் மார்க்க சங்கமென் றோங்குமோ தலைமைச்
சித்தெலாம் வல்ல சித்தனென் றுறுமோ தெரிந்திலே னெனத்துயர்ந் திருந்தேன்
ஒத்தெலா முனது திருவுள மறிந்த துரைப்பதென் னடிக்கடி யுனக்கே. 8

ஒன்றெனக் காணு முணர்ச்சியென் றுறுமோ வூழிதோ றூழிசென் றிடினும்
என்றுமிங் கிறவா வியற்கையென் றுறுமோ வியலருட் சித்திக ளெனைவந்
தொன்றலென் றுறுமோ அனைத்துமென் வசத்தே யுறுதலென் றோவெனத் துயர்ந்தேன்
உன்திரு வுளமே யறிந்ததிவ் வனைத்து முரைப்பதென் னடிக்கடி யுனக்கே. 9

கள்ளவா தனையைக் களைந்தருள் நெறியைக் காதலித் தொருமையிற் கலந்தே
உள்ளவா றிந்த வுலகெலாங் களிப்புற் றோங்குத லென்றுவந் துறுமோ
வள்ளலே யதுகண் டடியனே னுள்ள மகிழ்தலென் றோவெனத் துயர்ந்தேன்
ஒள்ளியோய் நினது திருவுள மறிந்த துரைப்பதென் னடிக்கடி யுனக்கே. 10

அருட்பெருஞ்ஜோதி

---

# 24. சித்தி விளைவு

## சிவதரிசனம்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

திருவுடையாய் சிற்சபைவாழ் சிவபதியே யெல்லாஞ்
செய்யவல்ல தனித்தலைமைச் சித்தசிகா மணியே
உருவுடையென் னுயிர்க்குயிரா யொளிர்கின்ற வொளியே
உன்னுதொறு மென்னுளத்தே யூறுகின்ற வமுதே
அருவுடைய பெருவெளியா யதுவிளங்கு வெளியாய்
அப்பாலு மாய்நிறைந்த வருட்பெருஞ் ஜோதியனே
மருவுடையாள் சிவகாம வல்லிமண வாளா
வந்தருள்க அருட்ஜோதி தந்தருள்க விரைந்தே. 1

சொல்லவனே பொருளவனே துரியபதத் தவனே
தூயவனே நேயவனே ஜோதியுரு வவனே
நல்லவனே நன்னிதியே ஞானசபா பதியே
நாயகனே தாயகனே நண்பவனே யனைத்தும்
அல்லவனே யானவனே யம்மையப்பா வென்னை
ஆண்டவனே தாண்டவனே யருட்குருவே யெல்லாம்
வல்லவனே சிவகாம வல்லிமண வாளா
மன்னவனே யென்னவனே வந்தருள்க விரைந்தே. 2

துரியநிலை துணிந்தவருஞ் சொல்லருமெய்ப் பொருளே
சுத்தசிவா னந்தசபைச் சித்தசிகா மணியே
பெரியசிவ பதியேநின் பெருமையறிந் திடவே
பேராசைப் படுகின்றேன் பித்தர்களிற் பெரியேன்
கரியமணித் திறத்தினையுங் காணவல்லே னல்லேன்
கண்மணியே நின்திறத்தைக் காணுதல்வல் லேனோ
அரியபெரும் பொருளாமுன் னருட்ஜோதி யெனக்கே
அளித்தனையே லறிந்துகொள்வே னளித்திடுக விரைந்தே. 3

மறப்பறியாப் பேரறிவில் வாய்த்தபெருஞ் சுகமே
மலைவறியா நிலைநிரம்ப வயங்கியசெம் பொருளே
இறப்பறியாத் திருநிலையி லென்னைவளர்த் தருளும்
என்னுடைய நற்றாயே யெந்தாயே நினது
சிறப்பறியா வுலகமெலாஞ் சிறப்பறிந்து கொளவே
சித்தசிகா மணியேநீ சித்தியெலாம் விளங்கப்
பிறப்பறியாப் பெருந்தவரும் வியப்பவந்து தருவாய்
பெருங்கருணை யரசேநீ தருந்தருண மிதுவே. 4

முன்னுழைப்பா லுறுமெனவே மொழிகின்றார் மொழியின்
முடிவறியே னெல்லாஞ்செய் முன்னவனே நீயென்
தன்னுழைப்பார்த் தருள்வாயே லுண்டனைத்து மொருநின்
தனதுசுதந் தரமேயிங் கெனதுசுதந் தரமோ
என்னுழைப்பா லென்பயனோ விரங்கியரு ளாயேல்
யானொரென் னறிவெதுமே லென்னைமதிப் பவரார்
பொன்னுழைப்பாற் பெறலுமரி தருளிலையே லெல்லாம்
பொதுநடஞ்செய் புண்ணியநீ யெண்ணியவா றாமே. 5

விழித்துவிழித் திமைத்தாலுஞ் சுடருதய மிலையேல்
விழிகள்விழித் திளைப்பதலால் விளைவொன்று மிலையே
மொழித்திறஞ்செய் தடிக்கடிநான் முடுகிமுயன் றாலும்
முன்னவநின் பெருங்கருணை முன்னிடலின் றெனிலோ
செழித்துறுநற் பயனெதுவோ திருவுளந்தா னிரங்கில்
சிறுதுரும்போ வைந்தொழிலுஞ் செய்திடல் சத்தியமே
பழித்துரைப்பா ருரைக்கவெலாம் பசுபதிநின் செயலே
பரிந்தெனையும் பாடுவித்துப் பரிசுமகிழ்ந் தருளே. 6

மாநிருபா திபர்சூழ மணிமுடிதான் பொறுத்தே
மண்ணாள வானாள மனத்தினினைத் தேனோ
தேனொருவா மொழிச்சியரைத் திளைக்கவிழைந் தேனோ
தீஞ்சுவைகள் விரும்பினனோ தீமைகள்செய் தேனோ
நானொருபா வமுமறியேன் நன்னிதியே யெனது
நாயகனே பொதுவிளங்கு நடராஜ பதியே
ஏனொருமை யிலர்போனீ யிருக்கின்றா யழகோ
என்னொருமை யறியாயோ யாவுமறிந் தாயே. 7

பாவிமனக் குரங்காட்டம் பார்க்கமுடி யாதே
பதிவெறுத்தே னிதிவெறுத்தேன் பற்றனைத்துந் தவிர்த்தேன்
ஆவியுடல் பொருளையுன்பாற் கொடுத்தேனுன் னருட்பேர்
ஆசைமய மாகியுனை யடுத்துழல் கின்றேன்
கூவியெனை யாட்கொளநீ நினையாயோ நினது
குறிப்பறியேன் பற்பலகால் கூவியிளைக் கின்றேன்
தேவிசிவ காமவல்லி மகிழ்மண வாளா
தெருணிறைவா னமுதளிக்குந் தருணமிது தானே. 8

கட்டவிழ்ந்த கமலமெனக் கருத்தவிழ்ந்து நினையே
கருதுகின்றேன் வேறொன்றுங் கருதுகிலே னிதுதான்
சிட்டருளந் திகழ்கின்ற சிவபதியே நினது
திருவுளமே யறிந்ததுநான் செப்புதலென் புவிமேல்
விட்டகுறை தொட்டகுறை யிரண்டுநிறைந் தனனீ
விரைந்துவந்தே யருட்ஜோதி புரிந்தருளுந் தருணந்
தொட்டதுநான் துணிந்துரைத்தே னீயுணர்த்த வுணர்ந்தே
சொல்வதலா லென்னறிவாற் சொல்லவல்லே னன்றே. 9

காட்டையெலாங் கடந்துவிட்டே னாட்டையடைந் தனது
கடிநகர்ப்பொன் மதிற்காட்சி கண்குளிரக் கண்டேன்
கோட்டையெலாங் கொடிநாட்டிக் கோலமிடப் பார்த்தேன்
கோயிலின்மேல் வாயிலிலே குறைகளெல்லாந் தவிர்ந்தேன்
சேட்டையற்றுக் கருவியெலா மென்வசநின் றிடவே
சித்தியெலாம் பெற்றேனென் றிருச்சிற்றம் பலமேல்
பாட்டையெலாம் பாடுகின்றே னிதுதருணம் பதியே
பலந்தருமென் னுளந்தனிலே கலந்துநிறைந் தருளே. 10

சித்தியெலாம் வல்லசிவ சித்தனுளங் கலந்தான்
செத்தாரை யெழுப்புகின்ற திருநாள்க ளடுத்த
இத்தினமே தொடங்கியழி யாதநிலை யடைதற்
கேற்றகுறி யேற்றவிடத் திசைந்தியல்கின் றனநாஞ்
சத்தியமே பெருவாழ்விற் பெருங்களிப்புற் றிடுதல்
சந்தேகித் தலையாதே சாற்றியவென் மொழியை
நித்தியவான் மொழியென்ன நினைந்துமகிழ்ந் தமைவாய்
நெஞ்சேநீ யஞ்சேலுள் ளஞ்சேலஞ் சேலே. 11

அருட்பெருஞ்ஜோதி

# 25. வாதனைக்கழிவு

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**பொழுது** விடிந்த தினிச்சிறிதும் பொறுத்து முடியே னெனநின்றே
அழுது விழிக ணீர்துளும்பக் கூவிக் கூவி யயர்கின்றேன்
பழுது தவிர்க்குந் திருச்செவிக்குட் பட்ட திலையோ பலநாளும்
உழுது களைத்த மாடனையேன் றுணைவே றறியே னுடையானே. 1

உடையாய் திருவம் பலத்தாட லொருவா வொருவா வுலவாத
கொடையா யெனநா னின்றனையே கூவிக் கூவி யயர்கின்றேன்
தடையா யினதீர்த் தருளாதே தாழ்க்கி லழகோ புலைநாயிற்
கடையாய்த் திரிந்தேன் கலங்குதல்சம் மதமோ கருணைக் கருத்தினுக்கே. 2

கருணைக் கருத்து மலர்ந்தெனது கலக்க மனைத்துந் தவிர்த்தேயித்
தருணத் தருளா விடிலடியேன் றறியேன் றளர்வேன் றளர்வதுதான்
அருணச் சுடரே நின்னருளுக் கழகோ வழகென் றிருப்பாயேல்
தெருணற் பதஞ்சா ரடியரெலாஞ் சிரிப்பார் நானுந் திகைப்பேனே. 3

திகைப்பார் திகைக்க நான்சிறிதுந் திகையே னெனநின் றிருவடிக்கே
வகைப்பா மாலை சூட்டுகின்றேன் மற்றொன் றறியேன் சிறியோர்க்குத்
தகைப்பா ரிடையித் தருணத்தே தாரா யெனிலோ பிறரெல்லாம்
நகைப்பார் நகைக்க வுடம்பினைவைத் திருத்த லழகோ நாயகனே. 4

நாயிற் கடையேன் கலக்கமெலாந் தவிர்த்து நினது நல்லருளை
ஈயிற் கருணைப் பெருங்கடலே யென்னை கெடுவ தியற்கையிலே
தாயிற் பெரிய தயவுடையான் குற்றம் புரிந்தோன் றன்னையுமோர்
சேயிற் கருதி யணைத்தானென் றுரைப்பா ருனைத்தான் றெறிந்தோரே. 5

தெரிந்த பெரியர்க் கருள்புரிதல் சிறப்பென் றுரைத்த தெய்வமறை
திரிந்த சிறியர்க் கருள்புரிதல் சிறப்பிற் சிறப்பென் றுரைத்தனவே
புரிந்தம் மறையைப் புகன்றவனு நீயே யென்றாற் புண்ணியனே
விரிந்த மனத்துச் சிறியேனுக் கிரங்கி யருளல் வேண்டாவோ. 6

வேண்டா ருளரோ நின்னருளை மேலோ ரன்றிக் கீழோரும்
ஈண்டார் வதற்கு வேண்டினரா லின்று புதிதோ யான்வேண்டல்
தூண்டா விளக்கே திருப்பொதுவிற் ஜோதி மணியே ஆறேடுமூன்
றுண்டா வதிலே முன்னேன்னை யாண்டாய் கருணை யளித்தருளே. 7

அருளே வடிவா மரசேநீ யருளா விடிலிவ் வடியேனுக்
கிருளே தொலைய வருளளிப்பா ரெவரே யெல்லாம் வல்லோய்நின்
பொருளேய் வடிவிற் கலையொன்றே புறத்து மகத்தும் புணர்ந்தெங்குந்
தெருளே யுறவெத் தலைவருக்குஞ் சிறந்த வருளாய்த் திகழ்வதுவே. 8

திகழ்ந்தார் கின்ற திருப்பொதுவிற் சிவமே நின்னைத் தெரிந்துகொண்டு
புகழ்ந்தார் தம்மைப் பொறுத்திடவும் புன்மை யறிவாற் பொய்புரைத்தே
இகழ்ந்தேன் றனைக்கீழ் வீழ்த்திடவு மென்னே புவிக்கிங் கிசைத்திலைநீ
அகழ்ந்தார் தமையும் பொறுக்கவென வமைத்தா யெல்லா மமைத்தாயே. 9

எல்லாம் வகுத்தா யெனக்கருளில் யாரே தடுப்பா ரெல்லாஞ்செய்
வல்லான் வகுத்த வண்ணமென மகிழ்வா ரென்கண் மணியேயென்
சொல்லா னவையு மணிந்துகொண்ட துரையே ஜோதித் திருப்பொதுவில்
நல்லாய் கருணை நடத்தரசே தருண மிதுநீ நயந்தருளே. 10

நயந்த கருணை நடத்தரசே ஞான வமுதே நல்லோர்கள்
வியந்த மணியே மெய்யறிவாம் விளக்கே யென்னை விதித்தோனே
கயந்த மனத்தே னெனினுமிகக் கலங்கி நரகக் கடுங்கடையிற்
பயந்த பொழுதுந் தாழ்த்திருத்த லழகோ கடைக்கண் பார்த்தருளே. 11

பார்த்தா யிரங்கச் சிறியேனுன் பாவி மனத்தாற் பட்டதுயர்
தீர்த்தா யந்நா ளதுதொடங்கித் தெய்வந் துணையென் றிருக்கின்றேன்
சேர்த்தா யுலகி லிந்நாளிற் சிறியேன் றனைவெந் துயர்ப்பாவி
ஈர்த்தா லதுகண் டிருப்பதுவோ கருணைக் கழகிங் கெந்தாயே. 12

தாயே யெனைத்தான் தந்தவனே தலைவா ஞான சபாபதியே
பேயேன் செய்த பெருங்குற்றம் பொருத்தாட் கொண்ட பெரியோனே
நீயே யிந்நாள் முகமறியார் நிலையி லிருந்தால் நீடுலகில்
நாயே யனையே னெவர்துணையென் றெங்கே புகுவே னவிலாயே. 13

ஆயேன் வேதா கமங்களைநன் கறியேன் சிறியே னவலமிகும்
பேயே னெனினும் வலிந்தென்னைப் பெற்ற கருணைப் பெருமானே
நீயே யருள நினைத்தாயே லெல்லா நலமும் நிரம்புவனுன்
காயே யெனினுங் கனியாகு மன்றே நினது கருணைக்கே. 14

கருணா நிதியே யென்னிரண்டு கண்ணே கண்ணிற் கலந்தொளிருந்
தெருணா டொளியே வெளியேமெய்ச் சிவமே சித்த சிகாமணியே
இருணா டுலகி லறிவின்றி யிருக்கத் தரியே னிதுதருணந்
தருணா வடியேற் கருட்ஜோதி தருவா யென்முன் வருவாயே. 15

வருவா யென்கண் மணிநீயென் மனத்திற் குறித்த வண்ணமெலாந்
தருவாய் தருண மிதுவேமெய்த் தலைவா ஞான சபாபதியே
உருவாய் சிறிது தாழ்க்கிலுயி ரொருவு முரைத்தே னென்னுடைவாய்
இருவா யலநின் றிருவடிப்பாட் டிசைக்கு மொருவா யிசைத்தேனே. 16

தேனே திருச்சிற் றம்பலத்திற் றெள்ளா ரமுதே சிவஞான
வானே ஞான சித்தசிகா மணியே யென்கண் மணியேயென்
ஊனே புகுந்தென் னுளங்கலந்த வுடையா யடியே னுவந்திடநீ
தானே மகிழ்ந்து தந்தாயித் தருணங் கைம்மா றறியேனே. 17

அறியேன் சிறியேன் செய்தபிழை யனைத்தும் பொறுத்தா யருட்ஜோதிக்
குறியே குணமே பெறவென்னைக் குறிக்கொண் டளித்தாய் சன்மார்க்க
நெறியே விளங்க வெனைக்கலந்து நிறைந்தாய் நின்னை யொருகணமும்
பிறியேன் பிறியே னிறவாமை பெற்றே னுற்றேன் பெருஞ்சுகமே. 18

சுகமே நிரம்பப் பெருங்கருணைத் தொட்டி விடத்தே யெனையமர்த்தி
அகமே விளங்கத் திருவருளா ரமுத மளித்தே யணைத்தருளி
முகமே மலர்த்திச் சித்திநிலை முழுதுங் கொடுத்து மூவாமற்
சகமே யிருக்கப் புரிந்தாயே தாயே யென்னைத் தந்தாயே. 19

தந்தா யின்றுந் தருகின்றாய் தருவாய் மேலுந் தனித்தலைமை
யெந்தாய் நினது பெருங்கருணை யென்னென் றுரைப்பே னிவ்வுலகிற்
சிந்தா குலந்தீர்த் தருளெனநான் சிறிதே கூவு முன்னென்பால்
வந்தாய் கலந்து மகிழ்கின்றா யெனது பொழுது வான்பொழுதே. 20

அருட்பெருஞ்ஜோதி.

# 26. அனுபோக நிலயம்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

இனிப்பிரிந் திறையு மிருக்கலேன் பிரிவை யெண்ணினு மையகோ மயங்கிப்
பனிப்பிலென் னுடம்பு முயிருமுள் ளுணர்வும் பரதவிப் பதையறிந் திலையோ
தனிப்படு ஞான வெளியிலே யின்பத் தனிநடம் புரிதனித் தலைவா
கனிப்பயன் றருதற் கிதுதகு தருணங் கலந்தருள் கலந்தரு ளெனையே. 1

பிரிந்தினிச் சிறிதுந் தரிக்கலேன் பிரிவைப் பேசினு நெய்விடுந் தீப்போல்
எரிந்துளங் கருகி மயங்கல்கண் டிலையோ வெங்கணுங் கண்ணுடை யெந்தாய்
புரிந்தசிற் பொதுவிற் றிருநடம் புரியும் புண்ணியா வென்னுயிர்த் துணைவா
கரைந்திடா துறுதற் கிதுதகு தருணங் கலந்தருள் கலந்தரு ளெனையே. 2

மேலையே காந்த வெளியிலே நடஞ்செய் மெய்யனே யையனே யெனக்கு
மாலையே யணிந்த மகிழ்நனே யெல்லாம் வல்லனே நல்லனே யருட்செங்
கோலையே நடத்து மிறைவனே பேரெண் குணத்தனே யினிச்சகிப் பறியேன்
காலையே தருதற் கிதுதகு தருணங் கலந்தருள் கலந்தரு ளெனையே. 3

பண்டுகோண் டெனைத்தான் பிழைகுறி யாத பண்பனே திருச்சிற்றம் பலத்தே
தொண்டுகொண் டடியர் களிக்கநின் றாடுந் தூயனே நேயனே பிரமன்
விண்டுகண் டறியா முடியடி யெனக்கே விளங்குறக் காட்டிய விமலா
கண்டுகொண் டுறுதற் கிதுதகு தருணங் கலந்தருள் கலந்தரு ளெனையே. 4

தனித்துணை யெனுமென் தந்தையே தாயே தலைவனே சிற்சபை தனிலே
இனித்தெழு தெள்ளமுதே யென்னுயிர்க் குயிரே யென்னிரு கண்ணுண்மா மணியே
அநித்தமே நீக்கி யாண்டவென் குருவே யண்ணலே யினிப்பிரி வாற்றேன்
கனித்துணை தருதற் கிதுதகு தருணங் கலந்தருள் கலந்தரு ளெனையே. 5

துன்பெலாந் தவிர்க்குந் திருச்சிற்றம் பலத்தே ஜோதியுட் ஜோதியே யழியா
இன்பெலா மளிக்கு மிறைவனே யென்னை யீன்றநற் றந்தையே தாயே
அன்பெலா மாகி நிறைந்ததோர் நிறைவே யண்ணலே யினிப்பிரி வாற்றேன்
பொன்பதந் தருதற் கிதுதகு தருணம் புணர்ந்தருள் புணர்ந்தரு ளெனையே. 6

ஏதுமொன் றறியாப் பேதையாம் பருவத் தென்னையாட் கொண்டெனை யுவந்தே
ஓதுமின் மொழியாற் பாடவே பணித்த வொருவனே யென்னுயிர்த் துணைவா
வேதமும் பயனு மாகிய பொதுவில் விளங்கிய விமலனே ஞான
போதகந் தருதற் கிதுதகு தருணம் புணர்ந்தருள் புணர்ந்தரு ளெனையே. 7

எண்ணிய வெனதுள் ளெண்ணமே யெண்ணத் திசைந்தபே ரின்பமே யான்முன்
பண்ணிய தவமே தவத்துறும் பலனே பலத்தினுற் கிடைத்தவென் பதியே
தண்ணிய மதியே மதிமுடி யரசே தனித்தசிற் சபைநடத் தமுதே
புண்ணிய மளித்தற் கிதுதகு தருணம் புணர்ந்தருள் புணர்ந்தரு ளெனையே. 8

மலப்பகை தவிர்க்குந் தனிப்போது மருந்தே மந்திர மேயொளிர் மணியே
நிலைப்பட வெனையன் றுண்டரு ளளித்த நேயனே தாயனே யவனே
பலப்படு பொன்னம் பலத்திலே நடஞ்செய் பரமனே பரமசிற் சுகந்தான்
புலப்படத் தருதற் கிதுதகு தருணம் புணர்ந்தருள் புணர்ந்தரு ளெனையே. 9

களிப்புறு மடியேன் கையிலே கிடைத்த கற்பகத் தீஞ்சுவைக் கனியே
வெளிப்புறத் தோங்கும் விளக்கமே யகத்தே விளங்குமோர் விளக்கமே யெனக்கே
ஒளிப்பிலா தன்றே யளித்தசிற் பொதுவி லொருவனே யினிப்பிரி வாற்றேன்
புளிப்பற வினித்தற் கிதுதகு தருணம் புணர்ந்தருள் புணர்ந்தரு ளெனையே. 10

அருட்பெருஞ்ஜோதி

## 27. தற்போத விழப்பு

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அவ்வண்ணம் பழுத்தவரு மறிந்திலர்சற் றெனினும்
அறிந்தனமோர் சிறிதுகுரு வருளாலே யந்தச்
செவ்வண்ணம் பழுத்ததனித் திருவுருக்கண் டவர்க்குந்
தெரியாம விருப்பமெனச் சிந்தனைசெய் திருந்தேன்
இவ்வண்ண மிருந்தவெனைப் பிறரறியத் தெருவில்
இழுத்துவிடுத் ததுகடவு ளியற்கையருட் செயலோ
மவ்வண்ணப் பெருமாயை தன்செயலோ வறியேன்
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. 1

கள்ளிருந்த மலரிதழி சடைக்கனின்ன் வடிவங்
கண்டுகொண்டேன் சிறிதடியேன் கண்டுகொண்ட படியே
நள்ளிருந்த வண்ணமின்னுங் கண்டுகண்டு களித்தே
நாடறியா திருப்பமென்றே நன்றுநினைந் தொருசார்
உள்ளிருந்த வெனைத்தெருவி லிழுத்துவிடுத் ததுதான்
உன்செயலோ பெருமாயை தன்செயலோ வறியேன்
வள்ளிருந்த குணக்கடையே னிதைநினைக்குந் தோறும்
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. 2

இகத்திருந்த வண்ணமெலா மிகத்திருந்த வருட்பேர்
இன்பவடி வஞ்சிறியேன் முன்புரிந்த தவத்தால்
சகத்திருந்தார் காணாதே சிறிதுகண்டு கொண்ட
தரநினைந்து பெரிதின்னுந் தான்காண்பே மென்றே
அகத்திருந்த வெனைப்புறத்தே யிழுத்துவிடுத் ததுதான்
ஆண்டவநின் னருட்செயலோ மருட்செயலோ வறியேன்
மகத்திருந்தா ரென்னளவி லென்னினைப்பா ரந்தோ
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. 3

கருங்களிறு போன்மதத்தாற் கண்செருக்கி வீணே
காலமெலாங் கழிக்கின்ற கடையர்கடைத் தலைவாய்
ஒருங்குசிறி யேன்றனைமுன் வலிந்தருளே வடிவாய்
உள்ளமர்ந்தே யுள்ளதனை யுள்ளபடி யுணர்த்திப்
பெருங்கருணை யாலளித்த பேறதனை யின்னும்
பிறரறியா வகைபெரிதும் பெறுதுமென வுள்ளே
மருங்கிருந்த வெனைவெளியி லிழுத்துவிட்ட தென்னோ
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. 4

நாடுகின்ற மறைகளெலா நாமறியோ மென்று
நாணியுரைத் தலமரவே நல்லமணி மன்றில்
ஆடுகின்ற சேவடிகண் டானந்தக் கடலில்
ஆடுமன்பர் போனமக்கும் அருள்கிடைத்த தெனினும்
வீடுகின்ற பிறர்சிறிது மறியாம லிருக்க
வேண்டுமென விருந்தவென்னை வெளியிலிழுத் திட்டு
வாடுகின்ற வகைபுரிந்த விதியைநினைந் தையோ
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. 5

நதிகலந்த சடையசைபத் திருமேனி விளங்க
நல்லதிருக் கூத்தாட வல்லதிரு வடிகள்
கதிகலந்து கொளச்சிறியேன் கருத்திடையே கலந்து
கள்ளமற வுள்ளபடி காட்டிடக்கண் டின்னும்
பதிகலந்து கொளுமட்டும் பிறரறியா திருக்கப்
பரிந்துள்ளே யிருந்தவென்னை வெளியிலிழுத் திட்டு
மதிகலந்து கலங்கவைத்த விதியைநினைந் தையோ
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. 6

மஞ்சனைய குழலம்மை யெங்கள்சிவ காம
வல்லிமகிழ் திருமேனி வண்ணமது சிறிதே
நஞ்சனைய கொடியேன்கண் டிடப்புரிந்த வருளை
நாடறியா வகையின்னு நீடநினைத் திருந்தேன்
அஞ்சனைய பிறரெல்லா மறிந்துபல பேசி
அலர்தூற்ற வலியவெனை வெளியிலிழுத் திட்டு
வஞ்சனைசெய் திடவந்த விதியைநினைந் தையோ
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. 7

அரிபிரம ருருத்திரரு மறிந்துகொள மாட்டா
தலமரவு மீதென்ன வதிசயமோ மலத்தில்
புரிபுழுவி லிழிந்தேனைப் பொருளாக்கி யருளாம்
பொருளளிக்கப் பெற்றனனிப் புதுமைபிற ரறியா
துரிமைபெற விருப்பனென வுள்ளிருந்த வென்னை
உலகறிய வெளியிலிழுத் தலகில்விருத் தியினால்
வரிதலையிட் டாட்டுகின்ற விதியைநினைந் தையோ
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. 8

விழற்கிறைத்துக் களிக்கின்ற வீணர்களிற் சிறந்த
வினைக்கொடியேன் பொருட்டாக விரும்பியெழுந் தருளிக்
கழற்கிசைந்த பொன்னடிநந் தலைமேலே யமைத்துக்
கருணைசெயப் பெற்றனமிக் கருணைநமை யின்னும்
நிழற்கிசைத்த மேனிலையி லேற்றுமென மகிழ்ந்து
நின்றவென்னை வெளியிலிழுத் துலகவியா பார
வழக்கில்வளைத் தலைக்கவந்த விதியைநினைந் தையோ
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. 9

அடிபிடித்துத் திரிகின்ற மறைகளெலாங் காணா
அருள்வடிவைக் காட்டிநம்மை யாண்டுகொண்ட கருணைக்
கொடிபிடித்த குருமணியைக் கூடுமட்டும் வேறோர்
குறிப்பின்றி யிருப்பமெனக் கொண்டகத்தே யிருந்தேன்
படிபிடித்த பலர்பலவும் பகர்ந்திடவிங் கெனைத்தான்
படுவழக்கிட் டுலகியலாம் வெளியிலிழுத் தலைத்தே
மடிபிடித்துப் பறிக்கவந்த விதியைநினைந் தையோ
மனமாலை பாய்வதுகாண் மன்றினடத் தரசே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 28. மாயா விளக்கம்.

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

திடுக்கற வெனைத்தான் வளர்த்திடப் பரையாஞ் செவிலிபாற் சேர்த்தனை யவளோ
எடுக்கவு நினையாள் படுக்கவு மொட்டாள் என்செய்வே னின்னுமென் னிடைப்பால்
மடுக்கநற் றாயும் வந்திலள் நீயும் வந்தெனைப் பார்த்திலை யந்தோ
தடுக்கருங் கருணைத் தந்தையே தளர்ந்தேன் தனயனேன் தளர்ந்திட லழகோ. 1

தளர்ந்திடேல் மகனே யென்றெனை யெடுத்தோர் தாய்கையிற் கொடுத்தனை யவளோ
வளர்ந்திடா வகையே நினைத்தனள் போன்று மாயமே புரிந்திருக் கின்றாள்
கிளர்ந்திட வெனைத்தான் பெற்றநற் றாயுங் கேட்பதற் கடைந்திலளந்தோ
உளந்தரு கருணைத் தந்தையே நீயும் உற்றிலை பெற்றவர்க் கழகோ. 2

தாங்கவென் றனையோர் தாய்கையிற் கொடுத்தாய் தாயவள் நான்றனித் துணர்ந்து
தூங்கவு மொட்டா ளெடுக்கவுந் துணியாள் சூதையே நினைத்திருக் கின்றாள்
ஓங்குநற் றாயும் வந்திலா ளந்தோ வுளந்தளர் வுற்றன னீயும்
ஈங்குவந் திலையே லென்செய்கே னிதுதான் எந்தைநின் றிருவருட் கழகோ. 3

அத்தநீ யெனையோர் தாய்கையிற் கொடுத்தா யாங்கவள் மகள்கையிற் கொடுத்தாள்
நித்திய மகளோர் நீலிபாற் கொடுத்தாள் நீலியோ தன்புடை யாடுந்
தத்துவ மடவார் தங்கையிற் கொடுத்தாள் தனித்தனி யவரவ ரெடுத்தே
கத்தவெம் பயமே காட்டினர் நானுங் கலங்கினேன் கலங்கிட லழகோ. 4

வட்டவான் சுடரே வளரொளி விளக்கே வயங்குசிற் ஜோதியே யடியேன்
இட்டமே யிட்டத் திசைந்துளே கலந்த இன்பமே யென்பெரும் பொருளே
கட்டமே தவிர்த்திங் கென்னைவாழ் வித்த கடவுளே கனகமன் றகத்தே
[1] நட்டமே புரியும் பேரரு ளரசே நம்பினேன் கைவிடே லெனையே. 2

புல்லவா மனத்தே னென்னினுஞ் சமயம் புகுதவா பொய்ந்நெறி யொழுக்கஞ்
சொல்லவா பிறரைத் துதிக்கவா சிறிதோர் சொப்பனத் தாயினு நினையேன்
கல்லவா மனத்தோ ருறவையுங் கருதேன் கனகமா மன்றிலே நடிக்கும்
நல்லவா வெல்லாம் வல்லவா வுனையே நம்பினேன் கைவிடே லெனையே. 3

புண்படா வுடம்பும் புரைபடா மனமும் பொய்படா வொழுக்கமும் பொருந்திக்
கண்படா திரவும் பகலுநின் றனையே கருத்தில்வைத் தேத்துதற் கிசைந்தேன்
உண்பனே யெனினு முடுப்பனே யெனினும் உலகரை நம்பிலே னெனது
நண்பனே நலஞ்சார் பண்பனே யுனையே நம்பினேன் கைவிடே லெனையே. 4

புண்ணிலே புகுந்த கோலெனத் துயரம் புகுந்தெனைக் கலக்கிய போதுங்
கண்ணிலே யெனது கருத்திலே கலந்த கருத்தனே நின்றனை யல்லால்
மண்ணிலே வயங்கும் வானிலே பிறரை மதித்திலேன் மதிக்கின்றார் தமையும்
நண்ணிலேன் வேறோர் தெண்ணிலே னுனையே நம்பினேன் கைவிடே லெனையே.

ஊன்பெறு முயிரு முணர்ச்சியு மன்பும் ஊக்கமு முண்மையு மென்னைத்
தான்பெறு தாயுந் தந்தையுங் குருவுந் தனிப்பெருந் தெய்வமுந் தவமும்
வான்பெறு பொருளும் வாழ்வுநற் றுணையும் மக்களு மனைவியு முறவும்
நான்பெறு நன்பும் யாவுநீ யென்றே நம்பினேன் கைவிடே லெனையே. 6

வாட்டமுந் துயரு மச்சமுந் தவிர்த்தென் வடிவமும் வண்ணமு முயிருந்
தேட்டமு நீயே கொண்டுநின் கருணைத் தேகமு முருவுமெய்ச் சிவமும்
ஈட்டமு மெல்லாம் வல்லநின் னருட்பே ரின்பமு மன்புமெய்ஞ் ஞான
நாட்டமுங் கொடுத்துக் காப்பதுன் கடனென் நம்பினேன் கைவிடே லெனையே. 7

வம்பனேன் பிறர்போல் வையமும் வானும் மற்றவு மதித்திலேன் மதஞ்சார்
[2] உம்பனே ரகங்கா ரந்தவிர்ந் தெல்லா உலகமும் வாழ்கவென் றிருந்தேன்
செம்பொனே கருணைத் தெய்வமே யெல்லாஞ் செயவல்ல சித்தனே சிவனே
நம்பனே ஞான நாதனே யுனையே நம்பினேன் கைவிடே லெனையே. 8

ஆயகா லிருந்து நடந்திட வலியில் லாமையா லழுங்குவா ரெனவுன்
மேயகா லிருந்துந் திருவரு ளுறவோர் விருப்பிலா மையின்மிக மெலிந்தேன்
தீயகான் விலங்கைத் தூயமா னிடஞ்செய் சித்தனே சத்திய சபைக்கு
நாயகா வுயிர்க்கு நாயகா வுனையே நம்பினேன் கைவிடே லெனையே. 9

1 நட்டம் என்பது—நடனம். 2. உம்பல் என்பது—யானை.

அற்றமு மறைக்கு மறிவிலா தோடி யாடிய சிறுபரு வத்தே
குற்றமுங் குணங்கொண் டென்னையாட் கொண்ட குணப்பெருங் குன்றமே குருவே
செற்றமும் விருப்புந் தீர்ந்தமெய்த் தவர்தஞ் சிந்தையி லினிக்கின்ற தேனே
நற்றக வுடைய நாதனே யுனையே நம்பினேன் கைவிடே லெனையே. 10

படம்புரி பாம்பிற் கொடியனேன் கொடிய பாவியிற் பாவியேன் கடைக்
கிடம்புரி மனத்தே னிரக்கமொன் றில்லே னென்னினுந் துணையெந்த விருத்துந்
திடம்புரி நின்பொன் னடித்துணை யெனவே சிந்தனை செய்திருக் கின்றேன்
நடம்புரி கருணை நாயகா வுனையே நம்பினேன் கைவிடே லெனையே. 11

படித்தன னுலகப் படிப்பெலா மெய்ந்நூல் படித்தவர் தங்களைப் பார்த்து
நொடித்தனன் கடிந்து நோக்கினேன் காம நோக்கினேன் பொய்யர்தம் முறவு
பிடித்தன னுலகிற் பேதையர் மயங்கப் பெரியரிற் பெரியபோற் பேசி
நடித்தன னெனினு நின்னடித் துணையே நம்பினேன் கைவிடே லெனையே. 12

பஞ்சனே னுலகப் பாட்டிலே மெலிந்த பாவியேன் சாவியே போன
புன்செயே யனையேன் புழுத்தலைப் புலையேன் பொய்யெலாம் பூரித்த வஞ்ச
நெஞ்சினேன் பாப நெறியினேன் சினத்தி னெடியனேன் கொடியனேன் காம
நஞ்சினே னெனினு மஞ்சினே னுனையே நம்பினேன் கைவிடே லெனையே. 13

கயந்துளே வுவட்டுங் காஞ்சிரங் காயிற் கடியனேன் காமமே கலந்து
வியந்துளே மகிழும் வீணனேன் கொடிய வெகுளியேன் வெய்யனேன் வெறியேன்
[1] மயர்ந்துளே னுலக வாழ்க்கையை மனையை மக்களை யொக்கலை மதித்தே
நயந்துளே னெனினும் பயந்துளே னுனையே நம்பினேன் கைவிடே லெனையே. 14

ஓடினேன் பெரும்பே ராசையா லுலகில் ஊர்தொறு முண்டியே யுடையே
தேடினேன் காமச் சேற்றிலே விழுந்து தியங்கினேன் மயங்கினேன் திகைத்து
வாடினேன் சிறிய [2] வாரியான் மகிழ்ந்தேன் வஞ்சமே பொருளென மதித்து
நாடினே னெனினும் பாடினே னுனையே நம்பினேன் கைவிடே லெனையே. 15

காட்டிலே திரியும் விலங்கினிற் கடையேன் கைவழக் கத்தினு லொறுத்த
ஓட்டிலே யெனினு மாசைவிட் டறியேன் உலுத்தனே னெருக்கிலு நெருங்கும்
ஏட்டிலே யெழுதிக் கணக்கிட்ட கொடியேன் எச்சிலு முமிழ்ந்திடே னரக
நாட்டிலே பெரியே னென்னினு முனையே நம்பினேன் கைவிடே லெனையே. 16

துனித்தவெம் மடவார் பகல்வந்த போது துறவியிற் கரிகரித் திருந்தேன்
தனித்திர வதிலே வந்தபோ தோடித் தழுவினேன் தடமுலை திளைத்தேன்
இனித்தசொல் புகன்றே னென்பிணக் கறித்தே யிடர்ப்பட்ட நாயென விளைத்தேன்
நனித்தவ றுடையே னென்னினு முனையே நம்பினேன் கைவிடே லெனையே. 17

தார்த்தட முலையார் நான்பல ரொடுஞ்சார் தலத்திலே வந்தபோ தவரைப்
பார்த்திலேன் வார்த்தைப் பகர்ந்திலேன் தபசுப் பாதகப் பூனைபோ லிருந்தேன்

1. மயர்ந்துளேன் என்பது—மயங்கினேன். 2. வாரி என்பது—வருவாய்.

பேர்த்துநான் றனித்த போதுபோய் வலிந்து பேசினேன் வஞ்சரிற் பெரியேன்
நார்த்திட ருளத்தே னென்னினு முனையே நம்பினேன் கைவிட லெனையே. 18

பெண்மையே விழைந்தே னவர்மன மறியேன் பேயெனப் பிடித்தனன் மடவார்க்
குண்மையே புகல்வான் போன்றவர் தமைத்தொட் டுவந்தகங் களித்தபொய் யுளத்தேன்
தண்மையே யறியேன் வெம்மையே யுடையேன் சாத்திரம் புகன்றவாய் தடித்தேன்
நன்மையே யடையே னென்னினு முனையே நம்பினேன் கைவிட லெனையே. 19

வன்மையிற் பொருண்மே லிச்சையில் லவன்போல் வாதிபோல் வார்த்தைகள் வழங்கி
அன்மையிற் பிறர்பா லுளவினுற் பொருளை அடிக்கடி வாங்கிய கொடியேன்
இன்மையுற் றவருக் குதவிலேன் பொருளை யெனைவிடக் கொடியருக் கீந்தேன்
நன்மையுற் றறியே னென்னினு முனையே நம்பினேன் கைவிட லெனையே. 20

கட்டமே யறியே னடுத்தவ ரிடத்தே காசிலே யாசையில் லவன்போற்
பட்டமே காட்டிப் பணம்பறித் துழன்றேன் பகலெலாந் தவசிபோ லிருந்தேன்
இட்டமே மிரவி லுண்டயல் புணர்ந்தே இழுதையிற் றூங்கினேன் களித்து
நட்டமே புரிந்தே னென்னினு முனையே நம்பினேன் கைவிட லெனையே. 21

காணியே கருதுங் கருத்தினைப் பிறர்க்குக் காட்ிடா தம்பலா மடங்குந்
தூணியே யெனச்சார்ந் திருந்தனன் சோற்றுச் சுகத்தினுற் சோம்பினே னுதவா
ஏணியே யனையே னிரப்பவர்க் குமியும் ஈந்திலே னீந்தவ னெனவே
நாணிலே னுரைத்தே னென்னினு முனையே நம்பினேன் கைவிட லெனையே.22

அடுத்தவர் மயங்கி மதித்திட நினைத்தேன் அடிக்கடி பொய்களே புனைந்தே
எடுத்தெடுத் துரைத்தே னெனக்கெதி ரிலையென் றிகழ்ந்தன னகங்கரித் திருந்தேன்
கொடுத்தவர் தமையே மிகவுப சரித்தேன் கொடாதவர் தமையிகழ்ந் துரைத்தேன்
நடுத்தய வறியே னென்னினு முனையே நம்பினேன் கைவிட லெனையே. 23

எளியவர் விளைத்த நிலமெலாங் கவரும் எண்ணமே பெரிதுளேன் புன்செய்க்
களியுணு மனையிற் சர்க்கரை கலந்து காய்ச்சுபால் கேட்டுண்ட கடையேன்
துளியவர்க் குதவேன் விருப்பிலான் போலச் சுவைபெறச் சுவைத்தநாக் குடையேன்
[1] நளிரெனச் சுழன்றே னென்னினு முனையே நம்பினேன் கைவிட லெனையே.24

கோலைபல புரிந்தே புலைநுகர்ந் திருந்தேன் கோடுறு குரங்கினிற் குதித்தே
அலைதரு மனத்தே னறிவிலே னெல்லாம் அறிந்தவன் போற்பிறர்க் குரைத்தேன்
மலைவுறு சமய வலையகப் பட்டே மயங்கிய மதியினே னல்லோர்
நலையல வெனவே திரிந்தன னெனினும் நம்பினேன் கைவிட லெனையே.25

ஈயெனப் பறந்தே னெறும்பென வுழன்றேன் எட்டியே யெனமிகத் தழைத்தேன்
பேயெனச் சுழன்றேன் பித்தனே யெனவாய்ப் பிதற்றுழு லூர்தொறும் பெயர்ந்தேன்
காயெனக் காய்த்தேன் கடையென நடந்தேன் கல்லெனக் கிடந்தனன் குரைக்கும்
நாயெனத் திரிந்தே னென்னினு முனையே நம்பினேன் கைவிட லெனையே. 26

1. நளிர் என்பது—நண்டு.

ஒன்றியே யுணவை யுண்டுடல் பருத்த ஊத்தையே னூக்கமும் புறமே
வென்றியே யுரைத்து வினைகளே விளைத்த வீணனே னார்கொலோ வழன்ற
பன்றியே யனையேன் கட்டுவா ரற்ற [1] பகடெனத் திரிகின்ற படிறேன்
நன்றியே யறியே னென்னினு முனையே நம்பினேன் கைவிடே லெனையே. 27

கவையெலாந் தவிர்ந்த வெறுமர மனையேன் கள்ளனேன் கள்ளுண்ட கடியேன்
சுவையெலாம் விரும்பிச் சுழன்றதோர் கடையேன் துட்டனேன் தீதெலாஞ் செய்தேன்
இவையெலா மந்தோ வுடையனே னெனினும் இந்தநா ளிறைவநின் னருளால்
நவையெலாந் தவிர்ந்தேன் தூயனுப் பினையே நம்பினேன் கைவிடே லெனையே. 28

அருட்பெருஞ்ஜோதி

## 30. பிரிவாற்றாமை

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**போக** மாட்டேன் பிறரிடத்தே பொய்யிற் கிடந்து புலர்ந்துலகம்
வேக மாட்டேன் பிறிதொன்றும் விரும்ப மாட்டேன் பொய்யுலகன்
ஆக மாட்டே னரசேயென் னப்பா வென்றனையாளான்
சாக மாட்டே னுனைப்பிரிந்தாற் றரிக்க மாட்டேன் கண்டாயே. 1

செல்ல மாட்டேன் பிறரிடத்தே சிறிதுந் தரியேன் நின்மொழிகள்
சொல்ல மாட்டே னினிக்கணமுந் துயர மாட்டேன் சோம்பலிடைப்
புல்ல மாட்டேன் பொய்யொழுக்கம் பொருந்த மாட்டேன் பிறவுயிரைக்
கொல்ல மாட்டேன் உனையல்லால் குறிக்க மாட்டேன் கண்டாயே. 2

வெறுக்க மாட்டே னின்றனையே விரும்பிப் பிடித்தேன் மயர்கிடினும்
பொறுக்க மாட்டே னுலகவர்போற் பொய்யிற் கிடந்து புரண்டழிவான்
சிறுக்க மாட்டே னரசேநின் றிருத்தா ளாணை நின்னாணை
மறுக்க மாட்டேன் வழங்குவன வெல்லாம் வழங்கி வாழியவே. 3

கருணைப் பெருக்கே யானந்தக் கனியே யென்னுட் கலந்தொளிருந்
தருணச் சுடரே யெனையீன்ற தாயே யென்னைத் தந்தானே
வருணப் படிக மணிமலையே மன்றி னடஞ்செய் வாழ்வேநற்
பொருண்மெய்ப் பதியே யினித்துயரம் பொறுக்க மாட்டேன் கண்டாயே. 4

திண்ணம் பழுத்த சிந்தையிலே தித்தித் தூலவாச் சுயஞ்ஜோதி
வண்ணம் பழுத்த தனிப்பழமே மன்றில் விளங்கு மணிச்சுடரே
தண்ணம் பழுத்த மதியமுதே தருவா யிதுவே தருணமென்பன்
எண்ணம் பழுத்த தினிச்சிறியே னிறையுந் தரியேன் தரியேனே. 5

1. பகடு என்பது—பொதிஎருது.

நாட்டுக் கிசைந்த மணிமன்றில் ஞானவடிவாய் நடஞ்செ யருள்
ஆட்டுக் கிசைந்த பெருங்கருணை யப்பா வென்ற னரசேயென்
பாட்டுக் கிசைந்த பதியேயோர் பரமா னந்தப் பழமேமேல்
வீட்டுக் கிசைந்த விளக்கேயென் விவேகம் விளங்க விளக்குகவே. 6

வேதந் தலைமேற் கொளவிரும்பி வேண்டிப் பரவு நினதுமலர்ப்
பாதந் தலைமேற் சூட்டியெனைப் பணிசெய் திடவும் பணித்தனைநான்
சாதந் தலைமே லெடுத்தொருவர் தம்பின் செலவுந் தரமில்லேன்
ஏதந் தலைமேற் சுமந்தேனுக் கிச்சீர் கொடுத்த தெவ்வாறே. 7

பொய்விட் டகலாப் புலைக்கொடியேன் பொருட்டா விரவிற் போந்தொருநின்
கைவிட் டகலாப் பெரும்பொருளென் கையிற் கொடுத்தே களிப்பித்தாய்
மைவிட் டகலா விழியின்ப வல்லி மகிழு மணவாளா
மெய்விட் டகலா மனத்தவர்க்கு வியப்பா முனது மெய்யருளே. 8

சாமத் திரவி லெழுந்தருளித் தமியேன் றாக்கந் தடுத்துமயற்
காமக் கடலைக் கடத்தியருட் கருணை யமுதங் களித்தளித்தாய்
நாமத் தடிகொண் டடிபெயர்க்கு நடையார் தமக்குங் கடையானேன்
ஏமத் தருட்பே றடைந்தேனு னென்ன தவஞ்செய் திருந்தேனே. 9

பாதி யிரவி லெழுந்தருளிப் பாவி யேனை யெழுப்பியருட்
ஜோதி யளித்தென் னுள்ளகத்தே சூழ்ந்து கலந்து துலங்குகின்றாய்
நீதி நடஞ்செய் பேரின்ப நிதிநான் பெற்ற நெடும்பேற்றை
ஓதி முடியா தென்போலிவ் வுலகம் பெறுதல் வேண்டுவனே. 10

அருட்பெருஞ்ஜோதி

## 31. பிரியேனென்றல்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**அப்பாநான்** பற்பலகா லறைவதென்னே யடியேன்
அச்சமெலாந் துன்பமெலா மறுத்துவிரைந் துவந்தே
இப்பாரி லிதுதருண மென்னையடைந் தருளி
எண்ணமெலா முடித்தென்னை யேன்றுகொளா யெனிலோ
தப்பாம லுயிர்விடுவேன் சத்தியஞ்சத் தியநின்
தாளிணைக ளறிகவிது தயவுடையோ யெவர்க்குந்
துப்பாகித் துணையாகித் துலங்கியமெய்த் துணையே
சுத்தசிவா னந்தவருட் ஜோதிநடத் தரசே. 1

ஆணையுன்மே லாணையுன்மே லாணையுன்மே லையா
அரைக்கணமு நினைப்பிரிந்தே யினித்தரிக்க மாட்டேன்
கோணைநிலத் தவர்பேசக் கேட்டதுபோ லின்னுங்
குறும்புமொழி செவிகளுறக் கொண்டிடவு மாட்டேன்
ஊணையுறக் கத்தினைநான் விடுகின்றே னீதான்
உவந்துவரா யெனிலென்ற னுயிரையும்விட் டிடுவேன்
மாணைமணிப் பொதுநடஞ்செய் வள்ளால்நீ யெனது
மனமறிவா யினமுனக்கு வகுத்துரைப்ப தென்னே. 2

படமுடியா தினித்துயரம் படமுடியா தரசே
பட்டதெலாம் போதுமிந்தப் பயந்தீர்த்திப் பொழுதென்
உடலுயிரா தியவெல்லாம் நீயெடுத்துக் கொண்டுன்
உடலுயிரா தியவெல்லா முவந்தெனக்கே யளிப்பாய்
வடலுறுசிற் றம்பலத்தே வாழ்வாயென் கண்ணுள்
மணியேயென் குருமணியே மாணிக்க மணியே
நடனசிகா மணியேயென் னவமணியே ஞான
நன்மணியே பொன்மணியே நடராஜ மணியே. 3

வாழையடி வாழையென வந்ததிருக் கூட்ட
மரபினில்யா னொருவனன்றோ வகையறியே னிந்த
ஏழைபடும் பாடுனக்குத் திருவுளச்சம் மதமோ
இதுதகுமோ இதுமுறையோ இதுதருமந் தானோ
மாழைமணிப் பொதுநடஞ்செய் வள்ளால்யா னுனக்கு
மகனலனோ நீயெனக்கு வாய்த்ததந்தை யலையோ
கோழைபுல குயிர்த்துயர மினிப்பொறுக்க மாட்டேன்
கொடுத்தருளின் னருளொளியைக் கொடுத்தருளிப் பொழுதே.

செய்வகையென் னெனத்திகைத்தேன் திகைப்பெலென் றொருநாள்
திருமேனி காட்டியெனைத் தெளிவித்தாய் நீயே
பொய்வகையன் றிதுநினது புந்தியறிந் ததுவே
பொன்னடியே துணையெனநா னென்னுயிரை வைத்திருந்தேன்
எய்வகையென் னம்பெருமா னருள்புரிவா னென்றே
யெந்தைவர வெதிர்பார்த்தே யின்னுமிருக் கின்றேன்
ஐவகையில் வுயிர்த்துயர மினிப்பொறுக்க மாட்டேன்
அருட்ஜோதிப் பெரும்பொருளை யளித்தருளிப் பொழுதே. 5

முன்னொருநாண் மயங்கினனீ மயங்கேலென் றெனக்கு
முன்னமுருக் காட்டினைநான் முகமலர்ந்தி ருந்தேன்
இன்னும்வரக் காணேனின் வரவையெதிர் பார்த்தே
எண்ணியெண்ணி வருந்துகின்றே னென்னசெய்வே னந்தோ
அன்னையினுந் தயவுடையாய் நின்றயவை நினைத்தே
ஆருயிர்வைத் திருக்கின்றே னறிவாய்நீ கண்டாய்
என்னிருகண் மணியேயென் னறிவேயென் னன்பே
என்னுயிர்க்குப் பெருந்துணையே யென்னுயிர்நா யகனே. 6

உன்னைமறந் திடுவேனோ மறப்பறியேன் மறந்தால்
உயிர்விடுவேன் கணந்தரியே னுன்னாணை யிதுநீ
என்னைமறந் திடுவாயோ மறந்திடுவா யெனில்யான்
என்னசெய்வே னெங்குறுவே னெவர்க்குரைப்பே னெந்தாய்
அன்னையினுந் தயவுடையாய் நீமறந்தா யெனினும்
அகிலமெலா மளித்திடுநின் னருள்மறவா தென்றே
இன்னுமிகக் களித்திங்கே யிருக்கின்றேன் மறவேல்
இதுதருண மருட்ஜோதி யெனக்குவிரைந் தருளே. 7

நான்மறந்தே னெனினுமெனைத் தான்மறவா னெனது
நாயகனென் றுடுகின்றேன் எனினுமிது வரையும்
வான்மறந்தேன் வானவரை மறந்தேன்மா லயனை
மறந்தேனம் முருத்திரரை மறந்தேனென் னுடைய
ஊன்மறந்தே னுயிர்மறந்தே னுணர்ச்சியெலா மறந்தேன்
உலகமெலா மறந்தேனிங் குன்னைமறந் தறியேன்
பான்மறந்த குழவியைப்போல் பாரேலிங் கெனையே
பரிந்துநின தருட்ஜோதி புரிந்துமகிழ்ந் தருளே. 8

தெருவிடத்தே விளையாடித் திரிந்தவெனை வலிந்தே
சிவமாலை யணிந்தனையச் சிறுவயதி லிந்த
உருவிடத்தே நினக்கிருந்த ஆசையெலா மிந்நாள்
ஓடியதோ புதியவொரு வுருவுவிழைந் ததுவோ
கருவிடத்தே எனைக்காத்த காவலனே யுனது
கால்பிடித்தேன் விடுவேனோ கைப்பிடியன் றதுதான்
வெருவிடத்தென் னுயிர்ப்பிடிகா ணுயிரகன்று லன்றி
விடமாட்டேன் விடமாட்டேன் விடமாட்டே னானே. 9

பெரியனருட் பெருஞ்ஜோதிப் பெருங்கருணைப் பெருமான்
பெரும்புகழைப் பேசுதலே பெரும்பேறென் றுணர்ந்தேன்
துரியநிலத் தவரெல்லாந் துதிக்கின்றா ரேழை
துதித்தல்பெரி தலவிங்கே துதித்திடவென் றெழுந்த
அரியபெரும் பேராசைக் கடல்பெரிதே யதுவென்
னளவுகடந் திருக்கின்ற தாதலினால் விரைந்தே
உரியவரு ளமுதளித்தே நினைத்துதிப்பித் தருள்வாய்
உலகமெலாங் களித்தோங்க வோங்குநடத் தரசே. 10

கவலையெலாந் தவிர்ந்துமிகக் களிப்பினொடு நினையே
கைகுவித்துக் கண்களினீர் கனிந்துசுரந் திடவே
சவலைமனச் சலனமெலாந் தீர்ந்துசுக மயமாய்த்
தானேதா னாகியின்பத் தனிநடஞ்செய் யிணைத்தாள்
தவலருஞ்சீர்ச் சொன்மாலை வனைந்துவனைந் தணிந்து
தானாகி நானாடத் தருணமிது தானே
குவலயத்தா ரதிசயிக்க வெழுந்தருளி வருவாய்
குருவேயென் குற்றமெலாங் குணமாக்கொண் டவனே. 11

அருட்பெருஞ்ஜோதி.

# 32. திருவருட்பேறு

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

படிகளெலா மேற்றுவித்தீர் பரமநடம் புரியும்
பதியையடை வித்திரப் பதிநடுவே விளங்கும்
கொடிகணிறை மணிமாடக் கோயிலையுங் காட்டிக்
கொடுத்திரக் கோயிலிலே கோபுரவா யிலிலே
செடிகளிலாத் திருக்கதவந் திறப்பித்துக் காட்டித்
திரும்பவுநீர் மூடுவித்தீர் திறந்திடுதல் வேண்டும்
அடிகளிது தருணமினி யரைக்கணமுந் தரியேன்
அம்பலத்தே நடம்புரிவீர் வந்தருள்வீர் விரைந்தே. 1

பெட்டியிதி லுலவாத பெரும்பொருளென் றுரைத்துப்
பெறுகவென வுறுதிநக்கும் பெருந்திறலு மோரும்
எட்டிரண்டுந் தெரியாதே னென்னையிலே கொடுத்தீர்
இதுதருணந் திறந்ததனைப் பெறுங்காரி யஞ்செய்வீர்
அட்டிசெய நினையாதீ ரரைக்கணமுந் தரியேன்
அரைக்கணத்துக் காயிரமா யிரங்கோடி யாக
வட்டியிட்டு நும்மிடத்தே வாங்குவனும் மாணை
மணிமன்றில் நடம்புரிவீர் வந்தருள்வீர் விரைந்தே. 2

கைக்கிசைந்த பொருளெனக்கு வாய்க்கிசைந்த வுணவே
காலமென்ன கணக்கென்ன கருதாதீ ரென்றீர்
மெய்க்கிசைந்தன் றளித்ததுநீர் சத்தியந்தே வரீர்
விடுவேனோ வின்றடியேன் விழற்கிறைத்தே னலவே
செய்க்கிசைந்த சிவபோகம் விளைத்தனனே விளைத்தேன்
தினந்தோறுங் காத்திருந்தேன் றிருவுளமே யறியும்
மைக்கிசைந்த விழியம்மை சிவகாம வல்லி
மகிழநடம் புரிகின்றீர் வந்தருள்வீர் விரைந்தே. 3

பரிகலத்தே திருவமுதம் படைத்தனமே பணித்தீர்
பணித்தபின்னே யென்னுடைய பக்குவம்பார்க் கின்றீர்
இருநிலத்தே பசித்தவர்க்கும் பசிநீக்க வல்லார்
இவர்சிறிய ரிவர்பெரிய ரென்னல்வழக் கலவே
உரிமையுற்றே னுமக்கேயென் னுள்ளமன்றே யறிந்தீர்
உடல்பொருளா விகளையெலா முன்புதனக் கொண்டீர்
திரிவகத்தே நான்வருந்தப் பார்த்திருத்த லழகோ
சிவகாம வல்லிமகிழ் திருநடநா யகரே. 4

பொய்கொடுத்த மனமாயைச் சேற்றில்விழா தெனக்கே
பொன்மணிமே டையிலேறிப் புந்திமகிழ்ந் திருக்கக்
கைகொடுத்தீ ருலகமெலாங் களிக்கவுல வாத
காலிரண்டுங் கொடுத்தீரெக் காலுமழி யாத
மெய்கொடுக்க வேண்டுமுமை விடமாட்டேன் கண்டீர்
மேலேறி னேனினிக்கீழ் விழைந்திறங்கே னென்றும்
மைகொடுத்த விழியம்மை சிவகாம வல்லி
மகிழநடம் புரிகின்றீர் வந்தருள்வீர் விரைந்தே. 5

மின்போலே வயங்குகின்ற விரிசடையீ ரடியேன்
விளங்குமும திணையடிகள் மெய்யழுந்தப் பிடித்தேன்
முன்போலே யேமாந்து விடமாட்டேன் கண்டீர்
முனிவறியீ ரினியொளிக்க முடியாது நுமக்கே
என்போலே யிரக்கம்விட்டுப் பிடித்தவர்க ளிலையே
என்பிடிக்கு ளிசைந்ததுபோ லிசைந்ததிலை பிறர்க்கே
பொன்போலே முயல்கின்ற மெய்த்தவர்க்கு மரிதே
பொய்த்தவனேன் செய்தவம்வான் வையகத்திற் பெரிதே. 6

எதுதருண மதுதெரியே னென்னினுமெம் மானே
யெல்லாஞ்செய் வல்லவனே யென்றனிநா யகனே
இதுதருணந் தவறுமெனி லென்னுயிர்போய் விடுமிவ்
வெளியேன்மேற் கருணைபுரிந் தெழுந்தருளல் வேண்டும்
மதுதருண வாரிசமு மலர்ந்ததரு ளுதயம்
வாய்ந்ததுசிற் சபைவிளக்கம் வயங்குகின்ற துலகில்
விதுதருண வமுதளித்தென் னெண்ணமெலா முடிக்கும்
வேலையிது காலையென விளம்பவும்வேண் டுவதோ. 7

கோளறிந்த பெருந்தவர்தங் குறிப்பறிந்தே யுதவுங்
கொடையாளா சிவகாமக் கொடிக்கிசைந்த கொழுநா
ஆளறிந்திங் கெனையாண்ட வரசேயென் னமுதே
அம்பலத்தே நடம்புரியு மரும்பெருஞ் ஜோதியனே
தாளறிந்தே னின்வரவு சத்தியஞ்சத் தியமே
சந்தேக மில்லையந்தத் தனித்ததிரு வரவின்
நாளறிந்து கொளல்வேண்டு நவிலுகநீ யெனது
நனவிடையா யினுமன்றிக் கனவிடையா யினுமே. 8

அன்றெனக்கு நீயுரைத்த தருணமிது வெனவே
அறிந்திருக்கின் றேனடியே னாயினுமென் மனந்தான்
கன்றெனச்சென் றடிக்கடியுட் கலங்குகின்ற தரசே
கண்ணுடைய கரும்பேயென் கவலைமனக் கலக்கம்
பொன்றிடப்பே ரின்பவெள்ளம் பொங்கிடவிவ் வுலகிற்
புண்ணியர்க ளுளங்களிப்பப் பொருந்திவிளங் கிடநீ
இன்றெனக்கு வெளிப்படவென் னிதயமலர் மிசைநின்
றெழுந்தருளி யருள்வதெலா மினிதருள்க விரைந்தே. 9

இதுதருண நமையாளற் கெழுந்தருளுந் தருணம்
இனித்தடையொன் றிலைகண்டா யென்மனனே நீதான்
மதுவிழுமோ ரீப்போலே மயங்காதே கலங்கி
வாடாதே மலங்காதே மலர்ந்துமகிழ்ந் திருப்பாய்
குதுகலமே யிதுதொடங்கிக் குறைவிலைகா ணமது
குருவாணை நமதுபெருங் குலதெய்வத் தாணை
பொதுவில்நடம் புரிகின்ற புண்ணியனு னெனக்குட்
புணர்ந்துரைத்த திருவார்த்தை பொன்வார்த்தை யிதுவே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 33. சிவானந்தத்தழுந்தல்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**கா**ரண காரியக் கல்விக ளெல்லாங்
கற்பித்தென் னுள்ளே கலந்துகொண் டென்னை
நாரணர் நான்முகர் போற்றமே லேற்றி
நாதாந்த நாட்டுக்கோர் நாயக னாக்கிப்
பூரணமா மின்பம் பொங்கித் ததும்பப்
புத்தமு தாமருட் போனகந் தந்தே
ஆரண வீதியி லாடச்செய் தீரே
அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவர் நீரே. 1

தேகமேப் போதுஞ் சிதையாத வண்ணஞ்
செய்வித் தெலாம்வல்ல சித்தியுந் தந்தே
போகமெல் லாமென்றன் போகம தாக்கிப்
போதாந்த நாட்டைப் புரக்கமே லேற்றி
ஏகசி வானந்த வாழ்க்கையி லென்றும்
இன்புற்று வாழு மியல்பளித் தென்னை
ஆகம வீதியி லாடச்செய் தீரே
அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவர் நீரே. 2

தானந்த மில்லாத தன்மையைக் காட்டுஞ்
சாகாத கல்வியைத் தந்தெனக் குள்ளே
தேனந்தத் தெள்ளமு தூற்றிப் பெருக்கித்
தித்தித்துச் சித்தஞ் சிவமய மாக்கி
வானந்த மாதியுங் கண்டுகொண் டழியா
வாழ்க்கையி லின்புற்றுச் சுத்தவே தாந்த
ஆனந்த வீதியி லாடச்செய் தீரே
அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவர் நீரே. 3

சிற்சபை யின்பத் திருநடங் காட்டித்
　தெள்ளமு தூட்டியென் சிந்தையைத் தேற்றிப்
பொற்சபை தன்னிற் பொருத்தியெல் லாஞ்செய்
　பூரண சித்திமெய்ப் போகமுந் தந்தே
தற்பர மாமோர் சதானந்த நாட்டில்
　சத்திய னாக்கியோர் சுத்தசித் தாந்த
அற்புத வீதியி லாடச்செய் தீரே
　அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவர் நீரே. 4

தத்துவ மெல்லாமென் தன்வச மாக்கிச்
　சாகாவ ரத்தையுந் தந்தெனைத் தேற்றி
ஒத்துவந் துள்ளே கலந்துகொண் டெல்லா
　உலகமும் போற்ற வுயர்நிலை யேற்றிச்
சித்திய லாஞ்செயச் செய்வித்துச் சத்துஞ்
　சித்தும் வெளிப்படச் சுத்தநா தாந்த
அத்திரு வீதியி லாடச்செய் தீரே
　அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவர் நீரே. 5

இத்தனை யென்றுநின் றெண்ணிட வொண்ணா
　என்பிழை யாவையு மன்பினிற் கொண்டே
சத்திய மாஞ்சிவ சித்தியை யென்பால்
　தந்தெனை யாவரும் வந்தனை செயவே
நித்திய னாக்கிமெய்ச் சுத்தசன் மார்க்க
　நீதியை யோதியோர் சுத்தபோ தாந்த
அத்தனி வீதியி லாடச்செய் தீரே
　அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவர் நீரே. 6

மருந்திது மணியிது மந்திர மிதுசெய்
　வகையிது துறையிது வழியிது வெனவே
இருந்தெனு ளறிவித்துத் தெள்ளமு தளித்தே
　என்னையுந் தன்னையு மேகம தாக்கிப்
பொருந்திய லாஞ்செய வல்லவோர் சித்திப்
　புண்ணிய வாழ்க்கையில் நண்ணியோ காந்த
அருந்தவ வீதியி லாடச்செய் தீரே
　அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவர் நீரே. 7

பதிசார வைத்துமுற் பசுநிலை காட்டிப்
　பாசவி மோசனப் பக்குவ னாக்கி
நிதிசார நானிந்த நீளுல கத்தே
　நினைத்தன நினைத்தன நேருறப் புரிந்து
திதிசேர மன்னுயிர்க் கின்பஞ்செய் கின்ற
　சித்திய லாந்தந்து சுத்தக லாந்த
அதிகார வீதியி லாடச்செய் தீரே
　அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவர் நீரே. 8

இருளான மலமறுத் திகபரங் கண்டே
எல்லா வுயிர்களு மின்புற்று வாழ
மருளான பற்பல மார்க்கங்க ளெல்லாம்
வழிதுறை தெரியாமல் மண்மூடிப் போகத்
தெருளான சுத்தசன் மார்க்கம தொன்றே
சிறந்து விளங்கவோர் சிற்சபை காட்டும்
அருளான வீதியி லாடச்செய் தீரே
அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவர் நீரே. 9

இருட்சாதி தத்துவச் சாத்திரக் குப்பை
இருவாய்ப் புன்செயி லெருவாக்கிப் போட்டு
மருட்சாதி சமயங்கள் மதங்களாச் சிரம
வழக்கெலாங் குழிக்கொட்டி மண்மூடிப் போட்டுத்
தெருட்சாருஞ் சுத்தசன் மார்க்கநன் னீதி
சிறந்து விளங்கவோர் சிற்சபை காட்டும்
அருட்ஜோதி வீதியி லாடச் செய்தீரே
அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவர் நீரே. 10

அருட்பெருஞ்ஜோதி

## 34. திருமுன் விண்ணப்பம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**மா**ழை மாமணிப் பொதுநடம் புரிகின்ற வள்ளலே மகிழ்கின்ற
வாழை வான்பழச் சுவையெனப் பத்தர்தம் மனத்துளே தித்திப்பே
ஏழை நாயினேன் விண்ணப்பந் திருச்செவிக் கேற்றருள் செயல்வேண்டும்
கோழை மானிடப் பிறப்பிதி லுன்னருட் குருவுருக் கொளுமாறே. 1

பொன்னின் மாமணிப் பொதுநடம் புரிகின்ற புண்ணியா கனிந்தோங்கி
மன்னு வாழையின் பழச்சுவை யெனப்பத்தர் மனத்துளே தித்திப்போய்
சின்ன நாயினேன் விண்ணப்பந் திருச்செவி சேர்த்தருள் செயல்வேண்டும்
இன்ன வென்னுடைத் தேகநல் லொளிபெறு மியலுருக் கொளுமாறே. 2

விஞ்சு பொன்னணி யம்பலத் தருணடம் விளைத்துயிர்க் குயிராகி
எஞ்சு றுதபே ரின்பருள் கின்றவென் னிறைவநின் னருளின்றி
அஞ்சு நாயினேன் விண்ணப்பந் திருச்செவி யமைத்தருள் செயல்வேண்டும்
துஞ்சு மிவ்வுட லிம்மையே துஞ்சிடாச் சுகவுடல் கொளுமாறே. 3

ஓங்கு பொன்னணி யம்பலத் தருணட முயிர்க்கெலா மொளிவண்ணப்
பாங்கு மேவநின் றுடல்செய் யிறைவநின் பதமலர் பணிந்தேத்தத்
தீங்கு நாயினேன் விண்ணப்பந் திருச்செவி சேர்த்தருள் செயல்வேண்டும்
ஈங்கு வீழுட லிம்மையே வீழ்ந்திடா வியலுட லுறுமாறே. 4

இலங்கு பொன்னணிப் பொதுநடம் புரிகின்ற விறைவவிவ் வுலகெல்லாந்
துலங்கும் வண்ணநின் றருளுநின் றிருவடித் துணைதுணை யென்னுமற்
கலங்கு நாயினேன் விண்ணப்பந் திருச்செவி கலந்தருள் செயல்வேண்டும்
அலங்கு மிவ்வுட லிம்மையே யழிவுறு வருளுட னுறுமாறே. 5

சிறந்த பொன்னணித் திருச்சிற்றம் பலத்திலே திருநடம் புரிகின்ற
அறந்த வாதசே வடிமலர் முடிமிசை யணிந்தக மகிழ்ந்தேத்த
மறந்த நாயினேன் விண்ணப்பந் திருச்செவி மடுத்தருள் செயல்வேண்டும்
பிறந்த விவ்வுட லிம்மையே யழிவுறுப் பெருநலம் பெறுமாறே. 6

விளங்கு பொன்னணித் திருச்சிற்றம் பலத்திலே விரைமலர்த் திருத்தாளை
உளங்கொ என்பர்தம் முளங்கொளு மிறைவநின் னொப்பிலாப் பெருந்தன்மை
களங்கொள் நாயினேன் விண்ணப்பந் திருச்செவி கலந்தருள் செயல்வேண்டுந்
துளங்கு மிவ்வுட லிம்மையே யழிவுறுத் தொல்லுட னுறுமாறே. 7

வாய்ந்த பொன்னணிப் பொதுநடம் புரிகின்ற வள்ளலே மறையெல்லாம்
ஆய்ந்து மின்னவெண் றறிந்திலா நின்றிரு வடிமலர் பணியாமற்
சாய்ந்த நாயினேன் விண்ணப்பந் திருச்செவி தரித்தருள் செயல்வேண்டும்
ஏய்ந்த விவ்வுட லிம்மையே திருவரு ளியலுட னுறுமாறே. 8

மாற்றி லாதபொன் னம்பலத் தருணடம் வயங்கநின் றொளிர்கின்ற
பேற்றி லாருயிர்க் கின்பரு ளிறைவநின் பெய்கழற் கணிமாலை
சாற்றி டாதவென் விண்ணப்பந் திருச்செவி தரித்தருள் செயல்வேண்டுங்
காற்றி லாகிய விவ்வுட லிம்மையே கதியுட னுறுமாறே. 9

தீட்டு பொன்னணி யம்பலத் தருணடஞ் செய்துயிர்த் திரட்கின்பங்
காட்டு கின்றதோர் கருணையங் கடவுணின் கழலிணை கருதாதே
நீட்டு கின்றவென் விண்ணப்பந் திருச்செவி நேர்ந்தருள் செயல்வேண்டும்
வாட்டு மிவ்வுட லிம்மையே யழிவுறு வளமடைந் திடுமாறே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 35. வாதனைக்கிரங்கல்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**படமாட்டேன்** துயர்சிறிதும் படமாட்டே னினிநான்
பயப்படவு மாட்டேனுன் பதத்துணையே பிடித்தேன்
விடமாட்டே னேமாந்து விடமாட்டேன் கண்டீர்
மெய்ம்மையிது நும்மாணை விளம்பினனும் மடியேன்
கெடமாட்டேன் பிறர்மொழிகள் கேட்டிடவு மாட்டேன்
கிளரொளியம் பலத்தாடல் வளரொளிநும் மல்லால்
நடமாட்டே னென்னுளத்தே நான்சாக மாட்டேன்
நல்லதிரு வருளாலே நான்றுணி னேனே. 1

சாகாத கல்வியிலே தலைகாட்டிக் கொடுத்தீர்
தடையறியாக் கால்காட்டித் தரம்பெறவு மளித்தீர்
மாகாத லுடையவனென் மனங்கனிவித் தழியா
வானமுதம் மெய்ஞ்ஞான மருந்துமுனைப் புரிந்தீர்
போகாத புனலாலே சுத்தவுடம் பினராம்
புண்ணியரும் நண்ணரிய பொதுநிலையுந் தந்தீர்
நாகாதி பதிகளுநின் றேத்தவளர்க் கின்றீர்
நடராஜ ரேநுமக்கு நானெதுசெய் வேனே. 2

வேதாந்த நிலையுமத னந்தத்தே விளங்கும்
மெய்ந்நிலையுங் காட்டுவித்தீர் விளங்குபசித் தாந்தப்
போதாந்த நிலையுமப்பாற் புகலரிதாம் பெரிய
பொருணிலையுந் தெரிவித்தீர் புண்ணியரே நுமது
பாதாந்த மறிவித்தீர் சுத்தவடி வுடனே
பகர்பிரண வாகாரப் பரிசுமெனக் களித்தீர்
நாதாந்தத் தனிச்செங்கோல் நான்செலுத்தக் கொடுத்தீர்
நடராஜ ரேநுமக்கு நானெதுசெய் வேனே. 3

ஆர்நீயென் றெதிர்வினவில் விடைகொடுக்கத் தெரியா
தறிவிலியேன் பொருட்டாக வன்றுவந்தென் றனக்கே
ஏர்நீடும் பெரும்பொருளொன் றீந்துமகிழ்ந் தாண்டீர்
இன்றும்வலிந் தெளியேன்பா லெய்தியொளி யோங்கப்
பார்நீடத் திருவருளாம் பெருஞ்சோதி யளித்தீர்
பகருமெலாம் வல்லசித்திப் பண்புறவுஞ் செய்தீர்
நார்நீட நான்றுணைப் நடம்புரிகின் றீரே
நடராஜ ரேநுமக்கு நானெதுசெய் வேனே. 4

பாயிரமா மறைகளெலாம் பாடுகின்ற பாட்டுன்
பாட்டேயென் றறிந்துகொண்டேன் பரம்பொருளுன் பெருமை
ஆயிரமா யிரங்கோடி நாவுடையோ ரெனினும்
அணுத்துணையும் புகலரிதே லந்தோவிச் சிறியேன்
வாயிரங்கா வகைபுகலத் துணிந்தேனென் னுடைய
மனத்தாசை யொருகடலோ வெழுகடலிற் பெரிதே
சேயிரங்கா முனமெடுத்தே யணைத்திடுந்தா யனையாய்
திருச்சிற்றம் பலம்விளங்குஞ் சிவஞான குருவே. 5

ஊனுரைக்கு முயிரளவு முலகளவு மறியேன்
உன்னளவை யறிவேனோ வென்னளவை யறிந்தோய்
வானுரைக்க மாட்டாதே வருந்தினவே மறையும்
வகுத்துரைக்க வறியாதே மயங்கினவே யந்தோ

கோனுரைக்கும் குறிகுணங்கள் கடந்தபெரு வெளிமேல்
கூடாதே கூடிநின்ற கோவேநின் னியலை
நானுரைக்க நானாரோ நானாரோ நவிலேன்
நானெனவே நாணுகின்றேன் நடராஜ குருவே. 6

கண்ணுடையீர் பெருங்கருணைக் கடலுடையீ ரெனது
கணக்கறிந்தீர் வழக்கறிந்தீர் களித்துவந்தன் றுரைத்தீர்
எண்ணுடையா ரெழுத்துடையா ரெல்லாரும் போற்ற
என்னிதய மலர்மிசைநின் றெழுந்தருளி வாமப்
பெண்ணுடைய மனங்களிக்கப் பேருலகங் களிக்கப்
பெத்தருமுத் தருமகிழப் பத்தரெலாம் பரவ
விண்ணுடைய வருட்ஜோதி விளையாடல் புரிய
வேண்டுமென்றே னென்பதன்முன் விரைந்திசைந்தீ ரதற்கே. 7

போதுநடஞ்செய் மலரடியென் றலைமேலே யமைத்தீர்
புத்தமுத மளித்தீரென் புன்மையெலாம் பொறுத்தீர்
சதுமறையா கமங்களெலாஞ் சாற்றரிய பெரிய
தனித்தலைமைத் தந்தையரே சாகாத வரமும்
எதுநினைத்தே னினைத்தாங்கே யதுபுரியுந் திறமும்
இன்பவனு பவநிலையு மெனக்கருளு வதற்கே
இதுதருண மென்றேனென் பதன்முன் கொடுத்தீர்
என்புகல்வே னென்புடைநும் மன்பிருந்த வாறே. 8

கரும்பின்மிக வினிக்கின்ற கருணையமு தளித்தீர்
கண்ணனையீர் கனகசபை கருதியசிற் சபைமுன்
துரும்பின்மிகச் சிறியேனா னன்றுநின்று துயர்ந்தேன்
துயரேலென் றெல்லையிட்டீர் துரையேயவ் வெல்லை
விரும்புறவா யிற்றிதுதான் தருணமிந்தத் தருணம்
விரைந்தருள வேண்டுமென விளம்பிநின்றே னடியேன்
பெரும்பிழைக ளனைத்தினையும் பொறுத்தருளி யிந்நாள்
பெரிதளித்தீர் அருட்பெருமை பெற்றவளிற் பெரிதே. 9

அந்நாளி லடிச்சிறியே னம்பலவா யிலிலே
அருளைநினைந் தொருபுறத்தே யயர்ந்தழுது நின்றேன்
முன்னாளில் யான்புரிந்த பெருந்தவத்தா லெனக்கு
முகமலர்ந்து மொழிந்தவருண் மொழியைநினைந் தந்தச்
செந்நாளை யெதிர்பார்த்தே பன்னாளுங் களித்தேன்
சிந்தைமலர்ந் திருந்தேனச் செல்வமிகு திருநாள்
இந்நாளே யாதலினா லெனக்கருள்வீ ரென்றேன்
என்பதன்முன் னளித்தீர்நும் மன்புலகிற் பெரிதே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 36. முறையீடு

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

உருவா யருவா யொளியாய் வெளியாய் உலவா வொருபே ரருளா ரமுதக்
தருவா யிதுவே தருணந் தருணந் தரியேன் சிறிதுந் தரியே னினிநீ
வருவா யலையே லுயிர்வாழ் கலனுன் மதிசேர் முடியெம் பதியே யடியேன்
குருவாய் முனமே மனமே யிடமாக் குடிகொண் டவனே அபயம் மபயம். 1

என்னே செய்வேன் செய்வகை யொன்றிங் கிதுவென் றருள்வா யிதுவே தருணம்
மன்னே யயனுந் திருமா லவனும் மதித்தற் கரிய பெரிய பொருளே
அன்னே யப்பா வையா வரசே அன்பே யறிவே யமுதே யழியாப்
பொன்னே மணியே பொருளே யருளே பொதுவாழ் புனிதா அபயம் மபயம். 2

கருணா நிதியே யபயம் மபயம் கனகா கரனே யபயம் மபயம்
அருணா டகனே யபயம் மபயம் அழகா வமலா வபயம் மபயம்
தருணா தவனே யபயம் மபயந் தனிநா யகனே யபயம் மபயம்
தெருணா டுறுவா யபயம் மபயந் திருவம் பலவா வபயம் மபயம். 3

மருளுந் துயருந் தவிரும் படியென் மனமன் றிடைநீ வருவா யபயம்
இருளும் பயமும் பெறுவஞ் சகநெஞ் சினனென் றிகழே லபயம் மபயம்
வெருளுங் கொடுவெம் புலியுங் கொலையும் விடுமா றருள்வா யபயம் மபயம்
அருளும் பொருளுந் தெருளுந் தருவாய் அபயம் மபய மபயம் மபயம். 4

இனியோ ரிறையுந் தரியே னபயம் இதுநின் னருளே யறியும் மபயம்
கனியே யெனநீ நினையே லபயங் கனியே கருணைக் கடலே யபயம்
தனியேன் றுணைவே றறியே னபயந் தகுமோ தகுமோ தகுமோ வபயந்
துனியே யறவந் தருள்வா யபயஞ் சுகநா டகனே யபயம் மபயம். 5

அடியா ரிதயாம் புயனே யபயம் அரசே யமுதே யபயம் மபயம்
முடியா தினிநான் றரியே னபயம் முறையோ முறையோ முதல்வா வபயம்
கடியே னலனு னபயம் மபயங் கருணா கரனே யபயம் மபயம்
தடியே லருள்வா யபயம் மபயந் தருணா தவனே யபயம் மபயம். 6

மலவா தனைதீர் கலவா வபயம் வலவா திருவம் பலவா வபயம்
உலவா நெறிநீ சொலவா வபயம் உறைவா யுயிர்வா யிறைவா வபயம்
பலவா குலநான் தரியேன் அபயம் பலவா பகவா பனவா அபயம்
நலவா வடியே னலவா அபயம் நடநா யகனே அபயம் அபயம். 7

கோடியேன் பிழைநீ குறியேல் அபயம் கொலைதீர் நெறியேன் குருவே அபயம்
முடியேன் பிறவே னெனநின் னடியே முயல்வேன் செயல்வே றறியேன் அபயம்
படியே யறியும் படியே வருவாய் பதியே கதியே பரமே அபயம்
அடியே னினியோ ரிறையுந் தரியேன் அரசே யருள்வாய் அபயம் அபயம். 8

இடர்தீர் நெறியே யருள்வாய் அபயம் இனிநான் தரியேன் தரியேன் அபயம்
விடர்போ லெனைநீ நினையேல் அபயம் விடுவே னலனு னபயம் அபயம்
உடலோ டுறவே யருளா வியுமிங் குனவே யெனவே யலவே அபயம்
சுடர்மா மணியே அபயம் அபயம் சுகநா டகனே அபயம் அபயம். 9

குற்றம் பலவா யினுநீ குறியேல் குணமே கொளுமென் குருவே அபயம்
பற்றம் பலமே யலதோர் நெறியும் பதியே யறியே னடியேன் அபயம்
சுற்றம் பலவு முனையே யெனவோர் துணைவே றிலைநின் றுணையே அபயம்
சிற்றம் பலவா அருள்வா யினிநான் சிறிதுந் தரியேன் தரியேன் அபயம். 10

அருட்பெருஞ்ஜோதி

## 37. உண்மை கூறல்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

தனிப்பெருந் தலைவரே தாயவ ரேயென்
தந்தைய ரேபெருந் தயவுடை யவரே
பனிப்பறுத் தெனையாண்ட பரம்பர ரேயெம்
பார்வதி புரநாவப் பதிசெயும் பரரே
இனிப்புறு பொழுதெனுந் தாழ்த்திடல் வேண்டாம்
இறையவ ரெயுமை யிங்குகண் டல்லால்
அடுத்திய லுலகினைப் பார்க்கவு மாட்டேன்
அருட்பெருஞ் ஜோதியி னாணைநம் மீதே. 1

பெறுவது நுமையன்றிப் பிறிதொன்றும் விரும்பேன்
பேசலும் பேச்சன்றிப் பிறிதொன்றும் பேசேன்
உறுவதும் நுமதன்றிப் பிறிதொன்று முவவேன்
உன்னலுன் றிறனன்றிப் பிறிதொன்று முன்னேன்
மறுநெறி தீர்த்தெனை வாழ்வித்துக் கொண்டீர்
வள்ளலே நுந்திரு வரவுகண் டல்லால்
அறுசுவை யுண்டிகொண் டருந்தவு மாட்டேன்
அருட்பெருஞ் ஜோதியி னாணைநம் மீதே. 2

கரும்பிடை யிரதமுங் கனியிலின் சுவையுங்
காட்டியென் னுள்ளங் கலந்தினிக் கின்றீர்
விரும்பிநும் பொன்னடிக் காட்பட்டு நின்றேன்
மேல்வினை யறிகிலன் விச்சையொன் றில்லேன்
துரும்பினுஞ் சிறியனை யன்றுவந் தாண்டீர்
தூயநும் பேரருட் ஜோதிகண் டல்லால்
அரும்பெற லுண்டியை விரும்பவு மாட்டேன்
அருட்பெருஞ் ஜோதியி னாணைநம் மீதே. 3

தடுத்தேனை யாட்கொண்ட தந்தைய ரேயெந்
தனிப்பெருந் தலைவரே சபைநடத் தவரே
தொடுத்தொன்று சொல்கிலேன் சொப்பனத் தேனுந்
தூயநுந் திருவரு ணையம்விட் டறியேன்
விடுத்திடி லென்னைநீர் விடுப்பனென் னுயிரை
வெருவுளக் கருத்தெலாந் திருவுளத் தறிவீர்
அடுத்தவப் பாயலிற் படுக்கவு மாட்டேன்
அருட்பெருஞ் ஜோதியி ராணைநும் மீதே. 4

காசையும் பணத்தையுங் கன்னியர் தமையுங்
காணியி னாட்சியுங் கருதிலேன் கண்டீர்
நேசநுந் திருவரு ணேசமொன் றல்லால்
நேசமற் றிலையிது நீரறி யீரோ
ஏசற லகற்றிவந் தென்னைமுன் னாண்டீர்
இறையவ ரேயுமை யின்றுகண் டல்லால்
ஆசையிற் பிறரொடு பேசவு மாட்டேன்
அருட்பெருஞ் ஜோதியி ராணைநும் மீதே. 5

என்பொரு ளென்னுட லென்னுயி ரெல்லாம்
ஈந்தன னும்மிடத் தெம்பெரு மானீர்
இன்பொடு வாங்கிக்கொண் டென்னையாட் கொண்டீர்
என்செய லொன்றிலை யாவுநுஞ் செயலே
வன்பொடு நிற்கிலீ ரென்பொடு கலந்தீர்
வள்ளலே நுந்திரு வரவுகண் டல்லால்
அன்பொடு காண்பாரை முன்பிட மாட்டேன்
அருட்பெருஞ் ஜோதியி ராணைநும் மீதே. 6

திருந்துமென் னுள்ளத் திருக்கோயில் ஞான
சித்தி புரமெனச் சத்தியங் கண்டேன்
இருந்தருள் கின்றநீ ரென்னிரு கண்கள்
இன்புற வன்றுவந் தெழிலுருக் காட்டி
வருந்தலை யென்றெனைத் தேற்றிய வாறே
வள்ளலே யின்றுநும் வரவுகண் டல்லால்
அருந்தவர் நேரினும் பொருந்தவு மாட்டேன்
அருட்பெருஞ் ஜோதியி ராணைநும் மீதே. 7

கரைக்கண மின்றியே கடனிலை செய்தீர்
கருணைக் கடற்குக் கரைக்கணஞ் செய்யீர்
உரைக்கண வாத வுயர்வுடை யீரென்
உரைக்கண விப்பல வுதவிசெய் கின்றீர்

வரைக்கண வெண்குண மாநிதி யானீர்
வாய்மையிற் குறித்தநும் வரவுகண் டல்லால்
அரைக்கண மாயினுந் தரித்திட மாட்டேன்
அருட்பெருஞ் ஜோதியி ராணைநும் மீதே. 8

மடுக்கநும் பேரருட் டண்ணமு தெனக்கே
மாலையுங் காலையு மத்தியா னத்துங்
கடுக்கு மிரவினும் யாமத்தும் விடியற்
காலையி னுந்தந்தென் கடும்பசி தீர்த்தே
எடுக்குநற் றுயொடு மிணைந்துநிற் கின்றீர்
இறையவ ரேயுமை யிங்குகண் டல்லால்
அடுக்கவிழ் கலையெடுத் துடுக்கவு மாட்டேன்
அருட்பெருஞ் ஜோதியி ராணைநும் மீதே. 9

கருத்துரைக் கின்றவர் களித்துரைக் கின்ற
காலையி தென்றே கருத்து ளறிந்தேன்
நிறுத்துரைக் கின்றபன் னோர்மைக ளின்றி
நீடொளிப் பொற்பொது நாடகம் புரிவீர்
செறுத்துரைக் கின்றவர் தேர்வதற் கரியீர்
சிற்சபை யீரெனைச் சேர்ந்திடல் வேண்டும்
அறுத்துரைக் கின்றநான் பொறுத்திட மாட்டேன்
அருட்பெருஞ் ஜோதியி ராணைநும் மீதே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 38. அருள்விளக்கமாலை

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**அருள்விளக்கே** யருட்சுடரே யருட்ஜோதிச் சிவமே
அருளமுதே யருணிறைவே யருள்வடிவப் பொருளே
இருள்கடிந்தென் னுளமுழுது மிடங்கொண்ட பதியே
என்னறிவே யென்னுயிரே யெனக்கினிய வுறவே
மருள்கடிந்த மாமணியே மாற்றறியாப் பொன்னே
மன்றில்நடம் புரிகின்ற மணவாளா வெனக்கே
தெருளளித்த திருவாளா ஞானவுரு வாளா
தெய்வநடத் தரசேநான் செய்மொழியேற் றருளே. 1

கோடையிலே யிளைப்பாற்றிக் கொள்ளும்வகை கிடைத்த
குளிர்தருவே தருநிழலே நிழல்கனிந்த கனியே
ஓடையிலே யூறுகின்ற தீஞ்சுவைத்தண் ணீரே
உகந்ததண்ணீ ரிடைமலர்ந்த சுகந்தமண மலரே

மேடையிலே வீசுகின்ற மெல்லியபூங் காற்றே
மென்காற்றில் விளைசுகமே சுகத்திலுறும் பயனே
ஆடையிலே யெனைமணந்த மணவாளா பொதுவில்
ஆடுகின்ற வரசேயென் னலங்கலணிந் தருளே. 2

இன்புறநா னெய்ப்பிடத்தே பெற்றபெரு வைப்பே
ஏங்கியபோ தென்றன்னைத் தாங்கியநற் றுணையே
அன்புறவென் னுட்கலந்தே யண்ணிக்கு மமுதே
அச்சமெலாந் தவிர்த்தென்னை யாட்கொண்ட குருவே
என்பருவங் குறியாதே யெனைமணந்த பதியே
இச்சையுற்ற படியெல்லா மெனக்கருளுந் துரையே
துன்பறமெய் யன்பருக்கே பொதுநடஞ்செய் யரசே
தூயதிரு வடிகளுக்கென் சொல்லுமணிந் தருளே. 3

ஓசித்தகொடி யனையேற்குக் கிடைத்தபெரும் பற்றே
உண்மயங்கும் போதுமயக் கொழித்தருளுந் தெளிவே
பசித்தபொழு தெதிர்கிடைத்த பாற்சோற்றுத் திரளே
பயந்தபொழு தெல்லாமென் பயந்தவிர்த்த துணையே
நசித்தவரை யெழுப்பியரு ணல்கியமா மருந்தே
நான்புணர நானாகி நண்ணியமெய்ச் சிவமே
கசித்தமனத் தன்பர்தொழப் பொதுநடஞ்செய் யரசே
களித்தெனது சொன்மாலை கழலிலணிந் தருளே. 4

மனமிளைத்து வாடியபோ தென்னெதிரே கிடைத்து
வாட்டமெலாந் தவிர்த்தெனக்கு வாழ்வளித்த நிதியே
சினமுகத்தார் தமைக்கண்டு திகைத்தபொழு தவரைச்
சிரித்தமுகத் தவராக்க வெனக்களித்த சிவமே
அனமுகத்தா னரிமுதலோர் துருவிநிற்க வெனக்கே
அடிமுடிகள் காட்டுவித்தே யடிமைகொண்ட பதியே
இனமெனப்பே ரன்பர்தொழப் பொதுநடஞ்செய் யரசே
என்னுடைய சொன்மாலை யாவுமணிந் தருளே. 5

கங்குலிலே வருந்தியவென் வருத்தமெலாந் தவிர்த்தே
காலையிலே யென்னுளத்தே கிடைத்தபெருங் களிப்பே
செங்குவளை மாலையொடு மல்லிகைப்பூ மாலை
சேர்த்தணிந்தென் றனைமணந்த தெய்வமண வாளா
எங்குமொளி மயமாகி நின்றநிலை காட்டி
என்னகத்தும் புறத்துநிறைந் திலங்கியமெய்ப் பொருளே
துங்கமுறத் திருப்பொதுவிற் றிருநடஞ்செய் யரசே
சொன்மாலை சூட்டுகின்றேன் றோளிலணிந் தருளே. 6

கரைந்துவிடா தென்னுடைய நாவகத்தே யிருந்து
கனத்தசுவை தருகின்ற கற்கண்டே கனிவாய்
விரைந்துவந்தென் றுன்பமெலாந் தவிர்த்தவரு ளமுதே
மெய்யருளே மெய்யாகி விளங்குகின்ற விளக்கே

திரைந்தவுடல் விரைந்துடனே பொன்னுடம்பே யாகித்
திகழ்ந்தழியா தோங்கவருள் சித்தேமெய்ச் சத்தே
வரைந்தென்னை மணம்புரிந்து பொதுநடஞ்செய் யரசே
மகிழ்வொடுநான் புனைந்திடுஞ்சொன் மாலையணிந் தருளே. 7

கதிக்குவழி காட்டுகின்ற கண்ணேயென் கண்ணிற்
கலந்தமணி யேமணியிற் கலந்தகதி ரொளியே
விதிக்குமுல குயிர்க்குயிராய் விளங்குகின்ற சிவமே
மெய்புணர்ந்தோர் கையகத்தே விளங்கியதீங் கனியே
மதிக்குமதிக் கப்புறம்போய் வயங்குதனி நிலையே
மறைமுடியா கமமுடிமேல் வயங்குமின்ப நிறைவே
துதிக்குமன்பர் தொழப்பொதுவில் நடப்புரியு மரசே
சொன்மாலை சூட்டுகின்றேன் தோளிலணிந் தருளே. 8

அண்டவள வெவ்வளவோ வவ்வளவு மவற்றில்
அமைந்தசரா சரவளவெவ் வளவோவவ் வளவும்
கண்டதுவா யாங்கவைகள் தனித்தனியே யகத்துங்
கான்புறத்து மகப்புறத்தும் புறப்புறத்தும் விளங்க
விண்டகுபே ரருட்ஜோதிப் பெருவெளிக்கு நடுவே
விளங்கியொரு பெருங்கருணைக் கொடிநாட்டி யருளாந்
தண்டகுமோர் தனிச்செங்கோல் நடத்திமன்றில் நடிக்குந்
தனியரசே யென்மாலை தாளிலணிந் தருளே. 9

நல்லார்சோல் யோகாந்தப் பதிகள்பல கோடி
நாட்டியதோர் போதாந்தப் பதிகள்பல கோடி
வல்லார்சொல் கலாந்தநிலைப் பதிகள்பல கோடி
வழுத்துமொரு நாதாந்தப் பதிகள்பல கோடி
இல்லார்ந்த வேதாந்தப் பதிகள்பல கோடி
இலங்குகின்ற சித்தாந்தப் பதிகள்பல கோடி
எல்லாம்பே ரருட்ஜோதித் தனிச்செங்கோல் நடத்தும்
என்னரசே யென்மாலை யினிது புனைந் தருளே. 10

நாட்டியதோர் சுத்தபரா சத்தியண்ட முதலா
ஞானசத்தி யண்டமது கடையாக விவற்றுள்
ஈட்டியபற் பலசத்தி சத்தாண்டப் பகுதி
எத்தனையோ கோடிகளுந் தன்னிழற்கீழ் விளங்கச்
சூட்டியபொன் முடியிலங்கச் சமரசமெய்ஞ் ஞானச்
சுத்தசிவ சன்மார்க்கப் பெருநிலையி லமர்ந்தே
நீட்டியபே ரருட்ஜோதித் தனிச்செங்கோல் நடத்தும்
நீதிநடத் தரசேயென் னெடுஞ்சொலணிந் தருளே. 11

தன்பெருமை தானறியாத் தன்மையனே யெனது
தனித்தலைவா வென்னுயிர்க்கு ளினித்ததனிச் சுவையே
நின்பெருமை நானறியே னென்மட்டோ வறியேன்
நெடுமால்நான் முகன்முதலா மூர்த்திகளு மறியார்
அன்புறுமா கமமறைக ளறியாவே யெனினும்
அவருமவை களுஞ்சிலசொல் லணிகின்றார் நினக்கே
என்பருவங் குறியாதே யெனையாண்ட வரசே
யானுமவர் போலணிகின் றேனணிந்திங் கருளே. 12

உண்ணவுண்ணத் தெவிட்டாதே தித்திக்கின் றுடம்போ
டுயிருணர்வுங் கலந்துகலந் துள்ளகத்தும் புறத்துந்
தண்ணியவண் ணம்பரவப் பொங்கிநிறைந் தாங்கே
ததும்பியென்றன் மயமெல்லாந் தன்மயமே யாக்கி
எண்ணியவென் னெண்ணமெலா மெய்தவொளி வழங்கி
இலங்குகின்ற பேரருளா மின்னமுதத் திரளே
புண்ணியமே யென்பெரிய பொருளேயென் னரசே
புன்மொழியென் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே. 13

நாட்டார்கள் சூழ்ந்துமதிக் கிடமணிமே டையிலே
நடுவிருக்க வென்றனையே நாட்டியபே ரிறைவா
பாட்டாளர் பாடுதொறும் பரிசளிக்குந் துரையே
பன்னுமறைப் பாட்டேயெப் பாட்டினது பயனே
கூட்டாளா சிவகாமக் கொடிக்கிசைந்த கொழுநா
கோவேயென் கணவாவென் குருவாவென் றுணவா
நீட்டாளர் புகழ்ந்தேத்த மணிமன்றில் நடிக்குந்
நீதிநடத் தரசேயென் னெடுமொழிகொண் டருளே. 14

கைக்கிசைந்த பொருளேயென் கருத்திசைந்த கனியே
கண்ணேயென் கண்களுக்கே கலந்திசைந்த கணவா
மெய்க்கிசைந்த வணியேபொன் மேடையிலென் னுடனே
மெய்கலந்த தருணத்தே விளைந்தபெருஞ் சுகமே
நெய்க்கிசைந்த வுணவேயென் னெறிக்கிசைந்த நிலையே
நித்தியமே யெல்லாமாஞ் சத்தியமே புவியில்
பொய்க்கிசைந்தார் காணாதே பொதுநடஞ்செய் யரசே
புன்மொழியென் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே. 15

கொடுத்திடநா னெடுத்திடவுங் குறையாத நிதியே
கொல்லாத நெறிபேசித் தெல்லாஞ்செய் பதியே
மடுத்திடவு மடுத்தடுத்தே மடுப்பதற்குள் ளாசை
வைப்பதன்றி வெறுப்பறியா வண்ணநிறை யமுதே
எடுத்தெடுத்துப் புகன்றாலு முலவாத வொளியே
என்னுயிரே யென்னுயிருக் கிசைந்தபெருந் துணையே
தடுத்திடவல் லவரில்லாத் தனிமுதற்பே ரரசே
தாழ்மொழியென் றிகழாதே தரித்துமகிழ்ந் தருளே. 16

தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன் றாக் கூட்டிச்
சர்க்கரையுங் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்தநறுந் தேன்பெய்து பசும்பாலுந் தேங்கின்
தனிப்பாலுஞ் சேர்த்தொருதீம் பருப்பிடியும் விரவி
இனித்தநறு நெய்யளைந்தே யிளஞ்சூட்டி னிறக்கி
எடுத்த சுவைக் கட்டியினு மினித்திடுந் தெள்ளமுதே
அனித்தமறத் திருப்பொதுவில் விளங்குநடத் தரசே
அடிமலர்க்கென் சொல்லணியா மலங்கலணிந் தருளே. 17

மலைவறியாப் பெருஞ்ஜோதி வச்சிரமா மலையே
மாணிக்க மணிப்பொருப்பே மரகதப்பேர் வரையே
விலையறியா வுயராணிப் பெருமுத்துத் திரளே
விண்ணவரு நண்ணருமோர் மெய்ப்பொருளின் விளைவே
கொலையறியாக் குணத்தோர்தங் கூட்டுறவே யருட்செங்
கோல்நடத்து கின்றதனிக் கோவேமெய் யறிவால்
நிலையறிந்தோர் போற்றுமணி மன்றில்நடத் தரசே
நின்னடிப்பொன் மலர்களுக்கென் னெடுஞ்சொலணிந் தருளே. 18

கண்களிக்கப் புகைசிறிதுங் காட்டாதே புருவக்
கலைநடுவே விளங்குகின்ற கற்பூர விளக்கே
பண்களிக்கப் பாடுகின்ற பாட்டில்விளை சுகமே
பத்தருளே தித்திக்கப் பழுத்ததனிப் பழமே
மண்களிக்க வான்களிக்க மணந்தசிவ காம
வல்லியெனு மறைகளெலாம் வாழ்த்துகின்ற வாமப்
பெண்களிக்கப் பொதுநடஞ்செய் நடத்தரசே நினது
பெரும்புகழ்சே வடிகளுக்கென் னரும்புமணிந் தருளே. 19

உருவெளியே யுருவெளிக்குள் ளுற்றவெளி யுருவே
உருநடுவும் வெளிநடுவு மொன்றுன வொன்றே
பெருவெளியே பெருவெளியில் பெருஞ்ஜோதி மயமே
பெருஞ்ஜோதி மயநடுவே பிறங்குதனிப் பொருளே
மருவொழியா மலரகத்தே வயங்குமொளி மணியே
மந்திரமே தந்திரமே மதிப்பரிய மருந்தே
திருவொழியா தோங்குமணி மன்றினடத் தரசே
சிறுமொழியென் றிகழாதே சேர்த்துமகிழ்ந் தருளே. 20

நானென்றுந் தானென்றும் நாடாத நிலையில்
ஞானவடி வாய்விளங்கும் வானநடு நிலையே
ஊனென்று முயிரென்றுங் குறியாமே முழுதும்
ஒருவடிவாந் திருவடிவ முவந்தளித்த பதியே
தேனென்றுங் கரும்பென்றுஞ் செப்பரிதாய் மனமுந்
தேகமுமுள் ளுயிருணர்வுந் தித்திக்குஞ் சுவையே
வானென்று மொளியென்றும் வகுப்பரிதாம் பொதுவில்
வயங்குநடத் தரசேயென் மாலையுமேற் றருளே. 21

எட்டிரண்டு மென்னென்றால் மயங்கியவென் றனக்கே
எட்டாத நிலையெல்லா மெட்டுவித்த குருவே
சுட்டிரண்டுங் காட்டாதே துரியநிலை நடுவே
சுகமயமாய் விளங்குகின்ற சுத்தபரம் பொருளே
மட்டிதுவென் றறிவதற்கு மாட்டாதே மறைகள்
மவுனமுறப் பரம்பரத்தே வயங்குகின்ற வொளியே
தட்டறியாத் திருப்பொதுவில் தனிநடஞ்செய் யரசே
தாழ்மொழியென் றிகழாதே தரித்துமகிழ்ந் தருளே. 22

சாதிகுலஞ் சமயமெலாந் தவிர்த்தெனைமே லேற்றித்
தனித்ததிரு வமுதளித்த தனித்தலைமைப் பொருளே
ஆதிநடுக் கடைகாட்டா தண்டபகி ரண்டம்
ஆருயிர்க ளகம்புறமற் றனைத்துநிறை யொளியே
ஓதியுணர்ந் தவரெல்லா மெனைக்கேட்க வெனைத்தான்
ஓதாம லுணர்ந்துணர்வா முருவுறச்செய் துறவே
சோதிமய மாய்விளங்கித் தனிப்பொதுவில் நடிக்குந்
தூயநடத் தரசேயென் சொல்லுமணிந் தருளே. 23

அடிக்கடியென் னகத்தினிலும் புறத்தினிலுந் தோன்றி
அருளுருவாய்த் திரிந்துதிரிந் தருள்கின்ற பொருளே
படிக்களவின் மறைமுடிமே லாகமத்தின் முடிமேல்
பதித்தபத மென்முடிமேற் பதித்தருளும் பதியே
பொடிக்கனகத் திருமேனித் திருமணங்கற் பூரப்
பொடிமணத்தோ டகம்புறமும் புதுமணஞ்செய் யமுதே
அடிக்கனக வம்பலத்தே திருச்சிற்றம் பலத்தே
ஆடல்புரி யரசேயென் னலங்கலணிந் தருளே. 24

அறையாத மிகுபெருங்காற் றடித்தாலுந் திரியாம்
அசையாதே யவியாதே யண்டபகி ரண்டத்
துறையாவும் பிண்டவகைத் துறைமுழுதும் விளங்கத்
தூண்டாதே விளங்குகின்ற ஜோதிமணி விளக்கே
மறையாதே குறையாதே களங்கமுமில் லாதே
மயக்காதே பனிக்காதே வயங்குகின்ற மதியே
இறையாவெவ் வுயிரகத்து மகப்புறத்தும் புறத்தும்
இலங்குநடத் தரசேயென் னிசையுமணிந் தருளே. 25

பார்த்தாலும் நினைத்தாலும் படித்தாலும் படிக்கப்
பக்கநின்று கேட்டாலும் பரிந்துணர்ந் தாலும்
ஈர்த்தாலும் பிடித்தாலுங் கட்டியணைத் தாலும்
இத்தனைக்குந் தித்திக்கும் இனித்தசுவைக் கரும்பே
வேர்த்தாவி மயங்காது கனிந்தநறுங் கனியே
மெய்ம்மையறி வானந்தம் விளக்குமரு ளமுதே
தீர்த்தாவென் றன்பரெலாந் தொழப்பொதுவில் நடிக்குந்
தெய்வநடத் தரசேயென் சிறுமொழியேற் றருளே. 26

பற்றுதலும் விடுதலுமுள் ளடங்குதலு மீட்டும்
படுதலொடு சுடுதலும்புண் படுத்தலுமில் லாதே
உற்றொளிகொண் டோங்கியெங்குந் தன்மயமாய் ஞான
உருவாகி யுயிர்க்குயிரா யோங்குகின்ற நெருப்பே
சுற்றுதலுந் தோன்றுதலு மறைதலும்வெச் சென்றே
சுடுதலுமில் லாதென்றுந் துலங்குகின்ற சுடரே
முற்றுமுணர்ந் தவருளத்தே திருச்சிற்றம் பலத்தே
முயங்குநடத் தரசேயென் மொழியுமணிந் தருளே. 27

ஐம்பூத பரங்கண்முத லொன்றுமவற் றுள்ளே
அடுத்திடுநன் றொன்றுமவை யகம்புறமேல் நடுக்கீழ்
கம்பூத பக்கமுத லெல்லாந்தன் மயமாய்க்
காணுமவற் றப்புறமுங் கலந்ததனிக் கனலே
செம்பூத வுலகங்கள் பூதாண்ட வகைகள்
செழித்திடநற் கதிர்பரப்பித் திகழ்கின்ற சுடரே
வெம்பூதத் தடைதவிர்ந்தா ரேத்தமணி மன்றில்
விளங்குநடந் தரசேயென் விளம்புமணிந் தருளே. 28

வாதுறுமிந் தியகரண பரங்கண்முத லொன்றும்
வகுத்திடுநன் றொன்றுமகம் புறமேல்கீழ் நடுப்பால்
ஓதுறுமற் றெல்லாந்தன் மயமாகக் கலந்தே
ஓங்கவற்றி னப்புறமு மொளிர்கின்ற வொளியே
கூதுறுமிந் தியகரண லோகாண்ட மனைத்துஞ்
சுடர்பரப்பி விளங்குகின்ற சுயஞ்ஜோதிச் சுடரே
போதுறுவார் பலர்நின்று போற்றநடம் பொதுவில்
புரியுநடத் தரசேயென் புகலுமணிந் தருளே. 29

பகுதிபர முதலொன்று மவற்றுறுநன் றொன்றும்
பரவியெலாந் தன்மயமாம் படிநிறைந்து விளங்கித்
தகுதிபெறு மப்பகுதிக் கப்புறமுஞ் சென்றே
தனியொளிச்செங் கோல்நடத்தித் தழைக்கின்ற வொளியே
மிகுதிபெறு பகுதியுல கம்பகுதி யண்டம்
விளங்கவருட் சுடர்பரப்பி விளங்குகின்ற சுடரே
தொகுதிபெறு கடவுளர்க ளேத்தமன்றில் நடிக்குந்
துரியநடத் தரசேயென் சொல்லுமணிந் தருளே. 30

மாமாயைப் பரமாதி நான்குமவற் றுள்ளே
வயங்கியநன் றொன்றுந்தன் மயத்தாலே விளக்கி
ஆமாறம் மாமாயைக் கப்புறத்து நிறைந்தே
அறிவொன்றே வடிவாகி விளங்குகின்ற வொளியே
தாமாயா புவனங்கள் மாமாயை யண்டந்
தழைத்துவிளங் கிடக்கதிர்செய் தனித்தபெருஞ் சுடரே
தேமாலும் பிரமனுநின் றேத்தமன்றில் நடிக்குந்
தெய்வநடத் தரசேயென் சிறுமொழியேற் றருளே. 31

சுத்தபர முதல்நான்கு மவற்றுள்நன் னான்குந்
தூயவொளி வடிவாகத் துலங்குமொளி யளித்தே
நித்தபரம் பரநடுவாய் முதலாயந் தமதாய்
நீடியவோர் பெருநிலைமே லாடியமே பொருளே
வித்தமுறுஞ் சுத்தபர லோகாண்ட மனைத்தும்
விளக்கமுறச் சுடர்பரப்பி விளங்குகின்ற சுடரே
சத்தியஞா னானந்தச் சித்தர்புகழ் பொதுவில்
தனித்தநடத் தரசேஎன் சாற்றுமணிந் தருளே. 32

சாற்றுகின்ற கலையைந்திற் பரமாதி நான்குந்
தக்கவற்றா லிருந்தநன் னான்கு நிறைந்தே
ஊற்றுகின்ற வகம்புறமேல் நடுக்கீழ்மற் றனைத்தும்
உற்றிடுந்தன் மயமாகி யொளிர்கின்ற வொளியே
தோற்றுகின்ற கலையுலகங் கலையண்ட முழுதுந்
துலங்குகின்ற சுடர்பரப்பிச் சூழ்கின்ற சுடரே
போற்றுகின்ற மெய்யடியர் களிப்பநடித் தருளும்
பொதுவினடத் தரசேஎன் புகலுமணிந் தருளே. 33

நாட்டியவோங் காரமைந்திற் பரமுதலோர் நான்கும்
நன்னான்கு மாறிடத்தும் நயந்துநிறைந் தருளி
ஈட்டியசெம் பொருணிலையோ டிலக்கியமும் விளங்க
இனிதுநின்று விளங்குகின்ற வின்பமய வொளியே
கூட்டியவோங் காரவுல கோங்கார வண்டங்
குடிவிளங்கக் கதிர்பரப்பிக் குலவுகின்ற சுடரே
பாட்டியல்கொண் டன்பரெலாம் போற்றமன்றி னடிக்கும்
பரமநடத் தரசேஎன் பாட்டுமணிந் தருளே. 34

மன்னுகின்ற வபரசத்திப் பரமாதி யவற்றுள்
வகுத்தநிலை யாதியெலாம் வயங்கவொளி யெல்லாம்
பன்னுகின்ற பற்பலவாம் விசித்திரசித் திரங்கள்
பரவிவிளங் கிடவிளக்கிப் பதிந்திருந்த வொளியே
துன்னபர சத்தியுல கபரசத்தி யண்டஞ்
சுகம்பெறவே கதிர்பரப்பித் துலங்குகின்ற சுடரே
உன்னுமன்ப ருளங்களிக்கத் திருச்சிற்றம் பலத்தே
ஓங்குநடத் தரசேஎன் னுரையுமணிந் தருளே. 35

விளங்குபர சத்திகளின் பரமாதியவற்றின்
விரித்தநிலை யாதியெலாம் விளங்கவொளி வழங்கிக்
களங்கமிலாப் பரவெளியி லந்தமுதல் கடந்தான்
காட்டாதே நிறைந்தெங்குங் கலந்திடும்பே ரொளியே
உளங்குலவு பரசத்தி யுலகமண்ட முழுதும்
ஒளிவிளங்கச் சுடர்பரப்பி யோங்குதனிச் சுடரே
வளங்குலவு திருப்பொதுவில் மாநடஞ்செய் யரசே
மகிழ்ந்தெனது சொல்லெனுமோர் மாலையணிந் தருளே. 36

தேர்ந்தமகா சுத்தபர முதலுமவற் றுள்ளோ
சிறந்தநிலை யாதிகளுந் தெளிந்துவிளங் குறவே
பரிந்தவொரு சிவவெளியி னீக்கமற நிறைந்தே
பரமசுக மயமாகிப் பரவியபே ரொளியே
விரிந்தமகா சுத்தபர லோகாண்ட முழுதும்
மெய்யறிவா னந்தநிலை விளக்குகின்ற சுடரே
புரிந்ததவப் பயனாகும் பொதுவினடத் தரசே
புன்மொழியென் றிகழாதே புனைந்துமகிழ்ந் தருளே. 37

வாய்ந்தபர நாதமைந்திற் பரமுதலு மவற்றுள்
மன்னுநிலை யாதிகளும் வயங்கியிட நிறைந்தே
ஆய்ந்தபர சிவவெளியில் வெளியுருவா யெல்லாம்
ஆகியதன் னியல்விளக்கி யலர்ந்திடும்பே ரொளியே
தோய்ந்தபர நாதவுல கண்டமெலாம் விளங்கச்
சுடர்பரப்பி விளங்குகின்ற தூயதனிச் சுடரே
வேய்ந்தமணி மன்றிடத்தே நடம்புரியு மரசே
விளம்புறுமென் சொன்மாலை விளங்கவணிந் தருளே. 38

கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுங் களிப்பே
காணார்க்குங் கண்டவர்க்குங் கண்ணளிக்குங் கண்ணே
வல்லார்க்கு மாட்டார்க்கும் வரமளிக்கும் வரமே
மதியார்க்கும் மதிப்பவர்க்கும் மதிகொடுக்கு மதியே
நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநின்ற நடுவே
நரர்களுக்குஞ் சுரர்களுக்கும் நலங்கொடுக்கு நலமே
எல்லார்க்கும் பொதுவில்நட மிடுகின்ற சிவமே
என்னரசே யான்புகலு மிசையுமணிந் தருளே. 39

காட்சியுறக் கண்களுக்குக் களிக்கும்வண்ண முளதாய்க்
கையுமெய்யும் பரிசிக்கச் சுகபரிசத் ததுவாய்ச்
சூழ்ச்சியுற நாசிக்குச் சுகந்தஞ்செய் குவதாய்த்
தூயசெவிக் கினியவொரு சுகநாதத் ததுவாய்
மாட்சியுற வாய்க்கினிய பெருஞ்சுவை யீகுவதாய்
மறைமுடிமேல் பழுத்தெனக்கு வாய்த்தபெரும் பழமே
ஆட்சியுற வருளொளியாற் றிருச்சிற்றம் பலத்தே
ஆடல்புரி யரசேயென் னலங்கலணிந் தருளே. 40

திரையிலதா யழிவிலதாய்த் தோலிலதாய்ச் சிறிதுஞ்
சினைப்பிலதாய்ப் பனிப்பிலதாய்ச் செறிந்திடுகோ திலதாய்
விரையிலதாய்ப் புரையிலதாய் நாரிலதாய் மெய்யே
மெய்யாகி யருள்வண்ணம் விளங்கியின்ப மயமாய்ப்
பரைவெளிக்கப் பால்விளங்கு தனிவெளியிற் பழுத்தே
படைத்தவென துளத்தினிக்கக் கிடைத்ததனிப் பழமே
உரைவளர்மா மறைகளெலாம் போற்றமணிப் பொதுவில்
ஓங்குநடத் தரசேயென் னுரையுமணிந் தருளே. 41

கார்ப்பிலதாய்த் துவர்ப்பிலதா யுவர்ப்பிலதாய்ச் சிறிதுங்
கசப்பிலதாய்ப் புளிப்பிலதாய்க் காய்ப்பிலதாய்ப் பிறவில்
சேர்ப்பிலதா யெஞ்ஞான்றுந் திரிப்பிலதா யுயிர்க்கே
தினைத்தனையு நோய்தருமத் தீமையொன்று மிலதாய்ப்
பார்ப்பனையே யுள்ளகத்தே விளங்கியறி வின்பம்
படைத்திடமெய்த் தவப்பயனால் கிடைத்ததனிப் பழமே
ஓர்ப்புடையார் போற்றமணி மன்றிடத்தே வெளியாய்
ஓங்கியபே ரரசேயென் னுரையுமணிந் தருளே. 42

தெற்றியிலே நான்பசித்துப் படுத்திளைத்த தருணந்
திருவமுதோர் திருக்கரத்தே திகழ்வள்ளத் தெடுத்தே
ஒற்றியிற்போய்ப் பசித்தனையோ வென்றெனையங் கெழுப்பி
உவந்துகொடுத் தருளியவென் னுயிர்க்கினிதாந் தாயே
பற்றியவென் பற்றனைத்துந் தன்னடிப்பற் றாகப்
பரிந்தருளி யெனையீன்ற பண்புடையெந் தாயே
பெற்றியுளார் சுற்றிநின்று போற்றமணிப் பொதுவில்
பெருநடஞ்செய் யரசேயென் பிதற்றுமுவந் தருளே. 43

தாய்முதலோ ரொடுசிறு பருவத்திற் றில்லைத்
தலத்திடையே திரைதூக்கத் தரிசித்த போது
வேய்வகைமேற் காட்டாதே யென்றனக்கே யெல்லாம்
வெளியாகக் காட்டியவென் மெய்யுறவாம் பொருளே
காய்வகையில் லாதுளத்தே கனிந்தநறுங் கனியே
கனவிடத்தும் நனவிடத்து மெனைப்பிரியாக் களிப்பே
தூய்வகையோர் போற்றமணி மன்றினடம் புரியுஞ்
ஜோதிநடத் தரசேயென் சொல்லுமணிந் தருளே. 44

ஓங்கியவோர் துணையின்றிப் பாதியிர வதிலே
உயர்ந்தவொட்டுத் திண்ணையிலே படுத்தகடைச் சிறியேன்
தூங்கிமிகப் புரண்டுவிழத் தரையில்விழா தெனையே
தூக்கியெடுத் தணைத்துக்கீழ்க் கிடத்தியமெய்த் துணையே
தாங்கியவென் னுயிர்க்கின்பந் தந்தபெருந் தகையே
சற்குருவே நான்செய்பெருந் தவப்பயனாம் பொருளே
ஏங்கியவென் னேக்கமெலாந் தவிர்த்தருளிப் பொதுவில்
இலங்குநடத் தரசேயென் னிசையுமணிந் தருளே. 45

தனிச்சிறியேன் சிறிதிங்கே வருந்தியபோ ததனைத்
தன்வருத்த மெனக்கொண்டு தரியாதக் கணத்தே
பனிப்புறுமவ் வருத்தமெலாந் தவிர்த்தருளி மகனே
பயமுனக்கென் னென்றென்னைப் பரிந்தணைத்த குருவே
இனிப்புறுநன் மொழிபுகன்றென் முடிமிசையே மலர்க்கால்
இணையமர்த்தி யெனையாண்ட வென்னுயிர்நற் றுணையே
கனித்தநறுங் கனியேயென் கண்ணேசிற் சபையில்
கலந்தநடத் தரசேயென் கருத்துமணிந் தருளே. 46

ஒருமடந்தை வலிந்தணைந்து கலந்தகன்ற பின்னர்
உளம்வருந்தி யென்செய்தோ மென்றயர்ந்த போது
பெருமடஞ்சேர் பிள்ளாயென் கெட்டதொன்று மிலைநம்
பெருஞ்செயலென் றெனைத்தேற்றிப் பிடித்தபெருந் தகையே
திருமடந்தை மாரிருவ ரென்னெதிரே நடிக்கச்
செய்தருளிச் சிறுமையெலாந் தீர்த்ததனிச் சிவமே
கருமடந்தீர்ந் தவரெல்லாம் போற்றமணி மன்றிற்
காட்டுநடத் தரசேயென் பாட்டுமணிந் தருளே. 47

இருளிரவி லொருமூலைத் திண்ணையில்நான் பசித்தே
இளைப்புடனே படுத்திருக்க வெனைத்தேடி வந்தே
பொருளுணவு கொடுத்துண்ணச் செய்வித்தே பசியைப்
போக்கியருள் புரிந்தவென்றன் புண்ணியநற் றுணையே
மருளிரவு நீக்கியெல்லா வாழ்வுமெனக் கருளி
மணிமேடை நடுவிருக்க வைத்தவொரு மணியே
அருளுணவு மளித்தென்னை யாட்கொண்ட சிவமே
அம்பலத்தென் னரசேயென் னலங்கலணிந் தருளே. 48

நான்பசித்த போதெல்லாந் தான்பசித்த தாகி
நல்லுணவு கொடுத்தென்னைச் செல்வமுற வளர்த்தே
ஊன்பசித்த விளைப்பொன்றுந் தோற்றாத வகையே
ஒள்ளியதெள் ளமுதெனக்கிங் குவந்தளித்த வொளியே
வான்பதிக்கு நெடுமாற்கு நான்முகற்கு மரிதாம்
வாழ்வெனக்கே யாகியுற வரமளித்த பதியே
தேன்பரித்த மலர்மணமே திருப்பொதுவில் ஞானத்
திருநடஞ்செய் யரசேயென் சிறுமொழியேற் றருளே. 49

நடைக்குரிய வுலகிடையோர் நல்லநண்ப னாகி
நான்குறித்த பொருள்களெலாம் நாழிகைபோன் றதிலே
கிடைக்கவெனக் களித்தகத்தும் புறத்துமகப் புறத்தும்
கிளர்ந்தொளிகொண் டோங்கியமெய்க் கிளையெனும்பே ரொளியே
படைப்புமுத லைந்தொழிலுங் கொள்கவெனக் குறித்தே
பயந்தீர்த்தென் னுள்ளகத்தே யமர்ந்ததனிப் பதியே
கடைப்படுமென் கரத்திலொரு கங்கணமுந் தரித்த
கனநடத் தரசேயென் கருத்துமணிந் தருளே. 50

நீநினைத்த நன்மையெலாம் யாமறிந்தோம் நினையே
நேர்காண வந்தனமென் றென்முடிமேல் மலர்க்கால்
தானிலக்க வைத்தருளிப் படுத்திடநான் நெருக்கித்
தாள்களெடுத் தப்புறத்தே வைத்திடத்தா னகைத்தே
ஏனினைத்தா யிவ்வளவு சுதந்தரமென் மகனே
எனக்கிலையோ வென்றருளி யெனையாண்ட குருவே
தேனிலைத்த தீம்பாகே சர்க்கரையே கனியே
தெய்வநடத் தரசேயென் சிறுமொழியேற் றருளே. 51

மூர்த்திகளு நெடுங்கால முயன்றாலு மறிய
முடியாத முடிவெல்லா முன்னியவோர் தினத்தே
ஆர்த்தியுட னறியவெனக் களித்தருளி யடியேன்
அகத்தினைத்தன் னிடமாக்கி யமர்ந்தவருட் குருவே
பார்த்திபரும் விண்ணவரும் பணிந்துமகிழ்ந் தேத்தப்
பரநாத நாட்டரசு பாலித்த பதியே
ஏர்த்திகழுந் திருப்பொதுவி லின்பநடத் தரசே
என்னுடைய சொன்மாலை யிலங்கவணிந் தருளே. 52

இச்சையொன்று மில்லாதே யிருந்தவெனக் கிங்கே
இயலுறுசன் மார்க்கநிலைக் கிச்சையையுண் டாக்கித்
தச்சுறவே பிறமுயற்சி செயுந்தோறு மவற்றைத்
தடையாக்கி யுலகறியத் தடைதீர்த்த குருவே
எச்சமய முடிபுகளுந் திருச்சிற்றம் பலத்தே
இருந்தவென வெனக்கருளி யிசைவித்த விறையே
முச்சகமும் புகழுமணி மன்றிடத்தே நடிக்கும்
முதலரசே யென்னுடைய மொழியுமணிந் தருளே. 53

கையாத தீங்கனியே கசக்காத வமுதே
கரையாத கற்கண்டே [1]புரையாத கரும்பே
பொய்யாத பெருவாழ்வே புகையாத கனலே
போகாத புனலேயுள் வேகாத காலே
கொய்யாத நறுமலரே கோவாத மணியே
குளியாத பெருமுத்தே யொளியாத வெளியே
செய்யாத பேருதவி செய்தபெருந் தகையே
தெய்வநடத் தரசேயென் சிறுமொழியேற் றருளே. 54

எண்ணாத மந்திரமே யெழுதாத மறையே
ஏறாத மேனிலைநின் றிறங்காத நிறைவே
பண்ணாத பூசையிலே படியாத படிப்பே
பாராத பார்வையிலே பதியாத பதிப்பே
நண்ணாத மனத்தகத்தே நண்ணாத நலமே
நாடாத நாட்டகத்தே நடவாத நடப்பே
அண்ணாவென் னப்பாவென் னையாவென் னரசே
அடியிணைக்கென் சொன்மாலை யணிந்துமகிழ்ந் தருளே. 55

சாகாத கல்வியிலே தலையான நிலையே
சலியாத காற்றிடைநின் றெரியாத கனலே
ஏகாத புனலிடத்தே யிடியாத புவியே
ஏசாத மந்திரத்தே பேசாத பொருளே
கூகாவென் றெனைக்கூடி யெடுக்காதே யென்றுங்
குலையாத வடிவெனக்கே கொடுத்ததனி யமுதே
மாகாத வுடையார்கள் வழுத்துமணிப் பொதுவில்
மாநடஞ்செய் யரசேயென் மாலையுமேற் றருளே. 56

1 புரையாத என்பது—ஒப்பில்லாத.

சுத்தநிலை யனுபவங்கள் தோன்றுவெளி யாகித்
தோற்றும்வெளி யாகியவை தோற்றுவிக்கும் வெளியாய்
நித்தநிலை களினடுவே நிறைந்தவெளி யாகி
நீயாகி நானாகி நின்றதனிப் பொருளை
சத்தியமே சத்துவமே தத்துவமே தவமே
சமரசசன் மார்க்கநிலைத் தலைநின்ற சிவமே
புத்தமுதே சித்தியெலாம் வல்லதிருப் பொதுவில்
புனிதநடத் தரசேயென் புகலுமணிந் தருளே. 57

நானளக்குந் தோறுமதற் குற்றதுபோற் காட்டி
நாட்டியபின் னொருசிறிது மளவிலுரு தாகித்
தானளக்கு மளவதிலே முடிவதெனத் தோற்றித்
தன்னளவுங் கடந்தப்பால் மன்னுகின்ற பொருளை
வானளக்க முடியாதே வானனந்தங் கோடி
வைத்தபெரு வானளக்க வசமோவென் றுரைத்துத்
தேனளக்கு மறைகளெலாம் போற்றமணி மன்றில்
திகழ்நடத் தரசேயென் சிறுமொழியேற் றருளே. 58

திசையறிய மாட்டாதே திகைத்தசிறி யேனைத்
தெளிவித்து மணிமாடத் திருத்தவிசி லேற்றி
நசையறியா நற்றவரு மற்றவருஞ் சூழ்ந்து
நயப்பவருட் சிவநிலையை நாட்டவைத்த பதியே
வசையறியாப் பெருவாழ்வே மயலறியா வறிவே
வானடுவே யின்பவடி வாயிருந்த பொருளே
பசையறியா மனத்தவர்க்கும் பசையறிவித் தருளப்
பரிந்தநடத் தரசேயென் பாட்டுமணிந் தருளே. 59

என்னுயிரு மென்னுடலு மென்பொருளும் யானே
இசைந்துகொடுத் திடவாங்கி யிட்டதன்பின் மகிழ்ந்தே
தன்னுயிருந் தன்னுடலுந் தன்பொருளு மெனக்கே
தந்துகலந் தெனைப்புணர்ந்த தனித்தபெருஞ் சுடரே
மன்னுயிருக் குயிராகி யின்பமுமாய் நிறைந்த
மணியேயென் கண்ணேயென் வாழ்முதலே மருந்தே
மின்னியபொன் மணிமன்றில் விளங்குநடத் தரசே
மெய்யுமணிந் தருள்வாயென் பொய்யுமணிந் தருளே. 60

மன்னுகின்ற பொன்வடிவு மந்திரமாம் வடிவும்
வான்வடிவுங் கொடுத்தெனக்கு மணிமுடியுஞ் சூட்டிப்
பன்னுகின்ற தொழிலைந்துஞ் செய்திடவே பணித்துப்
பண்புறவென் னகம்புறமும் விளங்குகின்ற பதியே
உன்னுகின்ற தோறுமெனக் குள்ளமெலா மினித்தே
ஊறுகின்ற தெள்ளமுதே பொருதனிப்பே ரொளியே
மின்னுகின்ற மணிமன்றில் விளங்குநடத் தரசே
மெய்யுமணிந் தருள்வாயென் பொய்யுமணிந் தருளே. 61

நன்மையெலாந் தீமையெனக் குரைத்தோடித் திரியும்
நாய்க்குலத்திற் கடையான நாயடியே னியற்றும்
புன்மையெலாம் பெருமையெனப் பொறுத்தருளிப் புலையேன்
பொய்யுரைமெய் யுரையாகப் புரிந்துமகிழ்ந் தருளித்
தன்மையெலா முடையபெருந் தவிசேற்றி முடியுந்
தரித்தருளி யைந்தொழில்செய் சதுரளித்த பதியே
இன்மையெலாந் தவிர்ந்தடியா ரின்பமுறப் பொதுவில்
இலங்குநடத் தரசேயென் னிசையுமணிந் தருளே. 62

விழுக்குலத்தா ரருவருக்கும் புழுக்குலத்திற் கடையேன்
மெய்ப்புரையேன் பொய்ப்புரையை வியந்துமகிழ்ந் தருளி
முழுக்குலத்தோர் முடிசூட்டி யைந்தொழில்செய் யெனவே
மொழிந்தருளி யெனையாண்ட முதற்றனிப்பே ரொளியே
எழுக்குலத்தில் புரிந்தமனக் கழுக்குலத்தார் தமக்கே
எட்டாத நிலையேநா னெட்டியபொன் மலையே
மழுக்குலத்தார் போற்றமணி மன்றினடம் புரியும்
மாநடத்தென் னரசேயென் மாலையணிந் தருளே. 63

கலைக்கொடிகண் டறியாத புலைக்குடியிற் கடையேன்
கைதவனென் பொய்த்தவமுங் கருத்திலுவந் தருளி
மலைக்குயர்மா தவிசேற்றி மணிமுடியுஞ் சூட்டி
மகனேநீ வாழ்கவென வாழ்த்தியவென் குருவே
புலைக்கொடியா ரொருசிறிதும் புலப்படக்கண் டறியாப்
பொன்னேநா னுன்னுகின்ற புத்தமுதத் திரளே
விலைக்கறியா மாமணியே வெறுப்பறியா மருந்தே
விளங்குநடத் தரசேயென் விளம்புமணிந் தருளே. 64

மதமென்றுஞ் சமயமென்றுஞ் சாத்திரங்க ளென்றும்
மன்னுகின்ற தேவரென்றும் மற்றவர்கள் வாழும்
பதமென்றும் பதமடைந்த பத்தரனு பவிக்கப்
பட்டவனு பவங்களென்றும் பற்பலவா விரிந்த
விதமொன்றுந் தெரியாதே மயங்கியவென் றனக்கே
வெட்டவெளி யாயறிவித் திட்டவரு ளிறையே
சதமொன்றுஞ் சுத்தசிவ சன்மார்க்கப் பொதுவில்
தனிநடஞ்செய் யரசேயென் சாற்றுமணிந் தருளே. 65

என்னாசை யெல்லாந்தன் னருள்வடிவந் தனக்கே
எய்திடச்செய் திட்டருளி யெனையுமுட னிருத்தித்
தன்னாசை யெல்லாமென் னுள்ளகத்தே வைத்துத்
தானுமுட னிருந்தருளிக் கலந்தபெருந் தகையே
அன்னாவென் னாருயிரே யப்பாவென் னமுதே
ஆவாவென் றெனையாண்ட தேவாமெய்ச் சிவமே
பொன்னாரும் பொதுவில்நடம் புரிகின்ற வரசே
புண்ணியனே யென்மொழிப்பூங் கண்ணியுமேற் றருளே. 66

தன்னரசே செலுத்திநின்ற தத்துவங்க ளனைத்துந்
தனித்தனியென் வசமாகித் தாழ்ந்தேவல் இயற்ற
முன்னரசும் பின்னரசும் நடுவரசும் போற்ற
மூன்றுமண்ட பிண்டங்க ளெவற்றினுமெய் பாலும்
என்னரசே யென்றுரைக்க வெனக்குமுடி சூட்டி
இன்பவடி வாக்கியென்று மிலங்கவைத்த சிவமே
என்னரசே யென்னுயிரே யென்னிருகண் மணியே
இணையடிப்பொன் மலர்களுக்கென் னிசையுமணிந் தருளே. 67

பரவெளியே நடுவெளியே உபசாந்த வெளியே
பாழ்வெளியே முதலாக ஏழ்வெளிக்கப் பாலும்
விரவியமா மறைகளெலாந் தனித்தனிசென் றளந்தும்
மெய்யளவு காணாதே மெலிந்திளைத்துப் போற்ற
உரவிலவை தேடியவவ் வெளிகளுக்குள் வெளியாய்
ஓங்கியவவ் வெளிகளைத்தன் னுள்ளடக்கும் வெளியாய்க்
கரையறநின் றோங்குகின்ற சுத்தசிவ வெளியே
கனிந்தநடத் தரசேயென் கருத்துமணிந் தருளே. 68

வெய்யிலிலே நடந்திளைப்பு மேவியவக் கணத்தே
மிகுநிழலுந் தண்ணமுதுந் தந்தவருள் விளைவே
மையலிலே துயின்றிடத்தே மடந்தையர்கள் தாமே
வலிந்துறவைச் செய்வித்த மாண்புடைய நட்பே
கையறவாற் கலங்கியபோ தக்கணத்தே போந்து
கையறவு தவிர்த்தருளிக் காத்தளித்த துரையே
ஐயுறேலென் றெனையாண் டமுதளித்த பதியே
அம்பலத்தென் னரசேயென் னலங்கலணிந் தருளே. 69

கொலைபுரிவார் தவிரமற்றை யெல்லாரு நினது
குலத்தாரே நீயெனது குலத்துமுதன் மகனே
மலைவறவே சுத்தசிவ சமரசசன் மார்க்கம்
வளரவளர்ந் திருக்கவென வாழ்த்தியவென் குருவே
நிலைவிழைவார் தமைக்காக்கு நித்தியனே யெல்லா
நிலையும்விளங் குறவருளில் நிறுத்தியசிற் குணனே
புலையறியாப் பெருந்தவர்கள் போற்றமணிப் பொதுவில்
புனிதநடத் தரசேயென் புகலுமணிந் தருளே. 70

உயிர்க்கொலையும் புலைப்புசிப்பு முடையவர்க ளெல்லாம்
உறவினத்தா ரல்லரவர் புறவினத்தா ரவர்க்குப்
பயிர்ப்புறுமோர் பசிதவிர்த்தன் மாத்திரமே புரிக
பரிந்துமற்றைப் பண்புரையேல் நண்புதவே லிங்கே

நயப்புறுசன் மார்க்கமவ ரடையளவு மிதுதான்
நம்மாணை யென்றெனக்கு நவின்றவரு ளிறையே
[1] மயர்ப்பறுமெய்த் தவர்போற்றப் பொதுவில்நடம் புரியும்
மாநடத்தென் னரசேயென் மாலையணிந் தருளே. 71

வன்புடையார் கொலைகண்டு புலையுண்பார் சிறிதும்
மரபினரன் றுதலினல் வருத்தவவ ரளவில்
அன்புடைய வென்மகனே பசிதவிர்த்தல் புரிக
அன்றியருட் செயலொன்றுஞ் செயத்துணியே லென்றே
இன்புறவென் றனக்கிசைத்த வென்குருவே யெனைத்தான்
ஈன்றதனித் தந்தையே தாயேயென் னிறையே
துன்பறுமெய்த் தவர்சூழ்ந்து போற்றுதிருப் பொதுவில்
தூயநடத் தரசேயென் சொல்லுமணிந் தருளே. 72

கோடியவரே கொலைபுரிந்து புலைநுகர்வா ரெனினுங்
குறித்திடுமோ ராபத்தில் வருந்துகின்ற போது
படியிலதைப் பார்த்துகவேல் அவர்வருத்தந் துன்பம்
பயந்தீர்த்து விடுகவெனப் பரிந்துரைத்த குருவே
நெடியவரே நான்முகரே நித்தியரே பிறரே
நின்மலரே யென்கின்றோ ரெல்லாருங் காணா
அடியுமுயர் முடியுமெனக் களித்தபெரும் பொருளே
அம்பலத்தென் னரசேயென் னலங்கலணிந் தருளே. 73

தயையுடையா ரெல்லாருஞ் சமரசசன் மார்க்கம்
சார்ந்தவரே யிங்கவர்கள் தம்மோடுங் கூடி
நயமுறுநல் லருணெறியிற் களித்துவிளை யாடி
நன்னுகவென் றெனக்கிசைத்த நண்புறுசற் குருவே
உயலுறுமென் னுயிர்க்கினிய வுறவேயென் னறிவில்
ஓங்கியபே ரன்பேயென் னன்பிலுறு மொளியே
மயலறுமெய்த் தவர்சூழ்ந்து போற்றுமணி மன்றில்
மாநடத்தென் னரசேயென் மாலையணிந் தருளே. 74

அருளுடையா ரெல்லாருஞ் சமரசசன் மார்க்கம்
அடைந்தவரே யாதலினா லவருடனே கூடித்
தெருளுடைய வருணெறியிற் களித்துவிளை யாடிச்
செழித்திடுக வாழ்கவெனச் செப்பியசற் குருவே
பொருளுடைய பெருங்கருணைப் பூரணமெய்ச் சிவமே
போதாந்த முதலாறும் நிறைந்தொளிரு மொளியே
மருளுடையார் தமக்குமரு ணீக்கமணிப் பொதுவில்
வயங்குநடத் தரசேயென் மாலையுமேற் றருளே. 75

1 மயர்ப்பு என்பது—சோர்வு.

வெம்மாலைச் சிறுவரொடும் விளையாடித் திரியும்
மிகச்சிறிய பருவத்தே வியந்துநினை நமது
பெம்மானென் றடிகுறித்துப் பாடும்வகை புரிந்த
பெருமானே நான்செய்த பெருந்தவமெய்ப் பயனே
செம்மார்ந்த சிறியேனைச் சிறுநெறியிற் சிறிதுஞ்
செலுத்தாமற் பெருநெறியிற் செலுத்தியநற் றுணையே
அம்மானே யென்னுயிர்க் கானபெரும் பொருளே
அம்பலத்தென் னரசேயென் னலங்கலணிந் தருளே. 76

ஆணவமா மிருட்டறையிற் கிடந்தசிறி யேனை
அணிமாயை விளக்கறையி லமர்த்தியறி வளித்து
நீணவமாந் தத்துவப்பொன் மேடையிசை யேற்றி
நிறைந்தவரு ளமுதளித்து நித்தமுற வளர்த்து
மாணுறவெல் லாநலமுங் கொடுத்துலக மறிய
மணிமுடியுஞ் சூட்டியவென் வாழ்முதலாம் பதியே
ஏணுறுசிற் சபையிடத்தும் பொற்சபையி னிடத்தும்
இலங்குநடத் தரசேயென் னிசையுமணிந் தருளே. 77

பான்மறுத்து விளையாடுஞ் சிறுபருவத் திடையே
பசுமூல கிச்சையொன்றும் பதியாதென் னுளத்தே
மான்மறுத்து விளங்குதிரு வைந்தெழுத்தே பதிய
வைத்தபெரு வாழ்வேயென் வாழ்வினுறுஞ் சுகமே
மீன்மறுத்துச் சுடர்மயமாய் விளங்கியதோர் விண்ணே
விண்ணனந்த முள்ளடங்க விரிந்தபெரு வெளியே
ஊன்மறுத்த பெருந்தவருக் கொளிவடிவங் கொடுத்தே
ஓங்குநடத் தரசேயென் னுரையுமணிந் தருளே. 78

மெய்ச்சுகமு முயிர்ச்சுகமு மிகுங்கரணச் சுகமும்
விளங்குபதச் சுகமுமதன் மேல்வீட்டுச் சுகமும்
எச்சுகமுந் தன்னிடத்தே யெழுந்தசுக மாக
எங்கணுமோர் நீக்கமற வெழுந்தபெருஞ் சுகமே
அச்சுகமு மடையறிவு மடைந்தவருங் காட்டா
ததுதானா யதுவதுவாய் அப்பாலாம் பொருளே
பொய்ச்சுகத்தை விரும்பாத புனிதர்மகிழ்ந் தேத்தும்
பொதுநடத்தென் னரசேயென் புகலுமணிந் தருளே. 79

அண்டவகை யெவ்வளவோ வவ்வளவு மவற்றில்
அமைந்தவுயி ரெவ்வளவோ வவ்வளவு மவைகள்
கண்டபொரு ளெவ்வளவோ வவ்வளவு மவற்றில்
கலந்தகலப் பெவ்வளவோ வவ்வளவு நிறைந்தே
விண்டகுமோர் நாதவெளி சுத்தவெளி மோன
வெளிஞான வெளிமுதலாம் வெளிகளெலாம் நிரம்பிக்
கொண்டதுவாய் விளங்குகின்ற சுத்தசிவ மயமே
குலவுநடத் தரசேயென் குற்றமுங்கொண் டருளே. 80

சத்தியநான் முகரனந்தர் நாரணர்மற் றுளவாந்
தலைவரவ ரவருலகிற் சார்ந்தவர்கள் பிறர்கள்
இத்திசையத் திசையாக விசைக்குமண்டப் பகுதி
எத்தனையோ கோடிகளி லிருக்குமுயிர்த் திரள்கள்
அத்தனைபே ருண்டாலு மணுவளவுங் குறையா
தருள்வெளியில் ஒளிவடிவா யானந்த மயமாய்ச்
சுத்தசிவ வனுபவமாய் விளங்கியதெள் ளமுதே
தூயநடத் தரசேயென் சொல்லுமணிந் தருளே. 81

பொறிகரண முதல்பலவாந் தத்துவமு மவற்றைப்
புரிந்தியக்கி நடத்துகின்ற பூரணரு மவர்க்குச்
செறியுமுப கரிகளாஞ் சத்திகளு மவரைச்
செலுத்துகின்ற சத்தர்களுந் தன்னொளியால் விளங்க
அறிவறிவா யவ்வறிவுக் கறிவாயெவ் விடத்தும்
ஆனதுவாய்த் தானதுவா யதுவதுவாய் நிறைந்தே
நெறிவழங்கப் பொதுவிலருட் டிருநடஞ்செய் யரசே
நின்னடியேன் சொன்மாலை நிலைக்கவணிந் தருளே. 82

உண்ணுகின்ற வூண்வெறுத்து வற்றியும்புற் றெழுந்தும்
ஒருகோடிப் பெருந்தலைவ ராங்காங்கே வருந்திப்
பண்ணுகின்ற பெருந்தவத்துங் கிடைப்பரிதாய்ச் சிறிய
பயல்களினுஞ் சிறியேற்குக் கிடைத்தபெரும் பதியே
நண்ணுகின்ற பெருங்கருணை யமுதளித்தென் னுளத்தே
நானாகித் தானாகி யமர்ந்தருளி நான்றான்
எண்ணுகின்ற படியெல்லா மருள்கின்ற சிவமே
இலங்குநடத் தரசேயென் னிசையுமணிந் தருளே. 83

கொள்ளைவினைக் கூட்டுறவால் கூட்டியபல் சமயக்
கூட்டமுமக் கூட்டத்தே கூவுகின்ற கலையுங்
கள்ளமுறு மக்கலைகள் காட்டியபல் கதியுங்
காட்சிகளுங் காட்சிதரு கடவுளரு மெல்லாம்
பிள்ளைவிளை யாட்டெனநன் கறிவித்திங் கெனையே
பிள்ளையெனக் கொண்டுபிள்ளைப் பெயரிட்ட பதியே
தள்ளரிய மெய்யடியார் போற்றமணி மன்றில்
தனிநடஞ்செய் யரசேயென் சாற்றுமணிந் தருளே. 84

நால்வருண மாச்சிரம மாசார முதலா
நவின்றகலைச் சரிதமெலாம் பிள்ளைவிளை யாட்டே
மேல்வருணந் தோல்வருணங் கண்டறிவா ரிலைநீ
விழித்திதுபா ரென்றெனக்கு விளம்பியசற் குருவே
கால்வருணங் கலையாதே வீணிலலை யாதே
காண்பனவெல் லாமெனக்குக் காட்டியமெய்ப் பொருளே
மால்வருணங் கடந்தவரை மேல்வருணத் தேற்ற
வயங்குநடத் தரசேயென் மாலையணிந் தருளே. 85

எவ்விடத்து மெவ்வுயிர்க்கு மிலங்குசிவ மொன்றே
என்னுணை யென்மகனே யிரண்டில்லை யாங்கே
செவ்விடத்தே யருளொடுசேர்த் திரண்டெனக்கண் டறிநீ
திகைப்படையே லென்றெனக்குச் செப்பியசற் குருவே
அவ்விடத்தே யுவ்விடத்தே யமர்ந்ததுபோற் காட்டி
அங்குமிங்கு மப்புறமு மெங்குநிறை பொருளே
ஒவ்விடச்சிற் சபையிடத்தும் பொற்சபையி னிடத்தும்
ஓங்குநடத் தரசேயென் னுரையுமணிந் தருளே. 86

இயல்வேதா கமங்கள்புரா ணங்களிதி காசம்
இவைமுதலா மிந்திரசா லங்கடையா வுரைப்பார்
மயலொருநூல் மாத்திரந்தான் சாலமென வறிந்தார்
மகனேநீ நூலனைத்துஞ் சாலமென வறிக
செயலனைத்து மருளொளியாற் காண்கவென வெனக்கே
திருவுளம்பற் றியஞான தேசிகமா மணியே
அயலறியா வறிவுடையா ரெல்லாரும் போற்ற
ஆடுகின்ற வரசேயென் னலங்கலணிந் தருளே. 87

தோன்றியவே தாகமத்தைச் சாலமென வுரைத்தேம்
சொற்பொருளு மிலக்கியமும் பொய்யெனக்கண் டறிவேல்
ஊன்றியவே தாகமத்தி னுண்மைநினக் காகும்
உலகறிவே தாகமத்தைப் பொய்யெனக்கண் டுணர்வாய்
ஆன்றதிரு வருட்செங்கோல் நினக்களித்தோம் நீயே
ஆள்கவரு ளொளியாலென் றளித்ததனிச் சிவமே
என்றதிரு வமுதெனக்கு மீந்தபெரும் பொருளே
இலங்குநடத் தரசேயென் னிசையுமணிந் தருளே. 88

நான்முகர்நல் லுருத்திரர்கள் நாரணரிந் திரர்கள்
நவிலருகர் புத்தர்முதன் மதத்தலைவ ரெல்லாம்
வான்முகத்திற் றோன்றியரு ளொளிசிறிதே யடைந்து
வானகத்தும் வையகத்தும் மனம்போன படியே
தேன்முகந்துண் டவரெனவே விளையாடா நின்ற
சிறுபிள்ளைக் கூட்டமென அருட்பெருஞ்ஜோ தியினாற்
றுன்மிகக்கண் டறிகவெனச் சாற்றியசற் குருவே
சபையினிடத் தரசேயென் சாற்றுமணிந் தருளே. 89

தவறாத வேதாந்த சித்தாந்த முதலாச்
சாற்றுகின்ற வந்தமெலாந் தனித்துரைக்கும் பொருளை
இவறாத சுத்தசிவ சன்மார்க்க நிலையில்
இருந்தருளாம் பெஞ்ஜோதி கொண்டறிதல் கூடும்
எவராலும் பிறிதொன்றாற் கண்டறிதல் கூடா
தென்னுணை யென்மகனே அருட்பெருஞ்ஜோ தியைத்தான்
தவறாது பெற்றனைநீ வாழ்கவென்ற பதியே
சபையினடத் தரசேயென் சாற்றுமணிந் தருளே. 90

ஐயமுறே லென்மகனே யிப்பிறப்பிற் றானே
அடைவதெல்லா மடைந்தனைநீ யஞ்சலெனென் றருளி
வையமிசைத் தனியிருத்தி மணிமுடியுஞ் சூட்டி
வாழ்கவென வாழ்த்தியவென் வாழ்க்கைமுதற் பொருளே
துய்யவருட் பெருஞ்ஜோதி சுத்தசிவ வெளியே
சுகமயமே யெல்லாஞ்செய் வல்லதனிப் பதியே
உய்யுநெறி காட்டிமணி மன்றிடத்தே நடிக்கும்
ஒருமைநடத் தரசேயென் னுரையுமணிந் தருளே. 91

காலையிலே யென்றனக்கே கிடைத்தபெரும் பொருளே
களிப்பேயென் கருத்தகத்தே கனிந்தநறுங் கனியே
மேலையிலே யிம்மையிலே யொருமையிலே தவத்தால்
மேவுகின்ற பெரும்பயனும் விளைவையெலாந் தருமச்
சாலையிலே யொருபகலிற் றந்ததனிப் பதியே
சமரசசன் மார்க்கசங்கத் தலையமர்ந்த நிதியே
மாலையிலே சிறந்தமொழி மாலையணிந் தாடும்
மாநடத்தென் னரசேயென் மாலையணிந் தருளே. 92

சிற்பதமுந் தற்பதமும் பொற்பதத்தே காட்டுஞ்
சிவபதமே யானந்தத் தேம்பாகின் பதமே
சொற்பதங்கள் கடந்ததன்றி முப்பதமுங் கடந்தே
துரியபத முங்கடந்த பெரியதனிப் பொருளே
நற்பதமென் முடிசூட்டிக் கற்பதெலாங் களித்தே
ஞானநிந்து தானாக நல்கியவென் குருவே
பற்பதத்துந் தலைவரெலாம் போற்றமணி மன்றிற்
பரிநடத் தரசேயென் பாடலணிந் தருளே. 93

ஆதியிலே யெனையாண்டென் னறிவகத்தே யமர்ந்த
அப்பாவென் னன்பேயென் னாருயிரே யமுதே
வீதியிலே விளையாடித் திரிந்தபிள்ளைப் பருவ
மிகப்பெரிய பருவமென வியந்தருளி யருளாஞ்
ஜோதியிலே விழைவுறச்செய் தினியமொழி மாலை
கொடுத்திடச்செய் தணிந்துகொண்ட துரையேசிற் பொதுவாம்
நீதியிலே நிறைந்தநடத் தரசேயின் றடியேன்
நிகழ்த்தியசொன் மாலையுநீ திகழ்த்தியணிந் தருளே. 94

கணக்குவழக் கதுகடந்த பெருவெளிக்கு நடுவே
கதிர்பரப்பி விளங்குகின்ற கண்ணிறைந்த சுடரே
இணக்கமுறு மன்பர்கள்தம் மிதயவெளி முழுதும்
இனிதுவிளங் குறநடுவே யிலங்குமொளி விளக்கே
மணக்குநறு மணமேசின் மயமாயென் னுளத்தே
வயங்குதனிப் பொருளேயென் வாழ்வேயென் மருந்தே
பிணக்கறியாப் பெருந்தவர்கள் சூழமணி மன்றிற்
பெருநடஞ்செய் யரசேயென் பிதற்றுமணிந் தருளே. 95

அடிச்சிறியே னச்சமெலா மொருகணத்தே நீக்கி
அருளமுத மிகவளித்தோ ரணியுமெனக் கணிந்து
கடிக்கமலத் தயன்முதலோர் கண்டுமிக வியப்பக்
கதிர்முடியுஞ் சூட்டியெனைக் களித்தாண்ட பதியே
வடித்தமறை முடிவயங்கு மாமணிப்பொற் சுடரே
மனவாக்குக் கடந்தபெரு வானடுவா மொளியே
படித்தலத்தார் வான்றலத்தார் பரவியிடப் பொதுவிற்
பரிந்தநடத் தரசேயென் பாட்டுமணிந் தருளே. 96

எத்துணையுஞ் சிறியேனை நான்முகன்மால் முதலோர்
ஏறரிதாம் பெருநிலைமே லேற்றியுட னிருந்தே
மெய்த்துணையாந் திருவருட்பே ரமுதமிக வளித்து
வேண்டியவா றடிநாயேன் விளையாடப் புரிந்து
சுத்தசிவ சன்மார்க்க நெறியொன்றே யெங்குந்
துலங்கவருள் செய்தபெருஞ் ஜோதியனே பொதுவில்
சித்துருவாய் நடம்புரியு முத்தமசற் குருவே
சிற்சபையென் னரசேயென் சிறுமொழியேற் றருளே. 97

இருந்தவிடந் தெரியாதே யிருந்தசிறி யேனை
எவ்வுலகி னுள்ளவரு மேத்திடமே லேற்றி
அருந்தவரு மயன்முதலாந் தலைவர்களு முவத்தே
அதிசயிக்கத் திருவமுதும் அளித்தபெரும் பதியே
திருந்துமறை முடிப்பொருளே பொருண்முடிபி னுணர்ந்தோர்
திகழ்முடிந் தூட்கொண்ட சிவயோகப் பொருளே
பெருந்தவர்கள் போற்றமணி மன்றில்நடம் புரியும்
பெருநடத்தென் னரசேயென் பிதற்றுமணிந் தருளே. 98

குணமறியேன் செய்தபெருங் குற்றமெலாங் குணமாக்
கொண்டருளி யென்னுடைய குறிப்பெல்லா முடித்து
மணமுறுபே ரருளின்ப வமுதமெனக் களித்து
மணிமுடியுஞ் சூட்டியெனை வாழ்கவென வாழ்த்தித்
தணவிலா தென்னுளத்தே தான்கலந்து நானுந்
தானுமொரு வடிவாகித் தழைத்தோங்கப் புரிந்தே
அணவுறுபே ரருட்ஜோதி யரசுகொடுத் தருளி
ஆடுகின்ற வரசேயென் னலங்கலணிந் தருளே. 99

தலைகாலிங் கறியாதே திரிந்தசிறி யேனைத்
தான்வலிந்தாட் கொண்டருளித் தடைமுழுதுந் தவிர்த்தே
மலைவறுமெய் யறிவளித்தே யருளமுத மருத்தி
வல்லபசத் திகளெல்லா மருவியிடப் புரிந்து
நிலைபுறவே தானுமடி யேனுமொரு வடிவாய்
நிறையநிறை வித்துயர்ந்த நிலைதன்மே லமர்த்தி
அலர்தலைப்பே ரருட்ஜோதி யரசுகொடுத் தருளி
ஆடுகின்ற வரசேயென் னலங்கலணிந் தருளே. 100

அருட்பெருஞ்ஜோதி

# 39. வரம்பில்வியப்பு

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**பொ**ன்புனை புயனு மயனுமற் றவரும் புகலரும் பெரியவோர் நிலையில்
இன்புரு வாகி யருளொடும் விளங்கி இயற்றலே யாதியைந் தொழிலுந்
தன்பொதுச் சமுகத் தைவர்க ளியற்றத் தனியர சியற்றுமோர் தலைவன்
அன்பெனுங் குடிசை நுழைந்தன னால் அவன்றனை மறுப்பவர் யாரே. 1

மன்பதை வகுக்கும் பிரமநா ரணர்கள் மன்னுருத் திரர்களே முதலாம்
ஒன்பது கோடித் தலைவர்க ளாங்காங் குறுபெருந் தொழில்பல வியற்றி
இன்புறச் சிறிதே கடைக்கணித் தருளி இலங்குமோ ரிறைவனின் றடியேன்
அன்பெனுங் குடிசை நுழைந்தன னந்தோ அவன்றனை மறுப்பவர் யாரே. 2

தன்னிக ரில்லாத் தலைவனென் றரற்றித் தனித்தனி மறைகளா கமங்கள்
உன்னிநின் றோடி யுணர்ந்துணர்ந் துணரா ஒருதனிப் பெரும்பதி யுவந்தே
புன்னிக ரில்லாப் புலையனேன் பிழைகள் பொறுத்தருட் பூரண வடிவாய்
என்னுளம் புகுந்தே நிறைந்தன னந்தோ எந்தையைத் தடுப்பவர் யாரே. 3

பால்வகை யாதோ பெண்கொலோ விருமைப் பாலதோ பாலுறா வதுவோ
எல்வகை யொன்றோ விரண்டதோ அனாதி இயற்கையோ வதியிலி யல்போ
மேல்வகை யாதோ வெனமறை முடிகள் விளம்பிட விளங்குமோர் தலைவன்
மால்வகை மனத்தே னுளக்குடில் புகுந்தான் வள்ளலைத் தடுப்பவர் யாரே. 4

வரம்பெறு மான்ம வுணர்ச்சியுஞ் செல்லா வருபர வுணர்ச்சியு மாட்டா
பரம்பர வுணர்ச்சி தானுநின் றறியாப் பராபர வுணர்ச்சியும் பற்றா
உரம்பெறு முணர்வார் யாரெனப் பெரியர் உரைத்திட வோங்குமோர் தலைவன்
கரம்பெறு கனிபோ லென்னுளம் புகுந்தான் கடவுளைத் தடுப்பவர் யாரே. 5

படைத்திடன் முதலைந் தொழில்புரிந் திலங்கும் பரம்பர வொளியெலா மணுவிற்
கிடைத்திடக் கிழ்மேல் நடுவெனக் காட்டாக் கிளரொளி யாயொளிக் கெல்லாம்
அடைத்த காரணமாய்க் காரணங் கடந்த அருட்பெருஞ் ஜோதியா மொருவன்
கடைத்தனிச் சிறியே னுளம்புகுந் தமர்ந்தான் கடவுளைத் தடுப்பவர் யாரே. 6

அளவெலாங் கடந்த பெருந்தலை யண்ட அடுக்கெலா மம்மவோ ரணுவின்
பிளவிலோர் கோடிக் கூற்றிலொன் றாகப் பேசநின் றோங்கிய பெரியோன்
களவெலாந் தவிர்த்தென் கருத்தெலா நிரப்பிக் கருணையா ரமுதளித் துளமாம்
வளவிலே புகுந்து வளர்கின்றா னந்தோ வள்ளலைத் தடுப்பவர் யாரே. 7

உள்ளவா றண்ட கோடி கோடிகளில் உளவுயிர் முழுவது மொருங்கே
கொள்ளைகொண் டிடினு மணுத்துணை யெனினுங் குறைபடாப் பெருங்கொடைத் தலைவன்
கள்ளநெஞ் சகத்தேன் பிழையெலாம் பொறுத்துக் கருத்தெலா மினிதுதந் தருளித்
தள்ளருந் திறத்தென் னுள்ளகம் புகுந்தான் தந்தையைத் தடுப்பவர் யாரே. 8

அறிந்தன வறிந்தாங் கறிந்தறிந் தறியா தையகோ வையகோ வறிவின்
மறிந்தன மயர்ந்தே மெனமறை யனந்தம் வாய்குழைந் துரைத்துரைத் துரையும்
முறிந்திட வாளா விருந்தவென் றறிஞர் மொழியுமோர் தனிப்பெருந் தலைவன்
செறிந்தென துளத்திற் சேர்ந்தன னவன்றன் திருவுளந் தடுப்பவர் யாரே. 9

கருமுதற் கருவாய்க் கருவினுட் கருவாய்க் கருவெலாங் காட்டுமோர் கருவாய்க்
குருமுதற் குருவாய்க் குருவெலாங் கிடைத்த கொள்கையாய்க் கொள்கையோ டளவா
அருமுத லருவா யல்லவா யப்பால் அருட்பெருஞ் ஜோதியாந் தலைவன்
மருவியென் னுளத்திற் புகுந்தன னவன்றன் வண்மையைத் தடுப்பவர் யாரே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 40. திருவடிப்புகழ்ச்சி 1

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**வானிருக்கும்** பிரமர்களு நாரணரும் பிறரும்
மாதவம்பன் னாட்புரிந்து மணிமாட நடுவே
தேனிருக்கு மலரணைமேற் பளிக்கறையி னூடே
திருவடிசேர்த் தருள்கவெனச் செப்பிவருந் திடவும்
நானிருக்குங் குடிசையிலே வலிந்துநுழைந் தெனக்கே
நல்லதிரு வருளமுத நல்கியதன் றியுமென்
ஊனிருக்குங் குடிசையினு முவந்துநுழைந் தெளியேன்
உள்ளமெனுஞ் சிறுகுடிசை யுள்ளுநுழைந் தனையே. 1

படிசெய்பிர மன்முதலோர் பற்பலநாள் முயன்றே
பகலொளிசெய் நவமணிகள் பதித்தசிங்கா தனத்தே
அடிசெய்தெழுந் தருளியெமை யாண்டருளல் வேண்டும்
அரசேயென் றவரவரு மாங்காங்கே வருந்த
வடிசெய்மறை முடிநடுவே மன்றகத்தே நடிக்கும்
மலரடிகள் சிவப்பவொரு வளமுமிலா வசத்தக்
குடிசைநுழைந் தனையேயென் றேசுவரே யன்பர்
கூசாம லென்னுளமாங் குடிசைநுழைந் தனையே. 2

உள்ளபடி யுள்ளதுவா யுலகமெலாம் புகினும்
ஒருசிறிதுந் தடையிலதா யொளியதுவே மயமாய்
வெள்ளவெளி நடுவுளதா யியற்கையிலே விளங்கும்
வேதமுடி யிலக்கியமா மேடையிலே யமர்ந்த
வள்ளன்மல ரடிசிவப்ப வந்தெனது கருத்தின்
வண்ணமெலா முவந்தளித்து வயங்கியபே ரின்பங்
கொள்ளைகொளக் கொடுத்ததுதான் போதாதோ அரசே
கொடும்புலையேன் குடிசையிலுங் குலவிநுழைந் தனையே. 3

தடையறியாத் தகையினதாய்த் தன்னிகரில் லதுவாய்த்
தத்துவங்க ளனைத்தினுக்குந் தாரகமா யவைக்கு
விடையறியாத் தனிமுதலாய் விளங்குவெளி நடுவே
விளங்குகின்ற சத்தியமா மேடையிலே யமர்ந்த
நடையறியாத் திருவடிகள் சிவந்திடவந் தெனது
நலிவனைத்துந் தவிர்த்தருளி ஞானவமு தளித்தாய்
கொடையிதுதான் போதாதோ வென்னரசே யடியேன்
குடிசையிலுங் கோணாதே குலவிநுழைந் தனையே. 4

இறையளவுந் துரிசிலதாய்த் தூய்மையதாய் நிறைவாய்
இயற்கையதா யனுபவங்க ளவைக்குமுத லிடமாய்
மறைமுடியோ டாகமத்தின் மணிமுடிமேன் முடியாய்
மன்னுகின்ற மெய்ஞ்ஞான மணிமேடை யமர்ந்த
நிறையருட்சீ ரடிமலர்கள் சிவந்திடவந் தடியேன்
நினைத்தவெலாங் கொடுத்தருளி நிலைபெறச்செய் தனையே
குறைவிலதிப் பெருவரந்தான் போதாதோ அரசே
கொடும்புலையேன் குடிசையிலுங் குலவிநுழைந் தனையே. 5

உருவினதா யருவினதா யுருவருவா யுணர்வாய்
உள்ளதுவா யொருதன்மை யுடையபெரும் பதியாய்
மருவியவே தாந்தமுதல் வகுத்திடுங் கலாந்த
வரையதன்மே லருள்வெளியில் வயங்கிய மேடையிலே
திருவுறவே யமர்ந்தருளுந் திருவடிகள் பெயர்த்தே
சிறியேன்கண் ணடைந்தருளித் திருவனைத்துங் கொடுத்தாய்
குருவேயென் னரசேயீ தமையாதோ வடியேன்
குடிசையிலுங் கோணாதே குலவிநுழைந் தனையே. 6

மணமுளதா யொளியுளதாய் மந்திரவா தரமாய்
வல்லதுவாய் நல்லதுவாய் மதங்கடந்த வரைப்பாய்
வணமுளதாய் வளமுளதாய் வயங்குமொரு வெளியில்
மணிமேடை யமர்ந்ததிரு வடிமலர்கள் பெயர்த்தே
எணமுளவென் பாலடைந்தென் னெண்ணமெலா மளித்தாய்
இங்கிதுதான் போதாதோ வென்னரசே ஞான
குணமலையே யருளமுதே குருவேயென் பதியே
கொடும்புலையேன் குடிசையிலுங் குலவிநுழைந் தனையே. 7

சிரம்பெறுவே தாகமத்தி னடிநடுவு முடியுஞ்
செல்லாத நிலையதுவா யெல்லாம்வல் லதுவாய்
பரம்பரமாய்ப் பரம்பரமேற் பரவுசிதம் பரமாய்ப்
பதிவெளியில் விளங்குகின்ற மதிசிவமே டையிலே
தரங்குலவ வமர்ந்ததிரு வடிகள்பெயர்த் தெனது
சார்படைந்தென் னெண்ணமெலாந் தந்தனையென் னரசே
குரங்குமனச் சிறியேனுக் கிங்கிதுபோ தாதோ
கொடும்புலையேன் குடிசையிலுங் குலவிநுழைந் தனையே. 8

பற்றியபற் றனைத்தினையும் பற்றறவிட் டறிவாம்
பான்மையொன்றே வடிவாகிப் பழுத்தபெரி யவரும்
உற்றறிதற் கரியவொரு பெருவெளிமேல் வெளியில்
ஓங்குமணி மேடையமர்ந் தோங்கியசே வடிகள்
பெற்றறியப் பெயர்த்துவந்தென் கருத்தனைத்துங் கொடுத்தே
பிறவாம லிறவாமற் பிறங்கவைத்த வரசே
கொற்றமுளேன் றனக்கிதுதான் போதாதோ கொடியேன்
குடிசையினுங் கோணுதே குலவிநுழைந் தனையே. 9

கருவியோடு கரணமெலாங் கடந்துகடந் ததன்மேற்
காட்சியெலாங் கடந்ததன்மேற் காணுது கடந்து
ஒருநிலையி னனுபவமே யுருவாகிப் பழுத்த
உணர்ச்சியினுங் காணும லோங்குமொரு வெளியில்
மருவியதோர் மேடையிலே வயங்கியசே வடிகள்
மலர்த்திவந்தென் கருத்தனைத்தும் வழங்கினையின் புறவே
குருமணியே யென்னரசே யெனக்கிதுபோ தாதோ
கொடும்புலையேன் குடிசையினுங் குலவிநுழைந் தனையே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 41. திருவடிப் புகழ்ச்சி 2

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அடுத்தானை யடியேனை யஞ்சே லென்றிங்
காண்டானைச் சிறுநெறிக ளடையா தென்னைத்
தடுத்தானைப் பெருநெறிக்குத் தடைதீர்த் தானைத்
தன்னருளுந் தன்பொருளுந் தானே யென்பாற்
கொடுத்தானைக் குற்றமெலாங் குணமாக் கொள்ளுங்
குணத்தானைச் சமயமதக் குழியின் றென்னை
எடுத்தானை யெல்லாஞ்செய் வல்ல சித்தே
ஈந்தானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 1

விரித்தானைக் கருவியெலாம் விரிய வேதம்
விதித்தானை மெய்ந்நெறியை மெய்யே யெற்குத்
தெரித்தானை நடம்பொதுவிற் செய்கின் றானைச்
சிறியேனுக் கருளொளியாற் சிறந்த பட்டந்
தரித்தானைத் தானேநா னாகி யென்றுந்
தழைத்தானை யெனைத்தடுத்த தடைக ளெல்லாம்
எரித்தானை யென்னுயிருக் கின்பா னானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 2

நட்டானை நட்டவினை நயந்து கொண்டே
நம்மகனீ அஞ்சலென நவின்றென் சென்னி
தொட்டானை யெட்டிரண்டுஞ் சொல்லி னானைத்
துன்பமெலாந் தொலைத்தானைச் சோர்ந்து தூங்க
வொட்டானை மெய்யறிவே யுருவா யென்னுள்
உற்றானை யுணர்ந்தார்க்கு முணர்ந்து கொள்ள
எட்டானை யென்னளவி லெட்டி னானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 3

[1]சோற்றானைச் சோற்றினுறுஞ் சுகத்தி னானைத்
துலக்கமிலாப் பாரானை நீரா னானைக்
காற்றானை வெளியானைக் கனலா னானைக்
கருணைநெடுங் கடலானைக் களங்கர் காணத்
தோற்றானை நான்காணத் தோற்றி னானைச்
சொல்லறியேன் சொல்லியபுன் சொல்லை யெல்லாம்
ஏற்றானை யென்னுளத்தி லெய்தி னானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 4

சேர்த்தானை யென்றனைத்தன் னன்ப ரோடு
செறியாத மனஞ்செறியச் செம்பொற் றாளில்
ஆர்த்தானை யம்பலத்தி லாடா நின்ற
ஆனந்த நடத்தானை யருட்கண் ணோக்கம்
பார்த்தானைப் பாராரைப் பாரா தானைப்
பார்ப்பறவே பார்த்திருக்கப் பண்ணி யென்னை
ஈர்த்தானை யைந்தொழினீ யியற்றென் றானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 5

முளையானைச் சுத்தசிவ வெளியிற் றானே
முளைத்தானை மூவாத முதலா னானைக்
களையானைக் கலக்கமெலாங் களைவித் தென்னைக்
காத்தானை யென்பிழையைக் கருதிக் கோபம்
விளையானைச் சிவபோகம் விளைவித் தானை
வேண்டாமை வேண்டலிலை மேவி யென்றும்
இளையானை மூத்தானை மூப்பி லானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 6

புயலானை மழையானை யதிர்ப்பி னானைப்
போற்றியமின் னொளியானைப் புனித ஞானச்
செயலானைச் செயலெல்லாந் திகழ்வித் தானைத்
திருச்சிற்றம் பலத்தானைத் தெளியா ருள்ளே
அயலானை யுறவானை யன்பு ளானை
அறிந்தாரை யறிந்தானை யறிவா லன்றி
இயலானை யெழிலானைப் பொழிலா னானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 7

1 சோறு என்பது—முத்தி.

தாயானைத் தந்தையெனக் காயி னானைச்
சற்குருவு மானானைத் தமியே னுள்ளே
மேயானைக் கண்காண விளங்கி னானை
மெய்ம்மையெனக் களித்தானை வேதஞ் சொன்ன
வாயானை வஞ்சமிலா மனத்தி னானை
வரங்கொடுக்க வல்லானை மணிமன் றன்றி
ஏயானைத் தூரியநடு விருக்கின் றானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 8

தழைத்தானைத் தன்னையொப்பா ரில்லா தானைத்
தானேதா னானானைத் தமிய னேனைக்
குழைத்தானை யென்கையிலோர் கொடைதந் தானைக்
குறைகொண்டு நின்றேனைக் குறித்து நோக்கி
அழைத்தானை யருளமுத மளிக்கின் றானை
அச்சமெலாந் தவிர்த்தானை யன்பே யென்பால்
இழைத்தானை யென்னிதயத் திருக்கின் றானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 9

உடையானை யருட்ஜோதி யுருவி னானை
ஓவானை மூவானை யுலவா வின்பக்
கொடையானை யென்குறைதீர்த் தென்னை யாண்டு
கொண்டானைக் கோல்லாமை குறித்தி டானை
அடையானைத் திருச்சிற்றம் பலத்தி னானை
அடியேனுக் கருளமுத மளிக்க வேபின்
னிடையானை யென்னுளை யெல்லாந் தந்த
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 42. திருவடிப் புகழ்ச்சி 3

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அறிந்தானை யறிவறிவுக் கறிவா னானை
அருட்பெருஞ் ஜோதியினானை யடியே னன்பிற்
செறிந்தானை யெல்லாஞ்செய் வல்ல சித்தாய்ச்
சிறந்தானைச் சிறுநெறியிற் சென்றார் தம்மைப்
பிறிந்தானை யென்னுளத்திற் கலந்து கொண்ட
பிரியமுள்ள பெருமானைப் பிறவி தன்னை
எறிந்தானை யெனையெறியா தெடுத்தாண் டானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 1

பாலானைத் தேனானைப் பழத்தி னானைப்
பலனுறுசெங் கரும்பானைப் பாய்ந்து வேகாக்
காலானைக் கலைசாகாத் தலையி னானைக்
காலென்றுந் தலையென்றுங் கருதற் கெய்தா
மேலானை மேனிலைமே லமுதா னானை
மேன்மேலு மெனதுளத்தே விளங்க லன்றி
ஏலானை யென்பாட லேற்றுக் கொண்ட
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 2

உள்ளானைக் கதவுதிறந் துள்ளே காண
உளவெனக்கே யுரைத்தானை யுணரார் பாட்டைக்
கொள்ளானை யென்பாட்டைக் குறிக்கொண் டானைக்
கொல்லாமை விரதமெனக் கொண்டார் தம்மைத்
தள்ளானைக் கொலைபுலையைத் தள்ளா தாரைத்
தழுவானை யான்புரிந்த தவறு நோக்கி
எள்ளானை யிடர்தவிர்த் திங்கென்னை யாண்ட
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 3

உறவானை யென்னுயிர்க்கு ளுயிரா னானை
உறாமைகள் செயினுமவை உன்னி யென்னை
மறவானை யறவாழி வழங்கி னானை
வஞ்சகர்க்குத் திருக்கோயில் வழிக்க பாடந்
திறவானை யென்னளவிற் றிறந்து காட்டிச்
சிற்சபையும் பொற்சபையுஞ் சேர்வித் தானை
இறவானைப் பிறவானை யியற்கை யானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 4

அகத்தானைப் புறத்தானை யணுவா னானை
அணுவினுக்குள் ளணுவானை யதனுள் ளானை
மகத்தானை மகத்தினுமோர் மகத்தா னானை
மாமகத்தா யிருந்தானை வயங்கா நின்ற
சகத்தானை யண்டமெலாந் தானா னானைத்
தனிப்பதமாம் பெருங்கருணைத் தாயா னானை
இகத்தானைப் பரத்தானைப் பொதுவி லாடும்
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 5

செய்யானைக் கரியானைப் பசுமை யானைத்
திகழ்ந்திடுபொன் மையினானை வெண்மை யானை
பெய்யானைப் பொய்யானை மெய்பொய் யில்லா
வெளியானை யொளியானை விளம்பு வார்க்குக்
கையானை யென்னையெடுத் தணைத்துக் கொண்ட
கையானை என்னையென்றுங் கையா தானை
எய்யானை எவ்வுலகு மேத்த வென்னை
ஈன்றானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 6

மருந்தானை மணியானை வழுத்தா நின்ற
மந்திரங்க ளானானை வான நாட்டு
விருந்தானை யுறவானை நண்பி னானை
மேலானைக் கீழானை மேல்கீ ழென்னப்
பொருந்தானை யென்னுயிரிற் பொருந்தி னானைப்
பொன்னானைப் பொருளானைப் பொதுவா யெங்கும்
இருந்தானை யிருப்பானை யிருக்கின் றானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 7

ஆன்றானை யறிவானை யழிவி லானை
அருட்பெருஞ் ஜோதியினா னையலர்ந்த ஜோதி
மூன்றானை யிரண்டானை யொன்றா னானை
முன்னானைப் பின்னானை மூட நெஞ்சில்
தோன்றானைத் தூயருளே தோன்றி னானைச்
சுத்தசிவ சன்மார்க்கந் துலங்க வென்னை
ஈன்றானை யெல்லாமா யல்லா தானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 8

தோய்ந்தானை யென்னுளத்தே யன்பா லன்பாற்
சூழ்ந்தானை யான்தொடுத்த சொற்பூ மாலை
வேய்ந்தானை யென்னுடைய வினைதீர்த் தானை
வேதாந்த முடிமுடிமேல் விளங்கி னானை
வாய்ந்தானை எப்பிடத்தே வைப்பா னானை
மணிமன்றி னடிப்பானை வரங்க ளெல்லாம்
ஈந்தானை யாய்ந்தவர்தம் மிதயத் தானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 9

நன்றானை மன்றகத்தே நடிக்கின் றானை
நாடாமை நாடவிவை நடுவே போங்கி
நின்றானைப் பொன்றாத நிலையி னானை
நிலைபறிந்து நில்லாதார் நெஞ்சி லேசம்
ஒன்றானை யெவ்வுயிர்க்கு மொன்றா னானை
ஒருசிறியேன் றனைநோக்கி யுளநீ யஞ்சேல்
என்றானை யென்றுமுள வியற்கை யானை
எம்மானைக் கண்டுகளித் திருக்கின் றேனே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 43. திருவடிப் புகழ்ச்சி [4]

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அருளரசை யருட்குருவை யருட்பெருஞ் ஜோதியையென்
அம்மையையென் னப்பனையென் னாண்டவனை யமுதைத்
தெருணெறியென் னுரிமையென்ற னுயிர்க்குயிரை யெல்லாஞ்
செய்யவல்ல தனித்தலைமைச் சித்தசிகா மணியை
மருவுபெரு வாழ்வையெல்லா வாழ்வுமெனக் களித்த
வாழ்முதலை மருந்தினைமா மணியையென்கண் மணியைக்
கருணைநடம் புரிகின்ற கனகசபா பதியைக் (1)
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

திருத்தகுவே தாந்தமொடு சித்தாந்த முதலாத்
திகழ்கின்ற அந்தமெலாந் தேடியுங்கண் டறியா
ஒருத்தனையுள் ளொளியையொளி ருள்ளொளிக்கு ளொளியை
உள்ளபடி யுள்ளவனை யுடையபெருந் தகையை
நிருத்தனையெப் பொருளான நின்மலனைச் சிவனை
நித்தியனைச் சத்தியனை நிர்க்குணனை யெனது
கருத்தனைச்சிற் சபையோங்குங் கடவுளையென் கண்ணுற் (2)
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

பாட்டுவந்து பரிசளிக்க பதியையருட் பதியைப்
பசுபதியைக் கனகசபா பதியையுமா பதியைத்
தேட்டமிகும் பெரும்பதியைச் சிவபதியை யெல்லாஞ்
செய்யவல்ல தனிப்பதியைத் திகழ்தெய்வப் பதியை
ஆட்டியல்செய் அருள்பரம பதியைநவ பதியை
ஆனந்த நாட்டினுக்கோ ரதிபதியை யரசைக்
காட்டியென்னை மணம்புரிந்தென் கைபிடித்த பதியைக் (3)
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

மதித்திடுதே வரியவொரு மாணிக்க மணியை
வயங்கியபே ரொளியுடைய வச்சிரமா மணியைத்
துதித்திடுவே தாகமத்தின் முடிமுடித்த மணியைச்
சுயஞ்சோதித் திருமணியைச் சுத்தசிவ மணியை
விதித்தன்முதல் தொழிலியற்று வித்தகுரு மணியை
விண்மணியை யம்மணிக்குள் விளங்கியமெய்ம் மணியைக்
கதித்தசுக மயமணியைச் சித்தசிகா மணியைக் (4)
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

மாற்றையளந் தறிந்திலமென் றருமறையா கமங்கள்
வழுத்தமணி மன்றோங்கி வயங்குமருட் பொன்னை
ஆற்றன்மிகு பெரும்பொன்னை யைந்தொழிலும் புரியும்
அரும்பொன்னை யென்றன்னை யாண்டசெழும் பொன்னைத்
தேற்றமிகு பசும்பொன்னை செம்பொன்னை ஞான
சிதம்பரத்தே விளங்கிவளர் சிவமயமாம் பொன்னைக்
காற்றனலா காயமெலாங் கலந்தவண்ணப் பொன்னைக் (5)
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

ஆய்தருவே தாகமத்தி னடிமுடிநின் றிலங்கும்
அரியபெரும் பொருளையவைக் கனுபவமாம் பொருளை
வேய்தருதத் துவப்பொருளைத் தத்துவங்கள் விளங்க
விளங்குகின்ற பரம்பொருளைத் தத்துவங்க ளனைத்துந்
தோய்தரவில் லாததனிச் சுயஞ்சோதிப் பொருளைச்
சுத்தசிவ மயமான சுகாதீதப் பொருளைக்
காய்தரவில் லாதென்னைக் காத்தவருட் பொருளைக் (6)
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

திருத்தமிகு முனிவர்களுந் தேவர்களு மழியாச்
சித்தர்களுஞ் சிருட்டிசெயுந் திறத்தர்களுங் காக்கும்
அருத்தமிகு தலைவர்களு மடக்கிடல்வல் லவரும்
அலைபுரிகின் றவர்களுமுள் ளனுக்கிரகிப் பவரும்
பொருத்துமற்றைச் சத்திகளுஞ் சத்தர்களு மெல்லாம்
பொருளெதுவோ வெனத்தேடிப் போகவவ ரவர்தங்
கருத்திலொளித் திருக்கின்ற கள்வனையென் கண்ணுற் (7)
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

கோணாத நிலையினராய்க் குறிகுணங்கண் டிடவுங்
கூடாத வண்ணமலைக் குகைமுதலா மிடத்தில்
ஊணாதி விடுத்துயிர்ப்பை யடக்கிமன மடக்கி
உருபொறிக ளடக்கிவரு முகங்கள்பல கோடித்
தூணாக வசைதலின்றித் தூங்காது விழித்த
தூயசதா நிட்டர்களுந் தூரியநிலை யிடத்துங்
காணாத வகையொளித்த கள்வனையென் கண்ணுற் (8)
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

நீட்டாய சித்தாந்த நிலையினிடத் தமர்ந்தும்
நிகழ்கின்ற வேதாந்த நெறியினிடத் திருந்தும்
ஆட்டாய போதாந்த மலைவறுநா தாந்தம்
ஆதிமற்றை யந்தங்க ளனைத்தினுமுற் றறிந்தும்
வேட்டாசைப் பற்றனைத்தும் விட்டுலகம் போற்ற
வித்தகராய் விளங்குகின்ற முத்தர்கட்குந் தன்னைக்
காட்டாம லொளித்திருக்குங் கள்வனையென் கண்ணுற் (9)
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

மருணெறிசேர் மலவுடம்பை யழியாத விமல
வடிவாக்கி யெல்லாஞ்செய் வல்லசித்தாம் பொருளைத்
தருணமது தெரிந்தெனக்குத் தானேவந் தளித்த
தயாநிதியை யெனையீன்ற தந்தையையென் குருவைப்
பொருணிறைசிற் றம்பலத்தே விளங்குகின்ற பதியைப்
புகலரிதாஞ் சுத்தசிவ பூரணமெய்ச் சுகத்தைக்
கருணையருட் பெருஞ்ஜோதிக் கடவுளை யென் கண்ணுற்
கண்டுகொண்டேன் கனிந்துகொண்டேன் கலந்துகொண்டேன் களித்தே.

அருட்பெருஞ்ஜோதி

## 44. திருவடிப் புகழ்ச்சி 5

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அருளெலா மளித்த வம்பலத் தமுதை
அருட்பெருஞ் ஜோதியை யரசை
மருளெலாந் தவிர்த்து வாழ்வித்த மருந்தை
வள்ளலை மாணிக்க மணியைப்
பொருளெலாங் கொடுத்தென் புந்தியிற் கலந்த
புண்ணிய நிதியைமெய்ப் பொருளைத்
தெருளெலாம் வல்ல சித்தைமெய்ஞ் ஞான
தீபத்தைக் கண்டுகொண் டேனே. 1

துன்பெலாந் தவிர்த்த துணையையென் னுள்ளத்
துரிசெலாந் தொலைத்தமெய்ச் சுகத்தை
என்பொலா மணியை யென்சிகா மணியை
யென்னிருகண் ணுண்மா மணியை
அன்பெலா மளித்த வம்பலத் தமுதை
அருட்பெருஞ் ஜோதியை யடியேன்
என்பெலா முருக்கி யின்பெலா மளித்த
எந்தையைக் கண்டுகொண் டேனே. 2

சிதத்திலே யூறித் தெளிந்ததெள் ளமுதைச்
சித்தெலாம் வல்லமெய்ச் சிவத்தைப்
பதத்திலே பழுத்த தனிப்பெரும் பழத்தைப்
பரம்பர வாழ்வையெம் பதியை
மதத்திலே மயங்கா மதியிலே விளைந்த
மருந்தைமா மந்திரந் தன்னை
இதத்திலே யென்னை யிருத்தியாட் கொண்ட
இறைவனைக் கண்டுகொண் டேனே. 3

உணர்ந்தவ ருளப்போன் றென்னுளத் தமர்ந்த
ஒருபெரும் பதியையென் னுவப்பைப்
புணர்ந்தெனைக் கலந்த போகத்தை யெனது
பொருளையென் புண்ணியப் பயனைக்
கொணர்ந்தொரு பொருளென் கரத்திலே கொடுத்த
குருவையென் குணப்பெருங் குன்றை
மணந்தசெங் குவளை மலரெனக் களித்த
வள்ளலைக் கண்டுகொண் டேனே. 4

புல்லிய நெறிநீத் தெனையெடுத் தாண்ட
பொற்சபை யப்பனை வேதஞ்
சொல்லிய படியென் சொல்லெலாங் கொண்ட
ஜோதியைச் சோதியா தென்னை
மல்லிகை மாலை யணிந்துளே கலந்து
மன்னிய பதியையென் வாழ்வை
எல்லியு மிரவு மென்னைவிட் டகலா
இறைவனைக் கண்டுகொண் டேனே. 5

பண்ணிய தவமும் பலமுமெப் பலஞ்செய்
பதியுமா மொருபசு பதியை
நண்ணியென் னுளத்தைத் தன்னுள மாக்கி
நல்கிய கருணைநா யகனை
எண்ணியபடியே யெனக்கருள் புரிந்த
இறைவனை மறைமுடி யிலங்குந்
தண்ணிய விளக்கைத் தன்னிக ரில்லாத்
தந்தையைக் கண்டுகொண் டேனே. 6

பெண்மையை வயங்கு மாண்மையை யனைத்தும்
பிறங்கிய பொதுமையைப் பெரிய
தன்மையை யெல்லாம் வல்லவோர் சித்த
சாமியைத் தயாநிதி தன்னை
வன்மையை யழியா வரத்தினை ஞான
வாழ்வையென் மதியிலே விளங்கும்
உண்மையை யென்ற னுயிரையென் னுயிருள்
ஒருவனைக் கண்டுகொண் டேனே. 7

ஆதியை யாதி யந்தமீ தெனவுள்
ளறிவித்த வறிவையெ னன்பை
ஜோதியை யெனது துணையையென் சுகத்தைச்
சுத்தசன் மார்க்கத்தின் துணிபை
நீதியை யெல்லா நிலைகளுங் கடந்த
நிலையிலே நிறைந்தமா நிதியை
ஓதியை யோதா துணர்த்திய வொளியை
ஒளிதனைக் கண்டுகொண் டேனே. 8

என்செய லனைத்துந் தன்செய லாக்கி
என்னைவாழ் விக்கின்ற பதியைப்
பொன்செயல் வகையை யுணர்த்தியென் னுளத்தே
பொருந்திய மருந்தையென் பொருளை
வன்செய லகற்றி யுலகெலாம் விளங்க
வைத்தசன் மார்க்கசற் குருவைக்
கொன்செய லொழித்த சத்திய ஞானக்
கோயிலிற் கண்டுகொண் டேனே. 9

புன்னிக ரில்லேன் பொருட்டிருட் டிரவிற்
போந்தரு ளளித்தசற் குருவை
கன்னிகர் மனத்தைக் கரைத்தெனுட் கலந்த
கருணையங் கடவுளைத் தனது
சொன்னிக ரெனவென் சொல்லெலாங் கொண்டே
தோளுறப் புனைந்தமெய்த் துணையைத்
தன்னிக ரில்லாத் தலைவனை யெனது
தந்தையைக் கண்டுகொண் டேனே. 10

ஏங்கலை மகனே தூங்கலை யெனவந்
தெடுத்தெனை யணைத்தவென் தாயை
ஓங்கிய வெனது தந்தையை யெல்லாம்
உடையவென் னொருபெரும் பதியைப்
பாங்கனி லென்னைப் பரிந்துகொண் டெல்லாப்
பரிசுமீங் களித்ததற் பரத்தைத்
தாங்குமோர் நீதித் தனிப்பெருங் கருணைத்
தலைவனைக் கண்டுகொண் டேனே. 11

துன்புறேல் மகனே தூங்கலை யெனவென்
சோர்வெலாந் தவிர்த்தநற் றுணையை
அன்புளே கலந்த தந்தையை யென்றன்
ஆவியைப் பாவியே னுளத்தை
இன்பிலே நிறைவித் தருளுரு வாக்கி
இனிதமர்ந் தருளிய விறையை
வன்பிலாக் கருணை மாநிதி யெனுமென்
வள்ளலைக் கண்டுகொண் டேனே. 12

நனவினு மெனது கனவினு மெனக்கே
நண்ணிய தண்ணிய வமுதை
மனனுறு மயக்கந் தவிர்த்தருட் ஜோதி
வழங்கிய பெருந்தயா நிதியைச்
சினமுத லாறுந் தீர்த்துளே யமர்ந்த
சிவகுரு பதியையென் சிறப்பை
உனலரும் பெரிய துரியமேல் வெளியில்
ஒளிதனைக் கண்டுகொண் டேனே. 13

கரும்பிலின் சாற்றைக் கனிந்தமுக் கனியைக்
கருதுகோற் றேனுறுஞ் சுவையை
அரும்பெற லமுதை யறிவையென் னன்பை
ஆவியை யாவிபுட் கலந்த
பெருந்தனிப் பதியைப் பெருஞ்சுகக் களிப்பைப்
பேசுதற் கரும்பெரும் பேற்றை
விரும்பியென் னுளத்தை யிடங்கொண்டு விளங்கும்
விளக்கினைக் கண்டுகொண் டேனே. 14

களங்கோளுங் கடையேன் களங்கெலாந் தவிர்த்துக்
களிப்பெலா மளித்தசர்க் கரையை
உளங்கொளுந் தேனை புணவுனைத் தெவிட்டா
துள்ளகத் தூறுமின் னமுதை
வளங்கொளும் பெரிய வாழ்வையென் கண்ணுண்
மணியையென் வாழ்க்கைமா நிதியைக்
குளங்கொளு மொளியை யொளிக்குளே விளங்குங்
குருவையான் கண்டுகொண் டேனே. 15

சிதம்பர வொளியைச் சிதம்பர வெளியைச்
சிதம்பர நடம்புரி சிவத்தைப்
பதந்தரு பதத்தைப் பரம்பர பதத்தைப்
பதிசிவ பதத்தைத்தற் பதத்தை
இதந்தரு முண்மைப் பெருந்தனி நிலையை
யாவுமா யல்லவாம் பொருளைச்
சதந்தரு சச்சி தானந்த நிறைவைச்
சாமியைக் கண்டுகொண் டேனே. 16

ஆரண முடிமே லமர்பிர மத்தை
ஆகம முடியமர் பரத்தைக்
காரண வரத்தைக் காரிய தரத்தைக்
காரிய காரணக் கருவைத்
தாரண நிலையைத் தத்துவ பதியைச்
சத்திய நித்திய தலத்தைப்
பூரண சுகத்தைப் பூரண சிவமாம்
பொருளினைக் கண்டுகொண் டேனே. 17

சுத்தவே தாந்தப் பிரம [1] ரா சியத்தைச்
சுத்தசித் தாந்தரா சியத்தைத்
தத்துவா தீதத் தனிப்பெரும் பொருளைச்
சமரச சத்தியப் பொருளைச்
சித்தெலாம் வல்ல சித்தையென் னறிவிற்
றெளிந்தபே ரானந்தத் தெளிவை
வித்தமாம் வெளியைச் சுத்தசிற் சபையின்
மெய்ம்மையைக் கண்டுகொண் டேனே. 18

1 ராசியம் என்பது—இரகசியம்.

சமயமு மதமுங் கடந்ததோர் ஞான
சபைநடம் புரிகின்ற தனியைத்
தமையறிந் தவருட் சார்ந்தமெய்ச் சார்பைச்
சத்துவ நித்தசற் குருவை
அமையவென் மனத்தைத் திருத்திநல் லருளா
ரமுதளித் தமர்ந்தவற் புதத்தை
நிமலநிர்க் குணத்தைச் சிற்குணா கார
நீதியைக் கண்டுகொண் டேனே. 19

அளவைக ளனைத்துங் கடந்துநின் றோங்கும்
அருட்பெருஞ் ஜோதியை யுலகக்
களவைவிட் டவர்தங் கருத்துளே விளங்குங்
காட்சியைக் கருணையங் கடலை
உளவையென் றனக்கே யுரைத்தெலாம் வல்ல
ஒளியையு முதவிய வெளியைக்
1 குளவயி னிறைந்த குருசிவ பதியைக்
கோயிலிற் கண்டுகொண் டேனே. 20

சார்கலாந் தாதிச் சடாந்தமுங் கலந்த
சமரச சத்திய வெளியைச்
சோர்வெலாந் தவிர்த்தென் னறிவினுக் கறிவாய்த்
துலங்கிய ஜோதியைச் சோதிப்
பார்பெறும் பதத்தைப் பதமெலாங் கடந்த
பரமசன் மார்க்கமெய்ப் பதியைச்
சேர்குணாந் தத்திற் சிறந்ததோர் தலைமைத்
தெய்வத்தைக் கண்டுகொண் டேனே. 21

அடிநடு முடியோ ரணுத்துணை யேனும்
அறிந்திடப் படாதமெய் யறிவைப்
படிமுத லண்டப் பரப்பெலாங் கடந்த
பதியிலே விளங்குமெய்ப் பதியைக்
கடியவென் மனனுங் கல்லையுங் கனியக்
கடைக்கணித் தருளிய கருணைக்
கொடிவள ரிடத்துப் பெருந்தயா நிதியைக்
கோயிலிற் கண்டுகொண் டேனே. 22

பயமும்வன் கவலை யிடர்முத லனைத்தும்
பற்றறத் தவிர்த்தருட் பரிசும்
நயமும்நற் றிருவு முருவுமீங் கெனக்கு
நல்கிய நண்பைநன் றை
2 இயமுற வெனது குளநடு நடஞ்செய்
எந்தையை யென்னுயிர்க் குயிரைப்
புயனடு விளங்கும் புண்ணிய வெளியைப்
பொற்புறக் கண்டுகொண் டேனே. 23

1 குளம் என்பது—நெற்றி. 2 இயம் என்பது—ஒலி.

கலைநிறை மதியைக் கனலைச்செங் கதிரைக்
ககனத்தைக் காற்றினை யமுதை
நிலைநிறை யடியை யடிமுடி தோற்றா
நின்மல நிர்க்குண நிறைவை
மலைவறு முளத்தே வயங்குமெய் வாழ்வை
வரவுபோக் கற்றசின் மயத்தை
அலையறு கருணைத் தனிப்பெருங் கடலை
அன்பினிற் கண்டுகொண் டேனே. 24

மும்மையை யெல்லா முடையபே ரரசை
முழுதொருங் குணர்த்திய வுணர்வை
வெம்மையைத் தவிர்த்திங் கெனக்கரு ளமுதம்
வியப்புற வளித்த மெய்விளைவைச்
செம்மையை யெல்லாச் சித்தியு மென்பாற்
சேர்ந்திடப் புரியருட் டிறத்தை
அம்மையைக் கருணை யப்பனை யென்பே
ரன்பனைக் கண்டுகொண் டேனே. 25

கருத்தனை யெனது கண்ணனை யவனைக்
கருணையா ரமுதெனக் களித்த
ஒருத்தனை யென்னை யுடைய நாயகனை
உண்மைவே தாகம முடியின்
அருத்தனை யரனை யப்பனைத் திருச்சிற்
றம்பலத் தருணடம் புரியும்
நிருத்தனை யெனது நேயனை ஞான
நிலயனைக் கண்டுகொண் டேனே. 26

வித்தெலா மளித்த விமலனை யெல்லா
விளைவையும் விளக்கவல் லவனை
[1] அத்தெலாங் காட்டு மரும்பெறன் மணியை
ஆனந்தக் கூத்தனை யரசைச்
சத்தெலா மான சயம்புவை ஞான
சபைத்தனித் தலைவனைத் தவனைச்
சித்தெலாம் வல்ல சித்தனை யொன்றாந்
தெய்வத்தைக் கண்டுகொண் டேனே. 27

உத்தர ஞான சித்திமா புரத்தின்
ஓங்கிய வொருபெரும் பதியை
உத்தர ஞான சிதம்பர வொளியை
உண்மையை யொருதனி யுணர்வை
உத்தர ஞான நடம்புரி கின்ற
ஒருவனை யுலகெலாம் வழுத்தும்
உத்தர ஞான சுத்தசன் மார்க்கம்
ஓதியைக் கண்டுகொண் டேனே. 28

1 அத்து என்பது—செந்நிறம்.

புலைகொலை தவிர்த்த நெறியிலே யென்னைப்
புணர்த்திய புனிதனை யெல்லா
நிலைகளுங் காட்டி அருட்பெரு நிலையில்
நிறுத்திய நிமலனை யெனக்கு
மலைவறத் தெளிந்த வமுதளித் தழியா
வாழ்க்கையில் வாழவைத் தவனைத்
தலைவனை யின்ற தாயையென் னுரிமைத்
தந்தையைக் கண்டுகொண் டேனே. 29

பனியிடர் பயந்தீர்த் தெனக்கமு தளித்த
பரமனை யென்னுளே பழுத்த
கனியனை யவனை அருட்பெருஞ் ஜோதிக்
கடவுளைக் கண்ணினுண் மணியைப்
புனிதனை யெல்லாம் வல்லவோர் ஞானப்
பொருளெனக் களித்தமெய்ப் பொருளைத்
தனியனை யின்ற தாயையென் னுரிமைத்
தந்தையைக் கண்டுகொண் டேனே. 30

அருட்பெருஞ்ஜோதி

## 45. குருதரிசனம்

திருமுதுகுன்றம்.

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

திருமால் கமலத் திருக்கண்மலர் திகழு மலர்த்தாட் சிவக்கொழுந்தைக்
கருமா லகற்றுந் தனிமருந்தைக் கனக சபையிற் கலந்தவொன்றை
அருமா மணியை யாரமுதை யன்பை யறிவை யருட்பெருக்கைக்
குருமா மலையைப் பழமலையிற் குலவி யோங்கக் கண்டேனே. 1

வான நடுவே வயங்குகின்ற மவுன மதியை மதியமுதைத்
தேனை யளிந்த பழச்சுவையைத் தெய்வ மணியைச் சிவபதத்தை
ஊன மறியா துளத்தொளிரு மொளியை யொளிக்கு மொருபொருளை
ஞான மலையைப் பழமலைமேல் நண்ணி விளங்கக் கண்டேனே. 2

தவள நிறத்துத் திருநீறு தாங்கு மணித்தோட் டாணுவைநங்
குவளை விழித்தா யொருபுறத்தே குலவ விளங்குங் குருமணியைக்
கவள மதமா கரியுரியைக் களித்த மேனிக் கற்பகத்தைப்
பவள மலையைப் பழமலையிற் பரவி யேத்திக் கண்டேனே. 3

இளைத்த விடத்தி லுதவியன்ப ரிடத்தே யிருந்த வேமவைப்பை
வளைத்த மதின்மூன் றெரித்தருளை வளர்த்த கருணை வாரிதியைத்
திளைத்த யோக ருளத்தோங்கித் திகழுந் துரியா தீதமட்டுங்
கிளைத்த மலையைப் பழமலையிற் கிளர்ந்து வயங்கக் கண்டேனே. 4

மடந்தை மலையாண் மனமகிழ மருவும் பதியைப் பசுபதியை
அடர்ந்த வினையின் றொடக்கையறுத் தருளு மரசை யலைகடன்மேற்
கிடந்த பச்சைப் பெருமலைக்குக் கேடி லருள்தந் தகம்புறமுங்
கடந்த மலையைப் பழமலைமேற் கண்கள் களிக்கக் கண்டேனே. 5

துனியும் பிறவித் தொடுவழக்குஞ் சோர்ந்து விடவுந் தூரியவெளிக்
கினியும் பருக்குங் கிடையாத வின்ப மடைந்தே யிருந்திடவும்
பணியுந் திமய மலைப்பச்சை படர்ந்த பவளப் பருப்பதத்தைக்
[1] கனியுஞ் சிலையுங் கலந்தவிட மெங்கே யங்கே கண்டேனே. 6

கருணைக் கடலை யக்கடலிற் கலந்த வமுதை யவ்வமுதத்
தருணச் சுவையை யச்சுவையிற் சார்ந்த பயனைத் தனிச்சுகத்தை
வருணப் பவளப் பெருமலையை மலையிற் பர்சை மருந்தொருபால்
பொருணச் சுறவே பழமலையிற் பொருந்தி யோங்கக் கண்டேனே. 7

என்னு ருயிரிற் கலந்துகலந் தினிக்குங் கரும்பின் கட்டிதனைப்
பொன்னார் வேணிக் கொழுங்கனியைப் புனிதருளத்திற் புகுங் களிப்பைக்
கன்னு ருரித்தூப் பணிகொண்ட கருணைப் பெருக்கைக் கலைத்தெளிவைப்
பன்னு கப்பூ ணணிநயப்பப் பழைய மலையிற் கண்டேனே. 8

நல்ல மனத்தே தித்திக்க நண்ணுங் கனியை நலம்புரிந்தென்
அல்ல லகற்றும் பெருவாழ்வை யன்பாலியன்ற வருமருந்தைச்
சொல்ல முடியாத் தனிச்சுகத்தைத் தூரிய நடுவே தோன்றுகின்ற
வல்ல மலையைப் பழமலையில் வயங்கி யோங்கக் கண்டேனே. 9

ஆதி நடுவு முடிவுமிலா வருளா னந்தப் பெருங்கடலை
ஓதி யுணர்தற் கரியசிவ யோகத் தெழுந்த வொருசுகத்தைப்
பாதியாகி யொன்றாகிப் படர்ந்த வடிவைப் பரம் பரத்தை
ஜோதி மலையைப் பழமலையிற் சூழ்ந்து வணங்கிக் கண்டேனே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 46. திருவடி நிலை

## வியப்பு

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

உலகுபல் கோடி கோடிக ளிடங்கொ ளுலப்பிலா வண்டத்தின் பகுதி
அலகுகாண் பரிய பெரியகூட் டத்த வவையெலாம் புறத்தொரு சார்பில்
விலகுறு வணுவிற் கோடியி லொருகூற் றிருந்தென விருந்தென மிடைந்தே
இலகுபொற் பொதுவி னடம்புரி கருணை யிணையடிச் சமுகத்தோ ரிடத்தே.

1 கனியுஞ்சிலை என்பது—விளைந்தமலை, அதாவது மேரு.

தடையுறும் பிரமன் விண்டுருத் திரன்மா யேச்சுரன் சதாசிவன் விந்து
நடையுறும் பிரம முபரபரா சத்தி நவில்பர சிவமெனு மிவர்கள்
இடையுறுந் திருச்சிற் றம்பலத்தாடு மிடதுகாற் கடைவிர னகத்தின்
கடையுறு துகளென் றறிந்தன னதன்மேற் கண்டனன் திருவடி நிலையே. 2

அடர்மலத் தடையாற் றடையுறு மயன்மா லரன்மயேச் சுரன்சதா சிவன்வான்
படர்தரு விந்து பிரணவப் பிரமம் பரைபரம் பரனெனு மிவர்கள்
சுடர்மணிப் பொதுவிற் றிருநடம் புரியுந் துணையடிப் பாதுகைப் புறத்தே
இடர்கெட வயங்கு துகளென வறிந்தே னேத்துவன் திருவடி நிலையே. 3

இகத்துழல் பகுதித் தேவரிந் திரன்மால் பிரமனீ சானனே முதலாம்
மகத்துழல் சமய வானவர் மன்றின் மலரடிப் பாதுகைப் புறத்தும்
புகத்தரம் பொருந்தா மலத்துறு சிறிய புழுக்களென் றறிந்தன னதன்மேற்
செகத்தொடர் பிகந்தா ருளத்தம ரொளியிற் றெரிந்தனன் திருவடி நிலையே. 4

பொன்வணப் பொருப்பொன் றதுசகு ணத்தம் போந்தவான் முடியதாங் கதன்மேல்
மன்வணச் சோதித் தம்பமொன் றதுமா வயிந்துவாந் தந்ததாண் டதன்மேல்
என்வணச் சோதிக் கொடிபர நாதாந் தத்திலே யிலங்கின ததன்மேல்
தன்வண மனைத்து மொளிமலராகத் தழுவினன் திருவடி நிலையே. 5

ஒண்முதற் பகர்பொன் வண்ணத்த வுளவான் மற்றவற் றுட்புறங் கீழ்மேல்
நண்ணுறு மணந்தர் பக்கமென் றிவற்றி னமைந்தன சத்திக ளவற்றின்
ஒண்ணுறு சத்த ரெனுமிரு புடைக்கும் கருதுரு முதலிய விளங்க
அண்ணுறு முபய மெனமன்றி லென்று நவின்றனர் திருவடி நிலையே. 6

தொகையள விவையென் றறிவரும் பகுதித் தொல்லையி னெல்லையு மவற்றின்
வகையொடு விரியு முளப்பட வாங்கே மன்னியெங் கணுமிரு பாற்குத்
தகையுறு முதலா வனைங்கடை யாகத் தயங்கமற் றதுவது கருவிச்
சிகையுற வுபய மெனமன்றி லாடு மென்பராற் றிருவடி நிலையே. 7

என்றவோங் கியமா மாயையின் பேத வகைதொகை விரியென மலிந்த
வான்றிரின் றனந்த கோடிகோ டிகளா வுற்றன மற்றவை யெல்லாம்
ஒன்றவந் நிலையி னுருச்சுவை விளங்க நின்றசத் திகளொடு சத்தர்
சென்றதி கரிப்ப நடித்திடும் பொதுவி லென்பராற் றிருவடி நிலையே. 8

அசுமோங் கார மீறதாப் பேசாப் பெரியவோங் காரமே முதலாய்
ஈசறு மங்க முபாங்கம்வே றங்க மென்றவற் றவணவ ணிசைந்த
தேசறு சத்தி சத்தராண் டமைத்து மன்னதி காரமைந் திபற்றத்
தகசெய் தணிபொன் னம்பலத் தாடு மென்பராற் றிருவடி நிலையே. 9

உரைதரு சுத்த நிலைமுத லதீதப் பதிவரை நிறுவியாங் கதன்மேல்
வரைதர வொண்ணு வெறுவெளி வெட்ட வெறுவெளி யெனகுல குணர்ந்த
உரையறு மின்ப வனுபவந் தரற்கோர் திருவுருக் கொண்டுபொற் பொதுவில்
வரையறு மின்ப நடம்புரிகின்ற வென்பராற் றிருவடி நிலையே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 47. அச்சோப் பத்து

அறுசீரடி ஆசிரிய விருத்தம்.

அருட்பெருஞ்ஜோதி

கருத்தனையென் கண்மணியைக் கண்ணுதலைப்
பெருங்கருணைக் கடலை வேதத்
திருத்தனையென் சிவபதியைத் திங்கனியைத்
தெள்ளமுதத் தெளிவை வானில்
ஒருத்தனையென் னுயிர்த்துணையை யுயிர்க்குயிரை
உயிர்க்குணர்வை யுணர்த்த றுதி
அருத்தனைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்
ஜோதியைப்பெற்றே னச்சோ வச்சோ. 1

மெய்யனையென் துயர்தவிர்த்த விமலனையென்
னிதயத்தே விளங்கு கின்ற
துய்யனைமெய்த் துணைவனைவான் துரியநிலைத்
தலைவனைச்சிற் சுகந்தந் தானைச்
செய்யனைவெண் ணிறத்தனையென் சிவபதியை
யொன்றான தெய்வந் தன்னை
அப்பனைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்
ஜோதியைப்பெற்றே னச்சோ வச்சோ. 2

எப்பொருளு மெவ்வுயிரு மெவ்வுலகும்
விளங்கவிளக் கிடுவான் றன்னைச்
செப்பரிய பெரியவொரு சிவபதியைச்
சிவகதியைச் சிவபோ கந்தைத்
துப்புரவு பெறவெனக்கே யருளமுதந்
துணிந்தளித்த துணையை யென்றன்
அப்பனைச்சிற் றம்பலத்தென் னருட்பெருஞ்
ஜோதியைப் பெற்றே னச்சோ வச்சோ. 3

பிறிவனைத்துந் தோற்றாதென் னுளங்கலந்த
பெருந்தகையெம் பெருமான் றன்னைச்
செறிவனைத்து மென்மனத்துக் களித்தெனக்குப்
பெருங்களிப்புச் செய்தான் றன்னை
முறிவனைத்து மின்றியரு ளமுதனைவு
கொடுத்தெனக்கு முன்னின் றானை
அறிவனைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்
ஜோதியைப்பெற்றே னச்சோ வச்சோ. 4

பொன்புனையுள் ளொளிக்கொளியைப் பூரணமாம்
பெரும்பொருளைப் புநிதந் தன்னை
என்பிழையைப் பொறுத்தெனையு மேன்றுகொண்ட
பெருங்கருணை யியற்கை தன்னை
இன்பினையென் னிதயத்தே யிருந்தருளும்
பெருவாழ்வை யென்னு ளோங்கும்
அன்பினைச்சிற் றம்பலத்தென் னருட்பெருஞ்
ஜோதியைப்பெற்றே னச்சோ வச்சோ. 5

இத்தனையென் றிடமுடியாச் சத்தியெலா
முடையானை யெல்லாம் வல்ல
சித்தனையென் சிவபதியைத் தெய்வமெலாம்
விரித்தடக்குந் தெய்வந் தன்னை
எத்தனையு மென்பிழைகள் பொறுத்ததனிப்
பெருந்தாயை யென்னை யீன்ற
அத்தனைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்
ஜோதியைப்பெற்றே னச்சோ வச்சோ. 6

எம்மையுமென் றனைப்பிரியா தென்னுளமே
யிடங்கொண்ட விறைவன் றன்னை
இம்மையிலென் றனக்கழியாத் திருவடிவந்
தந்தானை யெல்லாம் வல்ல
செம்மைதரு சித்தனையென் சிவபதியைத்
தெள்ளமுதத் திரளை யென்றன்
அம்மையைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்
ஜோதியைப்பெற்றே னச்சோ வச்சோ. 7

என்னையுமென் பொருளையுமென் னாவியையுந்
தான்கொண்டிங் கென்பா லன்பால்
தன்னையுந்தன் பொருளையுந்தான் னாவியையுங்
களித்தளித்த தலைவன் றன்னை
முன்னையும்பின் னையுமெனக்கே முழுத்துணையா
யிருந்தமுழு முதல்வன் றன்னை
அன்னையைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்
ஜோதியைப்பெற்றே னச்சோ வச்சோ. 8

எண்ணலைவே றிரங்கலைநின் னெண்ணமெலாந்
தருகின்றோ மின்னே யென்றென்
கண்ணிரம்ப வொளிகாட்டிக் கருத்திலமர்ந்
திருக்கின்ற கருத்தன் றன்னைப்
புண்ணியனை யுளத்தூறும் புத்தமுதை
மெய்யின்பப் பொருளை யென்றன்
அண்ணலைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்
ஜோதியைப்பெற்றே னச்சோ வச்சோ. 9

சாதியைநீள் சமயத்தை மதத்தையெலாம்
விடுவித்தென் றன்னை ஞான
நீதியிலே சுத்தசிவ சன்மார்க்க
நிலைதனிலே நிறுத்தி னானைப்
பாதியையொன் றானவனைப் பரம்பரனைப்
பராபரனைப் பதிய னாதி
ஆதியைச்சிற் றம்பலத்தென் அருட்பெருஞ்
ஜோதியைப்பெற் றேனச்சோ வச்சோ. 10

அருட்பெருஞ்ஜோதி

# 48. பரசிவநிலை

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அருட்ஜோதித் தெய்வமெனை யாண்டுகொண்ட தெய்வம்
அம்பலத்தே யாடுகின்ற வானந்தத் தெய்வம்
பொருட்சாரு மறைகளெலாம் போற்றுகின்ற தெய்வம்
போதாந்தத் தெய்வமுயர் நாதாந்தத் தெய்வம்
இருட்பாடு நீக்கியொளி யீந்தருளுந் தெய்வம்
எண்ணியநா னெண்ணியவா றெனக்கருளுந் தெய்வம்
தெருட்பாட லுவந்தெனையுஞ் சிவமாக்குந் தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். 1

எல்லாஞ்செய் வல்லதெய்வ மெங்குநிறை தெய்வம்
என்னுயிரிற் கலந்தெனக்கே யின்பநல்குந் தெய்வம்
நல்லார்க்கு நல்லதெய்வம் நடுவான தெய்வம்
நற்சபையி லாடுகின்ற நடராஜத் தெய்வம்
கல்லார்க்குங் கற்றவர்க்குங் களிப்பருளுந் தெய்வம்
காரணமாந் தெய்வமருட் பூரணமாந் தெய்வம்
செல்லாத நிலைகளெலாஞ் செல்லுகின்ற தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். 2

தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வம்
தன்னைநிக ரில்லாத தனித்தலைமைத் தெய்வம்
வாயார வாழ்த்துகின்றோர் மனத்தமர்ந்த தெய்வம்
மலரடியென் சென்னிமிசை வைத்தபெருந் தெய்வம்
காயாது கனியாகிக் கலந்தினிக்குந் தெய்வம்
கருணைநிதித் தெய்வமுற்றுங் காட்டுவிக்குந் தெய்வம்
சேயாக வெனைவளர்க்குந் தெய்வமகா தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். 3

என்னிதயக் கமலத்தே யிருந்தருளுந் தெய்வம்
என்னிரண்டு கண்மணிக்கு ளிலங்குகின்ற தெய்வம்
பொன்னடியென் சென்னியிலே பொருந்தவைத்த தெய்வம்
பொய்யாத தெய்வமிடர் செய்யாத தெய்வம்
அன்னியமல் லாததெய்வ மறிவான தெய்வம்
அவ்வறிவுக் கறிவாமென் னன்பான தெய்வம்
சென்னிலையிற் செம்பொருளாய்த் திகழ்கின்ற தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். 4

எண்ணியவா விளையாடென் றெனையளித்த தெய்வம்
எல்லாஞ்செய் வல்லசித்தே யெனக்கிந்த தெய்வம்
நண்ணியபொன் னம்பலத்தே நடம்புரியுந் தெய்வம்
நானாகித் தானாகி நண்ணுகின்ற தெய்வம்
பண்ணியவென் பூசையிலே பலித்தபெருந் தெய்வம்
பாடுகின்ற மறைமுடியி லாடுகின்ற தெய்வம்
திண்ணியனென் றெனையுலகஞ் செப்பவைத்த தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். 5

இச்சையெலா மெனக்களித்தே யெனைக்கலந்த தெய்வம்
இறந்தவர்க ளெனைவரையு மெழுப்புகின்ற தெய்வம்
எச்சமயத் தெய்வமுந்தா னெனநிறைந்த தெய்வம்
எல்லாஞ்செய் வல்லதெய்வ மெனதுகுல தெய்வம்
பிச்சகற்றும் பெருந்தெய்வஞ் சிவகாமி யெனுமோர்
பெண்கொண்ட தெய்வமெங்குங் கண்கண்ட தெய்வம்
1 செச்சைமல ரெனவிளங்குந் திருமேனித் தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். 6

சாகாத வரமெனக்கே தந்ததனித் தெய்வம்
சன்மார்க்க சபையிலெனைத் தனிக்கவைத்த தெய்வம்
மாகாத லாலெனக்கு வாய்த்தவொரு தெய்வம்
மாதவரா தியரெல்லாம் வாழ்த்துகின்ற தெய்வம்
ஏகாத நிலையதன்மே லெனையேற்றுந் தெய்வம்
எண்ணுதோறு மென்னுளத்தே யினிக்கின்ற தெய்வம்
தேகாதி யுலகமெலாஞ் செயப்பணித்த தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். 7

தூண்டாத மணிவிளக்காய்த் துலங்குகின்ற தெய்வம்
துரியதெய்வ மரியதெய்வம் பெரியபெருந் தெய்வம்
மாண்டாரை யெழுப்புகின்ற மருந்தான தெய்வம்
மாணிக்க வல்லியையோர் வலத்தில்வைத்த தெய்வம்
ஆண்டாரை யாண்டதெய்வம் அருட்ஜோதித் தெய்வம்
ஆகமவே தாதியெலா மறிவரிதாந் தெய்வம்
தீண்டாத வெளியில்வளர் தீண்டாத தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். 8

1 செச்சைமலர் என்பது—வெட்சிமலர்.

எவ்வகைத்தாந் தவஞ்செயினு மெய்தரிதாந் தெய்வம்
எனக்கெளிதிற் கிடைத்ததென்மன மிடங்கொண்ட தெய்வம்
அவ்வகைத்தாந் தெய்வமதற் கப்பாலாந் தெய்வம்
அப்பாலும் பெருவெளிக்கே யப்பாலாந் தெய்வம்
ஒவ்வகத்தே யொளியாகி யோங்குகின்ற தெய்வம்
ஒன்றான தெய்வமிக நன்றான தெய்வம்
செவ்வகைத்தென் றறிஞரெலாஞ் சேர்பெரிய தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். 9

சத்தியமாந் தனித்தெய்வந் தடையறியாத் தெய்வம்
சத்திகளெல் லாம்விளங்கத் தானோங்குந் தெய்வம்
நித்தியதன் மயமாகி நின்றதெய்வ மெல்லா
நிலைகளுந்தன் னருள்வெளியில் நிலைக்கவைத்த தெய்வம்
பத்திவலைப் படுகின்ற தெய்வமெனக் கெல்லாப்
பரிசுமளித் தழியாத பதத்தில்வைத்த தெய்வம்
சித்தியெலாந் தருந்தெய்வஞ் சித்தாந்தத் தெய்வம்
சிற்சபையில் விளங்குகின்ற தெய்வமதே தெய்வம். 10

அருட்பெருஞ்ஜோதி

# 49. சிவானந்தநிலை

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அணிவளர் திருச்சிற் றம்பலத் தாடு மானந்த போகமே யமுதே
மணிவள ரொளியே யொளியினுள் ளொளியே மன்னுமென் னுருயிர்த் துணையே
துணிவுறு சித்தாந் தப்பெரும் பொருளே தூயவே தாந்தத்தின் பயனே
பணிவுறு முளத்தே யினித்திட வெனக்கே பழுத்தபே ரானந்தப் பழமே. 1

திருவளர் திருச்சிற் றம்பலத் தாடுந் தெய்வமே மெய்ப்பொருட் சிவமே
உருவளரொளியே யொளியினுள்ளொளியே ஓங்குமென் னுயிர்ப்பெருந் துணையே
ஒருதனித் தலைமை யருள்வெளி நடுவே உவந்தர சளிக்கின்ற வரசே
பருவர னீக்கி யினித்திட வெனக்கே பழுத்தபே ரானந்தப் பழமே. 2

துதிவளர் திருச்சிற் றம்பலத் தோங்குஞ் ஜோதியுட் ஜோதியே யெனது
மதிவளர் மருந்தே மந்திர மணியே மன்னிய பெருங்குண மலையே
கதிதரு துரியத் தனிவெளி நடுவே கலந்தர சாள்கின்ற களிப்பே
பதியுறு முளத்தே யினித்திட வெனக்கே பழுத்தபே ரானந்தப் பழமே. 3

சீர்வளர் திருச்சிற் றம்பலத் தோங்குஞ் செல்வமே யென்பெருஞ் சிறப்பே
நீர்வளர் நெருப்பே நெருப்பினுள் ளொளியே நிறையொளி வழங்குமோர்வெளியே
ஏர்தரு கலாந்த மாதியா றந்தத் திருந்தர சாள்கின்ற பதியே
பாருறு முளத்தே யினித்திட வெனக்கே பழுத்தபே ரானந்தப் பழமே. 4

உரைவளர் திருச்சிற் றம்பலத் தோங்கு மொள்ளிய தெள்ளிய வொளியே
வரைவளர் மருந்தே மவுனமந் திரமே மந்திரத் தாற்பெற்ற மணியே
நிரைதரு சுத்த நிலைக்குமே னிலையி னிறைந்தர சாள்கின்ற நிதியே
பரையுறு முளத்தே யினித்திட வெனக்கே பழுத்தபே ரானந்தப் பழமே 5

மேல்வளர் திருச்சிற் றம்பலத் தோங்கு மெய்யறி வானந்த விளக்கே
கால்வளர் கனலே கனல்வளர் கதிரே கதிர்நடு வளர்கின்ற கலையே
ஆலுறு முபசாந் தப்பர வெளிக்கப் பாலர சாள்கின்ற வரசே
பாலுறு முளத்தே யினித்திட வெனக்கே பழுத்தபே ரானந்தப் பழமே. 6

இசைவளர் திருச்சிற் றம்பலத் தோங்கு மின்பமே யென்னுடை யன்பே
திசைவள ரண்ட கோடிக ளனைத்துந் திகழுற திகழ்கின்ற சிவமே
மிசையுறு மவுன வெளிகடந் ததன்மேல் வெளியர சாள்கின்ற பதியே
பசையுறு முளத்தே யினித்திட வெனக்கே பழுத்தபே ரானந்தப் பழமே. 7

அருள்வளர் திருச்சிற் றம்பலத் தோங்கும் அரும்பெருஞ் ஜோதியே யெனது
பொருள்வள ரறிவுக் கறிவுதந் தென்னைப் புறம்விடா தாண்ட மெய்ப்பொருளே
மருவுமோர் நாத வெளிக்குமேல் வெளியில் மகிழ்ந்தர சாள்கின்ற வாழ்வே
பருவர னீக்கி யினித்திட வெனக்கே பழுத்தபே ரானந்தப் பழமே. 8

வான்வளர் திருச்சிற் றம்பலத் தோங்கு மாபெருங் கருணையம் பதியே
ஊன்வள ருயிர்கட் குயிர்தர எல்லா வுலகமு நிறைந்தபே ரொளியே
மான்முதன் மூர்த்தி மானிலைக் கப்பால் வயங்குமோர் வெளிநடு மணியே
பான்மையுற் றுளத்தே யினித்திட வெனக்கே பழுத்தபே ரானந்தப் பழமே.

தலம்வளர் திருச்சிற் றம்பலத் தோங்குந் தனித்தமெய்ப் பொருட்பெருஞ் சிவமே
நலம்வளர் கருணை நாட்டம்வைத் தென்னையே நண்புகொண் டருளிய நண்பே
வலமுறு நிலைகள் யாவையுங் கடந்து வயங்கிய தனிநிலை வாழ்வே
பலமுறு முளத்தே யினித்திட வெனக்கே பழுத்தபே ரானந்தப் பழமே. 10

அருட்பெருஞ்ஜோதி

---

## 50. ஆற்றாமை கூறல்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**அம்பலத்** தாடு மமுதமே யென்கோ அடியனே னாருயி ரென்கோ
ம்பலத் தெல்லாம் வல்லசித் தென்கோ என்னிரு கண்மணி யென்கோ
ம்பிடி லணைக்கு நற்றுணை யென்கோ நான்பெற்ற பெருஞ்செல்வ மென்கோ
ம்பரிப் பிறப்பே மெய்ப்பிறப் பாக்கி யென்னையாண் டருளிய நினையே. 1

அம்மையே யென்கோ வப்பனே யென்கோ அருட்பெருஞ் ஜோதியே யென்கோ
செம்மையே யெல்லாம் வல்லசித் தென்கோ திருச்சிற்றம் பலத்தமு தென்கோ
தம்மையே புணர்ந்தா ருளத்தொளி யென்கோ தமியனேன் றனித்துணை யென்கோ
இம்மையே யழியாத் திருவுரு வளித்திங் கென்னையாண் டருளிய நினையே. 2

எய்ப்பிலே கிடைத்த வைப்பது வென்கோ என்னுயிர்க் கின்பமே யென்கோ
துய்ப்பிலே நிறைந்த பெருங்களிப் பென்கோ ஜோதியுட் ஜோதியே யென்கோ
தப்பெலாம் பொறுத்த தயாநிதி யென்கோ தனிப்பெருந் தலைவனே யென்கோ
இப்பிறப் பதிலே மெய்ப்பய னளித்திங் கென்னையாண் டருளிய நினையே. 3

அச்சநீக் கியவென் னாரிய னென்கோ அம்பலத் தெம்பிரா னென்கோ
நிச்சலு மெனக்கே கிடைத்தவாழ் வென்கோ நீடுமென் னேயனே யென்கோ
பிச்சனேற் களித்த பிச்சனே யென்கோ பெரியரிற் பெரியனே யென்கோ
இச்சகத் தழியாப் பெருநல மளித்திங் கென்னையாண் டருளிய நினையே. 4

அத்தனோர் கிடைத்த சுவைக்கனி யென்கோ அன்பிலே நிறையமு தென்கோ
சித்தெலாம் வல்ல சித்தனே யென்கோ திருச்சிற்றம் பலச்சிவ மென்கோ
மத்தனேன் பெற்ற பெரியவாழ் வென்கோ மன்னுமென் வாழ்முத லென்கோ
இத்தனிப் பிறப்பை நித்தியமாக்கி யென்னையாண் டருளிய நினையே. 5

மறப்பெலாந் தவிர்த்த மதியமு தென்கோ மயக்கநீத் தருண்மருந் தென்கோ
பறப்பெலா மொழித்த பதிபத மென்கோ பதச்சுவை யனுபவ மென்கோ
சிறப்பெலா மெனக்கே செய்ததா யென்கோ திருச்சிற்றம் பலத்தந்தை யென்கோ
இறப்பிலா வடிவ மிம்மையே யளித்திங் கென்னையாண் டருளிய நினையே. 6

அன்பிலே பழுத்த தனிப்பழ மென்கோ அறிவிலே யறிவறி வென்கோ
இன்பிலே நிறைந்த சிவபத மென்கோ என்னுயிர்த் துணைப்பதி யென்கோ
வன்பிலா மனத்தே வயங்கொளி யென்கோ மன்னுமம் பலத்தர சென்கோ
என்புரி யழியாப் பொன்புரி யாக்கி யென்னையாண் டருளிய நினையே. 7

தடையிலா தெடுத்த வருளமு தென்கோ சர்க்கரைக் கட்டியே யென்கோ
அடைவுறு வயிரக் கட்டியே யென்கோ அம்பலத் தாணிப்பொன் னென்கோ
உடைய மாணிக்கப் பெருமலை யென்கோ உள்ளொளிக் குள்ளொளி யென்கோ
இடைதலற் றோங்குந் திருவளித் திங்கே யென்னையாண் டருளிய நினையே. 8

மறைமுடி விளங்கு பெரும்பொரு ளென்கோ மன்னுமா கமப்பொரு ளென்கோ
குறைமுடித் தருள்செய் தெய்வமே யென்கோ குணப்பெருங் குன்றமே யென்கோ
பிறைமுடிக் கணிந்த பெருந்தகை யென்கோ பெரியவம் பலத்தர சென்கோ
இறைமுடிப் பொருளென் னுளம்பெற வளித்திங் கென்னையாண் டருளிய நினையே.

என்னுளம் பிரியாப் பேரொளி யென்கோ என்னுயிர்த் தந்தையே யென்கோ
என்னுயிர்த் தாயே யின்பமே யென்கோ என்னுயிர்த் தலைவனே யென்கோ
என்னுயிர் வளர்க்குந் தனியமு தென்கோ என்னுடை நண்பனே யென்கோ
என்னொரு வாழ்வின் தனிமுத லென்கோ என்னையாண் டருளிய நினையே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 51. ஆற்ருமை கூறல் 2

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**கருணைமா** நிதியே யென்னிரு கண்ணே கடவுளே கடவுளே யென்கோ
தருணவா னமுதே யென்பெருந் தாயே தந்தையே தந்தையே யென்கோ
தெருணிறை மதியே யென்குரு பதியே தெய்வமே தெய்வமே யென்கோ
அருணிறை தருமென் அருட்பெருஞ் ஜோதி ஆண்டவ நின்றனை யறிந்தே. 1

ஒட்டியே யென்னு ளுறுமொளி யென்கோ ஒளியெலாம் நிரம்பிய நிலைக்கோர்
வெட்டியே யென்கோ வெட்டியி லெனக்கு விளங்குறக் கிடைத்தவோர் வயிரப்
பெட்டியே யென்கோ பெட்டியி னடுவே பெரியவர் வைத்ததோர் தங்கக்
கட்டியே யென்கோ அம்பலத் தாடுங் கருணையங் கடவுணின் றனையே. 2

துன்பெலாந் தவிர்த்த துணைவனே யென்கோ ஜோதியுட் ஜோதியே யென்கோ
அன்பெலா மளித்த அன்பனே யென்கோ அம்மையே யப்பனே யென்கோ
இன்பெலாம் புரிந்த இறைவனே யென்கோ என்னுயிர்க் கின்னமு தென்கோ
என்பொலா மணியே யென்கணே யென்கோ என்னுயிர் நாதநின் றனையே. 3

கருத்தனே யெனது கருத்தினுக் கிசைந்த கணவனே கணவனே யென்கோ
ஒருத்தனே யெல்லா முடைய நாயகனே ஒருதனிப் பெரியனே யென்கோ
திருத்தனே யெனது செல்வமே யெல்லாஞ் செயவல்ல சித்தனே யென்கோ
நிருத்தனே யெனக்குப் பொருத்தனே யென்கோ நிறையருட் ஜோதிநின் றனையே

தாயனே யெனது தந்தையே யொருமைத் தலைவனே தலைவனே யென்கோ
பேயனேன் பிழையைப் பொருந்தருள் புரிந்த பெருந்தகைப் பெரும்பதி யென்கோ
சேயனேன் பெற்ற சிவபத மென்கோ சித்தெலாம் வல்லசித் தென்கோ
தூயனே யெனது நேயனே யென்கோ ஜோதியுட் ஜோதிநின் றனையே. 5

அரும்பிலே மலர்வுற் றருண்மணம் வீசும் ஆனந்தத் தனிமல ரென்கோ
கரும்பிலே யெடுத்த சுவைத்திர ளென்கோ கடையனே னுடையபெருந் தகடாம்
இரும்பிலே பழுத்துப் பேரொளி ததும்பி யிலங்குமோர் பசும்பொனே யென்கோ
துரும்பினேன் பெற்ற பெரும்பத மென்கோ ஜோதியுட் ஜோதிநின் றனையே. 6

தாகமுள் ளெடுத்த போதெதிர் கிடைத்த சர்க்கரை யமுதமே யென்கோ
மோகம்வந் தடுத்த போதுகைப் பிடித்த முகமலர் கணவனே யென்கோ
போகமுள் விரும்பும் போதிலே வலிந்து புணர்ந்தவோர் பூவையே யென்கோ
ஆகமுட் புகுந்தென் னுயிரினுட் கலந்த அம்பலத் தாடிநின் றனையே. 7

தத்துவ மனைத்துந் தவிர்த்துநான் றனித்த தருணத்திற் கிடைத்ததோ ரென்கோ
சத்துவ நிரம்புஞ் சுத்தசன் மார்க்கந் தனிலுறு மனுபவ மென்கோ
ஒத்துவந் தெனைத்தான் கலந்துகொண் டெனக்குள் ஓங்கிய வொருமையே யென்கோ
சித்துவந் தாடுஞ் சித்தனே யென்கோ திருச்சிற்றம் பலத்தவ நினையே. 8

யோகமெய்ஞ் ஞானம் பலித்தபோ துளத்தில் ஓங்கிய காட்சியே யென்கோ
ஏகமெய்ஞ் ஞான யோகத்திற் கிடைத்துள் ளிசைந்தபே ரின்பமே யென்கோ
சாகலைத் தவிர்த்தென் றன்னைவாழ் விக்கச் சார்ந்தசற் குருமணி யென்கோ
மாகமும் புவியும் வாழ்வுற மணிமா மன்றிலே நடிக்கின்றோய் நினையே. 9

இரவிலா தியம்பும் பகலிலா திருந்த இயற்கையு ளியற்கையே யென்கோ
வரவிலா வுரைக்கும் போக்கிலா நிலையில் வயங்கிய வான்பொரு ளென்கோ
திரிவிலா தெல்லாம் வல்லசித் தெனக்கே செய்ததோர் சித்தனே யென்கோ
கரவிலா தெனக்குப் பேரருட் ஜோதி களித்தளித் தருளிய நினையே. 10

அருட்பெருஞ்ஜோதி

## 52. திருநடப்புகழ்ச்சி

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**ப**தியேயெம் பரனேயெம் பரம்பரனே யெமது
பராபரனே யானந்தப் பதந்தருமெஞ் ஞான
நிதியேமெய்ந் நிறைவேமெய்ந் நிலையேமெய் யின்ப
நிருத்தமிடுந் தனித்தலைமை நிபுணமணி விளக்கே
கதியேயென் கண்ணேயென் கண்மணியே யெனது
கருத்தேயென் கருத்திலுற்ற கனியேசெங் கனியே
துதியேயென் துரையேயென் தோழாவென் னுளத்தே
சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே. 1

ஆரணமே ஆகமமே ஆரணவா கமத்தின்
அரும்பொருளே யரும்பொருளி னனுபவமே யறிவே
காரணமே காரியமே காரணகா ரியங்கள்
கடந்தபெரும் பதியேயென் கருத்தமர்ந்த நிதியே
பூரணமே புண்ணியமே பொதுவிளங்கு பரமே
புத்தமுதே சத்தியமே பொன்னேசெம் பொருளே
தோரணமே விளங்குசித்தி புரத்தினுமென் னுளத்துஞ்
சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே. 2

இணையேது மின்றிநின்ற விறையவனே மறைசொல்
ஏகமுமா யனேகமுமா யிலங்குபரம் பரனே
அணையேது மின்றிநிறை பெரும்புனலே யதன்மேல்
அனலேயென் னப்பாவென் னவத்தையெலாங் கடத்தும்
புணையேமெய்ப் பொருளேமெய்ப் புகழேமெய்ப் புகலே
பொதுவே யுள்ளதுவே தற்போதமிலார்க் குதவுந்
துணையே சத்துவமே தத்துவமே யென்னுளத்தே
சுத்தநடம் புரிகின்ற சித்தசிகா மணியே. 3

ஆதியந்தந் தோற்றாத அரும்பெருஞ்சோ தியனே
அம்மேயென் னப்பாவென் னையாவென் னரசே
ஓதியெந்த வகையாலு முணர்ந்துகொளற் கரிதாய்
உள்ளபடி யியற்கையிலே யுள்ளவொரு பொருளே
ஊதியந்தந் தெனையாட்கொண் டுள்ளிடத்தும் புறத்தும்
ஓவாமல் விளங்குகின்ற வுடையவனே யிந்தச்
சாதியிந்த மதமெனும்வாய்ச் சழக்கையெலாந் தவிர்த்த
சத்தியனே யுண்கின்றேன் சத்தியத்தெள் ளமுதே. 3

அச்சமெலாந் தவிர்த்தருளி யிச்சையெலா மளித்த
அம்மேயென் னப்பாவென் னையாவென் னரசே
[1] துச்சவுல காசாரத் துடுக்கனைத்துந் தவிர்த்தே
சுத்தநெறி வழங்குவித்த சித்தசிகா மணியே
உச்சநிலை நடுவிளங்கு மொருதலைமைப் பதியே
உலகமெலா மெடுத்திடினு முலவாத நிதியே
இச்சமய மெழுந்தருளி யிறவாத வரமும்
எல்லாஞ்செய் வல்லசித்தி யியற்கையுந்தந் தனையே. 4

அன்புடைய வென்னறிவே யருளுடைய பொருளே
அம்மேயென் னப்பாவென் னையாவென் னரசே
துன்புடைய வுலகரெலாஞ் சுகமுடையா ராகத்
துன்மார்க்கந் தவிர்த்தருளிச் சன்மார்க்கம் வழங்க
இன்புடைய பேரருளிங் கெனைப்பொருள்செய் தளித்த
என்னமுதே யென்னுறவே யெனக்கினிய துணையே
என்புடைநீ யிருக்கின்றா யுன்புடைநான் மகிழ்ந்தே
இருக்கின்றே னிவ்வொருமை யார்பெறுவா ரீண்டே. 5

அடுக்கியபே ரண்டமெலா மணுக்களென விரித்த
அம்மேயென் னப்பாவென் னையாவென் னரசே
நடுக்கியவென் னச்சமெலாந் தவிர்த்தருளி யழியா
ஞானவமு தளித்துலகி னாட்டியபே ரறிவே
இடுக்கியகைப் பிள்ளையென விருந்தசிறி யேனுக்
கெல்லாஞ்செய் வல்லசித்தி யீந்தபெருந் தகையே
முடுக்கியவஞ் ஞானாந்த காரமெலாந் தவிர்த்து
முத்தருளத் தேழுளைத்த சுத்தபரஞ் சுடரே. 6

ஆங்காரந் தவிர்ந்தவருள் ளோங்காரத் தவனே
அம்மேயென் னப்பாவென் னையாவென் னரசே
ஓங்கார நிலைகாட்டி யதன்மேலுந் தெருளும்
ஒருநிலையுங் காட்டியப்பா லுயர்ந்ததனி நிலையிற்
பாங்காக வேற்றியெந்தப் பதத்தலைவ ராலும்
படைக்கவொணாச் சித்தியைநான் படைக்கவைத்த பதியே
தூங்காது பெருஞ்சுகமே சுகித்திடவில் வுலகைச்
சுத்தசன்மார்க் கந்தனிலே வைத்தருள்க விரைந்தே. 7

1 துச்சம் என்பது—உரிமையில்லாமை.

ஆடகப்போற் சபைநடுவே நாடகஞ்செய் தருளும்
அம்மேயென் னப்பாவென் னையாவென் னரசே
ஏடகத்தே யெழுதாத மறைகளெலாங் களித்தே
என்னுளத்தே யெழுதுவித்த வென்னுரிமைப் பதியே
பாடகக்கான் மடந்தையரு மைந்தருஞ்சன் மார்க்கப்
பயன்பெறநல் லருளளித்த பரம்பரனே மாயைக்
காடகத்தை வளஞ்செறிந்த நாடகமாப் புரிந்த
கருணையனே சிற்சபையிற் கனிந்தநறுங் கனியே. 8

அடியாதேன் றறிந்துகொளற் கரும்பெரிய நிலையே
அம்மேயென் னப்பாவென் னையாவென் னரசே
முடியாதென் றறிந்திடற்கு முடியாதென் றுணர்ந்தோர்
மொழிந்திடவே முடியாது முடிந்ததனி முடிபே
கடியாத பெருங்கருணைக் கருத்தேயென் கருத்திற்
கனிந்துகனிந் தினிக்கின்ற கனியேயென் களிப்பே
மடியாத வடிவெனக்கு வழங்கியநல் வரமே
மணிமன்றில் நடம்புரியும் வாழ்க்கையியற் பொருளே. 9

அனந்தமறை யாகமங்க ளளப்பரிய சிவமே
அம்மேயென் னப்பாவென் னையாவென் னரசே
மனந்தருவா தனைதவிர்ந்தோ ரறிவினிலோ ரறிவாய்
வயங்குகின்ற குருவேயென் வாட்டமெலாந் தவிர்த்தே
இனந்தழுவி யென்னுளத்தே இருந்துயிரிற் கலந்தென்
எண்ணமெலாங் களித்தளித்த வென்னுரிமைப் பதியே
சினந்தவிர்ந்தெவ் வுலகமுமோர் சன்மார்க்க மடைந்தே
சிறப்புறவைத் தருள்கின்ற சித்தசிகா மணியே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 54. திருவருட்புகழ்ச்சி

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அருட்பெருஞ் ஜோதிய முதமே யமுத மளித்தெனை வளர்த்திட வருளாந்
தெருட்பெருந் தாய்தன் கையிலே கொடுத்த தெய்வமே சத்தியச் சிவமே
இருட்பெரு நிலத்தைக் கடத்தியென் றனைமே லேற்றிய வின்பமே யெல்லாப்
பொருட்பெரு நெறியுங் காட்டிய குருவே பொதுநடம் புரிகின்ற பொருளே. 1

சித்தெலாம் வல்ல சித்தனே ஞான சிதம்பர ஜோதியே சிறியேன்
கத்தெலாந் தவிர்த்துக் கருத்தெலா மளித்த கடவுளே கருணையங் கடலே
சத்தெலா மொன்றே சத்திய மெனவென் றனக்கறி வித்ததோர் தயையே
புத்தெலா நீக்கிப் பொருளெலாங் காட்டும் பொதுநடம் புரிகின்ற பொருளே. 2

ளோ ரனந்த மனந்தமே ஞேக்கிக் கற்பங்கள் கணக்கில கடப்ப
ளோ ரனந்த நேடியுங் காணு நித்திய நிர்க்குண நிறைவே
ளற் றுயிருக் கமுதளித் தருளு மருட்பெருங் கடலெனு மரசே
ா வகற்றி யெனக்குளே நிறைந்து பொதுநடம் புரிகின்ற பொருளே. 3

ரிய மதியே தனித்தசெஞ் சுடரே சத்திய சாத்தியக் கனலே
ிய வொளியே யொளிக்குளோ ரொளியே யுலகெலாந் தழைக்கமெய் யுளத்தே
ரிய விளக்கே யெண்ணிய படிக்கே நல்கிய ஞானபோ னகமே
ரிய நிதியே கண்ணிய நிலையே பொதுநடம் புரிகின்ற பொருளே. 4

நிறைவே [1] சற்புத ரறிவி லறிவென வறிகின்ற வறிவே
ைன மாயைக் கற்பனை கடந்த துரியநன் னிலத்திலே துலங்குஞ்
ஞ் சுடரே தற்பர ஞானச் செல்வமே சித்தெலாம் புரியும்
ல மளித்த நற்புலக் கருத்தே பொதுநடம் புரிகின்ற பொருளே. 5

பதியே தத்துவங் கடந்த தனித்தவோர் சத்திய பதியே
நெறியிற் சார்ந்தசன் மார்க்கர் தமக்குளே சார்ந்தநற் சார்பே
ு சமயப் பிணக்குறு மவர்க்குப் பெறலரி தாகிய பேறே
தளித்தென் னுளத்திலே கலந்து பொதுநடம் புரிகின்ற பொருளே. 6

பளி காட்டி வெளியிலே விளைந்த விளைவெலாங் காட்டிமெய் வேத
ி காட்டி யென்னுளே விளங்கும் நோக்கமே யாக்கமுந் திறனும்
கப் பயனு மளித்தெனை வளர்க்கு நாயகக் கருணைநற் றுயே
ிர்க் குயிராய்ப் பொருந்திய மருந்தே பொதுநடம் புரிகின்ற பொருளே. 7

விளங்கு மருட்பெரு விளக்கே யரும்பெருஞ் ஜோதியே சுடரே
ரி யறுத்த வாய்மையெம் மருந்தே மருந்தெலாம் பொருந்திய மணியே
று கருணைச் செல்வமே யெல்லா வுயிர்க்குள நிறைந்ததோ ருணர்வே
கை தவிர்க்கும் பூரண வரமே பொதுநடம் புரிகின்ற பொருளே. 8

நிறைவே பராபர வெளியே பரமசிற் சுகந்தரும் பதியே
ு சிவசன் மார்க்கர்தம் மதியில் வயங்கிய பெருஞ்சுடர் மணியே
ு கனியே கனியுறு சுவையே கருதிய கருத்துறு களிப்பே
நிதியே சிரம்புகல் கதியே பொதுநடம் புரிகின்ற பொருளே. 9

முடியிற் றம்பமே லேற்றி மெய்ந்நிலை யமர்வித்த வியப்பே
கருத்தி லினிக்கின்ற கரும்பே கருணைவா னமுதத் தெண்கடலே
மறிவி லருளொளி யாகி யானந்த மாமனு பவமே
பதியே யற்புத நிதியே பொதுநடம் புரிகின்ற பொருளே. 10

ண் பரிய தலைவனே யெல்லாந் தரவல்ல சம்புவே சமயப்
் தகமும் புறமுமொத் தமைந்த புண்ணியர் நண்ணிய புகலே
சர் மனத்தை நன்மைசேர் மனமா வயங்குவித் தமர்ந்தமெய் வாழ்வே
சார் கனகப் பொதுவொடுஞானப் பொதுநடம் புரிகின்ற பொருளே. 11

1 சற்புதர் என்பது—நல்லறிவுடையவர். 2 உலப்பு என்பது—கேடு.





மூவிரு முடிபின் முடிந்தவோர் முடியே முடியெலாங் கடந்ததோர் முதலே
தாவிய முதலுங் கடையுமேற் காட்டாச் சத்தியத் தனிநடு நிலையே
மேவிய நடுவில் விளங்கிய விளைவே விளைவெலாந் தருகின்ற வெளியே
பூவிய லளித்த புனிதசற் குருவே பொதுநடம் புரிகின்ற பொருளே. 12

வேதமும் பொருளும் பயனுமோ ரடைவும் விளம்பிய வனுபவ விளைவும்
போதமுஞ் சுகமு மாகியிங் கிவைகள் போனதுமா யொளிர் புலமே
ஏதமுற் றிருந்த வேழையென் பொருட்டிவ் விருநிலத் தியலரு ளொளியாற்
பூதநல் வடிவங் காட்டியென் னுளத்தே பொதுநடம் புரிகின்ற பொருளே. 13

அடியனேன் பொருட்டிவ் வவனிமேற் கருணை யருள்வடி வெடுத்தெழுந் தருளி
நெடியனே முதலோர் பெறற்கருஞ் சித்தி நிலையெலா மளித்தமா நிதியே
மடிவுறா தென்றுஞ் சுத்தசன் மார்க்கம் வயங்கநல் வரந்தந்த வாழ்வே
பொடியணி கனகப் பொருப்பொளிர் நெருப்பே பொதுநடம் புரிகின்ற பொருளே

என்பிழை யனைத்தும் பொறுத்தருள் புரிந்தென் னிதயத்தி லிருக்கின்ற குருவே
அன்புடை யரசே யப்பனே யென்ற னம்மையே யருட்பெருஞ் ஜோதி
இன்புறு நிலையி லேற்றிய துணையே யென்னுயிர் நாதனே யென்னைப்
பொன்புனை மாலை புனைந்தவோர் பதியே பொதுநடம் புரிகின்ற பொருளே.

சத்திய பதியே சத்திய நிதியே சத்திய ஞானமே வேத
நித்திய நிலையே நித்திய நிறைவே நித்திய வாழ்வரு ணெறியே
சித்தியின் புருவே சித்தியின் கருவே சித்தியிற் சித்தியே யெனது
புத்தியின் தெளிவே புத்தமு தளித்துப் பொதுநடம் புரிகின்ற பொருளே.

சிதத்தொளிர் பரமே பரத்தொளிர் பதியே சிவபத வனுபவச் சிவமே
மதத்தடை தவிர்த்த மதிமதி மதியே மதிநிறை யமுதநல் வாய்ப்பே
சதத்திரு நெறியே தனிநெறித் துணையே சாமியே தந்தையே தாயே
[1]புதப்பெரு வரமே புகற்கருந் தரமே பொதுநடம் புரிகின்ற பொருளே. 17

கலைவளர் கலையே கலையினுட் கலையே கலையெலாந் தருமொரு கருவே
நிலைவளர் கருவுட் கருவென வயங்கு நித்திய வானமே ஞான
மலைவளர் மருந்தே மருந்துறு பலனே மாபலந் தருகின்ற வாழ்வே
புலைதவிர்த் தெனையும் பொருளெனக் கொண்டு பொதுநடம் புரிகின்ற பொருளே.

மெய்ம்மையே கிடைத்த மெய்ம்மையே ஞான விளக்கமே விளக்கத்தின் வியப்பே
கைம்மையே தவிர்த்து மங்கல மளித்த கருணையே கரிசிலாக் களிப்பே
ஐம்மையே யதற்கு ளதுவது வாகு மற்புதக் காட்சியே யெனது
பொய்ம்மையே பொறுத்துப் புகலளித் தருளிப் பொதுநடம் புரிகின்ற பொருளே.

காரண வுருவே காரிய வுருவே காரண காரியங் காட்டி
ஆரண முடிபு மாகம முடிபு மமர்ந்தொளி ரற்புதச் சுடரே
நாரண தரமே நாரண வலமே நாரணா காரத்தின் ஞாங்கர்ப்
பூரண வொளிசெய் பூரண சிவமே பொதுநடம் புரிகின்ற பொருளே. 20

அருட்பெருஞ்ஜோதி

1 புதம் என்பது—அறிவு.



# 55. திருவருட்பெருமை 1

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

ஸ்பனே யப்பா வம்மையே யரசே யருட்பெருஞ் ஜோதியே யடியென்
பெலாந் தொலைத்த துணைவனே ஞான சுகத்திலே தோற்றிய சுகமே
னே யெல்லாம் வல்ல சித்தாகி யென்னுளே யிலங்கிய பொருளே
னேன் பிழைகள் பொறுத்தருட் ஜோதி வழங்கினை வாழிநின் மாண்பே. 1

குமா கருணைப் பெருங்கட லின்பப் பெருக்கமே யென்பெரும் பேறே
நமோ ருள்ளத் [1] துவட்டுறு தினிக்கு முண்மைவா னமுதமே யென்பாற்
நெஞ் சதனைத் தளிர்த்திடப் புரிந்த கருணையங் கடவுளே விரைந்து
வென் றுரைத்தேன் வந்தருட் ஜோதி வழங்கினை வாழிநின் மாண்பே. 2

தயேன் குருவே யென்னுயிர்க் குயிரே யென்னிரு கண்ணினுண் மணியே
று மமுதே யென்னுயிர்த் துணையே யிணையிலா வென்னுடை யன்பே
தநல் லுறவே யம்பலத் தரசே ஜோதியே ஜோதியே விரைந்து
ந ளென்றேன் வந்தருட் ஜோதி வழங்கினை வாழிநின் மாண்பே. 3

வன வெனது குருவென ஞான குணமென வொளிர்சிவக் கொழுந்தே
ன வதிலே மணமென வணத்தின் பொலிவென வயங்கிய பொற்பே
னத் தேவ தேவென வொருமைச் சிவமென விளங்கிய பதியே
ன வுரைத்தேன் வந்தருட் ஜோதி வழங்கினை வாழிநின் மாண்பே. 4

மே யிடங்கொண் டென்னையாட் கொண்ட வொருவனே யுலகெலா மறியத்
ளமு தளித்திங் குன்னைவாழ் விப்பேஞ் சித்தமஞ் சேலென்ற சிவமே
மே தவிர்த்த கருணைமா நிதியே கடவுளே கனகவம் பலத்தென்
லே யென்றேன் வந்தருட் ஜோதி வழங்கினை வாழிநின் மாண்பே. 5

ா வளித்த நல்லவா வெனையும் நயந்தவா நாயினே னவின்ற
லவா வெனக்குத் துணையவா ஞான சுகத்தவா ஜோதியம் பலவா
பா வணைத்து மானவா வென்னை யாண்டவா தாண்டவா வெல்லாம்
ா வென்றேன் வந்தருட் ஜோதி வழங்கினை வாழிநின் மாண்பே. 6

மயே முதலைங் குணக்கரு வாய செல்வமே நல்வழி காட்டுங்
மயே கண்மை கலந்தவென் கண்ணே கண்ணுற விளைந்தநற் கருத்தே
மயே யெல்லா முடையவோர் தலைமை யொருதனித் தெய்வமே யுலவா
டயே யென்றேன் வந்தருட் ஜோதி வழங்கினை வாழிநின் மாண்பே. 7

ரயே தவிர்த்துக் கருணையே கனிந்த கற்பகத் தனிப்பெருந் தருவே
ரயே விளக்கித் துணைமையே யளித்த ஜோதியே தூய்மையில் லவர்க்குச்
ரயே யெல்லாஞ் செயவல்ல ஞான சித்தியே சுத்தசன் மார்க்க
பே யென்றேன் வந்தருட் ஜோதி வழங்கினை வாழிநின் மாண்பே. 8

1 உவட்டுறு என்பது—பெருக்கெடுத்து.

என்னவா வனைத்து மீந்தவா வென்னை யீன்றவா வென்னவா வேதஞ்
சொன்னவா கருணைத் தூயவா பெரியர் துதியவா வம்பலத் தமுதம்
அன்னவா வறிவா லறியரி யறிவா ஆனந்த நாடகம் புரியும்
மன்னவா வென்றேன் வந்தருட் ஜோதி வழங்கினை வாழிநின் மாண்பே. 9

விரதமா திகளுந் தவிர்த்துமெய்ஞ் ஞான விளக்கினா லென்னுளம் விளக்கி
இரதமா தியநற் றெள்ளமு தளித்திங் கென்கருத் தனைத்தையும் புரிந்தே
சரதமா நிலையிற் சித்தியெலாம் வல்ல சத்தியைத் தயவினாற் றருக
வரதனே யென்றேன் வந்தருட் ஜோதி வழங்கினை வாழிநின் மாண்பே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 56. திருவருட்பெருமை 2

பண் – நட்டராகம்

அருட்பெருஞ்ஜோதி

விரைசேர் பொன்மலரே யதின் மேவிய செந்தேனே
கரைசேர் முக்கனியே கனி யிற்சுவை யின்பயனே
பரைசே ருள்ளொளியே பெரும் பற்றம்பல நடஞ்செய்
அரைசே தந்தனையே யரு ளாரமு தந்தனையே. 1

விண்ணார் செஞ்சுடரே சுடர் மேவிய வுள்ளொளியே
தண்ணார் வெண்மதியே யதிற் றங்கிய தண்ணமுதே
கண்ணார் மெய்க்கனலே சிவ காமப்பெண் காதலனே
அண்ணா தந்தனையே யரு ளாரமு தந்தனையே. 2

துப்பார் செஞ்சடையா யருட் ஜோதி சுகக்கடலே
செப்பா மோனிலைக்கே சிறி யேனைச் செலுத்தியவா
எப்பா லும்புகழும் பொது வின்ப நடம்புரியும்
அப்பா தந்தனையே யரு ளாரமு தந்தனையே. 3

மெய்யா மெய்யருளே யென்று மேவிய மெய்ப்பொருளே
கையா ருங்கனியே நுதற் கண்கொண்ட செங்கரும்பே
செய்யாய் வெண்ணிறத்தாய் திருச் சிற்றம் பலநடஞ்செய்
ஐயா தந்தனையே யரு ளாரமு தந்தனையே. 4

பொறிவே றின்றிநினை நிதம் போற்றும் புனிதருளே
குறிவே றின்றிநின்ற பெருஞ் ஜோதிக் கொழுஞ்சுடரே
செறிவே தங்களெலா முறை செய்ய நிறைந்திடுபேர்
அறிவே தந்தனையே யரு ளாரமு தந்தனையே. 5

முத்தா முத்தருளே யொளிர் கின்ற முழுமுதலே
சித்தா சித்தியெலாந் தர வல்ல செழுஞ்சுடரே
பித்தா பித்தனெனை வலிந் தாண்ட பெருந்தகையே
அத்தா தந்தனையே யரு ளாரமு தந்தனையே. 6

தன்னே ரில்லவனே யெனைத் தந்த தயாநிதியே
மன்னே மன்றிடத்தே நடஞ் செய்யுமென் வாழ்முதலே
பொன்னே யென்னுயிரே யுயி ருண்ணிறை பூரணமே
அன்னே தந்தனையே யரு ளாரமு தந்தனையே. 7

பவனே வெம்பவ நோய் தனைத் தீர்க்கும் பரஞ்சுடரே
சிவனே செம்பொருளே திருச் சிற்றம் பலநடிப்போய்
தவனே யம்பெறுவார் தமைத் தாங்கி யருள்செயவல்
லவனே தந்தனையே யரு ளாரமு தந்தனையே 8

தேனாய்த் தீம்பழமாய்ச் சுவை சேர்கரும் பாயமுதம்
தானா யன்பருளே யினிக் கின்ற தனிப்பொருளே
வானாய்க் காலனலாய்ப் புன லாயதில் வாழ்புவியாய்
ஆனாய் தந்தனையே யரு ளாரமு தந்தனையே. 9

பொடியேற் கும்புயனே யருட் பொன்னம் பலத் தரசே
செடியேற் கன்றளித்தாய் திருச் சிற்றம் பலச்சுடரே
கடியேற் கன்னையெனுஞ் சிவ காமக் கொடியுடையாய்
அடியேற் கின்றளித்தா யரு ளாரமு தந்தனையே. 10

ஒளியே யவ்வொளியின் னடு வுள்ளொளிக் குள்ளொளியே
வெளியே யெவ்வெளியு மடங் கின்ற வெறுவெளியே
தளியே யம்பலத்தே நடஞ் செய்யுந் தயாநிதியே
அளியே தந்தனையே யரு ளாரமு தந்தனையே. 11

மருளேய் நெஞ்சகனேன் மன வாட்டமெலாந் தவிர்த்தே
தெருளே யோர்வடிவா யுறச் செய்த செழுஞ்சுடரே
பொருளே சிற்சபைவாழ் வுறு கின்றவென் புண்ணியனே
அருளே தந்தனையே யரு ளாரமு தந்தனையே. 12

முன்பே யென்றனையே வலிந் தாட்கொண்ட முன்னவனே
இன்பே யென்னுயிரே யெனை யீன்ற விறைவனே
பொன்பே ரம்பலவா சிவபோகஞ்செய் சிற்சபைவாழ்
அன்பே தந்தனையே யரு ளாரமு தந்தனையே. 13

அருட்பெருஞ்ஜோதி

## 57. உபதேச உண்மை

பண்-நட்டராகம்

அருட்பெருஞ்ஜோதி

கண்ணே கண்மணியே—கருத்—தேகருத் தின் கனிவே
விண்ணே விண்ணிறைவே—சிவ—மேதனி மெய்ப் பொருளே
தண்ணே ரொண்மதியே—யெனைத்—தந்த தயாநிதியே
உண்ணே ருள்ளொளியே—யெனக்—குண்மை யுரைத்தருளே. 1

வளியே வெண்ணெருப்பே—குளிர்—மாமதி யேகனலே
வெளியே மெய்ப்பொருளே—பொருள்—மேவிய மேனிலையே
அளியே யற்புதமே—பழு—தேயறி வேயரசே
ஒளியே யுத்தமனே—யெனக்—குண்மை யுரைத்தருளே. 2

அன்பே யென்னரசே—திரு—வம்பலத் தாரமுதே
என்பே யுள்ளுருகக்—கலந்—தென்னு ளிருந்தவனே
இன்பே யென்னறிவே—பர—மேசிவ மேயெனவே
உன்பே ரோதுகின்றேன்—எனக்—குண்மை யுரைத்தருளே. 3

தனையா வென்றழைத்தே—யருட்—சத்தியளித் தவனே
அனையா யப்பனுமா—யெனக்—காரிய னானவனே
இனையா தென்னையுமேல்—நிலை—யேற்றுவித் தாண்டவனே
உனையா னேத்துகின்றேன்—எனக்—குண்மை யுரைத்தருளே. 4

துப்பா செஞ்சுடரே—யருட்—ஜோதிசுகக் கடலே
அப்பா வென்னரசே—திருவ—ம்பலத்தா ரமுதே
இப்பாரிற் பசிக்கே—தந்த—இன்சுவை நல்லுணவே
ஒப்பா வொப்பரியாய்—எனக்—குண்மை யுரைத்தருளே. 5

என்றே யென்னுளூறுஞ்—சுட—ரேயெனை யீன்றவனே
நன்றே நண்பெனக்கே—மிக—நல்கிய நாயகனே
மன்றோர் மாமணியே—சுக—வாழ்க்கையின் மெய்ப்பொருளே
ஒன்றே யென்றுணையே—யெனக்—குண்மை யுரைத்தருளே. 6

திருவே தெள்ளமுதே—அருட்—சித்தசிகா மணியே
கருவே ரற்றிடவே—களை—கின்றவென் கண்ணுதலே
மருவே மாமலரே—மலர்—வாழ்கின்ற வானவனும்
உருவே யென்குருவே—யெனக்—குண்மை யுரைத்தருளே. 7

தடையா வுந்தவிர்த்தே—யெனைத்—தாங்கிக்கொண் டாண்டவனே
அடையா யன்பிலர்பால்—எனக்—கன்பொடு தந்தபெருங்
கொடையாய் குற்றமெலாங்—குணங்—கொண்ட குணக்குன்றமே
உடையா யுத்தமனே—யெனக்—குண்மை யுரைத்தருளே. 8

பெண்ணா யாணுருவாய்—எனைப்—பெற்றபெருந் தகையே
அண்ணா வென்னரசே—திரு—வம்பலத் தாடுகின்றோய்
எண்ணா நாயடியேன்—களித்—திட்ட வுணவை யெலாம்
உண்ணா துண்டவனே—யெனக்—குண்மை யுரைத்தருளே. 9

நன்னா லுங்கடந்தே—யொளிர்—ஞான சபாபதியே
பொன்னா ருஞ்சபையாய்—அருட்—பூரண புண்ணியனே
என்னா லாவதொன்றும்—உனக்—கில்லையெனினு மெந்தாய்
உன்னால் வாழுகின்றேன்—எனக்—குண்மை யுரைத்தருளே. 10

அருட்பெருந்ஜோதி

# 58. அமையங்கூறல்

பன்னிருசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

கருணை ததும்பிப் பொதுநோக்குங் கண்ணிற் கிடைத்த கண்ணேயோர்
கனியிற் கனிந்தன் புருவான கருத்திற் கிடைத்த கருத்தேமெய்
அருணான் னிலையி லதுவதுவா யறிவிற் கிடைத்த வறிவேயென்
அகத்தும் புறத்து மொளிநிறைவித் தமர்ந்த குருவே யைம்பூத
வருணை முதலா யவைகடந்த வரைப்பாய் விளங்கு மணிமன்றில்
வயங்கு சுடரே யெல்லாஞ்செய் வல்ல குருவே யென்னுரத்தே
தருணை நடஞ்செய் அரசேயென் தாயே யென்னைத் தந்தாயே
தனித்த தலைமைப் பதியேயித் தருணம் வாய்த்த தருணமதே. 1

கருவிற் கலந்த துணையேயென் கனிவிற் கலந்த வமுதேயென்
கண்ணிற் கலந்த வொளியேயென் கருத்திற் கலந்த களிப்பேயென்
உருவிற் கலந்த வழகேயென் உயிரிற் கலந்த உறவேயென்
உணர்விற் கலந்த சுகமேயென் உடைய வொருமைப் பெருமானே
தெருவிற் கலந்து விளையாடுஞ் சிறியேன் றனக்கே மெய்ஞ்ஞான
சித்தி யளித்த பெருங்கருணைத் தேவே யுலகத் திரளெல்லாம்
மருவிக் கலந்து வாழ்வதற்கு வாய்த்த தருண மிதுவென்றே
வாயே பறையா யறைகின்றே னெந்தாய் கருணை வலத்தாலே. 2

தானே தயவாற் சிறியேற்குத் தனித்த ஞான வமுதளித்த
தாயே யெல்லாச் சுதந்தரமுந் தந்த கருணை யெந்தாயே
ஊனே விளங்க வூனமிலா வொளிபெற் றெல்லா வுலகமுமென்
உடைமை யாக்கொண் டருணிலைமேல் உற்றே னின்ற னருளாலே
வானே மதிக்கச் சாகாத வாழ்வு மெல்லாம் வல்லசித்தே
வயங்க வுணர்வுட் கலந்துகொண்டேன் வருக்குந் தொழிலே முதலைந்து
நானே புரிகின் றேன்புரித லுநீயோ நானறியேன்
நானீ யென்னும் பேதமிலா நடஞ்செய் கருணை நாயகனே. 3

நிலைசார் முடிபு கடந்துணர்வு கடந்து நிறைவாய்க் கதிசிலதாய்க்
கருணை மயமாய் விளங்குசிதா காய நடுவி லியற்கையுண்மைத்
நிலைசார் வடிவி லின்பநடம் புரியும் பெருமைத் தனிமுதலே
சாகாக் கல்வி பயிற்றியென்னுட் சார்ந்து விளங்குஞ் சற்குருவே
புலைசார் மனத்துச் சிறியேன்றன் குற்ற மனைத்தும் பொறுத்தருளிப்
பொன்று வடிவு கொடுத்தெல்லாம் புரிவல் லபந்தந் தருட்ஜோதி
நிலைசா ரிறைமை யளித்தனைநான் பொதுவில் ஞான நீதியெனும்
நிருத்தம் புரிகின் றேன்புரித னீயோ நானோ நிகழ்த்தாயே. 4

கருத்திற் கருதிக் கொண்டவெலாங் கணத்திற் புரிய வெனக்கேமெய்க்
காட்சி ஞானக் கண்கொடுத்த கண்ணே விடயக் கானகத்தே
எருத்திற் றிரிந்த கடையேனை யெல்லா வுலகுந் தொழுநிலைமேல்
ஏற்றி நீயு நானுமொன்றா யிருக்கப் புரிந்தா யெந்தாயே
இருத்திக் கருத்தி லுன்றயவை யெண்ணுந் தோறு மந்தோவென்
இதய முருகித் தளதளவென் றிளகி யிளகித் தண்ணீராய்
அருத்திப் பெருநீ ராற்றொடுசேர்ந் தன்புப் பெருக்கிற் கலந்ததுநான்
அதுவென் றொன்றுந் தோற்றாதே யச்சோ வச்சோ வச்சோவே. 5

ஏதுந் தெரியா தகங்கரித்திங் கிருந்த சிறியேன் றனைவலிந்தே
எல்லா வுலகு மதிசயிக்க வெல்லாம் வல்ல சித்தெனவே
ஓதும் பொருளைக் கொடுத்தென்று மூலவா வின்பப் பெருநிலையில்
ஓங்கி யுறவைத் தனையேயென் னுடைய வொருமைப் பெருமானே
ஈதுன் கருணைக் கியல்போநீ யென்பால் வைத்த பெருங்கருணை
இந்நாட் புதிதே யந்நாளி லிலையே யிதனை யெண்ணியநான்
தாது முணர்வு முயிருமுள்ளத் தடமும் பிறவாந் தத்துவமுந்
தாமே குழைந்து தழைந்தமுத சார மயமா கின்றேனே. 6

ஓவா துண்டு படுத்துறங்கி யுணர்ந்து விழித்துக் கதைபேசி
உடம்பு நோவா துளமடக்கா தோகோ நோன்பு கும்பிட்டே
சாவா வரமுஞ் சித்தியெலாந் தழைத்த நிலையுஞ் சன்மார்க்க
சங்க மதிப்பும் பெற்றேனென் சதுர்தான் பெரிதென் சரித்திரத்தை
ஆவா நினைக்கி லதிசயமென் அப்பா வரசே யமுதேயென்
ஆவிக் கினிய துணையேயென் அன்பே யறிவே யருட்ஜோதித்
தேவா விதுநின் செயலேயிச் செயலை நினைக்குந் தொறுமெனது
சிந்தை கனிந்து கனிந்துருகித் தெள்ளா ரமுத மானதுவே. 7

இரவும் பகலுந் தூங்கியவென் தூக்க மனைத்து மியல்போகத்
திசைந்த பலனாய் விளைந்ததுநா ளிரண்டு பொழுது முண்டவெலாம்
பரவு மமுத வுணவாயிற் றந்தோ பலர்பாற் பகலிரவும்
படித்த சமயச் சாத்திரமும் பலராற் செய்த தோத்திரமும்
விரவிக் களித்து நாத்தடிக்க விளம்பி விரித்த பாட்டெல்லாம்
வேதா கமத்தின் முடிமீது விளங்குந் திருப்பாட் டாயினவே
கரவொன் றறியாப் பெருங்கருணைக் கடவு ளிதுநின் றயவிதனைக்
கருதுந் தொறுமென் கருத்தலர்ந்து சுகமே மயமாக் கண்டதுவே. 8

ஊற்றை யுடம்பி லிருட்டறைவா யுறங்கி விழித்துக் கதைபேசி
உண்டிங் குடித்துக் கருத்திழந்தே யுதவா வெறுந்தி னூர்திரிந்து
நேற்றை வரையும் வீண்போது போக்கி யிருந்தே னெறியறியேன்
நேரே யிற்றைப் பகலந்தோ நெடுங்கா லமுமெய்த் தவயோக
ஆற்றை யடைந்தோ ரெல்லோரு மச்சோ வென்றே யதிசயிப்ப
வமுதுண் டழியாத் திருவுருவ மடைந்தேன் பெரிய வருட்ஜோதிப்
பேற்றை யுரிமைப் பேறாகப் பெற்றேன் பெரிய பெருமானின்
பெருமை யிதுவே யிதனியலை யாரே துணிந்து பேசுவரே. 9

புரைசேர் வினையுங் கொடுமாயைப் புணர்ப்பு மிருளு மறைப்பினொடு
புகலும் பிறவாந் தடைகளெலாம் போக்கி ஞானப் பொருள்விளங்கும்
வரைசேர்த் தருளிச் சித்தியெலாம் வழங்கிச் சாகா வரங்கொடுத்து
வலிந்தென் னுளத்தி லமர்ந்துயிரிற் கலந்து மகிழ்ந்து வாழ்கின்றாய்
பரைசேர் வெளியிற் பதியாயப் பான்மேல் வெளியில் விளங்குசித்த
பதியே சிறியேன் பாடலுக்குப் பரிசு விரைந்தே பாலித்த
அரைசே யமுத மெனக்களித்த அம்மே யுண்மை யறிவளித்த
அப்பா பெரிய அருட்ஜோதி யப்பா வாழி நின்னருளே. 10

அருட்பெருஞ்ஜோதி

## 59. அனுபவநிலை

### கட்டளைக்கலித்துறை

அருட்பெருஞ்ஜோதி

**நான்செய்த** புண்ணிய மென்னுரைக் கேன்பொது நண்ணியதோர்
வான்செய்த மாமணி யென்கையிற் பெற்றுநல் வாழ்வடைந்தேன்
ஊன்செய்த தேக மொளிவடி வாகநின் றோங்குகின்றேன்
தேன்செய்த தெள்ளமு துண்டேன்கண் டேன்மெய்த் திருநிலையே. 1

நான்செய்த புண்ணிய மென்னுரைப் பேன்பொது நண்ணியதோர்
வான்செய்த மெய்ப்பொரு ளென்கையிற் பெற்றுமெய் வாழ்வடைந்தேன்
கோன்செய்த பற்பல கோடி யண்டங்களுங் கூறவற்றில்
தான்செய்த பிண்டப் பகுதியும் நான்செயத் தந்தனனே. 2

திருநிலை பெற்றன னம்பலத் தானருட் டெள்ளமுதுண்
டொருநிலை பெற்றன னென்றே சிவமென வோங்குகின்ற
பெருநிலை பெற்றனன் சுத்தசன் மார்க்கம் பிடித்துநின்றேன்
இருநிலை முன்னிலை யெல்லா நிலையு மெனக்குளவே. 3

த்தனை நான்குற்றஞ் செய்தும் பொறுத்தனை யென்னைநின்பால்
வைத்தனை யுள்ள மகிழ்ந்தனை நான்சொன்ன வார்த்தைகளிங்
த்தனை யுஞ்சம் மதித்தருள் செய்தனை யம்பலத்தே
த்தனை யாய்நினக் கென்மே லிருக்கின்ற மோகமென்னே. 4

னியே யிறையுஞ் சகிப்பறி யேனெனக் கின்பநல்குங்
னியேயென் றன்னிரு கண்ணேமுக் கண்கொண்ட கற்பகமே
னியேயென் னன்புடைத் தாயேசிற் றம்பலஞ் சார்தந்தையே
னியே லருள்க வருள்கமெய்ஞ் ஞானமுழு தையுமே. 5

புத்தியஞ் சேல்சற்று மென்னெஞ்ச மேசிற் போதுத் தந்தையார்
நித்தயஞ் சேர்ந்த நெறியிற் செலுத்தினர் நீயினிநன்
முத்தியும் ஞானமெய்ச் சித்தியும் பெற்று முயங்கிடுவாய்
சத்தியஞ் சத்தியஞ் சத்தியஞ் சத்தியஞ் சத்தியமே. 6

கூடிய நாளிது தான்தரு ணம்மெனைக் கூடியுள்ளே
வாடிய வாட்டமெல் லாந்தவிர்த் தேசுக வாழ்வளிப்பாய்
நீடிய தேலினிச் சற்றும் பொறே னுயிர் நீத்திடுவேன்
ஆடிய பாத மறியச்சொன் னேனென தாண்டவனே. 7

ஆக்கிய நாளிது தான்தரு ணம்மரு ளாரமுதந்
தேக்கிமெய் யின்புறச் செய்தருள் செய்தருள் நீயெனையும்
நீக்கிலை யேலினிச் சற்றும் பொறே னுயிர் நீத்திடுவேன்
தூக்கிய பாத மறியச்சொன் னேனருட் ஜோதியனே. 8

அருட்பெருஞ்ஜோதி

## 60. கைம்மாறின்மை

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

இறையெலாம் விளங்கு மம்மை யிடங்கொணின் கருணை யென்னும்
மறையெலாம் பொழிந்தென் னுள்ள மயக்கெலாந் தவிர்த்து நான்செய்
பிறையெலாம் பொறுத்த வுன்றன் பெருமைக்கென் புரிவே னந்தோ
உறையெலா மிலங்குஞ் ஜோதி யுயர்மணி மன்று ளானே. 1

போதுதான் வீணே போக்கிப் புலையனேன் புரிந்த பொல்லாத்
தீதுதான் பொறுத்த வுன்றன் திருவருட் பெருமைக் கந்தோ
ஏதுதான் புரிவே னோகோ வென்னென்று புகழ்வேன் ஞான
மாதுதா னிடங்கொண் டோங்க வயங்குமா மன்று ளானே. 2

சிற்றறி வுடைய னாகித் தினந்தொறுந் திரிந்து நான்செய்
குற்றமுங் குணமாக் கொண்ட குணப்பெருங் குன்றே யென்னைப்
பெற்றதா யினுமிக் கோங்கும் பெருமநின் பெருமை தன்னைக்
கற்றறி விலேனெ னெந்தக் கணக்கறிந் துரைப்பே னந்தோ. 3

மையரி நெடுங்க ணார்தம் வாழ்க்கையின் மயங்கி யிங்கே
பொய்யறி வுடையேன் செய்த புன்மைகள் பொறுத்தாட் கொண்டாய்
ஐயறி வுடையார் போற்று மம்பலத் தரசே நின்சீர்
மெய்யறி வறியே னெந்த விளைவறிந் துரைப்பே னந்தோ. 4

பேயினும் பெரியேன் செய்த பிழைகளுக் கெல்லை யில்லை
ஆயினும் பொறுத்தாட் கொண்டா யம்பலத் தரசே யென்றன்
தாயினு மினிய வுன்றன் றண்ணருட் பெருமை தன்னை
நாயினுங் கடையே னெந்த நலமறிந் துரைப்பே னந்தோ. 5

துரும்பினிற் சிறியேன் வஞ்சஞ் சூழ்ந்தநெஞ் சகத்தேன் செய்த
பெரும்பிழை யனைத்து மந்தோ பெருங்குண மாகக் கொண்டாய்
அரும்பொரு ளென்ன வேத மாகமம் வழுத்து கின்ற
கரும்பினி லினியா யுன்றன் கருணையென் னென்பே னந்தோ. 6

வரைகடந் தடியேன் செய்த வன்பிழை பொறுத்தாட் கொண்டாய்
திரைகடந் தண்ட பிண்டத் திசையெலாங் கடந்தே யப்பாற்
கரைகடந் தோங்கு முன்றன் கருணையங் கடற்சீ ருள்ளம்
உரைகடந் ததுவென் றுல்யா னுணர்வதெ னுரைப்ப தென்னே. 7

நனவினும் பிழையே செய்த நாயினுங் கடையே னந்தோ
கனவினும் பிழையே செய்தேன் கருணைமா நிதியே நீதான்
நினைவினுங் குறியா தாண்டாய் நின்னருட் பெருமை தன்னை
வினவினுஞ் சொல்வார் காணே னென்செய்வேன் வினைய னேனே. 8

வன்செயல் பொறுத்தாட் கொண்ட வள்ளலே யடிய னேன்றன்
முன்செய லவைக ளோடு முடுகுபின் செயல்க ளெல்லாம்
என்செய லாகக் காணே னெனைக்கலந் தொன்றாய் நின்றோய்
நின்செய லாகக் கண்டேன் கண்டபின் னிகழ்த்த லென்னே. 9

இருமையு மொருமை தன்னி லீந்தனை யெந்தா யுன்றன்
பெருமையென் னென்று நான்றான் பேசுவேன் பேத மின்றி
உரிமையால் யானும் நீயும் ஒன்றெனக் கலந்து கொண்ட
ஒருமையை நினைக்கின் றேனென் னுள்ளகந் தழைக்கின் றேனே. 10

அருட்பெருஞ்ஜோதி

## 61. வேண்டுகோள் 1

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

ந்தவா னகத்தே யுரத்தவா ஞான வொளியினு லோங்குமோர் சித்தி
வா பெரியோர் புரத்தவா குற்றம் பொறுத்தடி யேன்றனக் களித்த
வா வுண்மை வரத்தவா ஆக மங்களு மறைகளுங் காணாத்
வா வறிவா தரத்தவா பொதுவிற் றனித்தவா வினித்தவாழ் வருளே. 1

முன்னவா திபர்க்கு முன்னவா வேத முடிபெலா மொழிகின்ற முதல்வா
பின்னவா திபர்க்குப் பின்னவா வெவர்க்கும் பெரியவா பெரியவர் மதிக்குஞ்
சின்னவா சிறந்த சின்னவா ஞான சிதம்பர வெளியிலே நடிக்கும்
மன்னவா வமுத மன்னவா வெல்லாம் வல்லவா நல்லவாழ் வருளே. 2

விடையவா தனைதீர் விடையவா சுத்த வித்தைமுன் சிவவரை கடந்த
நடையவா ஞான நடையவா வின்ப நடம்புரிந் துயிர்க்கெலா முதவுங்
கொடையவா வோவாக் கொடையவா வெனையாட் கொண்டெனு ளமர்ந்தருளியவென்
உடையவா வெல்லா முடையவா வுணர்ந்தோர்க் குரியவா பெரியவாழ் வருளே. 3

வலத்தவா நாத வலத்தவா ஜோதி மலையவா மனமுதல் கடந்த
புலத்தவா வெனது புலத்தவா தவிர்த்துப் பூரண ஞானநோக் களித்த
நலத்தவா வரையா நலத்தவா மறைக ளடியுங் காண்பதற் கரிதாம்
பலத்தவா திருவம் பலத்தவா வெல்லாம் படைத்தவா படைத்தவாழ் வருளே. 4

உணர்ந்தவ ருளத்தை யுகந்தவா வியற்கை யுண்மையே யுருவதா யின்பம்
புணர்ந்திட வெனைத்தான் புணர்ந்தவா ஞானப் பொதுவிலே பொதுநடம் புரிந்தெண்
குணந்திகழ்ந் தோங்குங் குணத்தவா குணமுங் குறிகளுங் கோலமுங் குலமுந்
தணந்தசன் மார்க்கத் தனிநிலை நிறுத்துந் தக்கவா மிக்கவாழ் வருளே. 5

தத்துவங் கடந்த தத்துவா ஞான சமரச சுத்தசன் மார்க்கச்
சத்துவ நெறியி னடத்தியென் றனைமேற் றனிநிலை நிறுத்திய தலைவா
சித்துவந் தாடுஞ் சித்திமா புரத்திற் றிகழ்ந்தவா திகழ்ந்தென துளத்தே
ஒத்துநின் றோங்கு முடையவா கருணை யுளத்தவா வளத்தவாழ் வருளே. 6

மதம்புகல் முடிபு கடந்தமெய்ஞ் ஞான மன்றிலே வயங்கொளு டகஞ்செய்
பதம்புக லடிபேற் கருட்பெருஞ் ஜோதிப் பரிசுதந் திடுதுமென் றுளத்தே
நிதம்புகல் கருணை நெறியவா வின்ப நிலையவா நித்தநீர்க் குணமாம்
சிதம்புகல் வேத சிரத்தவா வினித்த தேனவா ஞானவாழ் வருளே. 7

மூவிரு முடிபுங் கடந்ததோ ரியற்கை முடியிலே முடிந்தென துடம்பும்
ஆவியுந் தனது மயம்பெறக் கிடைத்த வருட்பெருஞ் ஜோதியம் பலவா
ஓவுரு முதலா வுரைக்குமெய் யுருவு முணர்ச்சியு மொளிபெறு செயலும்
மேவிநின் றவர்க்குண் மேவிய வுணர்வுண் மேயவா தூயவாழ் வருளே. 8

பங்கமோ ரணுவும் பற்றிடா வறிவாற் பற்றிய பெற்றியா ருளத்தே
தங்குமோர் ஜோதித் தனிப்பெருங் கருணைத் தரந்திகழ் சத்தியத் தலைவா
துங்கமுற் றழியா நிலைதரு மியற்கைத் தொன்மையாஞ் சுத்தசன் மார்க்கச்
சங்கநின் றேத்துஞ் சத்திய ஞான சபையவா வபயவாழ் வருளே. 9

இனித்தசெங் கரும்பி லெடுத்ததீஞ் சாற்றி னிளம்பதப் பாகொடு தேனுங்
கனித்ததீங் கனியி னிரதமுங் கலந்து கருத்தெலாங் களித்திட வுண்ட
மனித்தரு மமுத வுணவுகொண் டருந்தும் வானநாட் டவர்களும் வியக்கத்
தனித்தமெய்ஞ் ஞான வமுதெனக் களித்த தனியவா வினியவாழ் வருளே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 62. வேண்டுகோள் 2

கலிநிலைத்துறை

அருட்பெருஞ்ஜோதி

கருணாநிதி யேயடி யேனிரு கண்ணுளானே
தெருணாடுமென் சிந்தையுண் மேவிய தேவதேவே
பொருணாடிய சிற்றம்ப லத்தொளிர் புண்ணியாமெய்த்
தருணாவிது தான்தரு ணம்மெனைத் தாங்கிக்கொள்ளே. 1

கூகாவெனக் கூடி யெடாதிக் கொடியனேற்கே
சாகாவரந் தந்த தயாநிதித் தந்தையேநின்
மாகாதல னாகின னிங்கு வாழ்கின்றேனென்
யோகாதி சயங்க ளுரைக்க வுலப்புறாதே. 2

எந்தாயுனைக் கண்டு களித்தன னீண்டிப்போதே
சிந்தாகல மும்பல மும்பெற்றுத் தேக்குகின்றேன்
அந்தாமரை யானொடு மாலவ னாதிவானோர்
வந்தாரெனை வாழ்த்துகின் றாரிங்கு வாழ்கவென்றே. 3

வாழ்வேனரு ளாரமு துண்டிங்கு வாழ்கின்றேனான்
ஏழ்வேதனை யுந்தவிர்ந் தேனுனை யேயடைந்தேன்
சூழ்வேன்றிருச் சிற்றம்பலத்தைத் துதித்து வாழ்த்தித்
தாழ்வேனல தியார்க்கு மினிச்சற்றுந் தாழ்ந்திடேனே. 4

தாழாதெனை யாட்கொண் டருளிய தந்தையேநின்
கேழார்மணி யம்பலம் போற்றக் கிடைத்துளேனான்
ஏழாநிலை மேனிலை யேறி யிலங்குகின்றேன்
ஊழால்வரு துன்பங்கள் யாவு மொழிந்ததன்றே. 5

கோடாமறை யாகம மாதிய கூறுகின்ற
சூடாமணி யேமணி யுள்ளொளிர் ஜோதியேயென்
பாடானவை தீர்த்தரு ளீந்துநின் பாதமென்னும்
வாடாமல ரென்முடி சூட்டினை வாழிநீயே. 6

எல்லாஞ்செய வல்லவனே யெனை யீன்றதாயின்
நல்லாய்சிவ ஞானிகள் பெற்றமெய்ஞ் ஞானவாழ்வே
கொல்லாநெறி காட்டியென் றன்னைக் குறிப்பிற் கொண்டென்
பொல்லாமை பொறுத்தனை வாழ்கநின் பொற்பதமே. 7

பரமான சிதம்பர ஞானசபா பதியே
வரமான வெல்லாமெனக் கீந்தநல் வள்ளலேயென்
தரமானது சற்றுங் குறித்திலை சாமிநின்னை
உரமானவுள் ளன்பர்க ளேசுவ ருண்மையீதே. 8

தாயேயெனைத் தந்த தயாநிதித் தந்தையேயிந்
நாயேன்பிழை யாவையுங் கொண்டனை நன்மையென்றே
காயேகனி யாகக் கருதுங் கருத்தனேநின்
சேயேயென வென்பெய ரெங்குஞ் சிறந்ததன்றே. 9

பொய்யேயுரைக் கின்றவென் சொல்லும் புனைந்துகொண்டாய்
மெய்யேதிரு வம்பலத் தாடல் செய்வித்தகனே
எய்யேனினி வெம்மலக் கூட்டிலிருந் தென்னுள்ளம்
நையேன்சுத்த நல்லுடம் பெய்தின னிலத்தே. 10

அருட்பெருஞ்ஜோதி

## 63. திருவருட்பேறு

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அருளே பழுத்த சிவதருவி லளிந்த பழந்தந் தடியேனைத்
தெருளே சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை யாக்கினையே
மருளே முதலாந் தடையெல்லாந் தீர்ந்தே னின்பால் வளர்கின்றேன்
பொருளே யினிநின் றனைப்பாடி யாடும் வண்ணம் புகலுகவே. 1

ஒருவா தடியே னெண்ணியவா றெல்லா மருளி யுளங்களித்தே
திருவார் சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை யாக்கினையே
பெருவாழ் வடைந்தேன் பெருங்களிப்பால் பெருமா னின்பால் வளர்கின்றேன்
உருவா ருலகி லுனைப்பாடி யாடும் வண்ண முரைத்தருளே. 2

அவமே புரிந்தேன் றனைமீட்டுன் அருளா ரமுத மிகப்புகட்டிச்
சிவமே சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை யாக்கினையே
பவமே தொலைத்தேன் பெருங்களிப்பாற் பதியே நின்பால் வளர்கின்றேன்
நவமே யடியே னினைப்பாடி யாடும் வண்ண நவிலுகவே. 3

பல்வா தனையுந் தவிர்த்தெனக்கே பரமா னந்த வமுதளித்துச்
செல்வா சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை யாக்கினையே
வல்வா தனைசெய் மனச்செருக்கை மாற்றி நின்பால் வளர்கின்றேன்
நல்வாழ் வளித்தாய் நினைப்பாடி யாடும் வண்ணம் நவிலுகவே. 4

ஓவா வின்ப மயமாகி யோங்கு மமுத முதவியெனைத்
தேவா சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை யாக்கினையே
பூவார் மணம்போற் சுகந்தருமெய்ப் பொருளே நின்பால் வளர்கின்றேன்
நாவா லடியே னினைப்பாடி யாடும் வண்ணம் நவிலுகவே. 5

ுளிவே தவிர்த்துச் சிறியேன்றன் எண்ண முழுது மளித்தருளித்
ெதளிவே சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை யாக்கினையே
ளிவேய் வடிவு பெற்றோங்கி உடையா யுன்பால் வளர்கின்றேன்
ளிவேய் நினது புகழ்பாடி யாடும் வண்ணஞ் சாற்றுகவே. 6

றப்பே தவிர்த்திங் கெனையென்று மாளா நிலையிற் றனியமர்த்திச்
றப்பே சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை யாக்கினையே
றப்பே தவிர்ந்தேன் பெருங்களிப்பாற் பெருமா னின்பால் வளர்கின்றேன்
றப்பே றுலகில் உனைப்பாடி யாடும் வண்ணஞ் செப்புகவே. 7

ளனே புகுந்தென் னுளங்கனிவித் துயிரிற் கலந்தே பொன்றுவித்
தேனே சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை யாக்கினையே
ானே யழியா வாழ்வுடையேன் நானே நின்பால் வளர்கின்றேன்
ானே றுலகில் உனைப்பாடி யாடும் வண்ணஞ் சாற்றுகவே. 8

ரா வமுத மளித்தருளி யன்பா லின்ப நிலைக்கேற்றிச்
ரார் சிற்றம் பலவாநின் செல்வப் பிள்ளை யாக்கினையே
ரா வின்ப வனுபவங்க ளெல்லாம் பொருந்தி யிருக்கின்றேன்
ரா வுலகி லடிச்சிறியேன் செய்யும் பணியைத் தெரித்தருளே. 9

மெய்வைப் பழியா நிலைக்கேற்றி விளங்கு மமுத மளித்தருள்
தெய்வப் பதியே சிவமேநின் செல்வப் பிள்ளை யாக்கினையே
வைப் பறிந்தேன் துரிசெல்லா மறுத்தே னின்பால் வளர்கின்றேன்
பொய்வைப் படையேன் இவ்வுலகிற் புரியும் பணியைப் புகன்றருளே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 64. ஆற்றாமை

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

இப்பார் முதலென் றூர்த்தமதா யிலங்குங் கருணை யெங்கோவே
தப்பா யினதீர்த் தென்னையுமுன் றடுத்தாட் கொண்ட தயாநிதியே
எப்பா லவரும் புகழ்ந்தேத்து மிறைவா வெல்லாம் வல்லோனே
அப்பா வரசே யினிச்சிறிது மாற்ற மாட்டேன் கண்டாயே. 1

புரைசேர் துயரப் புணரிமுற்றுங் கடத்தி ஞான பூரணமாங்
கரைசேர்த் தருளி யின்னமுதக் கடலைக் குடிப்பித் திடல்வேண்டும்
உரைசேர் மறையின் முடிவிளங்கு மொளிமா மணியே யுடையானே
அரசே யப்பா வினிச்சிறிது மாற்ற மாட்டேன் கண்டாயே. 2

கண்ணா ரமுதக் கடலேயென் கண்ணே கண்ணுட் கருமணியே
தண்ணார் மதியே கதிர்பரப்பித் தழைத்த சுடரே தனிக்கனலே
எண்ணா டரிய பெரியவண்ட மெல்லா நிறைந்த வருட்ஜோதி
அண்ணா வரசே யினிச்சிறிது மாற்ற மாட்டேன் கண்டாயே. 3

பொய்யா தென்று மெனதுளத்தே பொருந்து மருந்தே புண்ணியனே
கையார்ந் திலங்கு மணியேசெங் கரும்பே கனியே கடையேற்குச்
செய்யா வுதவி செய்தபெருந் தேவே மூவாத் தெள்ளமுதே
ஐயா வரசே யினிச்சிறிது மாற்ற மாட்டேன் கண்டாயே. 4

இத்தா ரணியி லென்பிழைக ளெல்லாம் பொறுத்த வென்குருவே
நித்தா சிற்றம் பலத்தாடு நிருத்தா வெல்லாஞ் செயவல்ல
சித்தா சித்தி புரத்தமர்ந்த தேவே சித்த சிகாமணியே
அத்தா வரசே யினிச்சிறிது மாற்ற மாட்டேன் கண்டாயே. 5

எம்மே தகவு முடையவர்தம் மிதயத் தமர்ந்த விறையவனே
இம்மை தினிப்பி லெனைவருவித் திட்ட கருணை யெம்மானே
மும்மை யவர்க்கு மறிவரிய நாதா வென்னை நயந்தீன்ற
அம்மே யப்பா வினிச்சிறிது மாற்ற மாட்டேன் கண்டாயே. 6

செப்பார் கலைகள் மொழிந்தபொருட் டிறங்க ளனைத்துந் தெரிந்துதெளிந்
திப்பா ரிடைநின் புகழ்பாடு கின்ற பெரிய ரின்மொழிப்பாட்
டொப்பா சிறியேன் புன்மொழிப்பாட் டெல்லா முவந்த வுடையானே
அப்பா வரசே யினிச்சிறிது மாற்ற மாட்டேன் கண்டாயே. 7

துப்பார் கனகப் பொதுவினடத் தொழிலா லுலகத் துயரொழிக்கும்
வைப்பா விறைவா சிவகாம வல்லிக் கிசைந்த மணவாளா
ஒப்பா ருயர்ந்தா ரில்லாத வொருவா வெல்லா முடையானே
அப்பா வரசே யினிச்சிறிது மாற்ற மாட்டேன் கண்டாயே 8

ஒப்பா ருரைப்பார் நின்பெருமைக் கெனமா மறைக ளோலமிடுந்
துப்பார் வண்ணச் சுடரேமெய்ச் சோதிப் படிக வண்ணத்தாய்
வெப்பா னவைதீர்த் தெனக்கமுத விருந்து புரிதல் வேண்டுமென்றன்
அப்பா வரசே யினிச்சிறிது மாற்ற மாட்டேன் கண்டாயே. 9

வெப்பா ருள்ளக் கலக்கமெலா மிற்றைப் பொழுதே விலக்கிபொழித்
திப்பா ரிடையென் கருத்தின்வண்ண மெல்லாம் விரைவி னீந்தருள்க
ஒப்பா வுரைத்த தன்றுண்மை யுரைத்தேன் கருணை யுடையானே
அப்பா வரசே யினிச்சிறிது மாற்ற மாட்டேன் கண்டாயே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 65. திருப்பள்ளி யெழுச்சி

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

பொழுது விடிந்ததென் னுள்ளமென் கமலம்
பூத்தது பொன்னொளி பொங்கிய தெங்குந்
தொழுதுநிற் கின்றனன் செய்பணி யெல்லாஞ்
சொல்லுதல் வேண்டுமென் வல்ல சற்குருவே
முழுதுமா னவனை வாகம வேத
முறைகளெ லாமொழி கின்றமுன் னவனே
எழுதற் கரியசீர் அருட்பெருஞ் ஜோதி
என்தந்தை யேபள்ளி யெழுந்தருள் வாயே. 1

துற்குண மாயைபோய்த் தொலைந்தது ஞானந்
தோன்றிடப் பொன்னொளி தோற்றிய கதிர்தான்
சிற்குண வரைமிசை யுதயஞ்செய் ததுமா
சித்திகள் அடிப்பணி செய்திடச் சூழ்ந்த
நற்குண சன்மார்க்க சங்கத்தா ரெல்லாம்
நண்ணினர் தோத்திரம் பண்ணிநிற் கின்றார்
எற்குண வளித்தவென் அருட்பெருஞ் ஜோதி
என்னம்மை யேபள்ளி யெழுந்தருள் வாயே. 2

நிலந்தெளிந் ததுகண மழுங்கின சுவண
நீடொளி தோன்றிற்றுக் கோடொலிக் கின்ற
அலர்ந்தது தாமரை யாணவ விருள்போய்
அழிந்தது கழிந்தது மாயைமா விரவு
புலர்ந்தது தொண்டரோ டண்டருங் கூடிப்
போற்றியோ சிவசிவ போற்றியென் கின்றார்
இலங்குரு வளித்தவென் அருட்பெருஞ் ஜோதி
என்குரு வேபள்ளி யெழுந்தருள் வாயே. 3

கல்லாய மனங்களுங் கரையப்பொன் னொளிதான்
கண்டது கங்குலும் விண்டது தொண்டர்
பல்லாரு மெய்தினர் பாடிநின் றாடிப்
பரவுகின் றாரன்பு விரவுகின் றாராய்
நல்லார்மெய்ஞ் ஞானிகள் யோகிகள் பிறரும்
நண்ணினர் சூழ்ந்தனர் புண்ணிய நிதியே
எல்லாஞ்செய் வல்லவென் அருட்பெருஞ் ஜோதி
என்தெய்வ மேபள்ளி யெழுந்தருள் வாயே. 4

புன்மாலை யிரவெலாம் புலர்ந்தது ஞானப்
பொருப்பின்மேற் பொற்கதிர் பொலிந்தது புலவோர்
சொன்மாலை தொடுத்தனர் துதித்துநிற் கின்றார்
சுத்தசன் மார்க்கசங் கத்தவ ரெல்லாம்
மன்மாலை மாலையா வந்துசூழ் கின்றார்
வானவர் நெருங்கினர் வாழியென் கின்றார்
என்மாலை யணிந்தவென் அருட்பெருஞ் ஜோதி
என்பதி யேபள்ளி யெழுந்தருள் வாயே. 5

ஒருமையி னுலகெலா மோங்குக வெனவே
ஊதின சின்னங்க ளூதின சங்கம்
பெருமைகொள் சமரச சுத்தசன் மார்க்கப்
பெரும்புகழ் பேசினர் பெரியவர் சூழ்ந்தார்
அருமையு மெளிமையு மாகியன் றாகி
அம்பலத் தேசித்தி யாடல்செய் பதியே
இருமையு மளித்தவென் அருட்பெருஞ் ஜோதி
என்னர சேபள்ளி யெழுந்தருள் வாயே. 6

சினைப்பள்ளித் தாமங்கள் கொணர்ந்தன ரடியார்
கிளைகிளை போற்றியென் றுவகைகொள் கின்றார்
நினைப்பள்ளி யுன்னைத்தெள் ளாரமு தளிக்கும்
நேரமிக் கேரமென் றாரியர் புகன்றார்
முனைப்பள்ளி பயிற்றுதென் றனைக்கல்வி பயிற்றி
முழுதுணர் வித்துடற் பழுதெலாந் தவிர்த்தே
எனைப்பள்ளி யெழுப்பிய அருட்பெருஞ் ஜோதி
என்னப்ப னேபள்ளி யெழுந்தருள் வாயே. 7

மதம்பிடித் தவரெல்லாம் வாய்ப்பிடிப் புண்டு
வந்துநிற் கின்றனர் வாய்திறப் பிப்பான்
சுதம்பிடித் தவரெல்லாங் கடும்பிணி யாலே
கலங்கினர் சூழ்ந்தன ருலம்புறு கின்றார்
பதம்பிடித் தவரெல்லாம் அம்பலப் பாட்டே
பாடின ராடினர் பரவிநிற் கின்றார்
இதம்பிடித் தெனையாண்ட அருட்பெருஞ் ஜோதி
என்னைய னேபள்ளி யெழுந்தருள் வாயே. 8

மருளோடு மாயைபோய்த் தொலைந்தது மதங்கள்
வாய்மூடிக் கொண்டன மலர்ந்தது கமலம்
அருளொளி விளங்கிய தொருதிருச் சபையும்
அலங்கரிக் கின்றனர் துலங்கிவீற் றிருக்கத்
தெருளொடு பொருளுமேன் மேலெனக் களித்துச்
சித்தெலாஞ் செய்திடத் திருவருள் புரிந்தே
இருளறுத் தெனையாண்ட அருட்பெருஞ் ஜோதி
என்வள்ள லேபள்ளி யெழுந்தருள் வாயே. 9

அலங்கரிக் கின்றேமோர் திருச்சபை யதிலே
அமர்ந்தருட் ஜோதிகொண் டடிச்சிறி யோமை
வலம்பெறு மிறவாத வாழ்வில்வைத் திடவே
வாழ்த்துகின்றோ முன்னர் வணங்கிநிற் கின்றோம்
விலங்கிய திருளெலாம் விடிந்தது பொழுது
விரைந்தெமக் கருளுதல் வேண்டுமித் தருணம்
இலங்குநற் றருணமெம் அருட்பெருஞ் ஜோதி
எந்தந்தை யேபள்ளி யெழுந்தருள் வாயே. 10

அருட்பெருஞ்ஜோதி

## 66. திருவுந்தியார்

கலித்தாழிசை

அருட்பெருஞ்ஜோதி

இரவு விடிந்த திணையடி வாய்த்தன
பரவி மகிழ்ந்தேனென் றுந்தீ பற
பாலமு துண்டேனென் றுந்தீ பற. 1

பொழுது விடிந்தது பொற்பதம் வாய்த்தன
தொழுது மகிழ்ந்தேனென் றுந்தீ பற
தூயவ னானேனென் றுந்தீ பற. 2

தூக்கந் தொலைந்தது சூரியன் றோன்றினன்
ஏக்கந் தவிர்ந்தேனென் றுந்தீ பற
இன்னமு துண்டேனென் றுந்தீ பற 3

துன்பந் தவிர்ந்தது தூக்கந் தொலைந்தது
இன்பங் கிடைத்ததென் றுந்தீ பற
எண்ணம் பலித்ததென் றுந்தீ பற 4

ஞான முதித்தது நாத மொலித்தது
தீனந் தவிர்ந்ததென் றுந்தீ பற
சிற்சபை கண்டேனென் றுந்தீ பற. 5

திரையற்று விட்டது செஞ்சுடர் தோன்றிற்று
பரையொளி பொங்கிற்றென் றுந்தீ பற
பலித்தது பூசையென் றுந்தீ பற. 6

உள்ளிரு ணீங்கிற்றென் னுள்ளொளி யோங்கிற்றுத்
தெள்ளமு துண்டேனென் றுந்தீ பற
தித்திக்க வுண்டேனென் றுந்தீ பற. 7

எந்தையைக் கண்டே னிடரெலா நீங்கினேன்
சிந்தை மகிழ்ந்தேனென் றுந்தீ பற
சித்திகள் பெற்றேனென் றுந்தீ பற. 8

தந்தையைக் கண்டேனான் சாகா வரம்பெற்றேன்
சிந்தை களித்தேனென் றுந்தீ பற
சித்தெலாம் வல்லேனென் றுந்தீ பற. 9

முத்தியைப் பெற்றேனம் முத்தியினால் ஞான
சித்தியை யுற்றேனென் றுந்தீ பற.
சித்தனு மானேனென் றுந்தீ பற. 10

அருட்பெருஞ்ஜோதி

## 67. சரணடைதல்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

எண்ணா நின்றே னெண்ணமெலா மெய்த வருள்செய் கின்றதனித்
தண்ணா ரமுதே சிற்சபையிற் றனித்த தலைமைப் பெருவாழ்வே
கண்ணா ரொளியே யொளியெல்லாங் கலந்த வெளியே கருதுறுமென்
அண்ணா வையா வம்மாவென் னப்பா யானுன் னடைக்கலமே. 1

திரைசேர் மறைப்பைத் தீர்த்தெனக்கே தெரியா வெல்லாந் தெரிவித்துப்
பரைசேர் ஞானப் பெருவெளியிற் பழுத்த கொழுத்த பழந்தந்தே
கரைசே ரின்பக் காட்சியெலாங் காட்டிக் கொடுத்தே யெனையாண்ட
அரைசே யய்யா வம்மாவென் அப்பா யானுன் னடைக்கலமே. 2

தேனே யமுதே சிற்சபையிற் சிவமே தவமே செய்கின்றோர்
ஊனே புகுந்த வொளியேமெய் யுணர்வே யென்ற னுயிர்க்குயிராம்
வானே யென்னைத் தானாக்கு வானே கோனே யெல்லாம்வல்
லானே யையா வம்மாவென் அப்பா யானுன் னடைக்கலமே. 3

கடையே னுள்ளக் கவலையெலாங் கழற்றிக் கருணை யமுதளித்தென்
புடையே யகத்தும் புறத்துமகப் புறத்தும் விளங்கும் புண்ணியனே
தடையே தவிர்க்குஞ் சனகசபைத் தலைவா ஞான சபாபதியே
அடையே னுலகை யுனையடைந்தேன் அடியே னுன்ற னடைக்கலமே. 4

இகத்தும் பரத்தும் பெரும்பலன்கள் எல்லாம் பெறுவித் திம்மையிலே
முகத்தும் முளத்துங் களிதுளும்ப மூவா வின்ப நிலையமர்த்திச்
சகத்து ளவர்கண் மிகத்துதிப்பத் தக்கோ னெனவைத் தென்னுடைய
அகத்தும் புறத்தும் விளங்குகின்றோய் அடியே னுன்ற னடைக்கலமே. 5

நீண்ட மறைக ளாகமங்கள் நெடுநாள் முயன்று வருந்திநின்று
வேண்ட வவைகட் கொருசிறிதும் விளங்கக் காட்டா தென்மொழியைப்
பூண்ட வடியை யென்றலைமேற் பொருந்தப் பொருத்தி யென்றன்னை
ஆண்ட கருணைப் பெருங்கடலே அடியே னுன்ற னடைக்கலமே. 6

பாடுஞ் சிறியேன் பாட்டனைத்தும் பலிக்கக் கருணை பாலித்துக்
கோடு மனப்பேய்க் குரங்காட்டங் குலைத்தே சித்தக் கூற்றொழித்து
நீடு முலகி லழியாத நிலைமே லெனைவைத் தென்னுளத்தே
ஆடுங் கருணைப் பெருவாழ்வே அடியே னுன்ற னடைக்கலமே. 7

கட்டுக் கடங்கா மனப்பரியைக் கட்டு மிடத்தே கட்டுவித்தென்
மட்டுக் கடங்கா வாங்கார மதமா வடங்க வடக்குவித்தே
எட்டுக் கிசைந்த விரண்டுமெனக் கிசைவித் தெல்லா வின்னமுதும்
அட்டுக் கொடுத்தே யருத்துகின்றோ யடியே னுன்ற னடைக்கலமே. 8

புல்லுங் களபப் புணர்முலையார் புணர்ப்பும் பொருளும் பூமியுமென்
றொல்லு முலகப் பேராசை யுவரி கடத்தி யெனதுமனக்
கல்லுங் கனியக் கரைவித்துக் கருணை யமுதங் களித்தளித்தே
அல்லும் பகலு மெனதுளத்தே அமர்ந்தோ யானுன் னடைக்கலமே. 9

பிச்சங் கவரி நிழற்றியசைத் திடமால் யானைப் பிடரியின்மேல்
நிச்சம் பவனி வருகின்ற நிபுண ரெல்லாந் தொழுதேத்த
எச்சம் புரிவோர் போற்றவெனை யேற்ற நிலைமே லேற்றுவித்தென்
அச்சந் தவிர்த்தே யாண்டுகொண்டோய் அடியே னுன்ற னடைக்கலமே. 10

இருளைக் கெடுத்தென் னெண்ணமெலாம் இனிது முடிய நிரம்புவித்து
மருளைத் தொலைத்து மெய்ஞ்ஞான வாழ்வை யடையும் வகைபுரிந்து
தெருளைத் தெளிவித் தெல்லாஞ்செய் சித்தி நிலையைச் சேர்வித்தே
அருளைக் கொடுத்தென் றனையாண்டோய் அடியே னுன்ற னடைக்கலமே. 11

அருட்பெருஞ்ஜோதி

## 68. பற்றறுத்தல்

அருட்பெருஞ்ஜோதி

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

சத்தியஞ் சத்திய மருட்பெருஞ் ஜோதித்
தந்தைய ரேயெனைத் தாங்குகின் றீரே
உத்தம மாகுநுந் திருச்சமு கத்தென்
உடல்பொரு ளாவியை யுவப்புட னளித்தேன்
இத்தகை யுலகிடை யவைக்குமென் றனக்கும்
ஏதுஞ் சுதந்தர மில்லையிங் கினிநீர்
எத்தகை யாயினுஞ் செய்துகொள் கிற்பீர்
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பந்தந் தீரே. 1

ஆணைநும் மாணையென் னருட்பெருஞ் ஜோதி
ஆண்டவரே திரு வம்பலத் தவரே
நாணைவிட் டுரைக்கின்ற வாறிது கண்டீர்
நாயகரே யுமை நான்விட மாட்டேன்
கோணையென் உடல்பொரு ளாவியு நுமக்கே
கொடுத்தன னினியென்மேற் குறைசொல்ல வேண்டாம்
ஏணைநின் றெடுத்தகைப் பிள்ளைநா னன்றோ
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பந்தந் தீரே. 2

அகத்தொன்று புறத்தொன்று நினைத்ததிங் கில்லை
அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவ ரேநீர்
சகத்தென்று மெங்கணுஞ் சாக்கியாய் நின்றீர்
தனிப்பெருந் தேவரீர் திருச்சமு கத்தே
[1] உகத்தென துடல்பொரு ளாவியை நுமக்கே
ஒருமையி னளித்தன னிருமையும் பெற்றேன்
இகத்தன்றிப் பரத்தினு மெனக்கோர் பற்றிலைகாண்
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பந்தந் தீரே. 3

தப்படி யெடுத்துக்கொண் டுலகவர் போலே
சாற்றிட மாட்டேனுன் சத்தியஞ் சொன்னேன்
செப்படி வித்தைசெய் சித்தரென் றோதுந்
தேவரீர் வல்லபத் திருச்சமு கத்தே
இப்படி வான்முத லெங்கணு மறிய
என்னுட லாதியை யீந்தன னுமக்கே
எப்படி யாயினுஞ் செய்துகொள் கிற்பீர்
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பந்தந் தீரே. 4

தருணத்துக் கேற்றவா சொல்லிப்பின் மாற்றுந்
தப்புரை யீதன்று சத்தியஞ் சொன்னேன்
கருணைப் பெருக்கினிற் கலந்தென துள்ளே
கனவினு நனவினுங் களிப்பருள் கின்றீர்
வருணப் பொதுவிலும் மாசமு கத்தென்
வன்பொரு ளாதியை நண்பொடு கொடுத்தேன்
இருணச் சறுத்தமு தந்தர வல்லீர்
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பந்தந் தீரே. 5

வாய்மட்டிற் சொல்கின்ற வார்த்தையன் றிதுவென்
மனமொத்துச் சொல்லிய வாய்மை முக்காலும்
தாய்மட்டி லன்றியென் தந்தையுங் குருவுஞ்
சாமியு மாகிய தனிப்பெருந் தகையீர்
ஆய்மட்டி லென்னுட லாதியை நுமக்கே
அன்புடன் கொடுத்தன னாண்டவ ரேநீர்
எய்மட்டி' லெப்படி யேனுஞ்செய் கிற்பீர்
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பந்தந் தீரே. 6

1 உகந்து என்பது—உகத்துவலித்தல் விகாரம்.

தித்திக்கப் பேசிக் கசப்புள்ளே காட்டுந்
திருட்டுப்பேச் சன்றுநுந் திருவுள மறியும்
எத்திக்கு மறியவென் னுடல்பொரு ளாவி
என்பவை மூன்றுமுள் ளன்பொடு கொடுத்தேன்
சித்திக்கு மூலத்தைத் தெளிவித்தென் னுள்ளே
திருநடஞ் செய்கின்ற தேவரீர் தாமே
இத்திக்கி லெப்படி யேனுஞ்செய் கிற்பீர்
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பந்தந் தீரே. 7

புன்மார்க்கத் துள்ளும் புறத்தும் வேறாகிப்
புகன்றசொல் லன்றுநும் பொன்னடி கண்ட
சன்மார்க்க சங்கத்துச் சாதுக்கள் காணச்
சத்தியஞ் சத்தியஞ் சத்தியஞ் சொன்னேன்
தன்மார்க்கத் தென்னுடை லாதியை நுமக்கே
தந்தனன் திருவருட் சந்நிதி முன்னே
என்மார்க்கத் தெப்படி யேனுஞ்செய் கிற்பீர்
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பந்தந் தீரே. 8

இச்சைவே றில்லையிங் கென்கருத் தெல்லாம்
என்னுள் ளமர்ந்தறிந் தேயிருக் கின்றீர்
விச்சை யெலாம்வல்ல நுந்திருச் சமூக
விண்ணப்ப மென்னுடை லாதியை நுமக்கே
நிச்சலுந் தந்தன னென்வச மின்றி
நின்றன னென்றனை நீர்செய்வ தெல்லாம்
எச்செய லாயினுஞ் செய்துகொள் கிற்பீர்
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பந்தந் தீரே. 9

மன்செய்து கொண்டசன் மார்க்கத்தி லிங்கே
வான்செய்து கொண்டதை நான்செய்து கொண்டேன்
முன்செய்து கொண்டது மிங்ஙனங் கண்டீர்
மூவகை யாமுடை லாதியை நுமது
பொன்செய்து கொண்ட பொதுவினி லாடும்
பொன்னடி காணப் பொருந்திக் கொடுத்தேன்
என்செய்து கொண்டாலுஞ் செய்துகொள் கிற்பீர்
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பந்தந் தீரே. 10

தெய்வங்கள் பலபல சிந்தைசெய் வாரும்
சேர்கதி பலபல செப்புகின் றாரும்
பொய்வந்த கலைபல புகன்றிடு வாரும்
பொய்ச்சம யாதியை மெச்சுகின் றாரும்
மெய்வந்த திருவருள் விளக்கமொன் றில்லார்
மேல்வினை வறிகிலர் வீண்கழிக் கின்றார்
எய்வந்த துன்பொழித் தவர்க்கறி வருள்வீர்
எனைப்பள்ளி யெழுப்பிமெய் யின்பந்தந் தீரே. 11

# 69. சிற்சத்திதுதி

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

ஜோதிக் கொடியே யானந்த சொருபக் கொடியே ஜோதியுறு
பாதிக் கொடியே ஜோதிவலப் பாகக் கொடியே யெனையீன்ற
ஆதிக் கொடியே யுலகுகட்டி யாளுங் கொடியே சன்மார்க்க
நீதிக் கொடியே சிவகாம நிமலக் கொடியே யருளுகவே. 1

பொருணற் கொடியே மாற்றுயர்ந்த பொன்னங் கொடியே போதாந்த
வருணக் கொடியே யெல்லாஞ்செய் வல்லா ரிடஞ்சேர் மணிக்கொடியே
தருணக் கொடியே யென்றனைத் தாங்கி யோங்குந் தனிக்கொடியே
கருணைக் கொடியே ஞானசிவ காமக் கொடியே யருளுகவே. 2

நீட்டுக் கொடியே சன்மார்க்க நீதிக் கொடியே சிவகீதப்
பாட்டுக் கொடியே யிறைவர்வலப் பாகக் கொடியே பராநாத
நாட்டுக் கொடியே யெனையீன்ற ஞானக் கொடியே யென்னுறவாங்
கூட்டுக் கொடியே சிவகாமக் கொடியே யடியேற் கருளுகவே. 3

மாலக் கொடியேன் குற்றமெலா மன்னித் தருளி மரணமெனுஞ்
சாலக் கொடியை யொடித்தெனக்குட் சார்ந்து விளங்குந் தவக்கொடியே
காலக் கருவைக் கடந்தொளிர்வான் கருவுங் கடந்து வயங்குகின்ற
கோலக் கொடியே சிவஞானக் கொடியே யடியேற் கருளுகவே. 4

நாடாக் கொடிய மனமடக்கி நல்ல மனத்தைக் கனிவித்துப்
பாடாப் பிழையைப் பொறுத்தெனக்கும் பதமீந் தாண்ட பதிக்கொடியே
தேடாக் கரும சித்தியெலாந் திகழத் தயவாற் றெரிவித்த
கோடாக் கொடியே சிவதருமக் கொடியே யடியேற் கருளுகவே. 5

மணங்கொள் கொடிப்பூ முதலனந்த வகைப்பூ வடிவுள் வயங்குகின்ற
வணங்கொள் கொடியே பைம்பூவு மலிய மலர்ந்த வான்கொடியே
கணங்கொள் யோக சித்தியெலாங் காட்டுங் கொடியே கலங்காத
குணங்கொள் கொடியே சிவபோகக் கொடியே யடியேற் கருளுகவே. 6

புலங்கொள் கொடிய மனம்போன போக்கிற் போகா தெனைமீட்டு
நலங்கொள் கருணைச் சன்மார்க்க நாட்டில் விடுத்த நற்கொடியே
வலங்கொண் ஞான சித்தியெலாம் வயங்க விளங்கு மணிமன்றிற்
குலங்கொள் கொடியே மெய்ஞ்ஞானக் கொடியே யடியேற் கருளுகவே. 7

வெறிக்குஞ் சமயக் குழியில்விழ விரைந்தேன் றன்னை விழாதவகை
மறிக்கு மொருபே ரறிவளித்த வள்ளற் கொடியே மனக்கொடியைச்
செறிக்கும் பெரிய ருளத்தோங்குந் தெய்வக் கொடியே சிவஞானங்
குறிக்குங் கொடியே யானந்தக் கொடியே யடியேற் கருளுகவே. 8

தடுத்த லரிய பயங்கவலை யெல்லாந் தவிர்த்துக் கருத்துள்ளே
அடுத்த கொடியே யருளமுத மளித்தென் றனைமெய் யருட்கரத்தால்
எடுத்த கொடியே சித்தியெலா மிந்தா மகனே யென்றெனக்கே
கொடுத்த கொடியே யானந்தக் கொடியே யடியேற் கருளுகவே. 9

[1] ஏட்டைத் தவிர்த்தென் னெண்ணமெலா மெய்த வொளிதந் தியான்வனைந்த
பாட்டைப் புனைந்து பரிசளித்த பரமஞானப் பதிக் கொடியே
தேட்டைத் தனிப்பே ரருட்செங்கோல் செலுத்துஞ் சுத்த சன்மார்க்கக்
கோட்டைக் கொடியே யானந்தக் கொடியே யடியேற் கருளுகவே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 70. பிரிவாற்றாமை

## எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

தேடிய துண்டு நினதுரு வுண்மை தெளிந்திடச் சிறிதுநின் னுடனே
ஊடிய துண்டு பிறர்தமை யடுத்தே யுரைத்தது முவந்தது முண்டோ
ஆடிய பாத மறியநா னறியேன் அம்பலத் தரும்பெருஞ் ஜோதி
கூடிய நின்னைப் பிரிகிலேன் பிரிவைக் கூறவுங் கூசுமென் னுளமே. 1

மடம்புரி மனத்தாற் கலங்கிய துண்டு வள்ளலே நின்றிரு வரவுக்
கிடம்புரி சிறியேன் கலங்கினே னினினு மிறைபுயல்வே றெண்ணிய துண்டோ
நடம்புரி பாத மறியநா னறியே னென்செயும் வகையினி நன்றே
திடம்புரிந் தருளிக் காத்திடல் வேண்டுஞ் சிறிதுநான் பொறுக்கலேன் சிவனே. 2

நீக்கிய மனம்பின் னடுத்தெனைக் கலக்கி நின்றதே யன்றிநின் னளவில்
நோக்கிய நோக்கம் பிறவிட யத்தே நோக்கிய திறையுமிங் குண்டோ
தூக்கிய பாத மறியநா னறியேன் துயரினிப் பொறுக்கலேன் சிறிதும்
தேக்கிய களிப்பாற் சிறப்பவந் தென்னைத் தெளிவித்த னின்கடன் சிவனே. 3

ஈன்றநற் றாயுந் தந்தையுங் குருவு மென்னுயிர்க் கின்பமும் பொதுவில்
ஆன்றமெய்ப் பொருளே யென்றிருக் கின்றே னன்றிவே றெண்ணிய துண்டோ
ஊன்றிய பாத மறியநா னறியே னுறுகணிங் காற்றலேன் சிறிதுந்
தோன்றியென் னுளத்தே மயக்கெலாந் தவிர்த்துத் துலக்குத னின்கடன் றுணையே. 4

மாயையாற் கலங்கி வருந்திய போதும் வள்ளலுன் றன்னையே மதித்துன்
சாயையாப் பிறரைப் பார்த்ததே யல்லாற் றலைவவே றெண்ணிய துண்டோ
தூயபொற் பாத மறியநா னறியேன் துயரினிச் சிறிதுமிங் காற்றேன்
நாயகா வெனது மயக்கெலாந் தவிர்த்தே நன்றருள் புரிவதுன் கடனே. 5

1 ஏட்டை என்பது—துன்பம்.

வண்ணம் வேறெனினும் வடிவு வேறெனினு மன்னிய வுண்மையொன் றென்றே
யெண்ணிய தல்லாற் சச்சிதா னந்தத் திறையும்வே றெண்ணிய துண்டோ
அண்ணனின் பாத மறியநா னறியேன் அஞரினிச் சிறிதுமிங் காற்றேன்
திண்ணமே நின்மே லாணையென் றன்னைத் தெளிவித்துக் காப்பதுன் கடனே. 6

ஊடல்செய் மதமுஞ் சமயமு மிவற்றி லுற்றகற் பனைகளுந் தவிர்ந்தேன்
வாடல்செய் மனத்தாற் கலங்கினே னெனினு மன்றினை மறந்ததிங் குண்டோ
ஆடல்செய் பாத மறியநா னறியேன் ஐயவோ சிறிதுமிங் காற்றேன்
பாடல்செய் கின்றேன் படிக்கின்றே னெனக்குப் பரிந்தருள் புரிவதுன் கடனே. 7

உள்ளதே யுள்ள திரண்டிலை யெல்லாம் ஒருசிவ மயமென வுணர்ந்தேன்
கள்ளநேர் மனத்தாற் கலங்கினே னெனினுங் கருத்தயல் கருதிய துண்டோ
வள்ளலுன் பாத மறியநா னறியேன் மயக்கினிற் சிறிதுமிங் காற்றேன்
தெள்ளமு தருளி மயக்கெலாந் தவிர்த்தே தெளிவித்தல் நின்கடன் சிவனே. 8

எம்மத நிலையு நின்னருள் நிலையி லிலங்குத லறிந்தன னெல்லாஞ்
சம்மத மாக்கிக் கொள்கின்றே னல்லாற் றனித்துவே றெண்ணிய துண்டோ
செம்மலுன் பாத மறியநா னறியேன் சிறிதுமிங் கினித்துய ராற்றேன்
இம்மதிக் கடியேன் குறித்தவா றுள்ள தியற்றுவ துன்கட னெந்தாய். 9

அகம்புற மற்றை யகப்புறம் புறத்தே யடுத்திடும் புறப்புற நான்கில்
இகந்தது பிலையோ ரேகதே சத்தா விறையுமிங் கெண்ணிய துண்டோ
உகந்தநின் பாத மறியநா னறியே னுறுகணிங் கினிச்சிறி தும்தான்
இகம்பெற லாற்றேன் மயக்கெலாந் தவிர்த்திங் கென்னையாண் டருள்வதுன் கடனே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 71. ஆனந்தானுபவம்

நேரிசை வெண்பா

அருட்பெருஞ்ஜோதி

**கள்ளத்தை** யெல்லாங் கடக்கவிட்டே னின்னருளாம்
வெள்ளத்தை யெல்லா மிகவுண்டேன் — உள்ளத்தே
காணாத காட்சியெலாங் காண்கின்றே னோங்குமன்ற
வாணா நினக்கடிமை வாய்த்து. 1

காலையிலே நின்றன்னைக் கண்டுகொண்டேன் சன்மார்க்கச்
சாலையிலே யின்பந் தழைக்கின்றேன் — ஞாலமிசைச்
சாகா வரம்பெற்றேன் தத்துவத்தின் மேனடிக்கும்
ஏகா நினக்கடிமை யேய்ந்து. 2

மூவர்களுந் தேற முடியா முடிபெல்லாம்
யாவர்களுங் காண வெனக்களித்தாய் — மேவுகடை
நாய்க்குத் தவிசளித்து நன்முடியுஞ் சூட்டுதலெந்
தாய்க்குத் தனியியற்கை தான். 3

கோள்ளையென வின்பங் கொடுத்தாய் நினது செல்வப்
பிள்ளையென வெற்குப் பெயரிட்டாய் — தெள்ளமுதந்
தந்தாய் சமரசசன் மார்க்கசங்கத் தேவைத்தாய்
எந்தாய் கருணை யிது. 4

கண்டேன் களித்தேன் கருணைத் திருவமுதம்
உண்டே னுயர்நிலைமே லோங்குகின்றேன் — கொண்டேன்
அழியாத் திருவுருவ மச்சோவெஞ் ஞான்றும்
அழியாச்சிற் றம்பலத்தே யான். 5

பார்த்தேன் பணிந்தேன் பழிச்சினேன் மெய்ப்புளகம்
போர்த்தேனென் னுள்ளமெலாம் பூரித்தேன் — ஆர்த்தேநின்
றாடுகின்றேன் பாடுகின்றே னன்புருவா னேனருளை
நாடுகின்றேன் சிற்சபையை நான். 6

எண்ணுகின்றே னெண்ணாங்க ளெல்லாந் தருகின்றான்
உண்ணுகின்றே னுண்ணவுண்ண வூட்டுகின்றான் — நண்ணுதிருச்
சிற்றம் பலத்தே திருநடஞ்செய் கின்றானென்
குற்றம் பலபொறுத்துக் கொண்டு. 7

கோண்டா னடிமை குறியான் பிழையொன்றுங்
கண்டே களித்தான் கலந்திருந்தான் — பண்டாய
நான்மறையு மாகமமு நாடுந் திருப்பொதுவில்
வாய்மலர்ந்தா னென்னை மதித்து. 8

கண்டேன் களித்தேன் கருணைத் திருவமுதம்
உண்டே னழியா வுரம்பெற்றேன் — பண்டே
எனையுவந்து கொண்டா னெழின்ஞான மன்றன்
தனையுவந்து கொண்டான் றனை. 9

தாதையா மென்னுடைய தாயாமென் சற்குருவாம்
மேதையா மின்ப விளைவுமாம் — ஓது
குணவாளன் தில்லையருட் கூத்த னுமையாள்
மணவாளன் பாத மலர். 10

திருவாமென் தெய்வமாந் தெள்ளமுத ஞானக்
குருவா மெனைக்காக்குங் கோவாம் — பருவரையின்
தேப்பிள்ளை யாமென் சிவகாம வல்லிமகிழ்
மாப்பிள்ளை பாத மலர். 11

என்னறிவா மென்னறிவி னின்பமா மென்னறிவின்
தன்னறிவா முண்மைத் தனிநிலையாம் — மன்னுகொடிச்
சேலையிட்டான் வாழச் சிவகாம சுந்தரியை
மாலையிட்டான் பாத மலர். 12

# 72. சிவபுண்ணியப்பேறு

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**மா**லிலே மயங்கி மண்ணிலே யநித்த வாழ்விலே வரவிலே மலஞ்சார்
தோலிலே யாசை வைத்துவீண் பொழுது தொலைக்கின்றார் தொலைக்கநா னுனது
காலிலே யாசை வைத்தன னீயுங் கனவினு நனவினு மெனைநின்
பாலிலே வைத்தா யெனக்கிது போதும் பண்ணிய தவம்பலித் ததுவே. 1

மதத்திலே சமய வழக்கிலே மாயை மருட்டிலே யிருட்டிலே மறவாக்
கதத்திலே மனத்தை வைத்துவீண் பொழுது கழிக்கின்றார் கழிக்கநா னுன்பூம்
பதத்திலே மனத்தை வைத்தன னீயும் பரிந்தெனை யழிவிலா நல்ல
பதத்திலே வைத்தா யெனக்கிது போதும் பண்ணிய தவம்பலித் ததுவே. 2

குலத்திலே சமயக் குழியிலே நரகக் குழியிலே குமைந்துவீண் பொழுது
நிலத்திலே போக்கி மயங்கியே மாந்து நிற்கின்றார் நிற்கநா னுவந்து
வலத்திலே நினது வசத்திலே நின்றேன் மகிழ்ந்துநீ யென்னுள மெனுமம்
பலத்திலே நின்றா யெனக்கிது போதும் பண்ணிய தவம்பலித் ததுவே. 3

கூடவும் பின்னே பிரியவுஞ் சார்ந்த கொழுநரு மகளிரு நாண
நீடவென் னுளத்தே கலந்துகொண் டென்றும் நீங்கிடா திருந்துநீ யென்னோ
டாடவு மெல்லாம் வல்லசித் தியைப்பெற் றறிவுரு வாகிநா னுனையே
பாடவும் பெற்றே னெனக்கிது போதும் பண்ணிய தவம்பலித் ததுவே. 4

உயத்திட மறியா திறந்தவர் தமையிவ் வுலகிலே யுயிர்பெற் றுமீள
நயத்தொடு வருவித் திடுமொரு ஞான நாட்டமுங் கற்பகோ டியினும்
வயத்தொடு சாகா வரமுமென் றனக்கே வழங்கிடப் பெற்றனன் மரண
பயத்தைவிட் டொழித்தே னெனக்கிது போதும் பண்ணிய தவம்பலித் ததுவே. 5

நாடல்செய் கின்றேன் அருட்பெருஞ் ஜோதி நாதனை யென்னுளே கண்டு
கூடல்செய் கின்றே னெண்ணிய வெல்லாங் கூடியே குலவியின் புருவாய்
ஆடல்செய் கின்றேன் சித்தெலாம் வல்லா னம்பலந் தன்னையே குறித்துப்
பாடல்செய் கின்றே னெனக்கிது போதும் பண்ணிய தவம்பலித் ததுவே. 6

துதிபெறு மயனோ டரியரன் முதலோர் சூழ்ந்துசூழ்ந் திளைத்தொரு தங்கள்
விதியைநொந் தின்றும் விழித்திருக் கின்றார் விழித்திருந் திடவுநோ வாமே
மதியிலேன் அருளாற் சுத்தசன் மார்க்க மன்றிலே வயங்கிய தலைமைப்
பதிபதம் பெற்றே னெனக்கிது போதும் பண்ணிய தவம்பலித் ததுவே. 7

புரிசைவா னுலகிற் பூவுல கெல்லாம் புண்ணிய உலகமாய்ப் பொலிந்தே
கரிசெலாந் தவிர்ந்து களிப்பெலா மடைந்து கருத்தொடு வாழவுங் கருத்தின்
துரிசெலாந் தவிர்க்குஞ் சுத்தசன் மார்க்கந் துலங்கவுந் திருவருட் ஜோதிப்
பரிசெலாம் பெற்றே னெனக்கிது போதும் பண்ணிய தவம்பலித் ததுவே. 8

வேதமே விளங்க மெய்ம்மையே வயங்க வெம்மையே நீங்கிட விமல
வாதமே வழங்க வானமே முழங்க வையமே யுய்யவோர் பரம
நாதமே தொனிக்க ஞானமே வடிவாய் நன்மணி மன்றிலே நடிக்கும்
பாதமே பிடித்தே னெனக்கிது போதும் பண்ணிய தவம்பலித் ததுவே. 9

கட்டமுங் கழன்றேன் கவலைவிட் டொழிந்தேன் கலக்கமுந் தீர்ந்தனன் பிறவிச்
சட்டமுங் கிழித்தேன் தூக்கமுந் துறந்தேன் சாவையு நோவையுந் தவிர்ந்தேன்
சிட்டமு மடைந்தேன் சிற்சபை யுடையான் செல்வமெய்ப் பிள்ளையென் றொருபேர்ப்
பட்டமுந் தரித்தே னெனக்கிது போதும் பண்ணிய தவம்பலித் ததுவே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 73. அந்தோப்பத்து

கலித்தாழிசை

அருட்பெருஞ்ஜோதி

நானந்த மடையாதெந் நாளினுமுள்
ளவனுகி நடிக்கும் வண்ணம்
ஆனந்த நடப்புரிவா னனந்த
அமுதளித்தான் அந்தோ வந்தோ. 1

சாதிமதஞ் சமயமுதல் சங்கற்ப
விகற்பமெலாந் தவிர்ந்து போக
ஆதிநடம் புரிகின்ற வருட்ஜோதி
எனக்களித்தான் அந்தோ வந்தோ. 2

துரியபத மடைந்தபெருஞ் சுத்தர்களு
முத்தர்களுந் துணிந்து சொலற்
கரியபத மெனக்களித்தா னம்பலத்தில்
ஆடுகின்றன் அந்தோ வந்தோ. 3

மருட்பெருஞ்சோ தனையெனது மட்டுமிலா
வணங்கருணை வைத்தே மன்றில்
அருட்பெருஞ்ஜோ திப்பெருமா னருளமுத
மெனக்களித்தான் அந்தோ வந்தோ. 4

துன்பமெலா மொருகணத்திற் றுலைத்தருளி
எந்நாளுஞ் சுகத்தி லோங்க
அன்புடையா னம்பலத்தா னருட்ஜோதி
எனக்களித்தான் அந்தோ வந்தோ. 5

பந்தமெலாந் தவிர்த்தருளிப் பதந்தருபோ
காந்தமுதல் பகரா நின்ற
அந்தமெலாங் கடந்திடச்செய் தருளமுதம்
எனக்களித்தான் அந்தோ வந்தோ. 6

பேராலு மறிவாலும் பெரியரெனச்
சிறப்பாகப் பேச நின்றோர்
ஆராலும் பெறலரிய தியாததனைப்
பெறுவித்தான் அந்தோ வந்தோ. 7

தினைத்தனையு மறிவறியாச் சிறியனென
நினையாமற் சித்தி யான
வனைத்துமென்றன் வசமாக்கி யருளமுதம்
எனக்களித்தான் அந்தோ வந்தோ. 8

போதுவாகி பொதுவினடம் புரிகின்ற
பேரின்பப் பொருள்தான் யாதோ
அதுநானாய் நானதுவா யத்துவித
மாகிநின்றேன் அந்தோ வந்தோ. 9

மருள்வடிவே யென்றுமெவ் விடத்தும்
எதனாலு மாய்வி லாத
அருள்வடிவா யிம்மையிலே யடைந்திடப்பெற்
றுடுகின்றேன் அந்தோ வந்தோ. 10

அருட்பெருஞ்ஜோதி

# 74. சமரச நிலை

நேரிசை வெண்பா

அருட்பெருஞ்ஜோதி

சித்தி புரத்தே தினந்தோறுஞ் சீர்கொளருட்
சத்திவிழா நீடித் தழைத்தோங்க — எத்திசையில்
உள்ள வரும்வந்தே யுவகை யுறுகமதத்
துள்ள லொழிக தொலைந்து. 1

ஒன்றே சிவமென் றுணர்ந்திவ் வுலகமெலாம்
நன்றே யொருமையுற்று நண்ணியே — மன்றே
நடம்புரியும் பாத நளினமலர்க் குள்ளம்
இடம்புரிக வாழ்க விசைந்து. 2

சிற்சபையும் பொற்சபையுஞ் சித்தி விளக்கத்தால்
நற்சகமே வீடுழி நண்ணிடுக — சற்சபையோர்
போற்றிவரம் பெற்றுவகை பூரிக்க வாழ்ந்திடுக
நாற்றிசையும் வாழ்க நயந்து. 3

அச்சந் தவிர்த்தே யருளிற் செலுத்துகின்ற
விச்சை யரசே விளங்கிடுக — நச்சரவ
மாதிக் கொடியவுயி ரத்தனையும் போயொழிக
நீதிக் கொடிவிளங்க நீண்டு. 4

கருணையிலா ஆட்சி கடுகி யொழிக
அருணயந்த நன்மார்க்க ராள்க — தெருணயந்த
நல்லோர் நினைத்த நலம்பெறுக நன்றுநினைத்
தெல்லோரும் வாழ்க விசைந்து. 5

புல்லொழுக்க மெல்லாம் புணரியிடைப் போயொழிக
நல்லொழுக்க மொன்றே நலம்பெறுக — இல்லொழுக்கிற்
செத்தார்க ளெல்லாம் திரும்ப வெழுந்துமனம்
ஒத்தாராய் வாழ்க வுவந்து. 6

சேத்தா ரெழுக சிவமே பொருளென்றே
இத்தாரணியி லிருந்தொளிர்க — சுத்தசிவ
சன்மார்க்கம் ஒன்றே தழைக்க தயவறியாத்
துன்மார்க்கம் போக தொலைந்து. 7

செத்தவர்க ளெல்லாந் திரும்ப வெழுந்துவரச்
சித்தம்வைத்துச் செய்கின்ற சித்தியனே — சுத்தசிவ
சன்மார்க்க சங்கத் தலைவனே நிற்போற்றும்
என்மார்க்க நின்மார்க்க மே. 8

நல்லாரு மென்னை நயந்தாரு நன்மைசொல
வல்லாரு மென்னை வளர்த்தாரும் — எல்லாரும்
நீயென் றிருக்கின்றே னின்மலனே நீபெற்ற
சேயென் றிருக்கின்றேன் சேர்ந்து. 9

ஆடவெடுத் தானென் றறைகின்றீ ரென்றலைமேற்
சூடவெடுத் தானென்று சொல்கின்றேன் — நாடறிய
இவ்வழக்கை யார்பா லிசைத்தறுத்துக் கொள்கிற்பாம்
கவ்வையற்ற வம்பலத்தான் கால். 10

நோவாது நோன்பெனைப்போல் நோற்றவரு மெஞ்ஞான்றும்
சாவா வரமெனைப்போற் சார்ந்தவருந் — தேவாநின்
பேரருளை யென்போலப் பெற்றவரு மெவ்வுலகில்
யாருளர்நீ சற்றே யறை. 11

அருட்பெருஞ்ஜோதி

## 75. வேண்டுகோள்

கலித்துறை

அருட்பெருஞ்ஜோதி

வேதமும் வேதத்தி னந்தமும் போற்ற விளங்கியநின்
பாதமு மாமுடி யுங்கண்டு கொள்ளும் படியெனக்கே
போதமும் போதத் தருளமு தந்தந்த புண்ணியனே
நாதமு நாத முடியுங் கடந்த நடத்தவனே. 1

வண்ணப் பொன்னம்பல வாழ்வேயென் கண்ணினுண் மாமணியே
சுண்ணப் பொன்னீற்றொளி யோங்கிய ஜோதிச் சுகப்பொருளே
எண்ணப் பயின்றவென் னெண்ண மெலாமுன்ன ரீகவிதென்
விண்ணப்ப மேற்று வருவாயென் பால்விரைந் தேவிரைந்தே. 2

சிற்சபை யப்பனைக் கண்டுகொண் டேனருட் டெள்ளமுதஞ்
சற்சபை யுள்ளந் தழைக்கவுண் டேனுண்மை தானறிந்த
நற்சபை சித்திக ளெல்லாமென் கைவச நண்ணப்பெற்றேன்
பொற்சபை யோங்கப் புரிந்தாடு தற்குப் புகுந்தனனே. 3

வரையற்ற சீர்பெரு வாழ்வுதந் தென்மன மன்னியென்றும்
புரையற்ற மெய்ந்நிலை யேற்றிமெய்ஞ் ஞானப் பொதுவினிடைத்
திரையற்ற காட்சி யளித்தின் னமுதந் தெளிவருளி
நரையற்று மூப்பற் றிறப்பற் றிருக்கவு நண்ணினனே. 4

தாயாகி யென்னுயிர்த் தந்தையு மாகியென் சற்குருவாய்த்
தேயாப் பெரும்பத மாகியென் சத்தியத் தெய்வமுமாய்
வாயாரப் பாடுநல் வாக்களித் தென்னுள மன்னுகின்ற
தூயா திருநட ராயாசிற் றம்பலச் சோதியனே. 5

ஆதியு மந்தமு மில்லாத் தனிச்சுட ராகியின்ப
நீதியு நீர்மையு மோங்கப் பொதுவி னிருத்தமிடுஞ்
ஜோதியும் [1] வேதியும் நானறிந் தேனிச் செகதலத்தில்
சாதியும் பேதச் சமயமு நீங்கித் தனித்தனனே. 6

தன்னேரி லாத தலைவாசிற் றம்பலந் தன்னிலென்னை
இன்னே யடைகுவித் தின்பருள் வாயிது வேதருணம்
அன்னே யெனைப்பெற்ற வப்பாவென் றுன்னை யடிக்கடிக்கே
சொன்னேன்முன் சொல்லுகின் றேன்பிற வேதுந் துணிந்திலனே. 7

தேகாதி மூன்றுமுன் பாற்கொடுத் தேனின் திருவடிக்கே
மோகா திபனென் றுலகவர் தூற்ற முயலுகின்றேன்
நாகா திபரும் வியந்திட வென்னெதிர் நண்ணியென்றுஞ்
சாகா வரந்தந்து சன்மார்க்க நீதியுஞ் சாற்றுகவே. 8

கற்றேன்சிற் றம்பலக் கல்வியைக் கற்றுக் கருணைநெறி
உற்றேனெக் காலமுஞ் சாகாம லோங்கு மொளிவடிவம்
பெற்றே னுயர்நிலை பெற்றே னுலகிற் பிறநிலையைப்
பற்றேன் சிவானந்தப் பற்றேயென் பற்றெனப் பற்றினனே. 9

தீமைகள் யாவுந் தொலைத்துவிட் டேனித் தினந்தொடங்கிச்
சேமநல் லின்பச் செயலே விளங்கமெய்ச் சித்தியெலாங்
காமமுற் றென்னைக் கலந்துகொண் டாளக் கருணைநடத்
தாமமென் னுள்ளமுஞ் சாரவும் பெற்றனன் சத்தியமே. 10

அருட்பெருஞ்ஜோதி

1 வேதி என்பது—இரும்பைப் பொன்னாக்குங் குளிகை போன்றவன்.

# 76. தலைவி பாங்கிக்குரைத்தல்

கலித்தாழிசை.

அருட்பெருஞ்ஜோதி

வேதாந்த நிலையொடு சித்தாந்த நிலையு
மேவும் பொதுநடம் நான்காணல் வேண்டும்
நாதாந்தத் திருவீதி நடப்பாயோ தோழி
நடவாம லென்மொழி கடப்பாயோ தோழி. 1

தோம்பத வுருவொடு தற்பத வெளியிற்
றோன்றசி பதநடம் நான்காணல் வேண்டும்
எம்பத மாகி யிசைவாயோ தோழி
இசையாமல் வீணிலே யசைவாயோ தோழி. 2

சின்மய வெளியிடைத் தன்மய மாகித்
திகழும் பொதுநடம் நான்காணல் வேண்டும்
என்மய மாகி யிருப்பாயோ தோழி
இச்சை மயமா யிருப்பாயோ தோழி. 3

நவநிலை மேற்பர நாதத் தலத்தே
ஞானத் திருநடம் நான்காணல் வேண்டும்
மவுனத் திருவீதி வருவாயோ தோழி
வாராமல் வீண்பழி தருவாயோ தோழி. 4

ஆறுறுக் கப்புற மாகும் பொதுவில்
அதுவது வாநடம் நான்காணல் வேண்டும்
ஏறுமவ் விழியாம லிருப்பாயோ தோழி
ஏறி யிழிந்திங் கிறப்பாயோ தோழி. 5

வகார வெளியிற் சிகார வுருவாய்
மகாரத் திருநடம் நான்காணல் வேண்டும்
விகார வுலகை வெறுப்பாயோ தோழி
வேறுகி யென்சொல் மறுப்பாயோ தோழி. 6

நாதாந்த நிலையொடு போதாந்த நிலைக்கு
நடுவாம் பொதுநடம் நான்காணல் வேண்டும்
சூதாந்தப் போதத்தைச் சுடுவாயோ தோழி
துட்டநெறியிற் கெடுவாயோ தோழி. 7

அறிவி லறிவை யறியும் பொதுவில்
ஆனந்தத் திருநடம் நான்காணல் வேண்டும்
செறிவி லறிவாகிச் செல்வாயோ தோழி
செல்லாமல் மெய்ந்நெறி வெல்வாயோ தோழி. 8

என்னைத்தன் னோடே யிருத்தும் பொதுவில்
இன்பத் திருநடம் நான்காணல் வேண்டும்
நின்னைவிட் டென்னோடே நிலைப்பாயோ தோழி
நிலையாம லென்னையு மலைப்பாயோ தோழி. 9

துரியத்திற் கப்பாலுந் தோன்றும் பொதுவில்
ஜோதித் திருநடம் நான்காணல் வேண்டும்
கரியைக்கண் டாங்கது காண்பாயோ தோழி
காணாது பொய்ப்பணி பூண்பாயோ தோழி. 10

தத்துவத் துட்புறந் தானும் பொதுவிற்
சத்தாந் திருநடம் நான்காணல் வேண்டும்
கொத்தறு வித்தை குறிப்பாயோ தோழி
குறியா துலகில் வெறிப்பாயோ தோழி. 11

அருட்பெருஞ்ஜோதி

## 77. தாய்கூறல்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**கா**தல்கைம் மிகுந்த தென்செய்வே னென்னை நீ கண்டுகொள் கணவனே யென்றாள்
ஓதனுன் புகழே யன்றிநா னொன்று முவந்திலே னுண்மையீ தென்றாள்
பேதைநான் பிறிதோர் புகலிலேன் செய்த பிழையெலாம் பொறுத்தரு ளென்றாள்
மாதய வுடைய வள்ளலே யென்றாள் வரத்தினால் நான்பெற்ற மகளே. 1

மயங்கினே னெனினும் வள்ளலே யுனைநான் மறப்பனோ கனவினு மென்றாள்
உயங்கினே னுன்னை மறந்திடி லையோ வுயிர்தரி யாதெனக் கென்றாள்
1 கயங்கினேன் கயங்கா வண்ணநின் கருணைக் கடலமு தளித்தரு ளென்றாள்
வயங்குசிற் சபையில் வரதனே யென்றாள் வரத்தினால் நான்பெற்ற மகளே. 2

அஞ்சலென் றெனையித் தருணநீ வந்தே யன்பினா லணைத்தரு ளென்றாள்
பஞ்சுபோற் பறந்தே னய்யகோ துன்பம் படமுடி யாதெனக் கென்றாள்
செஞ்செவே யெனது கருத்தெலா முனது திருவுள மறியுமே யென்றாள்
வஞ்சக மறியா வள்ளலே யென்றாள் வரத்தினால் நான்பெற்ற மகளே. 3

பூமியோ பொருளோ விரும்பிலே னுன்னைப் புணர்ந்திட விரும்பினே னென்றாள்
காமியென் றெனைநீ கைவிடேல் காமக் கருத்தெனக் கில்லைகா ணென்றாள்
சாமிநீ வரவு தாழ்த்திடி லையோ சற்றுநான் தரித்திடே னென்றாள்
மாமிகு கருணை வள்ளலே யென்றாள் வரத்தினால் நான்பெற்ற மகளே. 4

1 கயங்கல் என்பது—கசங்கல்.

அடுத்துநா னுன்னைக் கலந்தனு பவிக்க வாசைமேற் பொங்கிய தென்றாள்
தடுத்திட முடியா தினிச்சிறு பொழுதுந் தலைவனே தாழ்த்திடே லென்றாள்
தொடுத்துல குள்ளார் தூற்றுதல் வாயாற் சொலமுடி யாதெனக் கென்றாள்
மடுத்தவெந் துயர்தீர்த் தெடுத்தரு ளென்றாள் வரத்தினால் நான்பெற்ற மகளே. 5

தடுத்திடல் வல்லா ரில்லைநின் னருளைத் தருகநற் றருணமீ தென்றாள்
கொடுத்திடி லையோ நின்னருட் பெருமை குறையுமோ குறைந்திடா தென்றாள்
நடுத்தய விலர்போன் றிருத்தலுன் றனக்கு ஞாயமோ நண்பனே யென்றாள்
வடுத்தினும் வாயே னல்லவா னென்றாள் வரத்தினால் நான்பெற்ற மகளே. 6

பொன்செய்நின் வடிவைப் புணர்ந்திட வினைத்தேன் பொங்கிய தாசைமே லென்றாள்
என்செய்வே னெனையும் விழுங்கிய தையோ வென்னள வன்றுகா ணென்றாள்
கொன்செயு முலக ரென்னையு முனது குறிப்பையுங் குறித்திலா ரென்றாள்
வன்செயு மவர்வா யோய்வதென் றென்றாள் வரத்தினால் நான்பெற்ற மகளே. 7

மெலிந்தவென் னுளத்தை யறிந்தனை தயவு மேவிலை யென்னையோ வென்றாள்
நலிந்தபோ தின்னும் பார்த்துமென் றிருத்த னல்லவர்க் கடுப்பதோ வென்றாள்
மலிந்த விவ்வுலகர் வாய்ப்பதர் தூற்ற வைத்தலுன் மரபல வென்றாள்
வலிந்தெனைக் கலந்த வள்ளலே யென்றாள் வரத்தினால் நான்பெற்ற மகளே. 8

ஒன்றிலேன் பிறிதொன் றுன்னருட் ஜோதி யொன்றுற வொன்றினே னென்றாள்
நன்றிலே னெனினு நின்றிரு வடியை நம்பினே னயந்தரு ளென்றாள்
குன்றிலே யிருத்தற் குரியநான் றுயரக் குழியிலே யிருந்திடே னென்றாள்
மன்றிலே நடஞ்செய் வள்ளலே யென்றாள் வரத்தினால் நான்பெற்ற மகளே. 9

ஆடிய பாதத் தழகனென் றெனைத்தா னன்பினாற் கூடின னென்றாள்
கோடிமா தவங்கள் புரியினும் பிறர்க்குக் கூடுதல் கூடுமோ வென்றாள்
பாடிய படியென் கருத்தெலா நிரப்பிப் பரிசெலாம் புரிந்தன னென்றாள்
வாடிய வுளமுந் தளிர்த்தன னென்றாள் வரத்தினால் நான்பெற்ற மகளே. 10

அருட்பெருஞ்ஜோதி

---

## 78. பாங்கி தலைவி பெற்றியுரைத்தல்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அம்மதவேள் கணையொன்றோ வைங்கணையும் விடுத்தான்
அருளடையு மாசையினா லாருயிர்தான் பொறுத்தாள்
இம்மதமோ சிறிதுமிலாள் கலவியிலே யெழுந்த
ஏகசிவ போகவெள்ளத் திரண்டுபடா ளெனினும்
எம்மதமோ வெக்குலமோ வென்றுநினைப் புளதேல்
இவள்மதமு மிவள்குலமு மெல்லாமுஞ் சிவமே
சம்மதமோ தேவர்திரு வாய்மலர வேண்டுஞ்
சபையில்நடம் புரிகின்ற தனிப்பெரிய துரையே. 1

[1] அங்கலிட்ட களத்தழக ரம்பலவர் திருத்தோள்
ஆசையெனும் பேயகற்ற லாவதிலை யெனவே
பொங்கலிட்ட தாயர்முகந் தொங்கலிட்டுப் போனார்
பூவைமுகம் பூமுகம்போற் பூரித்து மகிழ்ந்தாள்
எங்களிட்டந் திருவருள்மங் கலஞ்சூட்ட லன்றி
இரண்டுபடா தொன்றாக்கி யின்படைவித் திடவே
தங்களிட்டம் யாதுதிரு வாய்மலர வேண்டுஞ்
சபையில்நடம் புரிகின்ற தனிப்பெரிய துரையே. 2

பனம்பழமே யெனினுமிந்தப் பசிதவிர்த்தாற் போதும்
பாரேனப் பகர்கின்ற பாவையர்போற் பகராள்
இனம்பழமோ கங்கலந்தாள் சிவானுபவத் தல்லால்
எந்தவனு பவங்களினு மிச்சையில்லா ளவர்தம்
மனம்பழமோ காயோவென் றறிந்துவர விடுத்தாள்
மற்றவர்போற் காசுபணத் தாசைவைத்து வருந்தாள்
தனம்பழமோ தேவர்திரு வாய்மலர வேண்டுஞ்
சபையில்நடம் புரிகின்ற தனிப்பெரிய துரையே. 3

புல்லவரே போய்யுலக போகமுற விழைவார்
புண்ணியரே சிவபோகம் பொருந்துதற்கு விழைவார்
கல்லவரே மணியிவரே யென்றறிந்தா ளதனாற்
கனவிடையும் பொய்யுறவு கருதுகிலாள் சிறிதும்
நல்லவரே யெனினுமுமை நாடாரே லவரை
நன்குமதி யாளிவளை நண்ணவெண்ண முளரோ
வல்லவரே நுமதுதிரு வாய்மலர வேண்டும்
வயங்குதிரு மணிமன்றில் வாழ்பெரிய துரையே. 4

தத்துவருந் தத்துவஞ்செய் தலைவர்களும் பிறருந்
தனித்தனியே வலிந்துவந்து தன்னெதிர்நிற் கின்றார்
எத்துணையும் மற்றவரை யேறெடுத்துப் பாராள்
இருவிழிக ணீர்சொரிவா ளென்னுயிர்நா யகனே
ஒத்துயிரிற் கலந்துகொண்ட வுடையாயென் றுமையே
ஓதுகின்றா ளிவளளவி லுத்தமரே யுமது
சித்தமெது தேவர்திரு வாய்மலர வேண்டுஞ்
சிற்சபையிற் பொற்சபையிற் றிகழ்பெரிய துரையே. 5

அன்னையைக்கண் டம்மாநீ யம்பலத்தென் கணவர்
அடியவளேல் மிகவருக வல்லளெனி லிங்கே
என்னையுனக் கிருக்கின்ற தேகுகவென் றுரைப்பாள்
இச்சையெலா மும்மிடத்தே யிசைந்தனளிங் கிவளை
முன்னையளென் றெண்ணுதீர் தாழ்த்திருப்பீ ரானால்
முடுகியுயிர் விடுத்திடுவாள் கடுகிவரு துளதேல்
மன்னவரே யுமதுதிரு வாய்மலர வேண்டும்
வயங்குதிரு மணிமன்றில் வாழ்பெரிய துரையே. 6

1 அங்கு-அல், எனப்பிரித்த—அவ்விடத்து இருள்-எனப் பொருள்கொள்க.

கரவறியா வம்பலத்தென் கணவரைக்கண் டலது
கண்துயிலே னுண்டிகொளேன் களித்தமரே னென்பாள்
இரவறியாள் பகலறியா ளெதிர்வருகின் றவரை
இன்னவரென் றறியாளிங் கின்னலுழக் கின்றாள்
வரவெதிர்பார்த் தழல்கின்றா ளிவளளவி லுமது
மனக்கருத்தின் வண்ணமெது வாய்மலர வேண்டும்
விரவுமொரு கணமுமினித் தாழ்க்கிலுயிர் தரியாள்
மெய்ப்பொதுவில் நடம்புரியு மிகப்பெரிய துரையே. 7

ஊராசை யுடலாசை யுயிர்பொருளி னாசை
உற்றவர்பெற் றவராசை யொன்றுமிலா ளுமது
பேராசைப் பேய்ப்பிடித்தாள் கள்ளுண்டு பிதற்றும்
பிச்சியெனப் பிதற்றுகின்றாள் பிறர்பெயர்கேட் டிடிலோ
நாராசஞ் செவிபுகுந்தா லென்னநலி கின்றாள்
நாடறிந்த திதுவெல்லாம் நங்கையிவ ளளவில்
நீராசைப் பட்டதுண்டேல் வாய்மலர வேண்டும்
நித்தியமா மணிமன்றில் நிகழ்பெரிய துரையே. 8

என்னுயிரிற் கலந்துகொண்டா ரவரிவிஃ தவர்தாம்
இருக்கவிடம் புனைகவென்றா ளிச்சைமய மாகித்
தன்னுயிர்தன் னுடல்மறந்தா ளிருந்தறியாள் படுத்துந்
தரித்தறியா ளெழுந்தெழுந்து தனித்தொருசார் திரிவாள்
அன்னமுண வழைத்தாலுங் கேட்பதிலா ளுலகில்
அணங்கனையா ரதிசயிக்குங் குணங்கள்பல பெற்றாள்
மின்னிவளை விழைவதுண்டேல் வாய்மலர வேண்டும்
மெய்ப்பொதுவில் நடம்புரியு மிகப்பெரிய துரையே. 9

அம்பலத்தே நடம்புரியு மெனதுதனித் தலைவர்
அன்புடனென் னுளங்கலந்தே அருட்பெருஞ் ஜோதியினால்
தம்பலத்தே பெரும்போகந் தந்திடுவா ரிதுதான்
சத்தியஞ்சத் தியமதனாற் சார்ந்தவர்தா மிருக்க
எம்பலத்தே மலரணையைப் புனைகவெனப் பலகால்
இயம்புகின்றாள் இவளளவி லிசைந்துநும தருளாஞ்
செம்பலத்தே யுறுதருணம் வாய்மலர வேண்டுஞ்
சிற்சபைபொற் சபையோங்கித் திகழ்பெரிய துரையே. 10

அருட்பெருஞ்ஜோதி

# 79. தலைவி தலைவன்செயலைத் தாய்க்குரைத்தல்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்
அருட்பெருஞ்ஜோதி

அன்னப் பார்ப்பா லழகா நிலையூடே
அம்பலஞ் செய்துகின் றாடு மழகர்
துன்னப்பார்த் தென்னுயிர் தோழியு நானுஞ்
சூதாடு கின்றவச் சூழலில் வந்தே
உன்னைப்பார்த் துன்னுளே யென்னைப்பா ராதே
ஊரைப் பார்த்தோடி யுழல்கின்ற பெண்ணே
என்னைப் பாரென்கின்றா ரென்னடி யம்மா
என்கை பிடிக்கின்றா ரென்னடி யம்மா. 1

அதுபா வகமுகத் தானந்த நாட்டில்
அம்பலஞ் செய்துகின் றாடு மழகர்
விதுபா வகமுகத் தோழியு நானும்
மெய்ப்பா வனைசெய்யும் வேளையில் வந்து
பொதுபா வனைசெய்யப் போகாதே பெண்ணே
பொய்ப்பா வனைசெய்து கைப்பானை லைபா
இதுபாவ மென்கின்றா ரென்னடி யம்மா
என்கை பிடிக்கின்றா ரென்னடி யம்மா. 2

அறங்காதல் செய்தேனை யாண்டுகொண் டிங்கே
அருட்பெருஞ் ஜோதியா யாடு மழகர்
உறங்காத வண்ணஞ் சிற்றம்பலம் பாடி
உதிக்கின்ற வொண்மையிற் றுதிக்கின்ற போது
புறங்காதல் செய்வார்போற் செய்யாதே பெண்ணே
பொற்கம்ப மேறினை சொர்க்கமங் கப்பால்
இறங்காதே யென்கின்றா ரென்னடி யம்மா
என்கை பிடிக்கின்றா ரென்னடி யம்மா. 3

அந்நாள்வந் தென்றனை யாண்டருள் செய்த
ஐய ரமுதரென் னப்ப ரழகர்
நன்னாள் கழிக்கின்ற நங்கைய ரோடு
நானம் பலம்பாடி நண்ணுறும் போது
பின்னா ளென்றெண்ணிப் பிதற்றாதே பெண்ணே
பேரருட் ஜோதி பெருமணஞ் செய்நாள்
இந்நாளே யென்கின்றா ரென்னடி யம்மா
என்கை பிடிக்கின்றா ரென்னடி யம்மா. 4

தப்போது வாருளஞ் சார்ந்திட வுன்னூர்
சத்திய ருத்தமர் நித்த மணாளர்
ஒப்போத வொண்ணாத மெய்ப்போத மன்றின்
உண்மையைப் பாடிநா னண்மையி னின்றேன்
அப்போதென் றன்னை அயர்ந்திடேல் பெண்ணே
அன்புடை நின்னையா மின்புறக் கூடல்
இப்போதே யென்கின்று ரென்னடி யம்மா
என்கை பிடிக்கின்று ரென்னடி யம்மா. 5

மெய்க்குலம் போற்ற விளங்கு மணாளர்
வித்தக ரம்பல மேவு மழகர்
இக்குல மாதரும் யானுமென் னூதர்
இன்னரு ளாடல்கள் பன்னுறும் போது
பொய்க்குலம் பேசிப் புலம்பாதே பெண்ணே
பூரண போக்கம் பொருந்தினை நீதான்
எக்குல மென்கின்று ரென்னடி யம்மா
என்கை பிடிக்கின்று ரென்னடி யம்மா. 6

வெம்மத நெஞ்சிடை மேவுற வுன்னூர்
வெப்பல மாற்றுபொன் னம்பல வாணர்
சம்மத மாமட வார்களு நானுந்
தத்துவம் பேசிக்கொண் டொத்துறும் போது
இம்மதம் பேசி யிறங்காதே பெண்ணே
ஏகசி வோகத்தை யெய்தினை நீதான்
எம்மத மென்கின்று ரென்னடி யம்மா
என்கை பிடிக்கின்று ரென்னடி யம்மா. 7

பாரோடு விண்ணும் படைத்த பண்பாளர்
பற்றம் பலத்தார்சொல் சிற்றம் பலத்தார்
வாரிடு கொங்கையர் மங்கைய ரோடே
மன்றகம் பாடி மகிழ்கின்ற போது
ஏருடம் பொன்றென வெண்ணேல்நீ பெண்ணே
எம்முடம் புன்னை யிணைந்திங் கெமக்கே
ஈருடம் பென்கின்று ரென்னடி யம்மா
என்கை பிடிக்கின்று ரென்னடி யம்மா. 8

மறப்பற்ற நெஞ்சிடை வாழ்கின்ற வள்ளல்
மலப்பற் றறுத்தவர் வாழ்த்து மணாளர்
சிறப்புற்ற மங்கையர் தம்மொடு நான்றன்
சிற்றம்பலம் பாடிச் செல்கின்ற போது
புறப்பற் றகற்றத் தொடங்காத பெண்ணே
புலையகப் பற்றை யறுத்தாய் நினக்கே
இறப்பற்ற தென்கின்று ரென்னடி யம்மா
என்கை பிடிக்கின்று ரென்னடி யம்மா. 9

ஆறெனு மந்தங்க ளாகியன் றருகும்
அம்பலத் தாடல்செய் யானந்த சித்தர்
தேறறி வாகிச் சிவானு பவத்தே
சின்மய மாய்நான் றிளைக்கின்ற போது
மாறகல் வாழ்வினில் வாழ்கின்ற பெண்ணே
வல்லவள் நீயேயிம் மாநில மேலே
ஏறினை யென்கின்றா ரென்னடி யம்மா
என்கை பிடிக்கின்றா ரென்னடி யம்மா. 10

அருட்பெருஞ்ஜோதி

## 80. தலைவி வருந்தல்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

பருவமிலாக் குறையாலோ பகுதிவகை யாலோ
பழக்கமிலா மையினாலோ படிற்றுவினை யாலோ
இருவகை மாயையினாலோ வாணவத்தி னாலோ
என்னாலோ பிறராலோ வெதனாலோ வறியேன்
சருவலொழிந் தென்மனமாம் பாங்கிபகை யானாள்
தனித்தபரை யெனும்வளர்த்த தாயுமுகம் பாராள்
நிருபமடப் பெண்களெலாம் வலதுமொழிக் கின்றார்
நிபுணரெங்கள் நடராயர் நினைவையறிந் திலனே. 1

அம்பலத்தே திருநடஞ்செய் யடிமலரென் முடிமேல்
அணிந்திடமுன் சிலசொன்னே னதனாலோ வன்றி
எம்பலத்தே யெம்மிறைவ னென்னை மணம் புரிவான்
என்றுசொன்னே னிதனாலோ வெதனாலோ வறியேன்
வம்பிசைத்தே னெனவெனது பாங்கிபகை யானாள்
வளர்த்தெடுத்த தனித்தாயு மலர்ந்துமுகம் பாராள்
நிம்பமரக் கனியானார் மற்றையர்க ளெல்லாம்
நிபுணரெங்கள் நடராயர் நினைவையறிந் திலனே. 2

கண்ணுறங்கே னுறங்கினுமென் கணவரொடு கலக்குங்
கனவன்றி யிலையென்றே னதனாலோ வன்றி
எண்ணுறங்கா நிலவிலவ ரிருக்குமிடம் புகுவேன்
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
பெண்ணடங்கா ளெனத்தோழி பேசிமுகங் கடுத்தாள்
பெருந்தயவால் வளர்த்தவளும் வருந்தயலா னானாள்
மண்ணடங்காப் பழிகூறி மற்றவர்க ளிருந்தார்
வள்ளல்நட ராயர்திரு வுள்ளமறிந் திலனே. 3

எல்லாஞ்செய் வல்லதுரை யென்கணவ ரென்றால்
எனக்குமொன்று நினக்குமொன்று மென்றவத னாலோ
இல்லாமை யெனக்கில்லை யெல்லார்க்குந் தருவேன்
என்றுசொன்னே னிதனாலோ வேதனாலோ வறியேன்
கல்லார்போ லென்னைமுகங் கடுத்துநின்றாள் பாங்கி
களித்தெடுத்து வளர்த்தவளுங் கலந்தனளங் குடனே
செல்லாமை சிலபுகன்று சிரிக்கின்றார் மடவார்
சித்தர்நட ராயர்திருச் சித்தமறிந் திலனே. 4

இச்சையெலாம் வல்லதுரை யென்னைமணம் புரிந்தார்
ஏடியெனக் கிணையெவர்க ளென்றவத னாலோ
எச்சமயத் தேவரையு மினிமதிக்க மாட்டேன்
என்றுசொன்னே னிதனாலோ வேதனாலோ வறியேன்
நச்சுமரக் கனிபோலே பாங்கிமனங் கசந்தாள்
நயந்தெடுத்து வளர்த்தவளுங் கயந்தெடுப்புப் புகன்றாள்
அச்சமிலா ளிவளென்றே யலருரைத்தார் மடவார்
அண்ணல்நட ராயர்திரு வெண்ணமறிந் திலனே. 5

வஞ்சமிலாத் தலைவருக்கே மாலையிட்டே னெல்லா
வாழ்வுமென்றன் வாழ்வென்றே னதனாலோ வன்றி
எஞ்சலுறேன் மற்றவர்போ லிறந்துபிறந் துழலேன்
என்றுசொன்னே னிதனாலோ வேதனாலோ வறியேன்
அஞ்சுமுகங் காட்டிநின்றாள் பாங்கியெனை வளர்த்த
அன்னையுமப் படியாகி யென்னைமுகம் பாராள்
நெஞ்சுரத்த பெண்களெலாம் நீட்டிநகைக் கின்றார்
நிருத்தர்நட ராயர்திருக் கருத்தையறிந் திலனே. 6

அன்னமுண வழைத்தனர்நா னமலரடித் தேன்
அருந்துகின்றே னெனவுரைத்தே னதனாலோ வன்றி
என்னுயிர்நா யகனொடுநா னணையுமிட மெங்கே
என்றுரைத்தே னிதனாலோ வேதனாலோ வறியேன்
துன்னுநெறிக் கொருதுணையாந் தோழிமனங் கசந்தாள்
துணிந்தெடுத்து வளர்த்தவளுஞ் சோர்ந்தமுக மானாள்
நென்னலொத்த பெண்களெலாங் கூடிநகைக் கின்றார்
நிபுணரெங்கள் நடராயர் நினைவையறிந் திலனே. 7

போதுநடஞ் செய்துரைமுகத்தே தளதளவென் றொளிரும்
புன்னகையென் பொருளென்றே னதனாலோ வன்றி
இதுவரையும் வரக்காணேன் தடைசெய்தா ரெவரோ
எனப்புகன்றே னிதனாலோ வேதனாலோ வறியேன்
புதுமுகங்கொண் டெனதுதனித் தோழிமனந் திரிந்தாள்
புரிந்தெடுத்து வளர்த்தவளும் புதுமைசில புகன்றாள்
மதுவுகந்து களித்தவர்போற் பெண்களெல்லாஞ் சிரிக்கின்றார்
வள்ளல்நட ராயர்திரு வுள்ளமறிந் திலனே. 8

கண்கலந்த கணவரென்னைக் கைகலந்த தருணங்
கரணமறிந் திலனென்றே னதனாலோ வன்றி
எண்கலந்த போகமெலாஞ் சிவபோகந் தனிலே
இருந்ததென்றே னிதனாலோ வெதனாலோ வறியேன்
விண்கலந்த மதிமுகந்தான் வேறுபட்டாள் பாங்கி
வியந்தெடுத்து வளர்த்தவளும் வேறுசில புகன்றாள்
பண்கலந்த மொழிமடவார் பழிகூற லானார்
பத்தர்புகழ் நடராயர் சித்தமறிந் திலனே. 9

மாடமிசை யோங்குநிலா மண்டபத்தே மகிழ்ந்தேன்
வள்ளலொடு நானென்றே னதனாலோ வன்றி
ஈடறியாச் சுகம்புகல வென்னாலே முடியா
தென்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
ஏடவிழ்பூங் குழற்கோதைத் தோழிமுகம் புலர்ந்தாள்
எனையெடுத்து வளர்த்தவளு மிரக்கமிலா ளானாள்
நாடறியப் பெண்களெலாங் கூடிநகைக் கின்றார்
நல்லநட ராயர்கருத் தெல்லையறிந் திலனே. 10

கற்பூர மணக்கின்ற தென்மேனி முழுதுங்
கணவர்மண மதுவென்றே னதனாலோ வன்றி
இற்பூவை யறியுமடி நடந்தவண்ண மெல்லாம்
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
பொற்பூவின் முகம்வியர்த்தாள் பாங்கி யவளுடனே
புரிந்தெடுத்து வளர்த்தவளுங் கரிந்தமுகம் படைத்தாள்
சொற்பூவைத் தொடுக்கின்றார் கால்கள்களை யாதே
துன்னுநட ராயர்கருத் தெல்லையறிந் திலனே. 11

மன்னுதிருச் சபைநடுவே மணவாள ருடனே
வழக்காடி வலதுபெற்றே னென்றவத னாலோ
இன்னுமவர் வதனவிள நகைகாணச் செல்வேன்
என்றுசொன்னே னிதனாலோ வெதனாலோ வறியேன்
மின்னுமிடைப் பாங்கியொரு விதமாக நடந்தாள்
மிகப்பரிவால் வளர்த்தவளும் வெய்துயிர்த்துப் போனாள்
அன்னநடைப் பெண்களெலாஞ் சின்னமொழி புகன்றார்
அத்தர்நட ராயர்திருச் சித்தமறிந் திலனே. 12

கள்ளுண்டா ளெனப்புகன்றீர் கனகசபை நடுவே
கண்டதலா லுண்டதிலை யென்றவத னாலோ
எள்ளுண்ட மற்றவர்போ லென்னைநினை யாதீர்
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
உள்ளுண்ட மகிழ்ச்சியெலா முவட்டிநின்றாள் பாங்கி
உவந்துவளர்த் தவளுமென்பாற் சிவந்தகண்ண ளானாள்
துள்ளுண்டு பெண்களெலாஞ் சூழ்ந்துகொடிக் கின்றார்
சுத்தர்நட ராயர்திருச் சித்தமறிந் திலனே. 13

காரிகையீ ரெல்லீருங் காணவம்மி னெனது
கணவரழ கினையென்றே னதனாலோ வன்றி
ஏரிகவாத் திருவுருவை யெழுதமுடி யாதே
என்று சொன்னே னிதனாலோ வெதனாலோ வறியேன்
காரிகவாக் குழல்சோரக் கடுத்தெழுந்தாள் பாங்கி
கண்பொறுத்து வளர்த்தவளும் புண்பொறுத்தா ளுளத்தே
நேரிகவாப் பெண்கள்மொழிப் போரிகவா தெடுத்தார்
நிருத்தர்நட ராயர்திருக் கருத்தையறிந் திலனே. 14

கண்ணேறு படுமெனநா னஞ்சுகின்றே னெனது
கணவர்வடி வதுகாணற் கென்றவத னாலோ
எண்ணாத மனத்தவர்கள் காணவிழை கின்றார்
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
நண்ணாரிற் கடுத்தமுகந் தோழிபெற்றா ளவளை
நல்கியெனை வளர்த்தவளு மல்கியவன் படித்தாள்
பெண்ணாயம் பலபலவும் பேசுகின்றா ரிங்கே
பெரியநட ராயருள்ளப் பிரியமறிந் திலனே. 15

கற்பூரங் கொணர்ந்துவம்மி னென்கணவர் வந்தால்
கண்ணெச்சிற் கழிக்கவென்றே னதனாலோ வன்றி
எற்பூத நிலையவர்தந் திருவடித்தா மரைக்கீழ்
என்றுசொன்னே னிதனாலோ வெதனாலோ வறியேன்
வற்பூத வனம்போன்றாள் பாங்கியவ டனைமுன்
மகிழ்ந்துபெற்றிங் கெனைவளர்த்தாள் வினைவளர்த்தா ளானாள்
விற்பூவொண் ணுதன்மடவார் சொற்போர்செய் கின்றார்
விண்ணிலவு நடராய ரெண்ணமறிந் திலனே. 16

மனையணைந்த மலரணைமே லெனையணைந்த போது
வடிவுசுக வடிவானே னென்றவத னாலோ
இனையறியேன் முன்புரிந்த பெருந்தவமென் புகல்வேன்
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
புனைமுகமோர் கரிமுகமாய்ப் பொங்கிநின்றாள் பாங்கி
புழுங்குமனத் தவளாகி யழுங்குகின்றாள் செவிலி
பனையுலர்ந்த வோலையெனப் பெண்களொலிக் கின்றார்
பண்ணவரென் நடராய ரெண்ணமறிந் திலனே. 17

தாழ்குழலீ ரெனைச்சற்றே தனிக்கவிட்டா லெனது
தலைவரைக்கா ணுவலென்றே னதனாலோ வன்றி
ஏழ்கடலிற் பெரிதன்றோ நான்பெற்ற வின்பம்
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
கூழ்கொதிப்ப தெனக்கொதித்தாள் பாங்கியெனை வளர்த்த
கோதைமருண் டடுகின்ற பேதையென லானாள்
சூழ்மடந்தை மார்களெலாந் தூற்றிநகைக் கின்றார்
சுத்தர்நட ராயர்திருச் சித்தமறிந் திலனே. 18

தனித்தலைவர் வருகின்ற தருணமிது மடவீர்
தனிக்கவெனை விடுமினென்றே னதனாலோ வன்றி
இனித்தசுவை யெல்லாமென் கணவரடிச் சுவையே
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
பனித்தகுளிர் காலத்தே சனித்தசலம் போன்றாள்
பாங்கியெனை வளர்த்தவளுந் தூங்குமுகங் கொண்டாள்
கனித்தபழம் விடுத்துமின்னார் காய்தின்னு கின்றார்
கருத்தர்நட ராயர்திருக் கருத்தையறிந் திலனே. 19

அரும்பொனனை யாரெனது துரைவருமோர் சமயம்
அகலுமின்மி னணங்கனையீ ரென்றவத னாலோ
இரும்புமன மானாலு மிளகிவிடுங் கண்டால்
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
கரும்பனையாள் பாங்கியும்நாய்க் கடுகனையா ளானாள்
களித்தெனை வளர்த்தவளும் புளித்தின்றா ளொத்தாள்
விரும்புகின்ற பெண்களெலா மரும்புகின்றா ரலர்தான்
வித்தகரென் னடராயர் சித்தமறிந் திலனே. 20

மணவாளர் வருகின்ற தருணமிது மடவீர்
மறைந்திருமின் னீவிரென்றே னதனாலோ வன்றி
எணமேது நமக்கெனைத்தான் யார்தடுக்கக் கூடும்
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
குணநீடு பாங்கியவ ளெம்மிறையை நினையார்
குணங்கொண்டாள் வளர்த்தவளும் பணம்விண்டா ளானாள்
மணநீடு குழன்மடவார் குணநீடு கின்றார்
வள்ளல்நட ராயர்திரு வுள்ளமறிந் திலனே. 21

பதிவருமோர் தருணமிது நீவிரவர் வடிவைப்
பார்ப்பதற்குத் தரமில்லீ ரென்றவத னாலோ
எதிலுமெனக் கிச்சையில்லை யவரடிக்கண் ணல்லால்
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
மதிமுகத்தாள் பாங்கியொரு விதிமுகத்தா ளானாள்
மகிழ்ந்தெனை வளர்த்தவளு மிகழ்ந்துபல புகன்றாள்
துதிசெய்மட மாதரெலாஞ் சதிசெய்வா ரானார்
சுத்தர்நட ராயர்திருச் சித்தமறிந் திலனே. 22

மன்றாடுங் கணவர்திரு வார்த்தையன்றி யுமது
வார்த்தையென்றன் செவிக்கேறா தென்றவத னாலோ
இன்றாவி யன்னவர்க்குத் தனித்தவிடங் காணேன்
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
முன்றானை யவிழ்ந்துவிழ முடுகிநடக் கின்றாள்
முதற்பாங்கி வளர்த்தவளு மதர்ப்புடன்செல் கின்றாள்
ஒன்றாத மனப்பெண்கள் வென்றாரி னடித்தார்
ஒருத்தர்நட ராயர்திருக் கருத்தையறிந் திலனே. 23

கூடியவென் கணவரெனைக் கூடாமற் கலைக்கக்
கூடுவதோ நும்மாலே யென்றவத னாலோ
ஏடியெனை யறியாரோ சபைக்குவரு வாரோ
என்றுரைத்தே னிதனாலோ வெதனாலோ வறியேன்
நாடியவென் பாங்கிமன மூடிநின்று போனாள்
நண்ணியெனை வளர்த்தவளு மெண்ணியவா றிசைத்தாள்
தேடியவா யங்களெலாங் கூடியுரைக் கின்றார்
திருத்தர்நட ராயர்திருக் கருத்தையறிந் திலனே. 24

அருட்பெருஞ்ஜோதி

## 81. நற்றாய் செவிலிக்குக் கூறல்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**உணர்ந்தவர்** தமக்கு முணர்வரி யானென் னுள்ளகத் தமர்ந்தன னென்றாள்
அணிந்தன னெனக்கே யருண்மண மாலை யதிசய மதிசய மென்றாள்
துணிந்துநான் றனித்த போதுவந் தென்கை தொட்டனன் பிடித்தன னென்றாள்
புணர்ந்தனன் கலந்தா னென்றுளே களித்துப் பொங்கினாள் நான்பெற்ற பொன்னே

தனிப்பெரும் பதியே யென்பதி யாகத் தவமெது புரிந்தனை வென்றாள்
அனித்தநீத் தெனைத்தா னன்பினா லணைத்தா னதிசய மதிசய மென்றாள்
இனித்துயர் சிறிது மடைந்திடே னென்று மெனக்கிணை யார்கொலோ வென்றாள்
சனிப்பிறப் பறுத்தே னென்றுளே களிப்புத் ததும்பினாள் நான்பெற்ற கனியே. 2

புண்ணிய பதியைப் புணர்ந்தன னென்செய் புண்ணியம் புகலரி தென்றாள்
தண்ணிய மதியி னமுதெனக் களித்த தயவைநான் மறப்பனோ வென்றாள்
எண்ணிய வனைத்து மீந்தருள் கின்றா னென்னையோ வென்னையோ வென்றாள்
அண்ணிய பேரா னந்தமே வடிவ மாயினாள் நான்பெற்ற வணங்கே. 3

சத்திய ஞான சபாபதி யெனக்கே தனிப்பதி யாயினா னென்றாள்
நித்திய வாழ்வு பெற்றுநா னின்ப நிலைதனில் நிறைந்தன னென்றாள்
பித்திய லுலகீர் காண்மினோ சித்திப் பேறலா மென்வசத் தென்றாள்
எத்திசை யீரு மொத்திவண் வருக வென்றன ளெனதுமெல் லியலே. 4

திருமணிப் பொதுவி லொருபெரும் பதியென் சிந்தையிற் கலந்தன னென்றாள்
பெருமையிற் சிறந்தே னென்பெருந் தவத்தைப் பேசுத லரிதரி தென்றாள்
இருமையு மென்போ லொருமையிற் பெற்றார் யாண்டுளார் யாண்டுளா ரென்றாள்
மருமலர் முகத்தே யிளநகை துளும்ப வயங்கினாள் நான்பெற்ற மகளே. 5

வள்ளலைப் புணர்ந்தே னம்மவோ விதுதான் மாலையோ காலையோ வென்றாள்
எள்ளலைத் தவிர்ந்தே னுலகெலா மெனக்கே யேவல்செய் கின்றன வென்றாள்
தெள்ளமு தருந்தி யழிவிலா வுடம்புஞ் சித்தியும் பெற்றன னென்றாள்
துள்ளிய மடவீர் காண்மினோ வென்றாள் சோர்விலாள் நான்பெற்ற சுதையே. 6

கனகமா மன்றில் நடம்புரி பதங்கள் கண்டனன் கண்டன னென்றாள்
அனகசிற் சபையி லொருபெரும் பதிய னன்பிலே கலந்தன னென்றாள்
தினகர சோமாக் கினியெலா மெனக்கே செயல்செயத் தந்தன னென்றாள்
தனகரத் தெனைத்தான் றழுவினா னென்றாள் தவத்தினாற் பெற்றநந் தனமே. 7

கோடிப்பேரு மணிப்பொற் கோயிலென் னுளமாக் கொண்டுவந் தமர்ந்தன னென்றாள்
கடிப்புது மலர்ப்பூங் கண்ணிவேய்ந் தெனைத்தான் கடிமணம் புரிந்தன னென்றாள்
ஒடிப்பற வெல்லாம் வல்லதோர் சித்தாம் வொளியெனக் களித்தன னென்றாள்
இடிப்பொடு நொடித்தீர் காண்மினோ வென்றா ளென்றவத் தியன்றமெல் லியலே. 8

வாழிமா மணிமன் றிறைவனே யெனக்கு மாலைவந் தணிந்தன னென்றாள்
ஊழிதோ றூழி யுலவினு முலவா வுடம்பெனக் களித்தன னென்றாள்
ஆழிசூ ழுலகோ டண்டங்க ளனைத்தும் மளிக்கவென் றருளினா னென்றாள்
ஏழியன் மாட மிசையுற வைத்தா னென்றன ளென்னது மெல்லியலே. 9

ஏலுநன் மணிமா மன்றருட் ஜோதி யென்னுளத் தமர்ந்தன னென்றாள்
பாலுமின் சுவையும் போன்றென தாவி பற்றினன் கலந்தன னென்றாள்
சாலுமெவ் வுலகுந் தழைக்கவென் றனக்கே சத்தியை யளித்தன னென்றாள்
மேலுமெக் காலு மழிவிலே னென்றாள் மிகுகளிப் புற்றனள் வியந்தே. 10

அருட்பெருஞ்ஜோதி

---

# 82. அனுபவ மாலை

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அம்பலத்தே திருநடஞ்செய் யடிமலரென் முடிமேல்
அணிந்துகொண்டே னன்பொடுமென் னுயிர்க்கு மணிந்தேன்
எம்பரத்தே மணக்குமந்த மலர்மணத்தைத் தோழி
என்னுரைப்பே னுரைக்கவென்றா லென்னளவன் றதுவே
வம்பிசைத்தே னன்றடிநீ யென்னருகே யிருந்தும்
மணிநாசி யடைப்பதனைத் திறந்துமுகர்ந் தறிகாண்
நம்புறுபார் முதல்நாத வரைப்புளநாட் டவரும்
நன்குமுகர்ந் தனர்வியந்தார் நன்மணமீ தெனவே. 1

கண்ணுறங்கே னுறங்கினுமென் கணவரொடு கலக்குங்
கனவேகண் டுளமகிழ்வேன் கனவொன்றோ நனவின்
எண்ணடங்காப் பெருஞ்ஜோதி யென்னிறைவ ரெனையே
இணைந்திரவு பகல்காணா தின்புறச்செய் கின்றார்
மண்ணுறங்கு மலையுறங்கு மலைகடலு முறங்கும்
மற்றுளவெல் லாமுறங்கும் மாநிலத்தே நமது
பெண்ணுறங்கா ளெனத்தாயர் பேசிமகிழ் கின்றார்
பெண்களெல்லாங் கூசுகின்றார் பெருந்தவஞ்செய் திலரே. 2

எல்லாஞ்செய் வல்லதுரை யென்னைமணம் புரிந்தார்
எவ்வுலகில் யாரெனக்கிங் கீடுரைநீ தோழி
நல்லாய்மீக் கூற்றுடையா ரிந்திரர்மா முனிவர்
நான்முகர்நா ரணரெல்லாம் வான்முகராய் நின்றே
பல்லாரி லிவள்புரிந்த பெருந்தவத்தை நம்மாற்
பகர்வரிதென் கின்றார்சிற் பதியில்நடம் புரியும்
வல்லானை மணந்திடவும் பெற்றனளிங் கிவளே
வல்லாளென் றுரைக்கின்றார் நல்லார்கள் பலரே. 3

இச்சையெலாம் வல்லதுரை யென்னைமணம் புரிந்தார்
யான்செய்தவம் யார்செய்தா ரிதுகேளென் தோழி
எச்சமயத் தேவரையுஞ் சிறுதுரும்பென் றேனும்
எண்ணுவனோ புண்ணியரை யெண்ணுமனத் தாலே
பிச்சியென நினைத்தாலும் நினையடிநீ யவரைப்
பிரிவேனோ பிரிவென்று பேசுகினுந் தரியேன்
விச்சைநடங் கண்டேனா னடங்கண்டாற் பேயும்
விடத்துணியா தென்பர்களென் விளைவுரைப்ப தென்னே. 4

வஞ்சமிலாத் தலைவருக்கே மாலைமகிழ்ந் தணிந்தேன்
மறைகளொடா கமங்கள் வகுத்துவகுத் துரைக்கும்
எஞ்சலுறா வாழ்வனைத்து மென்னுடைய வாழ்வே
எற்றோநான் புரிந்ததவஞ் சற்றோநீ புரையாய்
அஞ்சுமுகங் காட்டியவென் தாயரெலா மெனக்கே
ஆறுமுகங் காட்டிமிக வீறுபடைக் கின்றார்
பஞ்சடிப்பா வையரெல்லாம் விஞ்சடிப்பா விருந்தே
பரவுகின்றார் தோழியென்ற னுறவுமிக விழைந்தே. 5

அன்னமுண வழைக்கின்றாய் தோழியிங்கே நான்றான்
அம்பலத்தே யாடுகின்ற வண்ணலடி மலர்த்தேன்
உன்னைநினைத் துண்டேனென் னுள்ளகத்தே வாழும்
ஒருதலைமைப் பெருந்தலைவ ருடையவருட் புகழாம்
இன்னமுதி லென்னுடையன் பென்னுநறுங் கனியின்
இரதமுமென் றனிக்கனவு ருருக்காட்சி யெனுமோர்
கன்னலினோ தனித்தெடுத்த தேம்பாகுங் கலந்தே
களித்துண்டேன் பசிசிறிதுங் கண்டிலனுள் ளகத்தே. 6

போதுநடஞ்செய் துரைமுகத்தே தளதளவென் றொளிரும்
புன்னகையே யொருகோடிப் பொன்பெறுமென் றுரைப்பார்
இதுவரையோ பலகோடி யென்னினுமோ ரளவோ
எண்ணிறந்த வண்டவகை எத்தனைகோ டிகளுஞ்
சதுமறைசெல் லண்டவகை தனித்தனியே நடத்துஞ்
சத்தர்களுஞ் சத்திகளுஞ் சிறிதுபெறு குவரோ
துதிபெறுமத் திருவாளர் புன்னகையை நினைக்குந்
தோறுமன பூறுகின்ற சுகவமுதம் பெறுமே. 7

கண்கலந்த கணவரெனைக் கைகலந்த தருணங்
கண்டறியே னென்னையுமென் கரணங்க ளையும்
எண்கலந்த போகமெலாஞ் சிவபோகந் தனிலோர்
இறையளவென் றுரைக்கின்ற மறையளவின் றறிந்தேன்
விண்கலந்த திருவாள ருயிர்கலந்த தருணம்
வினைத்துயர்தீர்ந் தடைந்தசுக நினைத்திடுந்தோ றெல்லாம்
உண்கலந்த வானந்தப் பெரும்போக மப்போ
துற்றதென வெனைவிழுங்கக் கற்றதுகாண் தோழி. 8

மாடமிசை யோங்குநிலா மண்டபத்தே யெனது
மணவாளர் கொடுத்ததிரு வருளமுத மகிழ்ந்தே
ஏடவிழ்பூங் குழலாய்நா னுண்டதொரு தருணம்
என்னையறிந் திலனுலகந் தன்னையுநா னறியேன்
தேடரிய நறும்பாலுந் தேப்பாகு நெய்யுந்
தேனுமொக்கக் கலந்ததெனச் செப்பினுஞ் சாலாதே
ஈடறியாச் சுவைபுகல வென்னாலே முடியா
தென்னடியோ வவ்வமுதம் பொன்னடிதா னிகரே. 9

கற்பூர மணக்கின்ற தென்னுடம்பு முழுதுங்
கணவர்திரு மேனியிலே கலந்தமணா மதுதான்
இற்பூத மணம்போலே மறைவதன்று கண்டாய்
இயற்கைமணந் துரியநிறை யிறைவடிவத் துளதே
பொற்பூவு நறுமணமுங் கண்டறியா ருலகர்
புண்ணியனார் திருவடிவி னண்ணியவா றதுவே
நற்பூதி யணிந்ததிரு வடிவுமுற்றுந் தோழி
நான்கண்டேன் நான்புணர்ந்தே னானதுவா னேனே. 10

மன்னுதிருச் சபைநடுவே வயங்குநடம் புரியும்
மணவாளர் திருமேனி வண்ணங்கண் டுவந்தேன்
என்னடியித் திருமேனி யிருந்தவண்ணந் தோழி
என்புகல்வேன் மதியிரவி யிலங்குமங்கி யுடனே
மின்னுமொன்றாய்க் கூடியவை யெண்கடந்த கோடி
விளங்குவண்ண மென்றுரைக்கோ வுரைக்கினுஞ் சாலாதே
அன்னவண்ண மறைமுடிவு மறைவரிதே யந்த
அரும்பெருஞ்ஜோ தியின்வண்ண மாருரைப்பா ரந்தோ. 11

கள்ளுண்டா ளெனப்புகன்றார் கனகசபை நடுவே
கண்டதுண்டு சிற்சபையி லுண்டதுமுண் டடிநான்
எள்ளுண்ட பலவிடயத் திறக்குங்கள் ளன்றே
என்றுமிற வாநிலையி லிருத்துங்கள் ளுலகர்
உள்ளுண்ட போதுமயக் குற்றிடுங்கள் ளலவே
உள்ளமயக் கனைத்தினையு மொழித்திடுங்கள் மடவாய்
அள்ளுண்ட பிறருமெனை யடுத்தடுத்துக் கண்டால்
அறிவுதரு மவர்க்குமிங்கே யானுண்ட கள்ளே. 12

காரிகைநீ யென்னுடனே காணவரு வாயோ
கனகசபை நடுநின்ற கணவர்வடி வழகை
ஏரிகவாத் திருவடிவை யெண்ணமுடி யாதே
இயம்பமுடிந் திடுமோநா னெழுதமுடிந் திடுமோ
பேரிகவா மறைகளுட னாகமங்க ளெல்லாம்
பின்னதுமுன் முன்னதுபின் பின்முன்னாய் மயங்கிப்
பாரிகவா நின்றளவு மிகவெழுதி யெழுதிப்
பார்க்கின்ற முடிபொன்றும் பார்த்ததிலை யம்மா. 13

கண்ணேறு படுமெனநா னஞ்சுகின்றேன் பலகால்
கணவர்திரு வடிவழகைக் கண்டுகண்டு களிக்கில்
எண்ணாதென் னாசைவெள்ள மென்சொல்வழி கேளா
தெனையீர்த்துக் கொண்டுசபைக் கேகுகின்ற தந்தோ
பெண்ணாசை பெரிதென்பர் விண்ணாரு மவர்க்கும்
பெண்ணாசை பெரிதலகா ணாணாசை பெரிதே
உண்ணாடிப் பற்பலகாற் கண்ணேறு கழிக்கல்
உறுகின்றேன் தோழிநின்னாற் பெறுகின்ற படியே. 14

கற்பூரங் கொணர்ந்திடுக தனித்தோழி யெனது
கணவர்வரு தருணமிது கண்ணேறு கழிப்பாம்
எற்பூத நிலையவர்தந் திருவடித்தா மரைக்கீழ்
இருப்பதடிக் கீழிருப்ப தென்றுநினை யேல்காண்
பற்பூத நிலைகடந்து நாதநிலைக் கப்பால்
பரநாத நிலையதன்மேல் விளங்குகின்ற தறிநீ
இற்பூவை யவ்வடிக்குக் கண்ணேறு கழித்தால்
எவ்வுலகத் தெவ்வுயிர்க்கு மினிதுநலந் தருமே. 15

மனையணைந்து மலரணைமே லெனையணைந்த போது
மணவாளர் வடிவென்று மெனதுவடி வென்றுந்
தனைநினைந்து பிரித்தறிந்த தில்லையடி யெனைத்தான்
சற்றுமறி யேனெனில்யான் மற்றறிவ தென்னே
இனையளவா யினும்விகற்ப வுணர்ச்சியென்ப திலையே
திருவாளர் கலந்தபடி செப்புவதெப் படியோ
உனையணைந்தா லிவ்வாறு நான்கேட்பே னப்போ
துன்னறிவு மென்னறிவு மோரறிவாங் காணே. 16

தாழ்குழலா யெனைச்சற்றே தனிக்கவிட்டால் ஞான
சபைத்தலைவர் வருகின்ற தருணமிது நான்முன்
வாழ்வடைபொன் மண்டபத்தே பளிக்கரையி னூடே
மலரணையை யலங்கரித்து வைத்திடுதல் வேண்டும்
சூழுறநா னலங்கரிப்பே னென்கின்றாய் தோழி
துரைக்குபன மில்லையது துணிந்தறிந்தேன் பலகால்
ஏழ்கடலிற் பெரிதன்றோ நானடைந்த சுகமிங்
கிதைவிடநான் செய்பணிவே றெப்பணிநீ யியம்பே. 17

தனித்தலைவர் வருகின்ற தருணமிது தோழி
தனிக்கவலை விடுநீயுந் தனித்தொருபா லிருத்தி
இனித்தசுவைத் திரள்கலந்த திருவார்த்தை நீயும்
இன்புறக்கேட் டெங்களிப்பா யிதுசாலு நினக்கே
மனித்தர்களோ வானவரோ மலரயனோ மாலோ
மற்றையரோ வென்புகல்வேன் மயேசுரரா தியருந்
தனித்தவொரு திருவார்த்தை கேட்பதற்கே கோடி
தவஞ்செய்து நிற்கின்றார் நவஞ்செய்த நிலத்தே. 18

மணவாளர் வருகின்ற தருணமிது மடவாய்
மாளிகையின் வாயிலெலாம் வளம்பெறநீ புனைக
குணவாள ரணையுமல ரணையகத்தை நானே
குலவுமணி விளக்கத்தா லலங்கரிக்கப் புகுவேன்
தணவாத சுகந்தருமென் றனிக்கணவர் வரிலோ
சற்றுமயல் வாதனைக ளுற்றிடுத லாகா
அணவாத மனத்தவரைப் புறப்பணிக்கே விடுக
அன்புடையார் களுக்கிடுக வகப்பணிசெய் திடவே. 19

அரும்பொனனை யாரெனது கணவர்வரு தருணம்
ஆயிழையீ தாதலினால் வாயில்முகப் பெல்லாம்
விரும்புறுத்தோ ரணங்கொடிகள் பழுத்தகுலை வாழை
விரைக்கமுகு தெங்கிளநீர் சினைப்பலவும் புனைக
கரும்புநெல்லின் முளைநிறைநீர்க் குடமிணைந்த கயலுங்
கண்ணாடி கவரிமுத லுண்ணாடி யிடுக
இரும்பொடுகல் லொத்தமனங் களுங்கனிய வுருக்கும்
இறைவர்திரு வரவெதிர்கொண் டேத்துவதற் கினிதே. 20

பதிவருமோர் தருணமிது தருணமிது தோழி
பராக்கடையேல் மணிமாடப் பக்கமெலாம் புனைக
அதிகநலம் பெறுபளிக்கு மணிமேடை நடுவே
அணையையலங் கரித்திடநான் புகுகின்றேன் விரைந்தே
கதிதருவார் நல்வரவு சத்தியஞ்சத் தியநீ
களிப்பினொடு மணிவிளக்காற் கதிர்பரவ நிறைத்தே
புதியநவ மணிகுயின்ற வாசனங்க ளிடுக
புண்ணியனார் நல்வரவை யெண்ணியெண்ணி யினிதே. 21

மன்றாடுங் கணவர்திரு வரவுநினைக் கின்றேன்
மகிழ்ந்துநினைத் திடுந்தோறு மனங்கனிவுற் றுருகி
நன்றாவின் பாற்றிரளி னறுநெய்யுந் தேனும்
நற்கருப்பஞ் சாறெடுத்த சர்க்கரையுங் கூட்டி
இன்றார வுண்டதென வினித்தினித்துப் பொங்கி
எழுந்தெனையும் விழுங்குகின்ற தென்றாலென் தோழி
இன்றாவி யன்னவரைக் கண்டுகொளுந் தருணம்
என்சரித மெப்படியோ வென்புகல்வே னந்தோ. 22

கூடியவென் தனிக்கணவர் நல்வரத்தை நானே
குறிக்கின்ற தோறுமொளி யெரிக்கின்ற மனந்தான்
நீடியபொன் மலைமுடிமேல் வாழ்வடைந்த தேவர்
நீண்முடிமே லிருக்கின்ற தென்றுரைக்கோ வன்றி
ஆடியபொற் சபைநடுவே சிற்சபையி னடுவே
ஆடுகின்ற வடிநிழற்கீ ழிருக்கின்ற தென்கோ
ஏடவிழ்பூங் குழலாயென் னிறைவரைக்கண் ணுற்றால்
என்மனத்தின் சரிதமதை யார்புகல்வா ரந்தோ. 23

அருளாளர் வருகின்ற தருணமிது தோழி
ஆயிரமா யிரங்கோடி யணிவிளக்கேற் றிடுக
தெருளாய பசுநெய்யே விடுகமற்றை நெய்யேல்
திருமேனிக் கொருமாசு செய்தாலுஞ் செய்யும்
இருளேது காலைவிளக் கேற்றிடவேண் டுவதோ
என்னாதே மங்கலமா யேற்றுதலாங் கண்டாய்
மருளேலங் கவர்மேனி விளக்கமதெண் கடந்த
மதிகதிர்செங் கனல்கூடிற் றென்னினுஞ் சாலாதே. 24

என்னிருகண் மணியனையா ரென்னுயிர்நா யகனார்
என்னுயிருக் கமுதானா ரெல்லாஞ்செய் வல்லார்
பொன்னணிபொற் சபையாளர் சிற்சபையா ரென்னைப்
புறம்புணர்ந்தா ரகம்புணர்ந்தார் புறத்தகத்தும் புணர்ந்தார்
அன்னியரல் லடியவரே யெனதுகுல தெய்வம்
அருந்தவத்தாற் கிடைத்தகுரு வாகுமது மட்டோ
மன்னுறுமென் தனித்தாயுந் தந்தையுமங் கவரே
மக்கள்பொருள் மிக்கதிரு வொக்கலுமங் கவரே. 25

தந்தையென்றாய் மகனென்றாய் மணவாள னென்றாய்
தகுமோவிங் கிதுவென்ன வினவுதியோ மடவாய்
சிந்தைசெய்து காணடிநீ சிற்சபையில் நடிக்குந்
திருவாள ரெனைப்புணர்ந்த திருக்கணவ ரவர்தாம்
அந்தமுத லில்லா வரும்பெருஞ்சோ திபரே
அண்டசரா சரங்களெலாங் கண்டதுவே றிலையே
எந்தவகை பொய்புகல்வேன் மற்றையர்போ லம்மா
ஈங்கவர்தந் திருமேனி நானுமென வறியே. 26

எல்லாமுஞ் செயவல்ல தனித்தலைவர் பொதுவில்
இருந்துநடம் புரிகின்ற வரும்பெருஞ்சோ தியினார்
நல்லாய்நன் னுட்டார்க ளெல்லாரு மறிய
நண்ணியெனை மணம்புரிந்தார் புண்ணியனா ரதனால்
இல்லாமை யெனக்கில்லை யெல்லார்க்குந் தருவேன்
என்னுடைய பெருஞ்செல்வ மென்புகல்வே னம்மா
செல்லாத அண்டமட்டோ அப்புறத்தப் பாலுஞ்
சிவஞானப் பெருஞ்செல்வஞ் சிறப்பதுகண் டறியே. 27






வான்கண்ட பிரமர்களும் நாரணரும் பிறரும்
மாதவம்பன் னாட்புரிந்து வருந்துகின்றா ரந்தோ
நான்கண்ட காட்சியவர் கண்டிலரே யுலகில்
நானொருபெண் செய்ததவ மெத்தவமோ வறியேன்
கோன்கண்ட குடிக்கொன்றுங் குறைவிலையே யண்ட
கோடியெலாந் தனிப்பெருஞ்செங் கோனடத்து மிறைவர்
தான்கண்ட குடியானேன் குறைகளெலாந் தவிர்ந்தேன்
தனித்தவள மாடமிசை யினித்திருக் கின்றேனே. 28

என்கணவர் பெருந்தன்மை யாறந்த நிலைக்கே
எட்டிநின்று பார்ப்பவர்க்கு மெட்டாதே தோழி
பொன்கணவர் கலைமடந்தை தன்கணவர் முதலோர்
புனைந்துரைக்குங் கதைபோல நினைந்துரைக்கப் படுமோ
புன்கணவ ரறியாதே புலம்புகின்றா ரவர்போல்
புகன்மறையு மாகமமும் புலம்புகின்ற வம்மா
உன்கணவர் திறம்புகலென் றுரைக்கின்றாய் நீதான்
உத்தமனா ரருட்ஜோதி பெற்றிடமுன் விரும்பே. 29

ஈங்குசில ருண்ணுகவென் றென்னையழைக் கின்றார்
ஏனடிதோழி நானிவர்கட் கென்புகல்வே னம்மா
ஓங்குசிவா மண்டபத்தே யென்கணவ ருடனே
உவட்டாத தெள்ளமுத முண்டுபசி தீர்ந்தேன்
தேங்குமலின் கினியெனக்குப் பசிவரிலப் போது
செப்புகின்றே னிப்போது சிறுகிழைத்தல் வேண்டாம்
ஏங்கலற நீயவர்க்குத் தெளிவிப்பாய் மற்றை
இருந்தவரும் விருந்தவரு மினிதுபுசித் திடற்கே. 30

ஐயரெனை யாளுடையா ரரும்பெருஞ்ஜோ தியினார்
அம்பலத்தே நடம்புரியு மானந்த வடிவர்
மெய்யரெனை மணம்புரிந்த தனிக்கணவர் துரிய
வெளியினிலா மண்டபத்தே மேவியமு தளித்தென்
கையகத்தே யொருபசும்பொற் கங்கணமும் புனைந்தார்
கங்கணத்தின் தரத்தையென்னாற் கண்டுரைக்கப் படுமோ
வையகமும் வானகமுங் கொடுத்தாலு மதற்கு
மாறாக மாட்டாதே மதிப்பரிதா மதுவே. 31

தன்வடிவந் தானாகுந் திருச்சிற்றம் பலத்தே
தனிநடஞ்செய் பெருந்தலைவர் பொற்சபையெங் கணவர்
பொன்வடிவ மிருந்தவண்ண நினைத்திடும்போ தெல்லாம்
புகலருட்பே ரானந்த போகவெள்ளந் ததும்பி
என்வடிவிற் பொங்குகின்ற தம்மாவென் னுள்ளம்
இருந்தபடி யென்புகல்கே னென்னளவன் றதுதான்
முன்வடிவங் கரைந்தினிய சர்க்கரையுந் தேனும்
முக்கனியுங் கூட்டியுண்ட பக்கமுஞ்சா லாதே. 32




இவ்வுலகி லெனைப்போல்வா ரோரனந்தக் கோடி
என்னிலுயர்ந் திருக்கின்றா ரெத்தனையோ கோடி
அவ்வுலகிற் சிறந்துநின்றா ரளவிறந்த கோடி
அத்தனைபேர் களுமந்தோ நித்தம்வருந் திடவும்
எவ்வுலகு முணர்வரிய திருச்சிற்றம் பலத்தே
இனிதமர்ந்த தலைவரிங்கே யென்னைமணம் புரிந்தார்
நவ்விவிழி மடமாதே நீழ்மேலென் பதுதான்
நாதர்திரு வருட்ஜோதி நாடுவதொன் றிலையே. 33

திருவாளர் பொற்சபையிற் றிருநடஞ்செய் தருள்வார்
சிற்சபையா ரென்றனக்குத் திருமாலை கொடுத்தார்
உருவாள ருருவாகி யொளியாகி வெளியாய்
ஓங்குகின்றா ரென்னுடைய வுயிர்த்துணைவ ரவர்தம்
பெருவாய்மைத் திருவருளை பெருவாழ்வென் றுணர்ந்தோர்
பேசியமெய் வாசகத்தின் பெருமையையின் றுணர்ந்தேன்
துருவாத வெனக்கிங்கே யருணினைக்குந் தோறுஞ்
சொல்லளவல் லாதசுகந் தோன்றுவதென் தோழி. 34

அருளாளர் பொற்பொதுவி லானந்த நடஞ்செய்
ஆனந்த வண்ணரெனை யாளுடையார் நான்றான்
தெருளாத பருவத்தே தெருட்டிமணம் புரிந்த
திருவாள ரவர்பெருமைத் திறத்தையெவர் புகல்வார்
மருளாத வாகமங்கள் மாமறைக ளெல்லாம்
மருண்டனவே யென்னடிநம் மனவாக்கி னளவோ
இருளாமை யென்றாறோ வன்றுசிறி துரைப்பாம்
என்னவுநா ணீர்ப்பதிதற் கென்புரிவேன் தோழி. 35

செம்பவளத் திருமலைபோ மாணிக்க விளக்கோ
தெய்வமர கதத்திரளோ செழுநீலப் பொருப்போ
பம்புமணி யொளிபோநற் பசும்பொன்னின் சுடரோ
படிகவண்ணப் பெருங்காட்சி தானோவென் றுணர்ந்தே
எம்பரமன் றெம்பெருமான் புறவண்ணம் யாதோ
என்பாரே லகவண்ணம் யாருரைக்க வல்லார்
தம்பரமென் றென்னையன்று மணம்புரிந்தார் ஞானச்
சபைத்தலைவ ரவர்வண்ணஞ் சாற்றுவதென் தோழி. 36

தேவர்களோ முனிவர்களோ சிறந்தமுத்தர் தாமோ
தேர்ந்தசிவ யோகிகளோ செம்பொருள்கண் டாரோ
மூவர்களோ வைவர்களோ முதற்பரையோ பரமோ
முன்னியவென் றனித்தலைவர் தம்மியலை புணர்ந்தார்
யாவர்களு மல்லவென்றால் யானுணர்ந்து மொழிதற்
கமையுமோ வொருசிறிது மமையாது கண்டாய்
ஆவலொடு மன்பர்தொழச் சிற்சபையி னடிப்பார்
அவர்பெருமை யவரறிவா ரவருமறிந் திலரே. 37

திருச்சிற்றம் பலத்தின்பத் திருவுருக்கொண் டின்பத்
திருநடஞ்செய் தருள்கின்ற திருவடிக்கே தொழும்பாய்
அருச்சிக்கும் பேரன்ப ரறிவின்கண் ணறிவாய்
அவ்வறிவில் விளைந்தசிவா னந்தவமு தாகிப்
1 பரிச்சிக்கு மவ்வமுதி னிறைந்தசுவை யாகிப்
பயனாகிப் பயத்தினனு பவமாகி நிறைந்தே
2 உருசிக்கு மெனமறைக ளாகமங்க ளெல்லாம்
ஓதுகின்ற வெளிலவர்தம் மொளியுரைப்ப தெவனே. 38

வெடித்தளிந்த முக்கனியின் வடித்தரசந் தனிலே
விரும்புறவுட் பிழிந்தெடுத்த கரும்பிரதங் கலந்தே
தடித்தெழும் பாற்பெய்து கோற்றேன்விட் டதனைத்
தனித்தபர வமுதத்திற் றான்கலந்துண் டாற்போல்
இடித்திடித்தென் னுளமுழுதுந் தித்திக்கும் வார்த்தை
இனிதுரைத்து மணம்புரிந்த வென்னுயிர்நா யகர்வான்
பொடித்திருமே னியரவரைப் புணரவல்லே னவர்தம்
புகழுரைக்க வல்லேனோ வல்லேன்காண் டோழி. 39

கன்னியெனை மணந்தபதி கனிதருசிற் சபைக்கே
கலந்ததனிப் பதிவயங்கு கனகசபா பதிவான்
பன்னியருக் கருள்புரிந்த பதியுலக மெல்லாம்
படைத்தபதி காத்தருளும் பசுபதியெவ் வுயிர்க்கும்
அன்னியமல் லாதகத்தும் புறத்துமகப் புறத்தும்
அருட்செங்கோல் செலுத்துகின்ற வதிபதியா மதனால்
என்னியல்போற் பிறரியலை யெண்ணியிடேல் பிறரோ
என்பதியா லன்பிலா ரன்புளரே லெண்ணே. 40

என்னியல்போற் பிறரியலை யெண்ணேலென் றுரைத்தேன்
இறுமாப்பா லுரைத்தனனென் றெண்ணியிடேல் மடவாய்
பன்னியநா னென்பதியின் பற்றலது வேறோர்
பற்றறியே னுற்றவரு மற்றவரும் பொருளும்
உன்னியவென் னுயிருமென துடலுமென துணர்வும்
உயிருணர்வா லடைசுகமுந் திருச்சிற்றம் பலத்தே
மன்னியவா தலினாற்பெண் மகளுமலேன் வருமான்
மகனுமலே னலியுமலே னிதுகுறித்தென் னறிவே. 41

பார்முதலாப் பரநாதப் பதிகடந்தப் பாலும்
பாங்குடைய தனிச்செங்கோ லோங்கநடாத் திடுதொல்
சீர்தெரிந்தா ரேத்துதொறு மேத்துதற்கோ வெனது
திருவாள ரருள்கின்ற தன்றுமனங் கனிந்தே

1 பரிசிக்கும் என்னும் பெயரெச்சம் பரிச்சிக்கும் என விரிக்கும் வழிவிரித்தல் என்னும் விகாரம்பெற்றது.

2 உருச்சிக்கும் என்பதும் அவ்வாறே.

ஆர்தருபே ரன்பொன்றே குறித்தருளு கின்றார்
ஆதலினு லவரிடத்தே யன்புடையா ரெல்லாம்
ஓர்தருமென் னுறவினரா மாணையிது நீயும்
உறவான தவரன்பு மறவாமை குறித்தே. 42

நாதாந்த வரைபுமெங்க ளையகனர் செங்கோல்
நடக்கின்ற தென்கின்றார் நாதாந்த மட்டோ
போதாந்த நிலைபுமுயர் யோகாந்த நிலைபும்
புனிதகலாந் தப்பதியும் புகல்கின்றார் புகலும்
வேதாந்த வெளியுமிகு சித்தாந்த வெளியும்
விளங்குமிவற் றப்பாலு மதன்மேலப் பாலும்
வாதாந்தத் ததன்மேலு மதன்மேலப் பாலும்
மன்றாடி யருட்செங்கோல் சென்றாட லறியே. 43

புண்ணியனு ரென்னுளத்தே புகுந்தமர்ந்த தலைவர்
பொதுவிளங்க நடிக்கின்ற திருக்கூத்தின் றிறத்தை
எண்ணியநா னெண்ணுதொறு முண்டபசி தீர்ந்தே
இருக்கின்றே னடிக்கடிநீ யென்னையழைக் கின்றாய்
பண்ணுறுமென் தனிக்கணவர் கூத்தாடுஞ் சபையைப்
பார்த்தாலும் பசிபோமே பார்த்திடலன் றியுமே
அண்ணுறுமத் திருச்சபையை நினைக்கினும்வே சாறல்
ஆறுமடி யூறுமடி யானந்த வமுதே. 44

கூசுகின்ற தென்னடிநா னம்பலத்தே நடிக்குங்
கூத்தாடிக் கணவருக்கே மாலையிட்டா யெனவே
ஏசுகின்ற ராரடியோ வண்டபகி ரண்டத்
திருக்கின்ற சத்தர்களுஞ் சத்திகளும் பிறரும்
பேசுகின்ற வார்த்தையெலாம் வள்ளலருட் கூத்தின்
பெருமையலால் வேறொன்றும் பேசுகின்ற திலையே
வீசுகின்ற பெருஞ்ஜோதித் திருக்கூத்தின் திறமே
வேதமுட னுகமங்கள் விளம்புகின்ற தன்றே. 45

குலமறியார் புலமறியா ரம்பலத்தே நடிக்குங்
கூத்தாடி யையருக்கே மாலையிட்டா யெனவே
புலமறியார் போனீயும் புகலுதியோ தோழி
பொளபொளவென் றளப்பதெலாம் போகவிட்டிங் கிதுகேள்
அலகறியாத் திருக்கூத்தென் கணவர்புரி யாரேல்
அயனரியோ டரன்முதலா மைவர்களும் பிறரும்
இலகறியா வுயிர்பலவும் நீயுமிங்கே நின்று
மினுக்குவதுங் குலுக்குவதும் வெளுத்துவிடுங் காணே. 46

கொடியிடைப்பெண் பேதாய்நீ யம்பலத்தே நடிக்குங்
கூத்தாடி யென்றெனது கொழுநர்தமைக் குறித்தாய்
படியிடத்தே வானிடத்தே பாதலத்தே யண்ட
பகிரண்ட கோடியிலே பதிவிளக்க மெல்லாம்
அடிமலர்கொண் டையர்செய்புந் திருக்கூத்தின் விளக்கம்
ஆகுமிது சத்தியமென் றருமறையா கமங்கள்
கெடியுறவே பறையடித்துத் திரிகின்ற வவற்றைக்
கேட்டறிந்து கொள்வாய்நின் வாட்டமெலாந் தவிர்ந்தே. 47

இன்பவடி வந்தருதற் கிறைவர்வரு கின்றார்
எல்லாஞ்செய் வல்லசித்த ரிங்குவரு கின்றார்
அன்பருளத் தேயினிக்கும் மமுதர்வரு கின்றார்
அம்பலத்தே நடம்புரியு மையர்வரு கின்றார்
என்புருப்பொன் னுருவாக்க வெண்ணிவரு கின்றார்
என்றுதிரு நாதவொலி யிசைக்கின்ற தம்மா
துன்பமறத் திருச்சின்ன வொலியதனை நீயுஞ்
சுகம்பெறவே கேளடியென் தோழியெனைச் சூழ்ந்தே. 48

துரியபதங் கடந்தபெருஞ் ஜோதிவரு கின்றார்
சுகவடிவந் தரவுயிர்க்குத் துணைவர்வரு கின்றார்
பெரியபிர மாதியர்க்கு மரியர்வரு கின்றார்
பித்தரென மறைபுகலுஞ் சித்தர்வரு கின்றார்
இரிவகல்சிற் சபைநடஞ்செ யிறைவர்வரு கின்றார்
என்றுதிரு நாதவொலி யிசைக்கின்ற தம்மா
உரிமைபெறு மென்தோழி நீயுமிங்கே சின்ன
ஒலிகேட்டுக் களித்திடுவா யுளவாட்ட மறவே. 49

ஈசரென துயிர்த்தலைவர் வருகின்றார் நீவிர்
எல்லீரும் புறத்திருமி னென்கின்றே னீதான்
ஏசறவே யகத்திருந்தா லென்னெனக் கேட்கின்றாய்
என்கணவர் வரிலவர்தா மிருந்தருளு முன்னே
ஆசைவெட்க மறியாது நானவரைத் தழுவி
அணைத்துமகிழ் வேனதுகண் டதிசயித்து கொடிப்பார்
கூசறியா ளிவளென்றே பேசுவரங் கதனாற்
கூறியதல் லதுவேறு குறித்ததில்லை தோழி. 50

அரசுவரு கின்றதென்றே யறைகின்றே னீதான்
ஐயமுறே லுற்றுக்கே ளசையாது தோழி
முரசுசங்கு வீணைமுதல் நாதவொலி மிகவும்
முழங்குவது திருமேனி வழங்குதெய்வ மணந்தான்
விரசவெங்கும் வீசுவது நாசியுயிர்த் தறிக
வீதியெலா மருட்ஜோதி விளங்குவது காண்க
பரசியெதிர் கொள்ளுதுநாங் கற்பூர விளக்குப்
பரிந்தெடுத்தென் னுடன்வருக தெரிந்தடுத்து மகிழ்ந்தே. 51

தாழ்குழல்நீ யாண்மகன்போல் நாணமச்சம் விடுத்தே
சபைக்கேறு கின்றாயென் றுரைக்கின்றாய் தோழி
வாழ்வகையென் கணவர்தமைப் புறத்தணைந்தா ளொருத்தி
மாலெனும்பே ருடையாளோர் வளையாழிப் படையாள்
ஆழ்கடலிற் றுயில்கின்றாள் மாமணிமண் டபத்தே
ஆள்கின்றா ளாண்மகனை யறிந்திலையோ வவரைக்
கேழ்வகையி லகம்புணர்ந்தே னவர்கருணை யமுதங்
கிடைத்ததுநா னாண்மகனா கின்றததி சயமோ. 52

துடியேறு மிடையுனக்கு வந்தவிறு மாப்பென்
சொல்லென்றா யரிபிரமர் சுரர்முனிவர் முதலோர்
பொடியேறு வடிவுடையா ரென்கணவர் சபையின்
பொற்படிக்கீழ் நிற்பதுபெற் றப்பரிசு நினைந்தே
இடியேறு போன்றிறுமாந் திருக்கின்றா ரடிநான்
எல்லாரு மதிசயிக்க வீண்டுதிருச் சபையின்
படியேறித் தலைவர்திரு வடியூறு மமுதும்
பருகுகின்றே னிறுமாக்கும் பரிசுரைப்ப தென்னே. 53

ஈற்றறியே னிருந்திருந்திங் கதிசயிப்ப தென்னீ
என்கின்றாய் நீயெனைவிட் டேகுதொறு நான்றான்
காற்றறியாத் தீபம்போ லிருந்திடுமத் தருணங்
கண்டபரி சென்புகல்வே னண்டபகி ரண்டந்
தோற்றறியாப் பெருஞ்ஜோதி மலைபரநா தத்தே
தோன்றியநாங் கதனடுவே தோன்றியதொன் றதுதான்
மாற்றறியாப் பொன்னொளியோ வவ்வொளிக்குள் ளாடும்
வள்ளலரு ளொளியோவீ ததிசயிக்கும் வகையே. 54

நடம்புரிவார் திருமேனி வண்ணமதை நான்போய்
நன்கறிந்து வந்துனக்கு நவில்வேனென் கின்றாய்
இடம்பெறுமிங் கறியாயே நீயேயென் கணவர்
எழில்வண்ணந் தெரிந்துரைப்பா யிசைமறையா கமங்கள்
திடம்படநாந் தெரிதுமெனச் சென்றுதனித் தனியே
திருவண்ணங் கண்டளவே சிவசிவவென் றங்கே
கடம்பெறுகள் ளுண்டதென மயங்குகின்ற வாறு
கண்டிலைநீ யானுங் கேட்டிலையோ தோழி. 55

பொய்பிடித்தா ரெல்லாரும் புறத்திருக்க நான்போய்ப்
பொதுநடங்கண் டுளங்களிக்கும் போதுமண வாளர்
மெய்பிடித்தாய் வாழியநீ சமரசசன் மார்க்கம்
விளங்கவுல கத்திடையே விளக்குகவென் றெனது
கைபிடித்தார் நானுமவர் கால்பிடித்துக் கொண்டேன்
களித்திடுக வினியுனைநாங் கைவிடோ மென்றும்
மைபிடித்த விழியுலக ரெல்லாருங் காண
மாலையிட்டோ மென்றெனக்கு மாலையணிந் தாரே. 56

பொருத்தமிலா ரெல்லாரும் புறத்திருக்க நான்போய்ப்
பொதுநடங்கண் டுவந்துநிற்கும் போதுதனித் தலைவர்
திருத்தமுற வருகணைந்து கைப்பிடித்தார் நானுந்
தெய்வமல ரடிபிடித்துக் கொண்டேன்சிக் கெனவே
வருத்தமுறே லினிச்சிறிது மயங்கேல்கா ணழியா
வாழ்வுவந்த துன்றனக்கே யுலகு மதிக்கக்
கருத்தலர்ந்து வாழியவென் றாழியளித் தெனது
கையினிற்பொற் கங்கணமுங் கட்டினர்காண் தோழி. 57

தமையறியா ரெல்லாரும் புறத்திருக்க நான்போய்ச்
சபைநடங்கண் டுளங்களிக்குந் தருணத்தே தலைவர்
இமையறியா விழியுடையா ரெல்லாருங் காண
இளநகைமங் களமுகத்தே தளதளவென் றொளிர
எமையறிந்தா யென்றெனது கைபிடித்தார் நானும்
என்னைமறந் தென்னிறைவர் கால்பிடித்துக் கொண்டேன்
சுமையறியாப் பேரறிவே வடிவாகி யழியாச்
சுகம்பெற்று வாழ்கவென்றார் கண்டாயென் தோழி. 58

ஐயமுற்றா ரெல்லாரும் புறத்திருக்க நான்போய்
அம்பலத்தே திருநடங்கண் டகங்களிக்கும் போது
மையகத்தே பொருந்தாத வள்ளலரு கணைந்தென்
மடிபிடித்தார் நானுமவ ரடிபிடித்துக் கொண்டேன்
மெய்யகத்தே நம்மைவைத்து விழித்திருக்கின் றாய்நீ
விளங்குகசன் மார்க்கநிலை விளக்குகவென் றெனது
கையகத்தே யொருபசும்பொற் கங்கணமும் புனைந்தார்
கருணையினிற் றாயனையார் கண்டாயென் தோழி. 59

காமாலைக் கண்ணர்பலர் பூமாலை விழைந்தார்
கனங்கொண்ட கண்ணர்பலர் மணங்கொள்ளத் திரிந்தார்
கோமாலை மனச்செருக்கால் மயங்கியுடம் பெல்லாங்
குறிகொண்ட கண்ணர்பலர் வெறிகொண்டுங் கலைந்தார்
ஆமாலை யவரெல்லாங் கண்டுளநா ணுறவே
அரும்பெருஞ்சோ தியரென்னை விரும்பிமணம் புரிந்தார்
தேமாலை யணிகுழலாய் நான்செய்த தவந்தான்
தேவர்களோ மூவர்களுஞ் செய்திலர்கண் டறியே. 60

காமாலைக் கண்ணரென்றுங் கணக்கண்ண ரென்றுங்
கருதுபல குறிகொண்ட கண்ணரென்றும் புகன்றேன்
ஆமாலு மவ்வயனு மிந்திரனு மிவர்கள்
அன்றிமற்றைத் தேவர்களு மசையணுக்க ளான
தாமாலைச் சிறுமாயா சத்திகளா மிவர்கள்
தாமோமா மாயைவரு சத்திகளோங் காரத்
தேமாலைச் சத்திகளும் விழித்திருக்க வெனக்கே
திருமாலை யணிந்தார்சிற் சபையுடையார் தோழி. 61

மாதேகே ளம்பலத்தே திருநடஞ்செய் பாத
    மலரணிந்த பாதுகையின் புறத்தெழுந்த வணுக்கள்
மாதேவ ருருத்திரர்க ளொருகோடி கோடி
    வளைபிடித்த நாரணர்க ளொருகோடி கோடி
போதேயு நான்முகர்க ளொருகோடி கோடி
    புரந்தரர்கள் பலகோடி யாகவுருப் புனைந்தே
ஆதேய ராகியிங்கே தொழில்புரிவா ரென்றால்
    ஐயர்திரு வடிப்பெருமை யாருரைப்பார் தோழி. 62

உருத்திரர்க ளொருகோடி நாரணர்பல் கோடி
    உறுபிரமர் பலகோடி யிந்திரர்பல் கோடி
பெருத்தமற்றைத் தேவர்களு முனிவர்களும் பிறரும்
    பேசிலநந் தங்கோடி யாங்காங்கே கூடித்
திருத்தமுறு திருச்சபையின் படிப்புறத்தே நின்று
    தியங்குகின்றார் நடங்காணுஞ் சிந்தையரா யந்தோ
வருத்தமொன் றுங்காணாதே நானொருத்தி யேறி
    மாநடங்காண் கின்றேனென் மாதவந்தான் பெரிதே. 63

பாருலகா திபர்புவனா திபரண்டா திபர்கள்
    பகிரண்டா திபர்வியோமா திபர்முதலா பதிபர்
ஏருலவாத் திருப்படிக்கீழ் நின்றுவிழித் திருக்க
    எனைமேலே யேற்றினர்நான் போற்றியங்கு நின்றேன்
சீருலவா யோகாந்த நடந்திருக்க லாந்தத்
    திருநடநா தாந்தத்தே செயுநடம்போ தாந்தப்
பேருலவா நடங்கண்டேன் திருவமுத முணவும்
    பெற்றேனென் செய்ததவம் பேருலகிற் பெரிதே. 64

என்புகல்வேன் றோழிநான் பின்னர்கண்ட காட்சி
    இசைப்பதற்கும் நினைப்பதற்கு மெட்டாது கண்டாய்
அன்புறுசித் தாந்தநடம் வேதாந்த நடமும்
    ஆதிநடு வந்தமில்லாச் சோதிமன்றிற் கண்டேன்
இன்பமய மாயொன்றா யிரண்டாயொன் றிரண்டும்
    இல்லதுவா யெல்லாஞ்செய் வல்லதுவாய் விளங்கித்
தன்பரமாம் பரங்கடந்த சமரசப்பே ரந்தத்
    தனிநடமுங் கண்ணுற்றேன் றனித்தசுகப் பொதுவே. 65

தூங்குகநீ யென்கின்றாய் தூங்குவனோ வெனது
    துரைவருமோர் தருணமிதிற் றூக்கமுந்தான் வருமோ
ஈங்கினிநான் றனித்திருக்க வேண்டுவதா தலினால்
    என்னுடைய தூக்கமெலா நின்னுடைய தாக்கி
ஏங்கலறப் புறத்தேபோய்த் தூங்குகநீ தோழி
    என்னிருகண் மணியனையா ரெனையணைந்த வுடனே
ஓங்குறவே நானவரைக் கலந்தவரும் நானும்
    ஒன்றான பின்னருனை யெழுப்புகின்றே னுவந்தே. 66

ஐயமுறேல் காலையில்யாம் வருகின்றோ மிதுநம்
ஆணையென்றா ரவராணை யருளாணை கண்டாய்
வெய்யருளத் தேபுகுதப் போனதிரு ளிரவு
விடிந்ததுநற் சுடருதய மேவுகின்ற தருணந்
தையலினி நான்றனிக்க வேண்டுவதா தலினால்
சற்றேயப் புறத்திருநீ தலைவர்வந்த வுடனே
உய்யவிங்கே நானவரைக் கலந்தவரு நானும்
ஒன்றான பின்னருனை யழைக்கின்றே னுவந்தே. 67

மன்றுடையா ரென்கணவ ரென்னுயிர்நா யகனார்
வாய்மலர்ந்த மணிவார்த்தை மலையிலக்காந் தோழி
துன்றியபே யிருளெல்லாந் தொலைந்ததுபன் மாயைத்
துகளொளிமா மாயைமதி யொளியொடுபோ யினவால்
இன்றருளாம் பெருஞ்சோதி யுதயமுற்ற ததனால்
இனிச்சிறிது புறத்திருநீ யிறைவர்வந்த வுடனே
ஒன்றுடையே னவரைக் கலந்தவரு நானும்
ஒன்றான பின்னருனை யழைக்கின்றே னுவந்தே. 68

வைகறையீ தருளுதயந் தோன்றுகின்ற தெனது
வள்ளல்வரு தருணமினி வார்த்தையொன்றா னாலும்
சைகரையே லிங்குநான் றனித்திருத்தல் வேண்டுந்
தாழ்குழல்நீ யாங்கேபோய்த் தத்துவப்பெண் குழுவில்
பொய்கரையா துள்ளபடி புகழ்பேசி யிருநீ
புத்தமுத மளித்தவருட் சித்தர்வந்த வுடனே
உய்கரைவாய் நானவரைக் கலந்தவரு நானும்
ஒன்றான பின்னருனை யழைக்கின்றே னுவந்தே. 69

காலையிலே வருகுவரென் கணவரென்றே நினக்குக்
கழறினனு னென்னலது காதினுற்ற திலையோ
வேலையிலா தவள்போலே வம்பளக்கின் றாய்நீ
விடிந்ததுநான் றனித்திருக்க வேண்டுவதா தலினால்
சோலையிலே மலர்கொய்து தொடுத்துவந்தே புறத்திற்
சூழ்ந்திருப்பாய் தோழியென்றன் துணைவர்வந்த வுடனே
ஓலையுறா தியானவரைக் கலந்தவரு நானும்
ஒன்றான பின்னருனை யழைக்கின்றே னுவந்தே. 70

விடிந்ததுபே ராணவமாங் காரிருளீங் கியது
வெய்யவினைத் திரளெல்லாம் வெந்ததுகாண் மாயை
ஒடிந்ததுமா மாயையொழிந் ததுதிரைதீர்ந் ததுபே
ரொளியுதயஞ் செய்ததினித் தலைவர்வரு தருணந்
திடம்பெறநான் றனித்திருக்க வேண்டுவதா தலினால்
தேமொழிநீ புறத்திருமா தேவர்வந்த வுடனே
உடம்புறவே நானவரைக் கலந்தவரு நானும்
ஒன்றான பின்னருனை யழைக்கின்றே னுவந்தே. 71

நான்றொடுக்கு மாலையிது பூமாலை யெனவே
நாட்டார்கள் முடிமேலே நாட்டார்கள் கண்டாய்
வான்றொடுக்கு மறைதொடுக்கு மாகமங்கள் தொடுக்கு
மற்றவையே யணிவார்கள் மதத்துரிமை யாலே
தான்றொடுத்த மாலையெலாம் பரத்தையர்தோண் மாலை
தனித்திடுமென் மாலையருட் சபைநடுவே நடிக்கும்
ஊன்றெடுத்த மலர்களன்றி வேறுகுறி யாதே
ஓங்குவதா தலிலவைக்கே யுரித்தாகுந் தோழி. 82

வான்கொடுத்த மணிமன்றிற் றிருநடனம் புரியும்
வள்ளலெலாம் வல்லவர்நன் மலரெடுத்தென் னுளத்தே
தான்கொடுக்க நான்வாங்கித் தொடுக்கின்றே னிதனைத்
தலைவர்பிற ரணிகுவரோ அணிதரந்தா முளரோ
தேன்கொடுத்த சுவைபோலே தித்தித்தென் னுளத்தே
திருக்கூத்துக் காட்டுகின்ற திருவடிக்கே யுரித்தாம்
யான்கொடுக்கும் பரிசிந்த மாலைமட்டோ தோழி
என்னுயி ருடல்பொருளுங் கொடுத்தனனுள் ளிசைந்தே. 83

என்மாலை மாத்திரமோ யார்மாலை யெனினும்
இறைவரையே யிலக்கியமா யிசைப்பதெனி லவைதாம்
நன்மாலை யாகுமந்தச் சொன்மாலை தனக்கே
நானடிமை தந்தனப்பல் வந்தனஞ்செய் கின்றேன்
புன்மாலை பலபலவாய்ப் புகல்கின்றா ரம்மா
பொய்புகுந்தாற் போற்செவியிற் புகுந்தோறுந் தனித்தே
வன்மாலை நோய்செயுமே கேட்டிடவும் படுமோ
மன்றாடி பதம்பாடி நின்றாடு மவர்க்கே. 84

உரியபெருந் தனித்தலைவ ரோங்குசடாந் தத்தின்
உட்புறத்து மப்புறத்து மொருசெங்கோற் செலுத்துந்
துரியர்துரி யங்கடந்த சுகசொருபர் பொதுவிற்
சுத்தநடம் புரிகின்ற சித்தரடிக் கழலே
பெரியபதத் தலைவரெலாம் நிற்குநிலை யிதுவோர்
பெண்ணுரையென் றெள்ளுதியோ கொள்ளுதியோ தோழி
அரியபெரும் பொருண்மறைக ளாகமங்க ளுரைக்கும்
ஆணையுமிங் கிதிதற்கோ ரையமிலை யறியே. 85

மதமெனும்பேய் பிடித்தாட்ட வாடுகின்றா ரெல்லாம்
மன்றிடத்தே வள்ளல்செயு மாநடங்காண் குவரோ
சதமெனவே யிருக்கின்றார் படுவதறிந் திலரே
சாகாத கல்விகற்குந் தரமிவர்க்கு முளதோ
பதமறியா யிந்தமத வாதிகளோ சிற்றம்
பலநடங்கண் டுய்ந்தேனைச் சிலபுகன்றா ரென்றாய்
சுதைமொழிநீ யன்றுசொன்ன வார்த்தையன்றோ வின்று
தோத்திரஞ்செய் தாங்காங்கே தொழுகின்றார் காணே. 86

எவ்வுலகி லெவ்வெவர்க்கு மரும்பெருஞ்ஜோ தியரே
இறைவரென்ப தறியாதே யிம்மதவா திகடாங்
கவ்வைபெறு குருடர்கரி கண்டகதை போலே
கதைக்கின்றார் சாகாத கல்வினிலை யறியார்
நவ்விவிழி யாயிவரோ சிலபுகன்றா ரென்றாய்
ஞானநடங் கண்டேன்மெய்த் தேனமுத முண்டேன்
செவ்வைபெறு சமரசசன் மார்க்கசங்கந் தனிலே
சேர்ந்தேனத் தீமொழியுந் தேமொழியா யினவே. 87

பெருகியபே ரருளுடையா ரம்பலத்தே நடிக்கும்
பெருந்தகையென் கணவர்திருப் பேர்புகலென் கின்றாய்
அருகர்புத்த ராதியென்பேன் அயனென்பேன் நாரா
யணனென்பேன் அரனென்பேன் ஆதிசிவனென்பேன்
பருகுசதா சிவமென்பேன் சத்திசிவ மென்பேன்
பரமமென்பேன் பிரமமென்பேன் பரப்பிரம மென்பேன்
துருவுசுத்த பிரமமென்பேன் துரியநிறை வென்பேன்
சுத்தசிவ மென்பனிவை சித்துவிளை யாட்டே. 88

சிற்சபையில் நடிக்கின்ற நாயகனார் தமக்குச்
சேர்ந்தபுறச் சமயப்பேர் பொருந்துவதோ வென்றாய்
பிற்சமயத் தார்பெயரு மவர்பெயரே கண்டாய்
பித்தரென்றே பெயர்படைத்தார்க் கெப்பெயரொவ் வாதோ
அச்சமயத் தேவர்மட்டோ நின்பெயரென் பெயரும்
அவர்பெயரே யெவ்வுயிரின் பெயருமவர் பெயரே
சிற்சபையி லென்கணவர் செய்புமொரு ஞானத்
திருக்கூத்துக் கண்டளவே தெளியுமிது தோழி. 89

எப்பொருட்கு மெவ்வுயிர்க்கு முள்ளகத்தும் புறத்தும்
இயலுண்மை யறிவின்ப வடிவாகி நடிக்கும்
மெய்ப்பொருளாஞ் சிவமொன்றே யென்றறிந்தே னெனக்கும்
விளம்புகின்றேன் மடவாய்நீ கிளத்துகின்றாய் மீட்டும்
இப்பொருளப் பொருளென்றே யிசைப்பதென்னே பொதுவில்
இறைவர்செயு நிரதிசய வின்பநடந் தனைநீ
பப்பறவே காணுதியே லத்தருணத் தெல்லாம்
பட்டநடுப் பகல்போல வெட்டவெளி யாமே. 90

காணாத காட்சியெலாங் காண்கின்றேன் பொதுவில்
கருணைநடம் புரிகின்ற கணவரையுட் கலந்தேன்
கோணாத மேனிலைமே லின்பவனு பவத்திற்
குறையாத வாழ்வடைந்தேன் றாழ்வனைத்துந் தவிர்ந்தேன்
நாணாளுந் திருப்பொதுவில் நடம்பாடிப் பாடி
நயக்கின்றே னற்றவரும் வியக்கின்ற படியே
மாணாகம் பொன்னாக மாகவரம் பெற்றேன்
வள்ளலருள் நோக்கடைந்தேன் கண்டாயென் றோழி. 91

சாதிசமயங்களிலே வீதிபல வகுத்த
சாத்திரக்குப் பைகளெல்லாம் பாத்திரமன் றெனவே
ஆதியிலென் னுளத்திருந்தே யறிவித்த படியே
அன்பாலின் றுண்மைநிலை யறிவிக்க வறிந்தேன்
ஓதியுணர்ந் தோர்புகழுஞ் சமரசசன் மார்க்கம்
உற்றேன்சிற் சபைகாணப் பெற்றேன்மெய்ப் பொருளாஞ்
ஜோதிநடத் தரசையென்ற னுயிர்க்குயிராம் பதியைச்
சுத்தசிவ நிறைவையுள்ளே பெற்றுமகிழ்ந் தேனே. 92

சரியைநிலை நான்குமொரு கிரியைநிலை நான்குந்
தனியோக நிலைநான்குந் தனித்தனிகண் டறிந்தேன்
உரியசிவ ஞானநிலை நான்குமரு ளொளியால்
ஒன்றொன்றா வறிந்தேன்மே லுண்மைநிலை பெற்றேன்
அரியசிவ சித்தாந்த வேதாந்த முதலாம்
ஆறந்த நிலையறிந்தே னப்பால்நின் றோங்கும்
பெரியசிவ வனுபவத்தாற் சமரசசன் மார்க்கம்
பெற்றேனிங் கிறவாமை யுற்றேன்காண் டோழி. 93

நான்பசித்த போதெல்லாந் தான்பசித்தா ராகி
நல்லதிரு வமுதளித்தே யல்லல்பசி தவிர்த்தே
ஊன்பதித்த வென்னுடைய வுளத்தேதம் முடைய
உபயபதம் பதித்தருளி யபயமெனக் களித்தார்
வான்பதிக்குங் கிடைப்பரியார் சிற்சபையில் நடிக்கு
மணவாள ரெனைப்புணர்ந்த புறப்புணர்ச்சித் தருணம்
தான்பதித்த பொன்வடிவந் தனையடைந்து களித்தேன்
சாற்றுமகப் புணர்ச்சியினு மேற்றமுரைப் பதுவே. 94

துருவுபர சாக்கிரத்தைக் கண்டுகொண்டேன் பரம
சொற்பனங்கண் டேன்பரம சுழுத்தியுங்கண் டுணர்ந்தேன்
குருபிரம சாக்கிரத்தைக் கண்டேன்பின் பிரமங்
குலவியசொற் பனங்கண்டேன் சிவசுழுத்தி கண்டேன்
குருதுரியங் காண்கின்றேன் சமரசசன் மார்க்கங்
கூடினேன் பொதுவிலருட் கூத்தாடுங் கணவர்
மருவிடப்பெற் றவர்வடிவ நானுனேன் களித்து
வாழ்கின்றே னெதிரற்ற வாழ்க்கையிலென் றோழி. 95

தனிப்படுமோர் சுத்தசிவ சாக்கிரநன் னிலையில்
தனித்திருந்தேன் சுத்தசிவ சொற்பனத்தே சார்ந்தேன்
கனிப்படுமெய்ச் சுத்தசிவ சுழுத்தியிலே களித்தேன்
கலந்துகொண்டேன் சுத்தசிவ துரியநிலை யதுவாய்ச்

செனிப்பிலதா யெல்லாமா யல்லதுவாஞ் சுத்த
சிவதுரியா தீதத்தே சிவமயமாய் நிறைந்தேன்
இனிப்புறுசிற் சபையிறையைப் பெற்றபரி சதனால்
இத்தனையும் பெற்றிங்கே யிருக்கின்றேன் றோழி. 96

அருட்ஜோதித் தலைவரெனக் கன்புடைய கணவர்
அழகியபொன் மேனியைநான் றழுவிநின்ற தருணம்
இருட்சாதி தத்துவங்க ளெல்லாம்போ யினவால்
எங்கணும்பே ரொளிமயமா யிருந்தனவாங் கவர்தாம்
மருட்சாதி நீக்கியெனைப் புணர்ந்தவொரு தருணம்
மன்னுசிவா னந்தமய மாகிநிறை வுற்றேன்
தெருட்சார்பி லிருந்தோங்கு சமரசசன் மார்க்கத்
திருச்சபைக்கண் ணுற்றேனென் றிருக்கணவ ருடனே. 97

புறப்புணர்ச்சி யென்கணவர் புரிந்ததரு ணந்தான்
புத்தமுத நானுண்டு பூரித்த தருணம்
சிறப்புணர்ச்சி மயமாகி யகப்புணர்ச்சி யவர்தாஞ்
செய்ததரு ணச்சுகத்தைச் செப்புவதெப் படியோ
பிறப்புணர்ச்சி விடயமிலை சுத்தசிவா னந்தப்
பெரும்போகப் பெருஞ்சுகந்தான் பெருகியெங்கு நிறைந்தே
மறப்புணர்ச்சி யில்லாதே நானதுவா யதுவென்
மயமாய்ச்சின் மயமாய்த்தன் மயமான நிலையே. 98

தாயினும்பே ரருளுடையா ரென்னுயிரிற் கலந்த
தனித்தலைவர் நான்செய்பெருந் தவத்தாலே கிடைத்தார்
வாயினுமோர் மனத்தினுமா மதியினுமெத் திறத்தும்
மதித்தளத்தற் கருந்துரிய மன்றினடம் புரிவார்
ஆயினுமென் னளவின்மிக வெளியரென வென்னை
அகம்புணர்ந்தார் புறம்புணர்ந்தார் புறப்புணர்ச்சித் தருணம்
தூயவொளி பெற்றழியா தோங்குவடி வானேன்
சுகமயமா மகப்புணர்ச்சி சொல்லுவதெப் படியோ. 99

அறியாத பருவத்தே யென்னைவலிந் தழைத்தே
ஆடல்செயுந் திருவடிக்கே பாடல்செயப் பணித்தார்
செறியாத மனச்சிறியேன் செய்தபிழை யெல்லாந்
திருவிளையாட் டெனக்கொண்டே திருமாலை யணிந்தார்
பிறியாம லென்னுயிரிற் கலந்துகலந் தினிக்கும்
பெருந்தலைவர் நடராய ரெனைப்புணர்ந்தா ரருளாம்
அறிவாளர் புறப்புணர்ச்சி யெனையழியா தோங்க
அருளியதீண் டகப்புணர்ச்சி யளவுரைக்க லாமே. 100

அருட்பெருஞ்ஜோதி

# 83. வரம்பிலின்பம்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

திருவாளர் கனகசபைத் திருநடஞ்செய் தருள்வார்
தேவர்சிகா மணியெனக்குத் திருமாலை கொடுத்தார்
உருவாள ரருவாகி யொளியாகி வெளியாய்
ஓங்குகின்றா ரென்னுடைய வுயிர்த்துணைவ ரவர்தம்
பெருவாய்மைத் திறஞ்சிறிதும் பேசமுடி யாதே
பேசுவதார் மறைகளெலாங் கூசுகின்ற வென்றால்
துருவாம லிங்கெனக்குக் கிடைத்ததையென் சொல்வேன்
சொல்லளவல் லாதசுகந் தோன்றுவதென் தோழி. 1

அருளாளர் பொற்பொதுவி லற்புதநா டகஞ்செய்
ஆனந்த வண்ணரெனை யாளுடையார் சிறியேன்
தெருளாத பருவத்தே தெருட்டிமணம் புரிந்த
சீராள ரவர்பெருமைத் திறத்தையெவர் புகல்வார்
மருளாத வாகமங்கண் மாமறைக ளெல்லாம்
மருண்டனவே யென்னடியென் மனவாக்கி னளவோ
இருளாமை யென்றுறுமோ வன்றுசிறி துரைப்பேன்
என்னவுநா ணிர்ப்பதிதற் கென்புரிவேன் தோழி. 2

செம்பவளத் திருமலையோ மாணிக்க விளக்கோ
செழுஞ்ஜோதித் தனிப்பிழம்போ செவ்வண்ணத் திரளோ
அம்பதுமத் திருவிளங்கு மகலத்தான் பிரமன்
அரன்முதலோ ரைவர்களு மப்பால்நின் றோரும்
எம்பரமென் றெம்பெருமான் புறவண்ண மெதுவோ
என்பாரே லகவண்ண மியாருரைக்க வல்லார்
தம்பரமென் றென்னையன்று மணம்புரிந்தார் கனக
சபைநாத ரவர்பெருமை சாற்றுவதென் தோழி. 3

தேவர்களோ சித்தர்களோ சீவன்முத்தர் தாமோ
சிறந்தமுனித் தலைவர்களோ செம்பொருள்கண் டோரோ
மூவர்களோ வறுவர்களோ முதற்சத்தி யவளோ
முன்னியநம் பெருங்கணவர் தம்மியலை யுணர்ந்தோர்
யாவர்களு மல்லவென்றால் யானுணர்ந்து சொல்ல
வமையுமோ வொருசிறிது மமையாது கண்டாய்
ஆவலொடு மன்பர்தொழக் கனகசபை நடிப்பார்
அவர்பெருமை யெவ்விதத்து மவரறிவார் தோழி. 4

பதியுடையார் கனகசபா பதியெனும்பே ருடையார்
பணைப்பரித்த வரையரென்னை மணம்புரிந்த கணவர்
விதியுடையா ரேத்தநின்ற துதியுடையார் ஞான
விளக்கனைய மெய்யுடையார் வெய்யவினை யறுத்த
மதியுடையார் தமக்கருளும் வண்மைபெரி துடையார்
மங்கைசிவ காமவல்லி மணவாளர் முடிமேல்
நதியுடையா ரவர்பெருமை மறைக்குமெட்டா தென்றால்
நானுரைக்க மாட்டுவனோ நவிலாயென் தோழி. 5

வெடித்தளிந்த முக்கனியின் வடித்தரசந் தனிலே
விரும்புறநின் றோங்கியசெங் கரும்பிரதங் கலந்து
தடித்தசெழும் பாற்பெய்து கோற்றேன்விட் டதனைத்
தனித்தபரா வமுதத்திற் றான்கலந்துண் டாற்போல்
இடித்திடித்தென் னுளமுழுதுந் தித்திக்கும் வார்த்தை
இனிதுரைத்து மணம்புரிந்த வென்னுயிர்நா யகர்வான்
பொடித்திருமே னியர்நடனம் புரிகின்றா ரவர்தம்
புகழுரைக்க வல்லேனோ வல்லேன்காண் தோழி. 6

திருச்சிற்றம் பலத்தின்பத் திருவுருக்கொண் டருளாந்
திருநடஞ்செய் தருளுகின்ற திருவடிக ளிரண்டும்
அருச்சிக்கும் பேரன்ப ரறிவின்கண் ணறிவாய்
அவ்வறிவில் விளைந்தசிவா னந்தவமு தாகி
உருச்சிக்கும் பரநாதந் தலங்கடந்தப் பாற்சித்
துருவுகடந் திருக்குமென வுணர்ந்தோர்சொல் வாரேல்
பெருச்சித்தெல் லாம்வல்ல நடராஜப் பெருமான்
பெருமையையாம் பேசுவதென் பேசாயென் தோழி. 7

நாதவரை சென்றுமறை போரனந்தங் கோடி
நாடியிளைத் திருந்தனவா கமங்கள் பரநாத
போதவரை போந்துபல முகங்கொண்டு தேடிப்
புணர்ப்பறியா திருந்தனவென் றறிஞர்புகல் வாரேல்
பாதவரை வெண்ணீறு படிந்திலங்கச் சோதிப்
படிவமெடுத் தம்பலத்தே பாதநடம் புரியும்
போதவரைக் காண்பதலா லவர்பெருமை யென்னால்
புகலவச மாமோநீ புகலாயென் தோழி. 8

பரையிருந்த வெளிமுழுதும் பரவியப்பாற் பரையின்
பரமாகி யப்பரத்திற் பரம்பரமாய் விளங்கித்
திரைகடந்த திருவெளியி லானந்தா தீதத்
திருநடஞ்செய் யாதுசெயுந் திருவடிக ளென்றே
புரைகடந்தோர் புகல்கின்றார் கேட்கின்றோ மென்றால்
புண்ணியரென் தனித்தலைவர் புனிதநட ராஜர்
வரைகடந்த திருத்தோண்மேற் றிருநீற்ற ரவர்தம்
வாய்மைசொல வல்லேனோ வல்லேன்காண் தோழி. 9

ஏய்ப்பந்தி வண்ணரென்றும் படிகவண்ண ரென்றும்
இணையிலொளி யுருவரென்று மியலருவ ரென்றும்
வாய்ப்பந்த லிடுவதன்றி யுண்மைசொல வல்லார்
மண்ணிடத்தும் விண்ணிடத்து மற்றிடத்து மிலையே
காய்ப்பந்த மரமென்று கண்டுசொல்வ தன்றிக்
காய்த்தவண்ணம் பூத்தவண்ணங் கண்டுகொள மாட்டார்
தாய்ப்பந்த வுணர்வுடையேன் யானோசிற் சபையில்
தனிமுதல்வர் திருவண்ணஞ் சாற்றவல்லேன் தோழி. 10

கலைக்கடலைக் கடந்தமுனிக் கணங்களுமம் மலமாங்
கரிசகன்ற யோகிகளுங் கண்டுகொள மாட்டார்
தலைக்கடலிற் றுரும்பாகி யலைகின்றார் மன்றுள்
ஆடுகின்றா ரென்பதலா லவர்வண்ண மதுவும்
நிலைக்குரிய திருச்சபையின் வண்ணமுமச் சபைக்கண்
நிருத்தத்தின் வண்ணமுமந் நீர்மையன வென்றே
மலைக்குநிறை கண்டாலுங் காணவொணா தம்ம
வாய்ப்பதர்கள் தூற்றுவதில் வரும்பயனென் தோழி. 11

சிதமலரோ சுகமலரும் பரிமளிக்க வோங்குந்
திருச்சிற்றம் பலநடுவே திருநடனம் புரியும்
பதமலரோ பதமலரிற் பாதுகையோ வவையிற்
படிந்ததிருப் பொடியோவப் பொடிபடிந்த படியோ
இதமலரு மப்படிமே லிருந்தவரோ வவர்பேர்
இசைத்தவருங் கேட்டவரு மிலங்குமுத்த ரென்றால்
நிதமலரு நடராஜப் பெருமானென் கணவர்
நிலையுரைக்க வல்லாரார் நிகழ்த்தாயென் தோழி. 12

சுத்தமுற்ற வைம்பூத வெளிகரண வெளிமேல்
துலங்குவெளி துரியவெளி சுகவெளியே முதலாம்
இத்தகைய வெளிகளுள்ளே யெவ்வெளியோ நடனம்
இயற்றுவெளி யென்கின்றா ரென்றாலவ் வெளியில்
நித்தபரி பூரணமா யானந்த மயமாய்
நிருத்தமிடு மெம்பெருமா னிபுணநட ராயன்
சித்துருவாந் திருவடியி னுண்மைவண்ண மறிந்து
செப்புவதா ரென்வசமோ செப்பாயென் தோழி. 13

காற்றுருவோ கனலுருவோ கடவுளுரு வென்பார்
காற்றுருவுங் கனலுருவுங் கண்டுரைப்பீ ரென்றால்
வேற்றுருவே புகல்வரதை வேறென்றால் மறுத்தால்
விழித்துவிழித் தெம்போல்வார் மிகவுமருள் கின்றார்
தோற்றுமந்தத் தத்துவமுந் தோற்றாத்தத் துவமுந்
துரிசாக வவைகடந்த சுகசொருப மாகி
மாற்றமன வுணர்வுசெல்லாத் தலத்தாடும் பெருமான்
வடிவுரைக்க வல்லவரார் வழுத்தாயென் தோழி. 14

நாதமட்டுஞ் சென்றனமேற் செல்லவழி யறியேம்
நவின்றபர விந்துமட்டும் நாடினமே லறியேம்
ஏதமிலாப் பரநாத வெல்லைமட்டுஞ் சென்றேம்
இனிச்செல்ல வழிகாணே மிலங்குபெரு வெளிக்கே
ஆதரவிற் சென்றனமேற் செல்லவழி தெரியேம்
அம்மம்ம வென்றுமறை யாகமங்க ளெல்லாம்
ஓதநின்ற திருநடனப் பெருமானார் வடிவின்
உண்மைசொல வல்லவரா ருரையாயென் தோழி. 15

தோன்றுசத்தி பலகோடி யளவுசொல வொண்ணு
தோற்றுசத்தி பலகோடி தொகையுரைக்க முடியா
சான்றுலகந் தோற்றுவிக்குஞ் சத்திபல கோடி
தனைவிளம்ப லாகாவச் சத்திகளைக் கூட்டி
ஏன்றவகை விடுக்கின்ற சத்திபல கோடி
இத்தனைக்கு மதிகாரி யென்கணவ ரென்றால்
ஆன்றமணி மன்றிலின்ப வடிவாகி நடிக்கும்
அவர்பெருமை யெவருரைப்பா ரறியாயென் தோழி. 16

தோற்றமொன்றே வடிவொன்று வண்ணமொன்று விளங்குஞ்
ஜோதியொன்று மற்றதனிற் றுலங்குமிய லொன்றே
ஆற்றவதிற் பரமாய வணுவொன்று பகுதி
அதுவொன்று பகுதிக்குள் ளமைந்தகரு வொன்று
ஏற்றமிக்க வக்கருவுட் சத்தியொன்று சத்திக்
கிறையொன்றா மித்தனைக்கு மெங்கணவ ரல்லால்
ஆற்றமற்றோ ரதிகாரி யில்லையடி மன்றில்
ஆடுமவர் பெருந்தகைமை யாருரைப்பார் தோழி. 17

ஒருமைபெறு தோற்றமொன்று தத்துவம்பல் வேறு
ஒன்றினிய லொன்றிடத்தே யுற்றிலவிங் கிவற்றை
இருமையினு மும்மைமுத லெழுமையினுங் கூட்டி
இலங்கியசிற் சத்திநடு விரண்டொன்றென் றோத
பெருமைபெற்று விளங்கவதி னடுவருணின் றிலங்கப்
பெரியவரு ணடுநின்று துரியநடம் புரியும்
அருமையெவர் கண்டுகொள்வ ரவர்பெருமை யவரே
அறியாரே யென்னடிநீ யறைந்தவண்ணந் தோழி. 18

படைத்தபடைப் பொன்றதிலே பரமதிற்கா ரணமாம்
பகுதியதிற் பகுக்கின்ற பணிகள்பல பலவாம்
புடைத்தவவை புகுந்துலவும் புரமொன்றப் புரத்திற்
பூபதியொன் றவர்க்குணர்த்தும் பூரணசித் தொன்று
மிடைத்தவிவை யெல்லாஞ்சிற் றம்பலத்தே நடிக்கும்
என்பதத்தோர் சிற்றிடத்து விளங்கிநிலை பெறவே
அடைத்துமற்றிங் கிவைக்கெல்லா மப்புறத்தே நிற்பார்
அவர்பெருமை யெவரறிவா ரறியாய்நீ தோழி. 19

சிருட்டியொன்று சிற்றணுவிற் சிறிததனிற் சிறிது
சினைத்தகர ணக்கருவச் சினைக்கருவிற் சிறிது
வெருட்டியமா னம்மானிற் சிறிதுமதி மதியின்
மிகச்சிறிது காட்டுகின்ற வியன்சுடரோன் றதனில்
தெருட்டுகின்ற சத்திமிகச் சிறிததனிற் கோடித்
திறத்தினிலோர் சிறிதாகுந் திருச்சிற்றம் பலத்தே
அருட்டிறத்தி னடிக்கின்ற வென்னுடைய தலைவர்
அருட்பெருமை யெவருரைப்பா ரறியாயென் தோழி. 20

நான்முகர்கள் மிகப்பெரிய ராங்கவரிற் பெரியர்
நாரணர்கள் மற்றவர்க ளுடின்மிகப் பெரியர்
வான்முகத்த வுருத்திரர்கள் மற்றவரிற் பெரியர்
மயேச்சுரர்கள் சதாசிவர்கள் மற்றவரிற் பெரியர்
மீன்முகத்த விந்ததனிற் பெரிததனில் நாத
மிகப்பெரிது பரையதனில் மிகப்பெரிய ளவளின்
ஆன்முகத்திற் பரம்பரந்தான் பெரிததனிற் பெரிதாய்
ஆடுகின்ற சேவடியா ரறிவார்காண் தோழி. 21

மண்ணனந்தங் கோடியள வுடையதுநீ ரதனில்
வயங்கியநாற் றொருகோடி மேலதிகம் வன்னி
எண்ணியவா யிரமயுதங் கோடியின்மே லிலக்கம்
எண்பத்து நான்கதின்மே லதிகம்வளி யொடுவான்
விண்ணளவு மூலமுயிர் மாமாயை குடிலை
விந்தளவு சொலமுடியா திந்தவகை யெல்லாம்
அண்ணலடிச் சிறுநகத்திற் சிற்றகத்தா மென்றால்
அவர்பெருமை யெவருரைப்பா ரறியாய்நீ தோழி. 22

மண்ணாதி யைம்பூத வகையிரண்டி னொன்று
வடிவுவண்ண மியற்கையொரு வாலணுச்சத் தியலாய்க்
கண்ணொன்று முணர்ச்சிசொலாக் காட்சியவாய் நிற்பக்
கருதுமவைக் குட்புறங்கீழ் மேற்பக்க நடுவில்
நண்ணியொரு மூன்றைந்து நாலொடுமூன் றெட்டாய்
நவமாகி மூலத்தி னவின்றசத்திக் கெல்லாம்
அண்ணுறுமோ ராதார சத்திகொடுத் தாடும்
அடிப்பெருமை யாரறிவா ரவரறிவார் தோழி. 23

மண்பூத முதற்சத்தி வாலணுவி னணுவாய்
மதித்தவத னுள்ளொளியா யவ்வொளிக்குள் ளொளியாய்
எண்பூதத் தவ்வொளிக்குள் ளிலங்குவெளி யாயவ்
வியல்வெளிக்கு ளொருவெளியா யிருந்தவெளி நடுவே
பண்பூத நடம்புரியும் பதப்பெருமை யெவரும்
பகுத்துணர முடியாதேற் பதமலரென் தலைமேல்
நண்பூற வைத்தருளு நடராஜப் பெருமான்
நல்லசெயல் வல்லபமார் சொல்லுவர்காண் தோழி. 24

வண்கலப்பிற் சந்திசெயுஞ் சத்தியுளே யொருமை
    வயங்கொளிமா சத்தியத னுள்ளொருகா ரணமாம்
விண்கரணா சத்தியத னுட்டலைமை யாக
    விளங்குகுருச் சத்தியதின் மெய்மைவடி வான
எண்குணமா சத்தியிந்தச் சத்திதனக் குள்ளே
    இறையாகி யதுவதுவா யிலங்கிநடம் புரியுந்
தண்கருணைத் திருவடியின் பெருமையறி வரிதேற்
    சாமிதிரு மேனியின்சீர் சாற்றுவதென் தோழி. 25

பெரியவெனப் புகல்கின்ற பூதவகை யெல்லாம்
    பேசுகின்ற பகுதியிலே வீசுகின்ற சிறுமை
உரியபெரும் பகுதியுமப் பகுதிமுதற் குடிலை
    உளங்கொள்பரை முதல்சத்தி யோகமெலாம் பொதுவில்
துரியநடம் புரிகின்ற ஜோதிமலர்த் தாளில்
    தோன்றியதோர் சிற்றசைவாற் றோன்றுகின்ற வென்றால்
அரியபெரும் பொருளாக நடிக்கின்ற தலைவர்
    அருட்பெருமை யென்னளவோ வறியாயென் தோழி. 26

பொன்வண்ணப் பூதமுதற் றன்மையுண்மை யகத்தே
    பொற்புறமாக் கருவிளக்கம் பொருந்தவெண்மை செம்மை
தன்வண்ணப் பசுமையொடு கருமைகலப் பாகுந்
    தன்மையினிற் றன்மையதாய்த் தனித்ததற்கோர் முதலாய்
மன்வண்ணத் தொளியுருவ முயிர்ப்பினொடு தோன்ற
    வாலணுக்கூட் டங்களையவ் வகைநிறுவி நடத்தும்
மின்வண்ணத் திருச்சபையி லாடுகின்ற பதத்தின்
    மெய்வண்ணம் புகலுவதார் விளம்பாயென் தோழி. 27

பொற்புடைய வைங்கருவுக் காதார கரணம்
    புகன்றவறு கோடியவைக் காறிலக்க மவற்றுக்
கற்புறுமோ ராறுபதி னாயிரமவற் றுக் கடையா
    றாயிரமாங் கவற்றுக்கோ ராறுநூறிங் கிவைக்கே
விற்பொலியு மறுபதுமற் றிவைக்காறிங் கிந்த
    வியன்கரண சத்திகளை விரித்துவிளக் குவதாய்ச்
சிற்பரமா மணிமன்றிற் றிருநடனம் புரியுந்
    திருவடியின் பெருமையெவர் செப்புவர்காண் தோழி. 28

ஏற்றமுறு மைங்கருவுக் கியல்பகுதிக் கரணம்
    எழுகோடி யீங்கிவற்றுக் கேழிலக்க மிவைக்கே
தோற்றமுறு மெழுபதினா யிரமிவற்றுக் கெழுமை
    துன்னியநா றிவற்றினுக்குச் சொல்லுமெழு பதுதான்
ஆற்றலுறு மிவைதமக்கோ ரேழாமிக் கரணம்
    அனைத்தினையுந் தனித்தனியே தோற்றிநிலை பொருத்திச்
சாற்றரிய வடிவுவண்ணஞ் சுவைப்பயனுண் டாக்குஞ்
    சாமிதிரு வடிப்பெருமை சாற்றுவதார் தோழி. 29

விளங்கியவைங் கருச்சத்தி யோரனந்தங் கருவில்
விளைகின்ற சத்திகளோ ரனந்தவிளை வெல்லாம்
வளம்பெறவே தருகின்ற சத்திகளோ ரனந்த
மாண்படையத் தருவிக்குஞ் சத்திகளோ ரனந்தம்
உளங்கொளநின் றதிட்டிக்குஞ் சத்திகளோ ரனந்தம்
ஓங்கியவிச் சத்திகளைத் தனித்தனியே யியக்கித்
தளங்கொளவின் டவ்வவற்றிற் குட்புறநின் றொளிருஞ்
சாமிதிரு வடிப்பெருமை சாற்றுவதார் தோழி. 30

காணுகின்ற வைங்கருவின் வித்தினியல் பலவுங்
கருதுறுமங் குரத்தினியல் பற்பலவு மடியின்
மாணுகின்ற வியல்கள்பல பலப்பலவு நடுவில்
மன்னுமியல் பலபலவும் பலப்பலவும் முடியிற்
பூணுமிய லனந்தவகை புரிந்தபல பலவும்
பொருந்துவதா யவ்வவற்றின் புணர்க்கையுந்தா னாகி
ஏணுகின்ற வகைகளுக்குட் பற்றும னடிக்கும்
எழிற்கருணைப் பதப்பெருமை யியம்புவதார் தோழி. 31

மண்முதலாந் தத்துவத்திற் றன்மைபல கோடி
வயங்குசத்திக் கூட்டத்தால் வந்தனவோ ரனந்தம்
பண்ணுறுமத் திண்மையுளே திண்மையொரு கோடி
பலித்தசத்திக் கூட்டத்தாற் பணித்தனவோ ரனந்தம்
எண்ணுறுமித் திண்மைகளு மிவற்றினது விகற்பம்
எல்லாமுந் தனித்தனிநின் றிலங்கநிலை புரிந்தே
விண்ணொன்றும் படியவற்றிற் கலந்துகல வாது
விளையாடு மடிப்பெருமை விளம்புவதார் தோழி. 32

விண்ணிடத்தே முதன்முப்பூ விரியவதி லொருபூ
விரியவதின் மற்றொருபூ விரிந்திடவிவ் வைம்பூக்
கண்ணிடத்தே பிறிதொருபூ கண்மலர வதிலே
கட்டவிழ வேறொருபூ விட்டெழு பூவும்
பெண்ணிடத்தே நான்காகி யாணிடத்தே மூன்றாய்ப்
பிரிவிலவாய்ப் பிரிவுளவாய்ப் பிறங்கியுடல் கரணம்
நண்ணிடத்தேர்ந் தியற்றியதில் நடுநின்று விளங்கும்
நல்லதிரு வடிப்பெருமை சொல்லுவதார் தோழி. 33

வண்பூவில் வடிவுபல வண்ணங்கள் பலமேல்
மதிக்குமியல் பலவொளியின் வாய்மைபல வொளிக்குள்
நண்பூறுஞ் சத்திபல சத்திகளுள் வயங்கும்
நாதங்கள் பலநாத நடுவணையோர் கலையில்
பண்பாய நடங்கள்பல பலபெயர்ப்புங் காட்டும்
பதிகள்பல விவைக்கெல்லாம் பதியாகிப் பொதுவில்
கண்பாய விவற்றினொடு கலந்துகல வாமற்
காணுகின்ற திருவடிச்சீர் கழறுவதார் தோழி. 34

ஓங்கியவைம் பூவினைக்கு ளொன்றினொன்று திண்மை
உற்றனமற் றதுவதுவும் பற்றுவன பற்றத்
தாங்கியமா சத்திகளின் பெருங்கூட்டங் கலையாத்
தன்மைபுரிந் தாங்காங்குத் தனித்தனியின் றிலங்கித்
தேங்கியபோ தவைகலையச் செய்கைபல புரிந்து
திகழொளியா யருள்வெளியாய்த் திற[1] விலொளி வெளியில்
பாங்குறநேர் விளங்குகின்ற திருவடியின் பெருமை
பகுத்துரைக்க வல்லவரார் பகராயென் தோழி. 35

விரிந்திடுமைங் கருவினிலே விடயசத்தி யனந்த
விதமுகங்கொண் டிலகவவை விகிதவிகற் பாகிப்
பிரிந்திடுமா னிலக்கணங்கள் பலகோடி பிரியாப்
பெருஞ்சத்தி யிலக்கணங்கள் பற்பலகோ டிகளாய்த்
தெரிந்திடநா னிலைக்குள்ளே யிருந்துவெளிப் படவுஞ்
செய்கைபல புரிகின்ற திறனுடைத்தா ரகமேல்
எரிந்திடுதீ நடுவெளிக்க ணிருந்ததிரு வடியின்
எல்லையையார் சொல்லவல்லா ரியம்பாயென் தோழி. 36

தோன்றியவைங் கருவினிலே சொல்லருமோ ரியற்கை
துலங்குமதிற் பலகோடி குலங்கொள்குருத் துவிகள்
ஆன்றுவிளங் கிடுமவற்றி னசலைபல கோடி
அமைந்திடுமற் றவைகளுளே யசலைகளோ ரனந்தம்
ஏன்றுநிறைந் திடுமவற்றிற் கணிப்பதனுக் கரிதாய்
இலங்குபிர காசகடா மிருந்தனமற் றிவற்றில்
ஊன்றிய தாரகசத்தி யோங்குமதி னடுவே
உற்றதிரு வடிப்பெருமை யுரைப்பவரார் தோழி. 37

உறைந்திடுமைங் கருவினிலே யுருவசத்தி விகற்ப
முன்னுதற்கு முணர்வதற்கு மொண்ணுமென் னிலவே
நிறைந்தவவை தனித்தனியே நிகழ்ந்திலங்க வவைக்குள்
நேர்மையொண்மை யுறுவித்தந் நேர்மையொண்மை யகத்தே
குறைந்திலவாம் பலவேறு குணங்களுறப் புரிந்து
குணங்களுளே குறிகள்பல கூட்டுவித்தாங் கமர்ந்தே
மறைந்தமணம் வெளிப்படுத்து மலரடியின் பெருமை
வகுத்துரைக்க வல்லவரார் வழுத்தாயென் தோழி. 38

சூழ்ந்திடுமைங் கருவினிலே சொருபசத்தி பேதஞ்
சொல்லினொடு மனங்கடந்த வெல்லையிலா தனவே
தாழ்ந்திலவா யவையவையுந் தனித்தனியின் றிலங்கத்
தருமவைக்குள் நவவிளக்கந் தரித்தந்த விளக்கம்
வாழ்ந்திடவோர் சத்திதனை யியங்கியுறப் புரிந்து
மதிக்குமந்தச் சத்திதனில் மன்னுசத்த ராகி
ஆழ்ந்திடுமோர் பரம்பரத்தை யசைத்துநின்று நடிக்கும்
அடிப்பெருமை யுரைப்பவரா ரறியாயென் தோழி. 39

1 திருவிலொளி—என்றும் பாடம்

பசுநிறத்த வைங்கருவிற் பகர்ந்தசுவைத் தன்மை
பற்பலகோ டிகளாமவ் வுற்பவசத் திகளில்
வசுநிறத்த விவிதநவ சத்திபல கோடி
வயங்குமவைக் குள்ளாதி வயங்குவளவ் வாதி
தசநிறத்த வாகவதிற் றனித்தனியோங் காரி
சார்ந்திடுவ ளவளகத்தே தனிப்பரைசார்ந் திடுவள்
திசைநிறத்தப் பரைநடுவிற் றிருநடனம் புரியுந்
திருவடியின் பெருவடிவைச் செப்புவதார் தோழி. 40

பூத்தசுடர்ப் பூவகத்தே புறத்தேசூ ழிடத்தே
பூத்துமிகக் காய்த்துமதி யமுதொழுகப் பழுத்து
மாத்தகைய பெருஞ்ஜோதி மணிமன்றுள் விளங்கும்
வண்ணமொரு சிறிதறிய மாட்டாமல் மறைகள்
ஏத்துவது மேறுவது மிறங்குவது மாகி
இருக்கின்ற வென்றுணர்ந்தோ ரியம்பிடிலிச் சிறியேன்
தோத்திரஞ்செய் தம்மைகண்டு மகிழ்ந்திடவம் மன்றில்
துலங்குமடிப் பெருமையையென் சொல்லுவது தோழி. 41

வளம்பெறுவிண் ணணுக்குளொரு மதிபிரவி யழலாய்
வயங்கியதா ரகையாயிவ் வகையனைத்துந் தோற்றுந்
தளம்பெறுசிற் சொலிதபரா சத்திமய மாகித்
தனித்த சத்தி மானாகித் தத்துவமெல் லாம்போய்
உளம்புகுத மணிமன்றிற் றிருநடஞ்செய் தருளும்
ஒருதலைவன் சேவடிச்சீ ருரைப்பவரெவ் வுலகில்
அளந்தறிது மெனமறைக ளரற்றுமெனிற் சிறிய
அடிச்சியுரைத் திடப்படுமோ வறியாயென் தோழி. 42

பரவியவைங் கருவினிலே பருவசத்தி வயத்தே
பரையதிட்டித் திடநாத விந்துமயக் கத்தே
விரவியதத் துவவணுக்க ளொன்றொடொன் றாயொன்றி
விளங்கவவற் றடிநடுவீ றிவற்றினில்மூ விதமாய்
உரவியலுற் றுயிரியக்கி யறிவையறி வித்தே
ஓங்குதிரு வம்பலத்தி லொளிநடனம் புரியுந்
தரவியலிற் றிதுவெனயார் தெரிந்துரைப்பார் சிறிய
தமியளுரைத் திடுந்தரமோ சாற்றாயென் தோழி. 43

சோதிமலை யொருதலையிற் சோதிவடி வாகிச்
சூழ்ந்தமற்றோர் தலைஞான சொரூபமய மாகி
ஓதியவே றொருதலையி லுபயவண்ண மாகி
உரைத்திடுமைங் கருவகைக்கோர் முப்பொருளு முதவி
ஆதிநடு வந்தமிலா வானந்த வுருவாய்
அம்பலத்தே யாடுகின்ற வடியிணையின் பெருமை
வேதியனுந் திருமாலு முருத்திரரு மறியார்
விளைவறியே னறிவேனோ விளம்பாயென் தோழி. 44

பூவொன்றே முப்பூவைம் பூவெழுபூ நவபூவாம்
　பூவிருபத் தைப்பூவாய்ப் பூத்துமலர்ந் திடவும்
நாவொன்று மணம்வேறு வணம்வேறு வேறாய்
　நண்ணிவிளங் குறவுமதி னற்பயன்மாத் திரையில்
மேவொன்று யிருப்பவதி னடுநின்று ஞான
　வியனடனம் புரிகின்ற விரைமலர்ச்சே வடியின்
பாவொன்று பெருந்தகைமை யுரைப்பவரார் சிறியேன்
　பகர்ந்திடவல் லுநளல்லேன் பாராயென் தோழி. 45

அருட்பெருஞ்ஜோதி

# 84. தோழிக்குரிமைகிளத்தல்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

நயந்தநட நாயகருன் னுபகரே யெனினும்
　நாடியமந் திரங்கள்சில கூடியுரை யிடவே
வியந்தமற்றைத் தேவரெலாம் வரவுமவர் நேயம்
　விரும்பாதே யிருப்பதென்னீ யென்கின்றாய் தோழி
வயந்தருமிந் திரர்பிரமர் நாரணர்கா ரணர்கள்
　மற்றையர்கண் மற்றையர்கண் மற்றையர்க ளெவர்க்கும்
பயந்தகுடி யல்லடிநான் திருச்சிற்றம் பலத்தே
　பதிநடஞ்செய் யடிப்பணிக்கே பதித்தகுடி யறியே. 1

நயந்தநட நாயகருன் னுபகரே யெனினும்
　நங்கைநினைக் கண்டிடவே நாடிமற்றைத் தலைவர்
வியந்துவரு கின்றதுகண் டுபசரியா திங்கே
　மேனோக்கி யிருப்பதென்னீ யென்கின்றாய் தோழி
வயந்தருபார் முதல்நாத வரையுளநாட் டவர்க்கும்
　மற்றவரை நடத்துகின்ற மாநாட்டார் தமக்கும்
பயந்தகுடி யல்லடிநான் திருச்சிற்றம் பலத்தே
　பதிநடஞ்செய் யடிப்பணிக்கே பதித்தகுடி யறியே. 2

நயந்தநட நாயகருன் னுயகரே யெனினும்
　நாடும்மற்றைத் தலைவர்தமைக் கண்டபொழு தெனினும்
வியந்தவர்க்கோர் நல்லுரையுஞ் சொல்லாதே தருக்கி
　வீதியிலே நடப்பதென்னீ யென்கின்றாய் தோழி
வயந்தருமிவ் வண்டபகி ரண்டமட்டோ நாத
　வரையோவப் பாலுமுள மாநாட்டார் தமக்கும்
பயந்தகுடி யல்லடிநான் திருச்சிற்றம் பலத்தே
　பதிநடஞ்செய் யடிப்பணிக்கே பதித்தகுடி யறியே. 3

கடுங்குணத்தோர் பெறற்கரிய நடத்தரசே நினக்குக்
கணவரெனி னுப்பிறரைக் கண்டபொழு தெனினும்
நடுங்குணத்தால் நின்றுசில நல்வார்த்தை பகராய்
நங்காயீ தென்னெனநீ நவில்கின்றாய் தோழி
ஒடுங்குபல தத்துவர்க்குந் தத்துவரை நடத்தும்
உபயநிலைத் தலைவருக்கு மவர்தலைவர் களுக்கும்
நடுங்குகுடி யல்லடிநான் திருச்சிற்றம் பலத்தே
நடஞ்செய்யடிப் பணிக்கென்றே நாட்டியகற் குடியே. 4

மடங்கலந்தார் பெறற்கரிய நடத்தரசே நினக்கு
மணவாள ரெனினுமுன்பால் வார்த்தைமகிழ்ந் துரைக்க
இடங்கலந்த மூர்த்திகடாம் வந்தாலங் கவர்பால்
எண்ணமிலா திருக்கின்றா யென்கொலென்றாய் தோழி
மடங்குசம யத்தலைவர் மதத்தலைவ ரவர்க்கும்
வயங்குமிவர்க் குபகரிக்கு மாத்தலைவர் களுக்கும்
அடங்குகுடி யல்லடிநான் திருச்சிற்றம் பலத்தே
ஆடலடிப் பணிக்கென்றே யமைத்தகுடி யறியே. 5

அறங்குலவு தோழியிங்கே நீயுரைத்த வார்த்தை
அறிவறியார் வார்த்தையெத னாலெனிலிம் மொழிகேள்
உறங்குவதும் விழிப்பதும்பின் னுண்ணுவது மிறத்தல்
உறுவதுடன் பிறத்தல்பல பெறுவதுமா யுழலும்
மறங்குலவு மனுக்கள்பலர் செய்தவிர தத்தால்
மதத்தலைமை பதத்தலைமை வாய்த்தனரங் கவர்பால்
இறங்கலிலென் பேசுதலா லென்பயனோ நடஞ்செய்
இறைவரடிப் புகழ்பேசி யிருக்கின்றேன் யானே. 6

சிவமயமே வேறிலையெல் லாமெனநீ தானே
தேமொழியாய் பற்பலகால் செப்பியிடக் கேட்டேன்
தவமயத்தார் பலசமயத் தலைவர்மதத் தலைவர்
தத்துவர்தத் துவத்தலைவ ரவர்தலைவர் தலைவர்
இவரவரென் றயல்வேறு பிரித்தவர்பால் வார்த்தை
இயம்புவதென் னென்றாயீ தென்கொலென்றாய் தோழி
நவமயநீ புணர்ந்தறியா யாதலினிவ் வண்ண
நவின்றனைநின் னையமற நான்புகல்வேன் கேளே. 7

ஒளியோன்றே யண்டபகி ரண்டமெலாம் விளங்கி
ஓங்குகின்ற தன்றியண்ட பகிரண்டங் களினும்
வெளிநின்ற சராசரத்து மகத்தினொடு புறத்தும்
விளம்புமகப் புறத்தினொடு புறப்புறத்தும் நிறைந்தே
உளநின்ற விருணீக்கி யிலங்குகின்ற தன்மை
உலகறியும் நீயறியா தன்றுகண்டாய் தோழி
தளிநின்ற வொளிமயமே வேறிலை யெல்லாந்
தானெனவே தாகமங்கள் சாற்றுதல்சத் தியமே. 8

ஏற்றிடுவே தாகமங்க ளொளிமயமே யெல்லாம்
என்றமொழி தனைநினைத்தே யிரவிலிருட் டறையில்
சாற்றிடுமென் பாத்திரத்தை மரவட்டில் களைக்கற்
சட்டிகளை வேறுபல சார்ந்தகரு விகளைத்
தேற்றமிகு தண்ணீரைச் சீவர்கள்பற் பலரைச்
செப்பியவவ் விருட்டறையிற் றனித்தனிச்சேர்த் தாலும்
ஊற்றமுறு மிருணீங்கி யொளிகாண்ப துளதோ
உளதேல்நீ யுறைத்தமொழி யுளதாகுந் தோழி. 9

பரமதனே யுலகுயிர்கள் கற்பனையே யெல்லாம்
பகர்சிவமே யெனவுணர்ந்தோ மாதலினால் நாமே
பிரமமெனப் பிறர்க்குரைத்துப் பொங்கிவழிந் தாங்கே
பேசுகின்ற பெரியவர்தம் பெரியமதம் பிடியேல்
உரமிகுபே ருலகுயிர்கள் பரமிவைகா ரியத்தால்
உள்ளனவே காரணத்தா லுள்ளனவில் லனவே
தரமிகுபே ரருளொளியாற் சிவமயமே யெல்லாந்
தாமெனவே யுணர்வதுசன் மார்க்கநெறி பிடியே. 10

பிரமமென்றுஞ் சிவமென்றும் பேசுகின்ற நிலைதான்
பெருநிலையே யிந்நிலையிற் பேதமுண்டோ வெனவே
தரமறிய வினவுகின்றாய் தோழியிது கேள்நீ
சமரசசன் மார்க்கநிலை சார்தியெனி லறிவாய்
திரமுறவா யினுமெல்லா மாகியல்லா தாகுந்
திருவருளாம் வெளிவிளங்க விளங்குதனிப் பொருளாஞ்
சிரமுறுமோர் பொதுவுண்மைச் சிவம்பிரம முடிபே
திகழ்மறையா கமம்புகலுந் திறனிதுகண் டறியே. 11

இலங்குகின்ற பொதுவுண்மை யிருந்தநிலை புகலென்
றியம்புகின்றாய் மடவாய்கேள் யானறியுந் தரமோ
துலங்குமதை யுறைத்திடவுங் கேட்டிடவும் படுமோ
சொல்லளவோ பொருளளவோ துன்னுமறி வளவோ
விலங்குகின்ற தத்துவங்க ளத்தனையுங் கடந்த
மேனிலையென் றந்தமெலாம் விளம்புகின்ற தன்றி
வலங்கொளுமம் மேனிலையி னுண்மையெது வென்றால்
மவுனஞ்சா திப்பதன்றி வாய்திறப்ப திலையே. 12

வாய்திறவா மவுனமதே யாதுமெனிற் றோழி
மவுனசத்தி வெளியேழும் பரத்தபரத் தொழிலும்
தூயபரா பரமதுவே யென்றாலங் கதுதான்
றுலங்குநடு வெளிதனிலே கலந்துகரை வதுகாண்
மேயநடு வெளியென்றாற் றற்பரமாம் வெளியில்
விரவியிடுந் தற்பரமாம் வெளியென்றா லதுவும்
ஆயபெரு வெளிதனிலே யடங்குமிது மட்டே
அளப்பதொரு வாறதன்மே லளப்பதரி தரிதே. 13

கிளக்கின்ற மறையளவை யாகமப்பே ரளவைக்
கிளந்திடுமெய்ச் சாதனமா மளவையறி வளவை
விளக்குமிந்த வளவைகளைக் கொண்டுநெடுங் கால
மேலவர்க ளளந்தளந்து மெலிகின்றா ராங்கே
அளக்கின்ற கருவியெலாந் தேய்ந்திடக்கண் டாரேல்
அன்றியொரு வாறேனு மளவுகண்டா ரிலையே
துளக்கமுறு சிற்றறிவா லொருவாறென் றுரைத்தேன்
சொன்னவெளி வரையேனுந் துணிந்தளக்கப் படுமோ. 14

அருட்பெருஞ்ஜோதி

## 85. அருட்பெருஞ்ஜோதி

கலித்துறை

அருட்பெருஞ்ஜோதி

அருட்பெருஞ் ஜோதியென் னுருபி ரிற்கலந் தாடுகின்ற
அருட்பெருஞ் ஜோதியெ னன்பிற் கலந்தறி வாய்விளங்கும்
அருட்பெருஞ் ஜோதித்தெள் ளாரமு தாகியுள் ளண்ணிநிற்கும்
அருட்பெருஞ் ஜோதிநின் னுசையென் றேயென்னு ளார்கின்றதே. 1

ஆர்கின்ற தெள்ளமு தின்சுவை யென்னென் றறைவனந்தோ
சார்கின்ற சிற்றம் பலப்பெருஞ் சீரினைச் சாற்றுதொறும்
சேர்கின்ற நாவுட னுள்ளமு மாவியுந் தித்தித்தலே
நேர்கின்ற தாலென் னருட்பெருஞ் ஜோதி நிறைந்துளத்தே. 2

உளத்தே பெருங்களிப் புற்றடி யேன்மிக வுண்ணுகின்றேன்
வளத்தே யருட்பெருஞ் ஜோதியி னொளி வாய்ந்தெனது
குளத்தே நிறைந்தணை யுங்கடந் தோங்கிக் குலவுபரி
மளத்தே மிகுந்து வயங்கு மமுத மனமகிழ்ந்தே. 3

மனமகிழ்ந் தேன்மன மாயையை நீக்கினன் மாநிலத்தே
சினமொடுங் காமமுந் தீர்ந்தேனெல் லாம்வல்ல சித்தும்பெற்றேன்
இனமிகுஞ் சுத்தசன் மார்க்கப் பெருநெறி யெய்திநின்றேன்
கனமிகு மன்றி லருட்பெருஞ் ஜோதியைக் கண்டுகொண்டே. 4

கண்டே னருட்பெருஞ் ஜோதியைக் கண்களிற் கண்டுகளி
கொண்டேன் சிவானந்தக் கூத்தாடிக் கொண்டிக் குவலயத்தே
தொண்டே திருவம்ப லந்தனக் காற்றிச் சுகவமுதம்
உண்டே னுயிர்தழைத் தோங்குகின் றேனுள் ளுவப்புறவே. 5

உறவே யெனதின் னுயிரே யெனதுள்ளத் துற்றினிக்கும்
நறவே அருட்பெருஞ் ஜோதிமன் றோங்கு நடத்தரசே
இறவே னெனத்துணி வெய்திடச் செய்தனை யென்னையினி
மறவே லடிச்சிறி யெனொரு போது மறக்கினுமே. 6

மறப்பே னலேனுன்னை ஓர்கண மேனு மறக்கிலன்றே
இறப்பே னிதுசத் தியஞ்சத்தி யஞ்சத் தியமிசைத்தேன்
பிறப்பே தவிர்த்தெனை ஆட்கொண் டமுதம் பெரிதளித்த
சிறப்பே அருட்பெருஞ் ஜோதிமன் றோங்குஞ் செழுஞ்சுடரே. 7

சுடரே அருட்பெருஞ் ஜோதிய னேபெண் சுகத்தைமிக்க
விடரே யெனினும் விடுவரெந் தாய்நினை விட்டயலொன்
றடரே னரைக்கண மும்பிரிந் தாற்றல னுணைகண்டாய்
இடரே தவிர்த்தெனக் கெல்லா நலமுமிங் கீந்தவனே. 8

தவநேய முஞ்சுத்த சன்மார்க்க நேயமுஞ் சத்தியமாஞ்
சிவநேய முந்தந்தென் னுள்ளந் தெளியத் தெளித்தனையே
நவநேய மன்றில் அருட்பெருஞ் ஜோதியை நாடிநின்ற
இவனே யவனெனக் கொள்வாருன் னன்ப ரிருநிலத்தே. 9

நிலத்தே புழுத்தபுழுவு மலேன்புன் னிலத் திழிந்த
மலத்தே புழுத்த புழுவனை யேனைபல் வான்றுதிக்குங்
குலத்தே தலைமை கொடுத்தென் னுளத்திற் குலவுகின்றாய்
தலத்தே அருட்பெருஞ் ஜோதிஅப் பாவென் தயாநிதியே. 10

நிதியே யெனுள்ள நிறைவே பொதுவி னிறைந்தசிவ
பதியே அருட்பெருஞ் ஜோதிய னேயம் பலம்விளங்குங்
கதியே யென்கண்ணுங் கருத்துங் களிக்கக் கலந்துகொண்ட
மதியே அமுதமழையேநின் பேரருள் வாழியவே. 11

வாழியென் றேயெனை மாலய னாதியர் வந்தருட்பேர்
ஆழியென் றேதுதித் தேத்தப் புரிந்தனை அற்புதநீ
டூழியன் றேயென்றுஞ் சாகா வரமு முவந்தளித்தாய்
வாழிமன் றோங்கும் அருட்பெருஞ் ஜோதிநின் மன்னருளே. 12

மன்னிய நின்னரு ளாரமு தந்தந்து வாழ்வித்துநான்
உன்னிய வுண்ணிய வெல்லா முதவியென் னுள்ளத்திலே
தன்னிய லாகிக் கலந்தித் தருணந் தயவுசெய்தாய்
துன்னிய நின்னருள் வாழ்க அருட்பெருஞ் ஜோதியனே. 13

அருட்பெருஞ்ஜோதி

# 86. அடிமைப்பேறு

நேரிசை வெண்பா

அருட்பெருஞ்ஜோதி

அருளளித்தா னன்பளித்தா னம்பலத்தா னுண்மைப்
பொருளளித்தா னென்னுட் புணர்ந்தான்—தெருளளித்தான்
எச்சோ தனையு மியற்றும லாண்டுகொண்டான்
அச்சோ வெனக்கவன்போ லார். 1

ஆரணமு மாகமமு மாங்காங் குணர்த்துகின்ற
காரணமுங் காரியமுங் காட்டுவித்தான்—பூரணன்சிற்
றம்பலத்தா னென்னுளை யப்ப னெல்லாம்வல்ல
செம்பலத்தை யென்னுளத்தே சேர்த்து. 2

சேர்த்தான் பதமென் சிரத்தே திருவருட்கண்
பார்த்தானென் னெண்ணமெலாம் பாலித்தான்—தீர்த்தானென்
துன்பமெலாந் தூக்கமெலாஞ் சூழாது நீக்கிவிட்டான்
இன்பமெலாந் தந்தா னிசைந்து. 3

இசைந்தானென் னுள்ளத் திருந்தா னெனையும்
நசைந்தானென் பாட்டை நயந்தான்—அசைந்தாடு
மாயை மனமடக்கி வைத்தா னருளெனுமென்
தாயைமகி ழம்பலவன் றான். 4

தானே யருளானான் தானே பொருளானான்
தானேயெல் லாம்வல்ல தானானான்—தானேதான்
நானானா னென்னுடைய நாயகனா னான்ஞான
வானான னம்பலத்தெம் பெம்மான். 5

மான்முதலா யுள்ள வழக்கெல்லாந் தீர்த்தருளித்
தான்முதலா யென்னுளமே சார்ந்தமர்ந்தான்—தேன்முதலாத்
தித்திக்கும் பண்டமெலாஞ் சேர்த்தாங்கென் சிந்தைதனில்
தித்திக்கு மம்பலத்தான் றேர்ந்து. 6

தேர்ந்தேன் தெளிந்தேன் சிவமே பொருளெனவுள்
ஓர்ந்தே னருளமுத முண்கின்றேன்—சார்ந்தேன்சிற்
றம்பலத்தி லெல்லாம்வல் லானை யவனருளால்
எம்பலத்தெல் லாம்வலனா னேன். 7

ஆனே னவனா வவனருளா லாங்காங்கு
நானே களித்து நடிக்கின்றேன்—தானேயென்
தந்தையென் பால்வைத்த தயவைநினைக் குந்தோறுஞ்
சிந்தைவியக் கின்றேன் றெரிந்து. 8

தெரிந்தே னருளாற் சிவமொன்றே யென்று
புரிந்தேன் சிவபலிக்குப் பூசை—விரிந்தமனச்
சேட்டையெலாந் தீர்த்துவிட்டேன் சித்தெலாம் வல்லவருள்
நாட்டையெலாங் கைக்கொண்டே னான். 9

நான்செய்த நற்றவந்தான் யாதோ நவிற்றரிது
வான்செய்த தேவரெலாம் வந்தேவல்—தான்செய்து
தம்பலமென் றேமதிக்கத் தான்வந்தென் னுட்கலந்தான்
அம்பலவன் றன்னருளி னால். 10

அருட்பெருஞ்ஜோதி





# 87. உத்தரஞான சிதம்பர மான்மியம்

கலித்துறை

அருட்பெருஞ்ஜோதி

அருளோங்கு கின்ற தருட்பெருஞ் ஜோதி யடைந்ததென்றன்
மருளோங்கு றுமற் றவிர்த்தது நல்ல வரமளித்தே
பொருளோங்க நானருட் பூமியில் வாழப் புரிந்ததென்றுந்
தெருளோங்க வோங்குவ துத்தர ஞான சிதம்பரமே. 1

இணையென்று தான்றனக் கேற்றது போற்று மெனக்குநல்ல
துணையென்று வந்தது சுத்தசன் மார்க்கத்திற் றோய்ந்ததென்னை
அணையென் றணைத்துக்கொண் டைந்தொழி லீந்த தருளுலகிற்
றிணையைந்து மாகிய துத்தர ஞான சிதம்பரமே. 2

உலகமே லாந்தொழ வுற்ற தெனக்குண்மை யொண்மைதந்தே
இலக வெலாம்படைத் தாருயிர் காத்தரு ளென்றதென்றும்
கலக மிலாச்சுத்த சன்மார்க்க சங்கங் கலந்ததுபார்த்
திலக மெனநின்ற துத்தர ஞான சிதம்பரமே. 3

பவமே தவிர்ப்பது சாகா வரமும் பயப்பதுநற்
றவமே புரிந்தவர்க் கின்பந் தருவது தான்றனக்கே
உவமேய மான தொளியோங்கு கின்ற தொளிருஞ்சுத்த
சிவமே நிறைகின்ற துத்தர ஞான சிதம்பரமே. 4

ஒத்தா ரையுமிழிந் தாரையு நேர்கண் டுவக்கவொரு
மித்தாரை வாழ்விப்ப தேற்றார்க் கமுதம் விளம்பியிடு
வித்தாரைக் காப்பது சித்தாடு கின்றது மேதினிமேற்
செத்தாரை மீட்கின்ற துத்தர ஞான சிதம்பரமே. 5

எத்தாலு மிக்க தெனக்கரு ளீந்ததெல் லாமும்வல்ல
சித்தாடல் செய்கின்ற தெல்லா வுலகுஞ் செழிக்கவைத்த
தித்தா ரணிக்கணி யாயது வான்றொழற் கேற்றதெங்குஞ்
செத்தா லெழுப்புவ துத்தர ஞான சிதம்பரமே. 6

குருநெறிக் கேயெனைக் கூட்டிக் கொடுத்தது கூறரிதாம்
பெருநெறிக் கேசென்ற பேர்க்குக் கிடைப்பது பேயுலகக்
கருநெறிக் கேற்றவர் காணற் கரியது காட்டுகின்ற
திருநெறிக் கேற்கின்ற துத்தர ஞான சிதம்பரமே. 7

கோல்லா நெறியது கோடா நிலையது கோபமிலார்
சொல்லா லுவந்தது சுத்தசன் மார்க்கந் துணிந்ததுல
கெல்லா மளிப்ப திறந்தா லெழுப்புவ தேதமொன்றுஞ்
சொல்லா வளத்தின துத்தர ஞான சிதம்பரமே. 8




காணாத காட்சிகள் காட்டுவிக் கின்றது காலமெல்லாம்
வீணாள் கழிப்பவர்க் கெய்தரி தாயது வெஞ்சினத்தார்
கோணாத நெஞ்சிற் குலாவிநிற் கின்றது கூடிநின்று
சேணாடர் வாழ்த்துவ துத்தர ஞான சிதம்பரமே. 9

சொல்வந்த வேத முடிமுடி மீதிற் றுலங்குவது
கல்வந்த நெஞ்சினர் காணாற் கரியது காமமிலார்
நல்வந் தனைசெய நண்ணிய பேறது நன்றெனக்கே
செல்வந் தாட்கொண்ட துத்தர ஞான சிதம்பரமே. 10

ஏகாந்த மாகி வெளியா யிருந்ததிங் கென்னைமுன்னே
மோகாந்த காரத்தின் மீட்டதென் னெஞ்ச முயங்கிரும்பின்
மாகாந்த மானது வல்வினை தீர்த்தெனை வாழ்வித்தென்றன்
தேகாந்த நீக்கிய துத்தர ஞான சிதம்பரமே. 11

அருட்பெருஞ்ஜோதி

## 88. திருவருட்பேறு

நேரிசை வெண்பா

அருட்பெருஞ்ஜோதி

சீர்விளங்கு சுத்தத் திருமேனி தான்றரித்துப்
பார்விளங்க நான்படுத்த பாயலிலே — தார்விளங்க
வந்தா யெனைத்தூக்கி மற்றொருசார் வைத்தனையே
எந்தாய்நின் னுள்ள மறியேன். 1

பயத்தோ டொருபாற் படுத்திருந்தே னென்பால்
நயத்தோ டணைந்தே நகைத்து — வயத்தாலே
தூக்கி யெடுத்தெனைமேற் சூழலிலே வைத்தனைநான்
பாக்கியவா னானேன் பதிந்து. 2

என்னேநின் றண்ணருளை யென்னென்பே னிவ்வுலகின்
முன்னே தவந்தான் முயன்றேனோ — கொன்னே
படுத்தயர்ந்தே னன்படுத்த பாயருகுற் றென்னை
எடுத்தொருமே லேற்றிவைத் தாயே. 3

சிந்தா குலத்தொடுநான் றெய்வமே யென்றுநினைந்
தந்தோ படுத்துள் ளயர்வுற்றேன் — எந்தாய்
எடுத்தா யெனைநினையா தேகிடந்தே னென்னை
எடுத்தாய் தயவைவிய வேன். 4

அன்பிலே னெனினு மறிவிலே னெனினும்
அன்றுவந் தாண்டனை யதனால்
துன்பிலே னெனவில் வுலகெலா மறியச்
சொல்லினேன் சொல்லிய நானே
இன்பிலே னெனவின் றுரைத்திட லழகோ
எனையுல கவமதித் திடிலென்
என்பிலே கலந்தாய் நினக்கும்வந் திடுமே
எய்துக விரைந்தென திடத்தே. 4

சிரிப்பிலே பொழுது கழிக்குமிவ் வாழ்க்கைச்
சிறியவர் சிந்தைமாத் திரமோ
பொருப்பிலே தவஞ்செய் பெரியர்தம் மனமும்
புளிப்பிலே துவர்ப்பிலே யுவர்ப்புக்
கரிப்பிலே கொடிய கயப்பிலே கடிய
கார்ப்பிலே கார்ப்பொடு கலந்த
வெரிப்பிலே புகுவ தன்றியெள் ளளவும்
இனிப்பிலே புகுகின்ற திலையே. 5

அருட்பெருஞ்ஜோதி

## 120. சிவானந்தநிலை

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

முந்தைநா ளயர்ந்தே னயர்ந்திடே லெனவென் முன்னநீ தோன்றினை யந்தோ
அந்தநாள் தொடங்கி மகிழ்ந்திருக் கின்றே னப்பனே யையனே யரசே
இந்தநாள் கவலை யிடர்பப மெல்லா மென்னைவிட் டொழிந்திடப் புரிந்தாய்
எந்தநாள் புரிந்தே னிப்பெரும் பேறிங் கெய்துதற் குரியமெய்த் தவமே. 1

வாய்க்குறும் புரைத்துத் திரிந்துவீண் கழித்து மலத்திலே கிடந்துழைத் திட்ட
நாய்க்குயர் தவிசிட் டொருமணி முடியு நன்றுறச் சூட்டினை யந்தோ
தூய்க்குணத் தவர்கள் புகழ்மணி மன்றிற் ஜோதியே நின்பெருந் தயவைத்
தாய்க்குறு தயவென் றெண்ணுகோ தாயின் றயவுமுன் றணிப்பெருந் தயவே. 2

பேரிடர் தவிர்த்துப் பேருள் புரிந்த பெருமநின் றன்னையென் றனக்கே
சாருறு தாயே யென்றுரைப் பேனோ தந்தையே யென்றுரைப் பேனோ
சீருறு குருவே யென்றுரைப் பேனோ தெய்வமே யென்றுரைப் பேனோ
ஆரென வுரைப்பே னென்னெனப் புகழ்வேன் யாதுமொன் றறிந்திலே னந்தோ. 3

அருட்பெருஞ்ஜோதி

# 121. பராபரன் உண்மை நிலையம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

எவ்வுயிரும் பொதுவெனக்கண் டிரங்கியுப கரிக்கின்றார் யாவ ரந்தச்
செவ்வியர்தஞ் செயலனைத்துந் திருவருளின் செயலெனவே தெரிந்தே னிங்கே
கவ்வையிலாத் திருநெறியத் திருவாளர் தமக்கேவல் களிப்பாற் செய்ய
ஒவ்வியதென் கருத்தவர்சீ ரோதிடவென் வாய்மிகவு மூர்வ தாலோ. 1

எத்துணையும் பேதமுறா தெவ்வுயிருந் தம்முயிர்போ லெண்ணி யுள்ளே
ஒத்துரிமை யுடையவரா யுவக்கின்றார் யாவரவ ருளந்தான் சுத்த
சித்துருவா யெம்பெருமா னடம்புரியு மிடமெனநான் றெரிந்தே னந்த
வித்தகர்தம் அடிக்கேவல் புரிந்திடவென் சிந்தைமிக விழைந்த தாலோ. 2

கருணையொன்றே வடிவாகி யெவ்வுயிருந் தம்முயிர்போற் கண்டு ஞானத்
தெருணெறியிற் சுத்தசிவ சன்மார்க்கப் பெருநீதி செலுத்தா நின்ற
பொருணெறிசற் குணசாந்தப் புண்ணியர்தந் திருவாயாற் புகன்ற வார்த்தை
அருணெறிவே தாகமத்தி னடிமுடிசொல் வார்த்தைகளென் றறைவ ராலோ. 3

அருட்பெருஞ்ஜோதி

# 122. அபயங்கூறல்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

பொருட்பெருந் தனிமெய்ப் போகமே யென்னைப் புறத்திலும் அகத்திலும் புணர்ந்த
தெருட்பெருஞ் சிவமே சுத்தசன் மார்க்கச் செல்வமே நான்பெற்ற சிறப்பே
மருட்பெருங் கடலைக் கடத்தியென் றன்னை வாழ்வித்த வென்பெரு வாழ்வே
அருட்பெருஞ் ஜோதி யம்பலத் தரசே யம்மையே யப்பனே யபயம். 1

பொருட்பெரு மறைக ளனந்தமா கமங்கள் புகலுமோ ரனந்தமேற் போந்தே
தெருட்பெரு வெளிமட் டளவிலாக் காலந் தேடியுங் காண்கிலாச் சிவமே
மருட்பெரும் பகைதீர்த் தென்னையாட் கொண்ட வள்ளலே தெள்ளிய வமுதே
அருட்பெருஞ் ஜோதி யம்பலத் தரசே யம்மையே யப்பனே யபயம். 2

பொருட்பெருஞ் சுடர்செய் கலாந்தயோ காந்தம் புகன்றபோ தாந்தநா தாந்தந்
தெருட்பெரு வேதாந் தந்திகழ் சித்தாந் தத்தினுந் தித்திக்குந் தேனே
மருட்பெரு விருளைத் தீர்த்தெனை வளர்க்கு மாபெருங் கருணையா ரமுதே
அருட்பெருஞ் ஜோதி யம்பலத் தரசே யம்மையே யப்பனே யபயம். 3

அருட்பெருஞ்ஜோதி

# 123. அபய நிலை

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

ஆணை யாணைநீ யஞ்சலை யஞ்சலை யருளொளி தருகின்றாம்
கோணை மாநிலத் தவரெலாம் நின்னையே குறிக்கொள்வர் நினக்கேயெம்
ஆணை யம்பலத் தரசையு மளித்தனம் வாழ்கநீ மகனேயென்
[1] றேணை பெற்றிட வெனக்கருள் புரிந்தநின் னிணைமலர்ப் பதம்போற்றி. 1

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

எல்லா வுலகமு மென்வச மாயின எல்லா வுயிர்களு மென்னுயி ராயின
எல்லா ஞானமு மென்ஞான மாயின எல்லா வித்தையு மென்வித்தை யாயின
எல்லாப் போகமு மென்போக மாயின எல்லா வின்பமு மென்னின்ப மாயின
எல்லாம் வல்லசிற் றம்பலத் தென்னப்பர் எல்லாம் நல்கியென் னுள்ளத் துள்ளாரே. 2

அருட்பெருஞ்ஜோதி

# 124. அனுபவ நிலை

கோச்சகக் கலிப்பா

அருட்பெருஞ்ஜோதி

நானானேன் தானானேன் நானுந்தா னும்மானேன்
தேனானேன் தெள்ளமுதாய்த் தித்தித்து நிற்கின்றான்
வானானேன் ஞான மணிமன்றி லாடுகின்றான்
கோனானேன் என்னுட் குலவுகின்ற கோமானே. 1

அருட்பெருஞ்ஜோதி

# 125. விண்ணப்பம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

ஐவகைத் தொழிலு மென்பா லளித்தனை யதுகொண் டிந்நாள்
செய்வகை தெரிவித் தென்னைச் சேர்ந்தொன்று யிருத்தல் வேண்டும்
பொய்வகை யறியேன் வேறு புகலிலேன் பொதுவே நின்று
மெய்வகை யுரைத்தே னிந்த விண்ணப்பங் காண்க நீயே. 1

அருட்பெருஞ்ஜோதி

1 ஏணை என்பது—வன்மை.

# 126. திருத்தொண்டர் அடிப்பெருமை

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**வண்டணிபூங்** குழலம்மை யெங்கள்சிவ காம
வல்லியொடு மணிமன்றில் வயங்கியநின் வடிவங்
கண்டவரைக் கண்டவர்தங் கான்மலர்முத் தேவர்
கனமுடிக்கே முடிக்கின்ற கடிமலரா மென்றால்
பண்டகுநின் திருத்தொண்ட ரடிப்பெருமை யெவரே
பகர்ந்திடுவர் மறைகளெலாம் பகர்ந்திடுவான் புகுந்தே
விண்டுலர்ந்து வெளுத்ததவை வெளுத்தமட்டோ வவற்றை
வியந்தோது மந்தணரும் வெளுத்தனருள் ளுடம்பே. 1

அருட்பெருஞ்ஜோதி

# 127. சன்மார்க்க துன்மார்க்க இயல்பு

கலித்துறை

அருட்பெருஞ்ஜோதி

**சேய்போ** லுலகத் துயிரையெல் லாமெண்ணிச் சேர்ந்துபெற்ற
தாய்போ லுரைப்பர்சன் மார்க்கசங் கத்தவர் சாற்றுமெட்டிக்
காய்போற் பிறர்தமைக் கண்டாற் கசந்துட் கடுகடுத்தே
நாய்போற் குரைப்பர்துன் மார்க்கசங் கத்தவர் நாணிலத்தே. 1

அருட்பெருஞ்ஜோதி

# 128. பதி நிச்சயம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**உருவ** ராகியு மருவின ராகியு முருவரு வினராயும்
ஒருவரேயுளார் கடவுள்கண் டறிமினோ வுலகுளீ ருணர்வின்றி
இருவ ராமென்று மூவரே யாமென்று மியலுமை வர்களென்றும்
எருவ ராயுரைத் துழல்வதென் னுடற்குயி ரிரண்டுமூன் றெனலாமே. 1

அருட்பெருஞ்ஜோதி

## 129. பிரார்த்தனை விளக்கம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

கருணைக் கடலே யதிலெழுந்த கருணை யமுதே கனியமுதிற்
றருணச் சுவையே சுவையனைத்துஞ் சார்ந்த பதமே தற்பதமே
பொருண்மெய்ப் பரமே சிதம்பரமாம் பொதுவி னடிக்கும் பரம்பரமே
தெருண்மெய்க் கருத்திற் கலந்தெனையுஞ் சித்தி நிலைகள் தெரித்தருளே. 1

அருட்பெருஞ்ஜோதி

## 130. உண்மை விளக்கம்

இலக்கணைப் பொருள்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

வருமுன் வந்தெனக் கொள்ளுத லெனக்கு
வழக்கம் வள்ளல்நீ மகிழ்ந்தருட் ஜோதி
தருமுன் றந்தனை யென்றிருக் கின்றேன்
தந்தை நீதரல் சத்திய மென்றே
குருமுன் பொய்புரை கூறலே னினியிக்
குவல யத்திடைக் கவலையைத் தரியேன்
திருமுன் விண்ணப்பஞ் செய்தனன் கருணை
செய்க வாழ்கநின் திருவருட் புகழே. 1

அருட்பெருஞ்ஜோதி

## 131. சமரச சித்தாந்தப் பரநெறி விளக்கம்

கலிநிலைத்துறை

அருட்பெருஞ்ஜோதி

உய்வ தாமிது நங்குரு வாணையொன் றுரைப்பேன்
சைவ மாதிசித் தாந்தத்து மறைமுடித் தலத்தும்
நைவ தின்றியாங் கதுவது வாயது நமது
தெய்வ மாகிய சிவபரம் பொருளெனத் தெளிவீர். 1

அருட்பெருஞ்ஜோதி

# 132. தனிப் பாடல்கள்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

காட்டைக் கடந்தே னாட்டை யடைந்தேன்
கவலை தவிர்ந்தே னுவகை மிகுந்தேன்
வீட்டைப் புகுந்தேன் தேட்டமு முண்டேன்
வேதாக மத்தின் விளைவெலாம் பெற்றேன்
ஆட்டைப் புரிந்தே யம்பலத் தோங்கும்
ஐயர் திருவடிக் கானந்த மாகப்
பாட்டைப் படித்தேன் படிக்கின்றேன் மேலும்
படிப்பே னெனக்குப் படிப்பித்த வாறே. 1

அம்பலஞ் சேர்ந்தே னெம்பல மார்ந்தேன்
அப்பனைக் கண்டேன் செப்பமுட் கொண்டேன்
உம்பர் வியப்ப இம்ப ரிருந்தேன்
ஓதா துணர்ந்தேன் மீதான முற்றேன்
நம்பிடி லணைக்கு மெய்ப்பெரு மானை
நாயகன் றன்னைத் தாயவன் றன்னைப்
பம்புறப் பாடிப் படிக்கின்றேன் மேலும்
படிப்பே னெனக்குப் படிப்பித்த வாறே. 2

கள்ளத்தை யற்ற வுள்ளத்தைப் பெற்றேன்
கன்றிக் கனிந்தே மன்றிற் புகுந்தேன்
தெள்ளத் தெளிந்த வெள்ளத்தை யுண்டேன்
செய்வகை கற்றே னுய்வகை யுற்றேன்
அள்ளக் குறையா வள்ளற் பொருளை
அம்பலச் சோதியை யெம்பெரு வாழ்வை
பள்ளிக்குட் பாடி படிக்கின்றேன் மேலும்
படிப்பே னெனக்குப் படிப்பித்த வாறே. 3

வேறு

கோச்சகக்கலிப்பா

மன்னப்பா மன்றிடத்தே மாநடஞ்செய் யப்பாவென்
றன்னப்பா சண்முகங்கோள் சாமியப்பா வெவ்வுயிர்க்கும்
முன்னப்பா பின்னப்பா மூர்த்தியப்பா மூவாத
பொன்னப்பா ஞானப் பொருளப்பா தந்தருளே. 4

ஆதியே திருவம்பலத் தாடல்செய் யரசே
நீதியே யெலாம் வல்லவாநல்லவா நினைந்தே
ஓதியே யுணர்தற் கரிதாகிய வொருவான்
ஜோதியே யெனைச்சோதி யேல்சோதியே யினியே. 5

வேறு

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

கலக்க நீங்கினேன் களிப்புறு கின்றேன்
கனக வம்பலங் கனிந்த செங்கனியே
துலக்க முற்றசிற் றம்பலத் தமுதே
தூய ஜோதியே சுகப்பெரு வாழ்வே
விலக்க வில்லதோர் தனிமுத லரசே
வேத மாகமம் விளம்புமெய்ப் பொருளே
அலக்க ணற்றமெய் யன்பர்த முளத்தே
அமர்ந்ததோர் சச்சிதா னந்த சிவமே. 6

தரவு கோச்சகக்கலிப்பா

அழியாநிலை யாதது மேவிநின் னன்பி னோடும்
ஒழியாதுனைப் பாடிநின் றாடி யுலகி னூடே
வழியாமுயிர்க் கின்பம் புரிந்து வயங்கல் வேண்டும்
இழியாதருள் வாய்பொது மேவிய வெந்தை நீயே. 7

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

வள்ளலாங் கருணை மன்றிலே யமுத வாரியைக் கண்டன மனமே
அள்ளலா மெடுத்துக் கொள்ளலாம் பாடி யாடலா மடிக்கடி வியந்தே
உள்ளெலா நிரம்ப வுண்ணலா முலகி லோங்கலா முதவலா முறலாம்
கள்ளெலா முண்ட வண்டென வின்பங் காணலாங் களிக்கலா மினியே. 8

விண்ணெலாங் கலந்த வெளியிலா னந்தம் விளைந்தது விளைந்தது மனனே
கண்ணெலாங் களிக்கக் காணலாம் பொதுவிற் கடவுளை யென்றுநங் கருத்தில்
எண்ணலா மெண்ணி யெழுதலா மெழுதி யேத்தலா மெடுத்தெடுத் துவந்தே
உண்ணலாம் விழைந்தார்க் குதவலா முலகி லோங்கலா மோங்கலா மினியே. 9

படித்தவென் படிப்புங் கேள்வியு மிவற்றின் பயனதா முணர்ச்சியு மடியேன்
பிடித்தநன் னிலையு முயிருமெய் யின்பும் பெருமையுஞ் சிறப்புநா னுண்ணும்
வடித்ததெள் ளமுதும் வயங்குமெய் வாழ்வும் வாழ்க்கைநன் முதலுமன் றகத்தே
நடித்தபொன் னடியுந் திருச்சிற்றம் பலத்தே நண்ணிய பொருளெமொன் றறிந்தேன். 10

எல்லார்க்குங் கடையாகி யிருந்தேனுக் கருள்புரிந்தே
எல்லார்க்குந் துணையாகி யிருக்கவைத்தா யெம்பெருமான்
எல்லார்க்கும் பொதுவில்நட மிடுகின்ற யிவ்வண்ணம்
எல்லார்க்குஞ் செய்யாமை யாதுகுறித் திசையெனக்கே. 11

என்னுடைய விண்ணப்ப மிதுகேட்க வெம்பெருமான்
நின்னுடைய பெருங்கருணை நிதியுடையே னுதவினால்
பொன்னுடையா னயன்முதலாம் புங்கவரை வியவேனென்
தன்னுடைய செயலெல்லாந் தம்பிரான் செயலன்றே. 12

### எழுசீரடி ஆசிரிய விருத்தம்

தரம்பிற ரறியாத் தலைவவோர் முக்கட் டனிமுதற் பேரருட் ஜோதி
பரம்பர ஞான சிதம்பர நடஞ்செய் பராபர நிராமய நிமல
உரம்பெறு மயன்மால் முதற்பெருந் தேவ ருளத்ததி சயித்திட வெனக்கே
வரந்தரு கின்றாய் வள்ளல் நின்கருணை மாகடற் கெல்லைகண் டிலனே. 13

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்

நான்சொன்ன வார்த்தை யெலாந்
தான்சொன்ன வார்த்தையென்று நயந்தானென்னை
ஏன்சொன்ன தென்றிதையும் வினவியதும்
இல்லையுள மிசைந்தா னந்தோ
தேன்சொன்ன மொழியம்மை சிவகாம
வல்லிகண்டு சிறக்க நாளும்
வான்சொன்ன மணிமன்றில் நடம்புரிவான
பெருங்கருணை வாய்மை யென்னே. 14

ஆடியகான் மலர்களுக்கே யன்புடையார்
யாவரிங்கே யவர்க்கே யின்பங்
கூடியதென் றாரணமு மாகமமும்
ஆணையிட்டுக் கூறும் வார்த்தை
ஓடியதோ நெஞ்சேநீ யுன்னுவதென்
பற்பலவா யுன்னே லின்னே
பாடியவன் திருப்பாட்டைப் படிகண்டாய்
இன்புலகப் படிகண் டாயே. 15

### கட்டளைக்கலிப்பா

நாய்க்கு மோர்தவி சிட்டுப்பொன் மாமுடி
நன்று சூட்டினை யென்றுநின் னன்பர்கள்
வாய்க்கு வந்த படிபல பேசவே
மதியி லேனையு மன்னருட் சத்தியாந்
தாய்க்குக் காட்டிநற் றண்ணமு தூட்டியோர்
தவள மாடப்பொன் மண்டபத் தேற்றியே
சேய்க்கு நேரவென் கையிற்பொற் கங்கணந்
திகழக் கட்டினை யென்னைநின் செய்கையே. 16

### கோச்சகக்கலிப்பா

ஓங்குமன்ப ரெல்லாரு முள்ளே விழித்துநிற்கத்
தூங்கியவென் றன்னை யெழுப்பியருட் டேயபொருள்
வாங்குகவென் றென்பால் வலியக் கொடுத்தமுதும்
பாங்குறநின் றூட்டினையே யெந்தாய்நின் பண்பிதுவே. 17

நாட்பாரி லன்பரெலாம் நல்குகவென் றேத்திநிற்ப
ஆட்பாரி லன்போ ரணுத்துணையு மில்லேற்கே
நீட்பா யருளமுத நீகொடுத்தாய் நின்னையிங்கே
கேட்பா ரிலையென்று கிழ்மேல தாக்கினையே. 18

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

கன்றுடைய பசுப்போல கசிந்துருகு மன்பரெலாங் காணக்காட்டும்
என்றுடைய நாயகனே யெல்லாஞ்செய் வல்லவனே யிலங்குஞ்ஜோதி
மன்றுடைய மணவாளா மன்னவனே யென்னிருகண் மணியேநின்னை
அன்றுடையே னின்றுவிடே னுணையுன்மே லாணையுன்மே லாணையையா. 19

கோச்சகக்கலிப்பா

என்றரத்துக் கேலாத வெண்ணங்க ளெண்ணுகின்றேன்
முன்றரத்தி னெல்லா முடித்துக் கொடுக்கின்றாய்
நின்றரத்தை யென்புகல்வே னின்வலப்பால் மேவுபசும்
பொன்றரத்தை யென்னுரைக்கேன் பொற்பொதுவி னடிக்கின்றோய். 20

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

இன்பிலே வயங்குஞ் சிவபரம் பொருளே யென்னுயிர்க் கமுதமே யென்றன்
அன்பிலே பழுத்த தனிப்பெரும் பழமே யருணடம் புரியுமென் னரசே
வன்பிலே விளைந்த மாயையும் வினையு மடிந்தன விடிந்ததா லிரவுந்
துன்பிலே னினிநா னருட்பெருஞ் ஜோதிச் சூழலிற் றுலங்குகின் றேனே 21

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

தேன்பாட லன்புடையார் செயப்பொதுவில் நடிக்கின்ற சிவமே ஞானக்
கான்பாடிச் சிவகாம வல்லிமகிழ் கின்றதிருக் கணவா நல்ல
வான்பாட மறைபாட வென்னுளத்தே விளங்குகின்ற மன்னே நின்னை
யான்பாட நீதிருத்த வென்னதவஞ் செய்தேனோ எந்தாய் எந்தாய். 22

ஆன்பாலு நறுந்தேனுஞ் சர்க்கரையுங் கூட்டியதெள் ளமுதே யென்றன்
ஊன்பாலு முளப்பாலு முயிர்ப்பாலு மொளிர்கின்ற வொளியே வேதம்
பூம்பாடல் புனைந்தேத்த வென்னுளத்தே யாடுகின்ற பொன்னே நின்னை
யான்பாட நீதிருத்த வென்னதவஞ் செய்தேனோ எந்தாய் எந்தாய். 23

கலித்துறை

அப்பூறு செஞ்சடை யப்பாசிற் றம்பலத் தாடுகின்றோய்
துப்பூறு வண்ணச் செழுஞ்சுட ரேதனிச் சோதியனே
வெப்பூறு நீக்கிய வெண்ணீறு பூத்தபொன் மேனியனே
உப்பூறு வாய்க்குத்தித் திப்பூறு காட்டிய வுத்தமனே. 24

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

கலக்க மற்றுநா னின்றனைப் பாடியே களிக்கின்ற நாளெந்நாள்
இலக்க முற்றறிந் திடவருள் புரிகுவா யெந்தையிவ் விரவின்கண்
துலக்க முற்றசிற் றம்பலத் தாடுமெய்ச் சோதியே சுகவாழ்வே
அலக்க ணற்றிடத் திருவருள் புரியுமென் னப்பனே யடியேற்கே. 25

### கலித்துறை

நஞ்சுண் டுயிர்களைக் காத்தவ னேநட நாயகனே
பஞ்சுண்ட சிற்றடிப் பாவைபங் காநம் பராபரனே
மஞ்சுண்ட செஞ்சடை மன்னுபொன் னம்பல வாவலவா
பிஞ்சுண்ட வாய்க்குப் பழமளித் தாண்ட பெரியவனே. 26

### எழுசீரடி ஆசிரிய விருத்தம்

கலைவளர் முடிய தென்னையாட் கொண்ட கருணையங் கண்ணது ஞான
நிலைவளர் பொருள தலகெலாம் போற்ற நின்றது நிறைபெருஞ் ஜோதி
மலைவளர் கின்ற தருள்வெளி நடுவே வயங்குவ தின்பமே மயமாய்த்
தலைவளர் திருச்சிற் றம்பலந் தனிலே தனித்தெனக் கினித்ததோர் கனியே. 27

சிறுநெறிக் கென்னைத் தா னிழுத்ததோர் கொடிய தீமன மாயையைக் கனத்தே
வெறுவிய தாக்கித் தடுத்தெனை யாண்ட மெய்யநின் கருணையென் புகல்வேன்
உறுநறுந் தேனு மமுதுமென் கரும்பி னுற்றசா றட்டசர்க் கரையும்
நறுநெயுங் கலந்த சுவைப்பெரும் பழமே ஞானமன் றோங்குமென் னட்பே. 28

புல்லிய நெறிக்கே யிழுத்தெனை யலைத்த பொய்ம்மன மாயையைக் கனத்தே
மெல்லிய தாக்கித் தடுத்தெனை யாண்ட மெய்யநின் கருணையென் புகல்வேன்
வல்லியென் னம்மை மகிழுமன் றோங்கும் வள்ளலே மறைகளா கமங்கள்
சொல்லிய பதியே மிகுதயா நிதியே தொண்டனே னுயிர்க்குமெய்த் துணையே. 29

## சிவகாமவல்லி தோத்திரம்

### எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அரங்காய மனமாயை யளக்க ராழும்
அறியாமற் காலிட்டிங் கழுந்து கின்றேன்
இரங்காயோ சிறிதுமுயி ரிரக்க மில்லா
என்மனமோ நின்மனமும் இறைவி யுன்றன்
உரங்காணு மரசியற்கோல் கொடுங்கோ லானால்
ஓடியெங்கே புகுந்தெவருக் குரைப்ப தம்மா
திரங்காணுப் பிள்ளையெனத் தாய்வி டாளே
சிவகாம வல்லியெனுந் தெய்வத் தாயே. 30

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்

திருவே திகழுங் கலைமகளே திருவே மலையான் றிருமகளே
உருவே யிச்சை மயமேமெய் யுணர்வின் வணமே யுபரின்பக்
குருவே யாதித் தனித்தாயே குலவும் பரையாம் பெருந்தாயே
மருவே மலரே சிவகாம வல்லி மணியே வந்தருளே. 31

அருளே யறிவே யன்பேதெள் ளமுதே மாத ராசேமெய்ப்
பொருளே தெருளே மாற்றறியாப் பொன்னே மின்னே பூங்கிளியே
இருளேய் மனத்தி லெய்தாத வின்பப் பெருக்கே யிவ்வடியேன்
மருளே தவிர்த்த சிவகாம வல்லி நினக்கே வந்தனமே. 32

### கலித்துறை

தருவாயிது நற்றருணங் கண்டா யென்னைத் தாங்கிக்கொண்ட
குருவாய் விளங்கு மணிமன்ற வாணனைக் கூடியின்ப
உருவாயென் னுள்ளத்தி னுள்ளே யமர்ந்துள்ள வுண்மையெல்லாந்
திருவாய் மலர்ந்த சிவகாம வல்லியின் சீரருளே. 33

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்

தனத்தா லியன்ற தனிச்சபையி னடிக்கும் பெருமான் றனக்கன்றே
இனத்தா லுயர்ந்த மணமாலை யிட்டுக் களித்த துரைப்பெண்ணே
மனத்தான் விளங்குஞ் சிவகாம வல்லிக் கனியே மாலொடுமோர்
அனத்தான் புகழு மம்மேயிவ் வடியே னுனக்கே யடைக்கலமே. 34

### கலிநிலைத்துறை

அங்கே யுன்ற னன்பர்க ளெல்லா மமர்கின்றார்
இங்கே நீதா னென்னள வின்னு மிரங்காயேல்
எங்கே போகேன் யாரொடு நோகே னெதுசெய்கேன்
செங்கேழ் வேணித் திங்க ளணிந்தருள் சிவனேயோ. 35

ஈயோ டுறழுஞ் சிறியே னளவி லெந்தாய்நின்
சேயோ டுறழும் பேரருள் வண்ணத் திருவுள்ளங்
காயோ பழமோ யாதோ வறியேன் கவல்கின்றேன்
தீயோ டுறழுந் திருவருள் வடிவச் சிவனேயோ. 36

### எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருளா ரமுதே யென்னுடைய வன்பே யென்ற னறிவே யென்
பொருளா யகத்தும் புறத்துமெனைப் புணர்ந்த கருணைப் பொருப்பே மெய்த்
தெருளா மொளியே வெளியாகச் சிற்றம் பலத்தே நடிக் கின்றோய்
இருளா யினவெல் லாந்தவிர்த்தென் னெண்ண முடிப்பா யிப்போதே. 37

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்

மதிக்களவா மணிமன்றிற் றிருநடஞ்செய் திருத்தாளை வழுத்த வின்று
பதிக்களவா நலந்தருவ லென்றுநினை யேத்துதற்குப் பணிக்கின் றேனீ
விதிக்களவாச் சித்திகண்முன் காட்டுகவிங் கென்கின்றாய் விரைந்த நெஞ்சே
போதிக்களவா முன்னரிங்கே சத்தத்திற் களவென்பார் போன்றா யன்றே. 38

### கலிநிலைத்துறை

கருணை யாம்பெருங் கடலமு தளித்தனை யெனக்கே
தருண வாரிச மலர்ப்பதந் தந்தனை நின்னை
அருண வண்ணவொண் சுடர்மணி மண்டபத் தடியேன்
பொருண யப்புறக் கண்டுகண் டுளமகிழ் போதே. 39

### கோச்சகக்கலிப்பா

வானாகி வானடுவே மன்னு மொளியதனிற்
றானாகி வானாகிச் சன்மார்க்க ருள்ளிருக்குந்
தேனாகித் தெள்ளமுதாய்த் தித்திக்குந் தேவேநீ
யானாகி யென்னு ளிருக்கின்றா யென்னேயோ. 40

கலிவிருத்தம்

ஞானாகரச் சுடரே ஞான மணிவிளக்கே
ஆனாவருட் பெருஞ்சிற் றம்பலத்தே யானந்தத்
தேனா ரமுதாஞ் சிவமே சிவமேநீ
நானாகி யென்னுள் நடிக்கின்றா யென்னேயோ. 41

நிலைமண்டில ஆசிரியப்பா

சிற்சபைக் கண்ணும் பொற்சபைக் கண்ணுந்
திருநடம் புரியுந் திருநட ராஜ
எனக்கருள் புரிந்த நினக்கடி யேன்கைம்
மாற்றை யறிந்திலன் போற்றிநின் னருளே. 42

நாயினுஞ் சிறியே னாயினும் பெரியேன்
யாதிற் பெரியேன் நீதிற் பெரியேன்
என்னையாண் டருளினை யென்னையாண் டவனே
அம்பலத் தாடல்செய் பெம்பெரும் பொருளே. 43

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருங் கடலே யென்னை யாண்டசற் குருவே ஞானப்
பொருட்பெருஞ் சபையி லாடும் பூரண வாழ்வே நாயேன்
மருட்பெரு மாயை முற்று மடிந்தன வினைக ளோடே
இருட்பெருந் தடையை நீக்கி யிரவியு மெழுந்த தன்றே. 44

மாணவ நிலைக்கு மேலே வயங்கிய வொளியே மன்றில்
தாணவ நடஞ்செய் கின்ற தனிப்பெருந் தலைவனே யென்
கோணவ மாயை யெல்லாங் குலைந்தன வினைக ளோடே
ஆணவ விருளை நீக்கி யலரியு மெழுந்த தன்றே. 45

தற்பரம் பொருளே வேதத் தலைநின்ற வொளியே மோனச்
சிற்பர சுகமே மன்றிற் றிருநடம் புரியுந் தேவே
வற்புறு மாயை யெல்லா மடிந்தன வினைக ளோடே
இற்படு மிருளை நீக்கி யிரவியு மெழுந்த தன்றே. 46

குறள் தாழிசை

அணியேயெனது மெய்யறிவேபொது வளராரசேதிரு வருளமுதே
இனிதருள்வா யிதுதருண மமுதருளா யிதுதருணம்
மணியேயெனது கண்மணியேபொது வளர்மதியேதிரு வருண்மதியே
அருள்புரிவா யிதுதருண மருள்புரிவா யிதுதருணம். 47

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

மழவுக்கு மொருபிடிசோ றளிப்பதன்றி யிருபிடியூண் வழங்க லிங்கே
உழவுக்கு முதல்குறையு மெனவளர்த்தங் கவற்றையெலா மோகோ பேயின்
விழவுக்கும் புலாலுண்ணும் விருந்துக்கு மருந்துக்கு மெலிந்து மாண்டார்
இழவுக்கு மிடர்க்கொடுங் கோலிறைவரிக்குங் கொடுத் திழப்பாரென்னேயென்னே

### கட்டளைக்கலிப்பா

உடுக்க வோவொரு கந்தைக்கு மேலிலை
 உண்ண வோவுண வுக்கும் வழியிலை
படுக்க வோபழம் பாய்க்குங் கதியிலை
 பாரி னல்லவர் பாற்சென்று பிச்சைதான்
எடுக்க வோதிட மில்லையென் பாலுனக்
 கிரக்க மென்பது மில்லை உயிரைத்தான்
விடுக்க வோமன மில்லையென் செய்குவேன்
 வெண்பி றைச்சடை வித்தக வள்ளலே. 49

பண்டு நின்றிருப் பாத மலரையே
 பாடி யாடிய பத்திமை யோரைப்போல்
தொண்டு கொண்டெனை யாண்டனை யின்றுதான்
 துட்ட னென்று துரத்திடல் நன்றுகொல்
குண்டு நீர்க்கடல் சூழல கத்துளோர்
 குற்ற மாயிரங் கோடிசெய் தாலுமுன்
கொண்டு பின்குலம் பேசுவ ரோவெனைக்
 குறிக்கொள் வாயென் குணக்திகழ் வள்ளலே. 50

### தரவு கோச்சகக் கலிப்பா

கரும்பசைக்கு மொழிச்சிறியார் கன்மனத்திற் பயின்றுபயின்
றிரும்பசைக்கு மனம்பெற்றேன் யாதெனிவ் வேழைகள்தம்
அரும்பசிக்கு மருந்தளிப்பே னந்தோவிங் கென்னாலே
துரும்பசைக்க முடியாதே ஜோதிநடப் பெருமானே. 51

### கலித்தாழிசை

அருளாலே யருளிறை யருள்கின்ற பொழுதங்
 கனுபவ மாகின்ற தென்னடி தாயே
தெருளாலே மருளாலே தெரியாது தெரியுந்
 திருநட வின்பமென் றறியாயோ மகளே. 52

அறிவாலே யறிவினை யறிகின்ற பொழுதங்
 கனுபவ மாகின்ற தென்னடி தாயே
செறிவாலே பிறிவாலே தெரியாது தெரியுந்
 திருவரு ளுருவமென் றறியாயோ மகளே. 53

### கலித்துறை

மாதோர் புடைவைத்த மாமருந்தே மணியே யென்மட்டில்
யாதோ திருவுளம் யானறி யேனிதற் கென்னசெய்வேன்
போதோ கழிகின்ற தந்தோநின் றன்னைப் பொருந்துகின்ற
சூதோ ரணுவுந் தெரியேனின் பாதத் துணைதுணையே. 54

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

நல்வினை சிறிது நயந்திலே னென்பாள் நான்செயத் தக்கதே தென்பாள்
செல்வினை யொன்றுந் தெரிந்தில னையோ தெய்வமே தெய்வமே யென்பாள்
வெல்வினை மன்றி னடம் புரிகின்றார் விருப்பில ரென்மிசை யென்பாள்
வல்வினை யுடையே னென்றுளம் பதைப்பாள் வருந்துவாள் நான்பெற்ற மகளே.

கலிநிலைத்துறை

பூவார் கொன்றைச் செஞ்சடை யாளர் புகழாளர்
ஈவார் போல்வந் தென்மனை புக்கா ரெழில்காட்டித்
தேவார் தில்லைச் சிற்சபை மேவுந் திருவாளர்
ஆவா வென்றா ரென்னடி யம்மா வவர்சூதே. 56

கலித்துறை

எல்லாக் குறையுந் தவிர்ந்தேனுன் னின்னரு ளெய்தினநான்
வலலாரின் வல்லவ ஞனேன் கருணை பருந்தருந்தி
நல்லா ரெவர்க்கு முபகரிப் பானிங்கு நன்றுநின்றேன்
கோல்லா விரதத்தி லென்னைக் குறிக்கொண்ட கோலத்தனே. 57

தரவு கொச்சகக் கலிப்பா

ஆர்ந்தவருட் பெருஞ்சோதி யப்பாநா னடுத்தவர்தஞ்
சோர்ந்தமுகம் பார்க்கவினித் துணியேனின் னருளாணை
நேர்ந்தவர்கள் நேர்ந்தபடி நெகிழ்ந்துரைக்கும் வார்த்தைகளும்
ஓர்ந்துசெவி புகத்துணியேன் உன்னாணை யுன்னாணை. 58

கலிவிருத்தம்

பொத்திய மலப்பிணிப் புழுக்கு ரம்பைதான்
சித்தியற் சுத்தசன் மார்க்கச் சேர்ப்பினால்
நித்திய மாகியே நிகழு மென்பது
சத்தியஞ் சத்தியஞ் சகத்து ளீர்களே. 59

ஓவுறுத் துயர்செயு முடம்புதா னென்றுஞ்
சாவுறா தின்பமே சார்ந்து வாழலாம்
மாவுறுச் சுத்தசன் மார்க்க நன்னிலை
மேவுறூர் தங்களை விடுக நெஞ்சமே. 60

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

ஆடுகின்ற சேவடிக்கே யாளானேன் மாளாத வாக்கை பெற்றேன்
கூடுகின்ற சன்மார்க்க சங்கத்தே நடுவிருந்து குலாவு கின்றேன்
பாடுகின்றே னெந்தைபிரான் பதப்புகழை யன்பினொடும் பாடிப் பாடி
நீடுகின்றே னின்பக்கூத் தாடுகின்றே னெண்ணமெலா நிரம்பி னேனே. 61

என்னுரைக்கே னென்னுரைக்கே னிந்தவதி சயந்தன்னை யெம்ம னோர்காள்
பொன்னுரைக்கு மணிமன்றிற் றிருநடனம் புரிகின்ற புனித னென்னுள்
மின்னுரைக்கும் படிகலந்தான் பிரியாமல் விளங்குகின்றான் மெய்மை யான
தன்னுரைக்கு மென்னுரைக்குஞ் சமரசஞ்செய் தருள்கின்றான் சகத்தின்மீதே.

## எண்சீரடி ஆசிரிய விருத்தம்

சன்மார்க்க சங்கத்தீர் சிற்றடியே னுமது
தாள்வணங்கிச் சாற்றுகின்றேன் றயவினொடுங் கேட்பீர்
என்மார்க்கத் தெனைநுமக்கு ளொருவனெனக் கொள்வீர்
எல்லாஞ்செய் வல்லநம திறைவனையே தொழுவீர்
புன்மார்க்கத் தவர்போலே வேறுசில புகன்றே
புந்திமயக் கடையாதீர் பூரணமெய்ச் சுகமாய்த்
தன்மார்க்க மாய்விளங்குஞ் சுத்தசிவ மொன்றே
தன்னாணை யென்னாணை சார்ந்தறிமி னீண்டே. 63

காற்றாலே புவியாலே ககனமத னாலே
கனலாலே புனலாலே கதிராதி யாலே
கூற்றாலே பிணியாலே கொலைக்கருவி யாலே
கோளாலே பிறவியற்றுங் கொடுஞ்செயல்க ளாலே
வேற்றாலே யெஞ்ஞான்று மழியாதே விளங்கும்
மெய்யளிக்க வேண்டுமென்றேன் விரைந்தளித்தா னெனக்கே
ஏற்றாலே யிழிவெனநீ நினையாதீ ருலகீர்
எந்தையருட் பெருஞ்ஜோதி யிறைவனைச்சார் வீரே. 64

## எழுசீரடி ஆசிரிய விருத்தம்

தந்தை தன்மையே தனையன்றன் தன்மையென்று சாற்றுதல் சத்தியங் கண்டீர்
எந்தை யெம்பிரா னைந்தொழில் புரியு மிறைவன் மன்றுளே யினடம் புரிவான்
மைந்த னென்றன்னை யாண்டவ னெல்லாம் வல்லநாயக னல்லசீ ருடையான்
அந்த ணாளன்மெய் யறிவுடை யவனென் னப்பன் றன்மையென் றன்மையென் றறிமின். 65

உழக்கறியீ ரளப்பதற்கோ ருளவறியீ ருலகீர்
ஊரறியீர் பேரறியீ ருண்மையொன்று மறியீர்
கிழக்கறியீர் மேற்கறியீ ரம்பலத்தே மாயைக்
கேதமற நடிக்கின்ற பாதமறி வீரோ
வழக்கறிவீர் சண்டையிட்டே வம்பளக்க வறிவீர்
வடிக்குமுன்னே சோறெடுத்து வயிற்றடைக்க வறிவீர்
குழைக்கறியே பழக்கறியே கூட்டுவர்க்கக் கறியே
குழம்பேசா றேயெனவுங் கூறவறி வீரே. 66

இணக்கறியீ ரிதமறியீ ரிருந்தநிலை யறியீர்
இடமறியீர் தடமறியீ ரிவ்வுடம்பை யெடுத்த
கணக்கறியீர் வழக்கறியீ ரம்பலத்தே மாயைக்
கலக்கமற நடிக்கின்ற துலக்கமறி வீரோ
பிணக்கறிவீர் புரட்டறிவீர் பிழைசெயவே யறிவீர்
பேருணவைப் பெருவயிற்றுப் பிலத்திலிட வறிவீர்
மணக்கறியே பிணக்கறியே வறுப்பேபேர்ப் பொரிப்பே
வடைக்குழம்பே சாறேயென் றடைக்கவறி வீரே. 67

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

கடுகோட்டுக் கறிக்கிடுக தாளிக்க வெனக்கழறிக் களிக்கா நின்ற
சுடுகோட்டுப் பிணங்காள்இச் சுகமனைத்துங் கனச்சுகமே சொல்லக் கேண்மின்
முடுகோட்டுக் கூற்றுவருஞ் சாவீராற் [1] சாவதற்கு முன்னே நீவிர்
இடுகோட்டுப் பிணங்கண்டா லேத்துமினோ வேமையுமிவ்வா றிடுகே வென்றே. 68

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

கடல்கடந்தேன் கரையடைந்தேன் கண்டுகொண்டேன் கோயில்
கதவுதிறந் திடப்பெற்றேன் காட்சியெலாங் கண்டேன்
அடர்கடந்த திருவமுதுண் டருளொளியா லனைத்தும்
அறிந்துதெளிந் தறிவுருவா யழியாமை யடைந்தேன்
உடல்குளிர்ந்தே னுயிர்கிளர்ந்தே னுள்ளமெலாந் தழைத்தேன்
உள்ளபடி யுள்ளபொரு ளுள்ளவனுப் நிறைந்தேன்
இடர்தவிர்க்குஞ் சித்தியெலா மென்வசமோங் கினவே
இத்தனையும் பொதுநடஞ்செய் யிறைவனருட் செயலே. 69

எழுசீரடி ஆசிரியவிருத்தம்

வாது பேசிய மனிதர் காளொரு வார்த்தை கேண்மின்கள் வந்துநும்
போது போவதன் முன்ன ரேயருட் பொதுவி லேநடம் போற்றுவீர்
தீது பேசினீ ரென்றி டாதுமைத் திருவு ளங்கொளுங் காண்மினோ
சூது பேசிலே னன்மை சொல்கின்றேன் சுற்ற மென்பது பற்றியே. 70

கட்டளைக்கலிப்பா

வெட்டை மாட்டி விடாப்பெருந் துன்பநோய்
விளைவ தெண்ணிலர் வேண்டிச்சென் றேதொழுக்
கட்டை மாட்டிக்கொள் வாரென வேண்டிப்பெண்
கட்டை மாட்டிக்கொள் வார்தங் கழுத்திலே
துட்டை மாட்டின் கழுத்தடிக் கட்டையோ
துணிக்குங் கட்டைய தாமிந்தக் கட்டைதான்
எட்டை மாட்டி யுயிர்விடக் கட்டைமேல்
ஏறும் போது மிழுக்கின்ற கட்டையே. 71

புண்ணைக் கட்டிக்கொண் டேயதன் மேலொரு
புடவை கட்டிப் புதுமைகள் காட்டிடும்
பெண்ணைக் கட்டிக்கொள் வாரிவர் கொள்ளிவாய்ப்
பேயைக் கட்டிக்கொண் டாலும்பி ழைப்பர்காண்
மண்ணைக் கட்டிக்கொண் டேயழு கின்றவிம்
மடையப் பிள்ளைகள் வாழ்வினை நோக்குங்கால்
கண்ணைக் கட்டிக்கொண் டோர்வழி போங்கிழக்
கழுதை வாழ்விற் கடையென லாகுமே. 72

1 "பானளிக்குந் தேகமிது சுடுவதபராதம்" பதிகம்—111-பாட்டு 9.

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்

உணிக்கு மூட்டுக்கும் கொதுகுக்கும் பேனுக்கு முவப்புறப் புசிக்கின்றீர்
துணிக்குங் காசுக்குஞ் சோற்றுக்கு மூர்தொறுஞ் சுற்றிப்போ யலைகின்றீர்
பிணிக்கும் பீடைக்கு முடலுளங் கொடுக்கின்றீர் பேதையீர் நல்லோர்கள்
பணிக்கும் வேலைசெய் துண்டுடுத் தம்பலம் பரவுதற் கிசையீரே. 73

### எழுசீரடி ஆசிரிய விருத்தம்

தூக்கமுந் துயரு மச்சமு மிடருந் தொலைந்தன தொலைந்தன வெனைவிட்
டேக்கமும் வினையு மாயையு மிருளு மிரிந்தன வொழிந்தன முழுதும்
ஆக்கமு மருளு மறிவுமெய் யன்பு மழிவுறா வுடம்புமெய் யின்ப
வூக்கமு மெனையே யுற்றன வுலகீ ருண்மையிவ் வாசக முணர்மின். 74

ஆதியு நடுவு மந்தமுமில்லா அருட்பெருஞ் ஜோதியென் னுளத்தே
நீதியிற் கலந்து நிறைந்தது நானு நித்திய னாயினே னுலகீர்
சாதியு மதமுஞ் சமயமுந் தவிர்த்தே சத்திய சுத்தசன் மார்க்க
வீதியி லுமைத்தா னிறுவுவ லுண்மை விளம்பினேன் வம்மினோ விரைந்தே. 75

## மது விலக்கு

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்

மதிப்பாலை யருட்பாலை யானந்தப் பாலையுண்ண மறந்தார் சில்லோர்
விதிப்பாலை யறிவேந்தாய்ப் பாலையுண்டு கிடந்தழுது பிளவிற் கேற்பக்
கொதிப்பாலை உணர்வழிக்குங் குடிப்பாலை மடிப்பாலைக் குடிப்பா ரிங்கே
துதிப்பாலை யருள்தருநந் தேவசிகா மணித்தேவைத் துதியா ரந்தோ. 76

## வெறி விலக்கு

### வெண்பா

இம்மை யறையனைய வேசூர மாதருமா
இம்மையுமை யிம்மையையோ என்செய்த — தம்மைமதன்
மாமாமா மாமாமா மாமாமா மாமாமா
மாமாமா மாமாமா மா. 77

### எழுசீரடி ஆசிரிய விருத்தம்.

ஒன்றுமுன்னெண்பா லெண்ணிடக்கிடைத்த வுவைக்கு மேற்றனை யருளொளியால்
நன்றுகண் டாங்கே யருட்பெருஞ் ஜோதி நாதனைக் கண்டவ னடிக்கும்
மன்றுகண் டதனிற் சித்தெலாம் வல்ல மருந்துகண் டுற்றது வடிவாய்
நின்றுகொண் டாடுந் தருணமிங் கிதுவே நெஞ்சமே யஞ்சலை நீயே. 78

### கலித்துறை

கண்டேன் சிற்றம்பலத் தானந்த நாடகங் கண்டுகளி
கொண்டே னெல்லாம் வல்லசித்தனைக் கூடிக் குலவியமு
துண்டேன் மெய்ஞ்ஞான வுருவடைந் தேன்பொய் யுலகொழுக்கம்
விண்டேன் சமரச சன்மார்க்கம் பெற்ற வியப்பிதுவே. 79

### எழுசீரடி ஆசிரிய விருத்தம்

உயிரெலா மொருநீ திருநடம் புரியும்
ஒருதிருப் பொதுவென அறிந்தேன்
செயிரெலாந் தவிர்ந்தேன் திருவெலா மடைந்தேன்
சித்தெலாம் வல்லதொன் றறிந்தேன்
மயிரெலாம் புளகித் துளமெலாங் கனிந்து
மலர்ந்தனன் சுத்தசன் மார்க்கப்
பயிரெலாந் தழைக்கப் பதியெலாங் களிக்கப்
பாடுகின் றேன்பொதுப் பாட்டே. 80

அருந்தவர் காண்டற் கரும்பெருங் கருணை
அருட்பெருஞ் ஜோதியென் னுளத்தே
இருந்தன னம்மா நான்செய்த தவந்தான்
என்னையோ வென்னையோ வென்றுள்
திருந்துதெள் ளமுதுண் டழிவெலாந் தவிர்ந்த
திருவுரு வடைந்தனன் ஞான
மருந்துமா மணியு மந்திர நிறைவும்
வாய்த்தன வாய்ப்பினென் றுளே. 81

### நேரிசை வெண்பா

உன்னைவிட மாட்டே னுன்னாணை யெம்பெருமான்
என்னைவிட மாட்டா யிருவருமாய் — மன்னியென்றும்
வண்மை யெலாம்வல்ல வாய்மையரு ளாலுலகுக்
குண்மையின்பஞ் செய்து முவந்து. 82

இதுவே தருண மெனையணைதற் கிங்கே
பொதுவே நடிக்கும் புனிதா — விதுவேய்ந்த
சென்னியனே சுத்த சிவனே யுனக்கடியேன்
அன்னியனே யல்லே னறிந்து. 83

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்

திருநிலைத்துநல் லருளொடு மன்பொடுஞ் சிறப்பொடுஞ் செழித்தோங்க
உருநிலைத்திவண் மகிழ்வொடு வாழ்வுற வுவக்துநின் னருள்செய்வாய்
இருநிலத்தவ ரின்புறத் திருவுரு வியல்வடி வொடுமன்றிற்
குருநிலைத்தசற் குருவெனு மிறைவநின் குரைகழற் பதம்போற்றி. 84

### எழுசீரடி ஆசிரிய விருத்தம்

யான்முனம் புரிந்த பெருந்தவம் யாதோ
என்சொல்வே னென்சொல்வே னந்தோ
ஊன்மன முருக வென்றனைத் தேற்றி
ஒளியுருக் காட்டிய தலைவா
என்மன மிரங்கா யின்றுநீ யென்றேன்
என்றசொல் லொலியடங் குதன்முன்
ஆன்மகிழ் கன்றி னணைத்தெனை யெடுத்தாய்
அருட்பெருஞ் ஜோதியென் னரசே. 85

பனிப்பறுத் தெல்லாம் வல்லசித் தாகிப்
பரந்தரு கின்றமெய் வாழ்வாம்
தனிப்பழ மெனக்கே தந்தைதான் தந்தான்
தமியனே னுண்டன னதன்றன்
இனிப்பைநா னென்னென் றியம்புவே னந்தோ
என்னுயி ரினித்தறி தன் சுரணைஞ்
சனிப்பற வினித்த தத்துவ மெல்லாந்
தனித்தனி யினித்தன தழைத்தே. 86

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

மந்திர மறியேன் மற்றை மணிமருந் தறியேன் வேறு
தந்திர மறியே னெந்தத் தகவுகொண் டடைவே னெந்தாய்
இந்திரன் முதலாந் தேவ ரிறைஞ்சப்பொன் மன்றில் வேணிச்
சந்திர னுடை வின்பத் தனிநடம் புரியுந் தேவே. 87

கலிவிருத்தம்

சிற்றறி வுடையநான் செய்த தீமைகள்
முற்றவும் பொறுத்தருள் முனிந்தி டேலின்றே
தெற்றென வருட்பெருஞ் ஜோதிச் செல்வமும்
மற்றவும் வழங்குக வரதனே யென்றேன். 88

என்றசோல் செவிமடுத் திறைபு மஞ்சிடேல்
இன்றுனக் கருட்பெருஞ் ஜோதி யீந்தனம்
நன்றுற மகிழ்கவெந் நாளுஞ் சாவுறு
வென்றியு மளித்தன மென்று மேவினன். 89

மேவியென் னுள்ளகத் திருந்து மேனுமென்
ஆவியிற் கலந்தின னவனென் றேனுமோர்
பூவியப் பேதமும் போக்கி யொன்றதாய்த்
தேவியற் புரிந்தனன் சிதம்ப ரேசனே. 90

அருட்பெருஞ் ஜோதியென் னகத்தி லோங்கின
மருட்பெருந் திரையெலா மடிந்து நீங்கின
இருட்பெரு மலமுதல் யாவுந் தீர்ந்தன
தெருட்பெருஞ் சித்திகள் சேர்ந்த வென்னையே. 91

நேரிசை வெண்பா

தாதையா மென்னுடைய தாயாமென் சற்குருவாம்
மேதையா மின்ப விளைவுமாம் — ஓது
குணவாளன் றில்லையருட் கூத்த னுமையாள்
மணவாளன் பாத மலர். 92

திருவாமென் றெய்வமாந் தெள்ளமுத ஞானக்
குருவா மெனக்காக்குங் கோவாம் — பருவரையின்
தெய்ப்பிள்ளை யாமெஞ் சிவகாம வல்லிமகிழ்
மாப்பிள்ளை பாத மலர். 93

என்னறிவா மென்னறிவி னின்பமா மென்னறிவின்
தன்னறிவா முண்மைத் தனிநிலையாம் — மன்னுகொடிச்
சேலையிட்டான் வாழச் சிவகாம சுந்தரியை
மாலையிட்டான் பாத மலர். 94

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

குற்றம் புரித லெனக்கியல்பே குணமாக் கொள்ள லுனக்கியல்பே
சிற்றம் பலவா வினிச்சிறியேன் செப்பு முகமன் யாதுளது
தெற்றென் றடியேன் சிந்தைதனைத் தெளிவித் தச்சந் துயர்தீர்த்தே
இற்றைப் பொழுதே அருட்ஜோதி யீக தருண மிதுவாமே. 95

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அன்புடை யவரேயெல் லாமுடை யவரே
அருட்பெருஞ் ஜோதியென் னாண்டவ ரேயென்
வன்புடை மனத்தைநன் மனமாக்கி யெனது
வசஞ்செய்வித் தருளிய மணிமன்றத் தவரே
இன்புடை யவரேயென் னிறையவ ரேயென்
இருகணு மணிகளு ளிசைந்திருந் தவரே
என்புடை பெனைத்தூக்கி யெடுத்தீரிங் கிதனை
எண்ணுகின் றேனமு துண்ணுகின் றேனே. 96

வேறு

தன்னைவிடத் தலைமையொரு தகவினுமிங் கியலாத்
தனித்தலைமைப் பெரும்பதியே தருணதயா நிதியே
பொன்னடியென் சிரத்திருக்கப் புரிந்தபரம் பொருளே
புத்தமுத மெனக்களித்த புண்ணியனே நீதான்
என்னைவிட மாட்டாய்நா னுன்னைவிட மாட்டேன்
இருவருமொன் றாகியிங்கே யிருக்கின்றோ மிதுதான்
நின்னருளே யறிந்ததெனிற் செயுஞ்செய்கை யனைத்தும்
நின்செயலோ வென்செயலோ நிகழ்த்திடுக நீயே. 97

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

செவ்வணத் தவரு மறையுமா கமமுந் தேவரு முனிவரும் பிறரும்
இவ்வணத் ததுவென் றறிந்திடற் கரிதா மெந்தைநின் றிருவருட் டிறத்தை
எவ்வணத் தறிவே னெங்ஙனம் புகல்வே னென்தரத் திபலுவ தேயோ
ஒவ்வணத் தரசே யெனக்கென விங்கோ ருணர்ச்சியு முண்டுகொ லுணர்த்தே. 98

உணர்ந்துணர்ந் தாங்கே யுணர்ந்துணர்ந் துணரா வுணர்ந்தவ ருணர்ச்சியா னுழைந்தே
திணர்ந்தன ராகி வியந்திட விளங்குஞ் சிவபதத் தலைவநின் னியலைப்
புணர்ந்தநின் னருளே யறியுநா னறிந்து புகன்றிடுந் தரஞ்சிறி துளதோ
கொணர்ந்தொரு பொருளென் கரங்கொளக் கொடுத்த குருவெனக் கூறலென் குறிப்பே. 99

### கலித்துறை

பண்ணிய பூசை நிறைந்தது சிற்றம் பலநடங்கண்
டெண்ணிய வெண்ணம் பலித்தன மெய்யின்ப மெய்தியதோர்
தண்ணிய லாரமு துண்டனன் கண்டனன் சாமியைநான்
நண்ணிய புண்ணிய மென்னுரைக் கேனிந்த நானிலத்தே. 100

### கலித்தாழிசை

எக்கரையுங் காணாதே யிருட்கடலிற் கிடந்தேனை யெடுத்தாட் கொண்டே
அக்கரைசேர்த் தருளெனுமோர் சர்க்கரையும் எனக்களித்தா னந்தோவந்தோ.101

### எண்சீரடி ஆசிரிய விருத்தம்

ஓங்கார வணைமீது நானிருந்த தருணம்
உவந்தெனது மணவாளர் சிவந்தவடி வகன்றே
ஈங்காரப் பளிக்குவடி வெடுத்தெதிரே நின்றார்
இருந்தருள்க வெனவெழுந்தே னெழுந்திருப்ப தென்னீ
ஆங்காரம் ஒழியென்று மொழிந்தனனப் போது
நான்றானோ வவர்தானோ வறிந்திலன்முன் குறிப்பை
ஊங்கார விரண்டுருவு மொன்றானோ மாங்கே
உறைந்தவனு பவந்தோழி நிறைந்தபெரு வெளியே. 102

### கலித்துறை

நான்செய்த புண்ணிய மென்னுரைக் கேன்பொது நண்ணியதோர்
வான்செய்த மாமணி யென்கையிற் பெற்றுநல் வாழ்வடைந்தேன்
ஊன்செய்த தேக மொளிவடி வாகநின் றோங்குகின்றேன்
கோன்செய்த விச்சை குணிக்கவல் லாரெவர் கூறுமினே. 103

### நேரிசை வெண்பா

உண்மை யுரைத்தருளென் றேதினே னெந்தைபிரான்
வண்மையுட னென்னறிவில் வாய்ந்துரைத்தான் — திண்மையுறு
சித்திநிலை யெல்லாந் தெரிவித் தருள்கின்றேம்
இத்தருணஞ் சத்தியமே யென்று. 104

### எண்சீரடி ஆசிரிய விருத்தம்

இச்சையெலாம் புகன்றேனென் இலச்சையெலாம் விடுத்தேன்
இனிச்சிறிதுந் தரியேனிங் கிதுதருணத் தடைந்தே
அச்சையெலாம் வெளிப்படுத்தி யச்சமெலா மகற்றி
அருட்ஜோதித் தனியரசே யாங்காங்கு மோங்க
விச்சையெலா மெனக்களித்தே யவிச்சையெலாந் தவிர்த்து
மெய்புறவென் னொடுகலந்து விளங்கிடுதல் வேண்டும்
பச்சையெலாஞ் செம்மையெலாம் பொன்மையெலாம் படர்ந்த
படிகமணி விளக்கேயம் பலம்விளங்கும் பதியே. 105

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

உடைய நாயகன் பிள்ளைநா னாகிலெவ் வுலகமு மொருங்கின்பம்
அடைய நானருட் ஜோதிபெற் றழிவிலா யாக்கைகொண் டுலகெல்லாம்
இடைய வற்புதப் பெருஞ்செய னாடொறும் விளைத்தெங்கும் விளையாடத்
தடைய தற்றநற் றருணமித் தருணமாத் தழைக்கவித் தனியேற்கே. 106

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

சொல்லுகின்றேன் பற்பலநான் சொல்லுகின்ற வெல்லாந்
துரிசலவே சூதலவே தூய்மையுடை யனவே
வெல்லுகின்ற வார்த்தையன்றி வெறும்வார்த்தை யேன்வாய்
விளம்பாதென் னையர்நின்று விளம்புகின்ற படியால்
செல்லுகின்ற படியேநீ காண்பாயித் தினத்தே
தேமொழியப் போதெனைநீ தெளிந்துகொள்வாய் கண்டாய்
ஒல்லுகின்ற வகையெல்லாஞ் சொல்லுகின்றே னடிநான்
உண்மையிது வுண்மையிது வுண்மையிது தானே. 107

என்னுலோர் துரும்புமசைத் தெடுக்கமுடி யாதே
எல்லாஞ்செய் வல்லவனென் றெல்லாரும் புகலும்
நின்னுலிவ் வுலகிடைநான் வாழ்கின்றே னரசே
நின்னருள்பெற் றழியாத நிலையையடைந் திடவென்
தன்னுலோர் சுதந்தரமு மில்லைகண்டாய் நினது
சகலசுதந் தரத்தையென்பாற் றபவுசெயல் வேண்டும்
பின்னுலென் றிடிற்சிறிதுந் தரித்திருக்க மாட்டேன்
பேராணை யுரைத்தேனென் பேராசை யிதுவே. 108

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

கலையனே யெல்லாம் வல்லவோர் தலைமைக் கடவுளே யென்னிரு கண்ணே
நிலையனே ஞான நீதிமன் றிடத்தே நிருத்தஞ்செய் கருணைமா நிதியே
புலையனேன் பொருட்டுன் றிருவடி யவனி பொருந்திய புதுமையென் புகல்வேன்
சிலையைநேர் மனத்தேன் செய்தவம் பெரிதோ திருவருட்பெருந்திறல் பெரிதே 109

நேரிசை வெண்பா

உலகமெலாம் போற்ற வொளிவடிவ னாகி
இலகவருள் செய்தா னிசைந்தே — திலகனென
நானே சன்மார்க்க நடத்துகின்றே னம்பெருமான்
றானே யெனக்குத் தனித்து. 110

தனித்துணையா வென்றன்னைத் தாங்கிக்கொண் டென்றன்
மனித்த வுடம்பழியா வாறே — கனித்துணையாம்
இன்னமுதந் தந்தெனக்கே யெல்லாமும் வல்லசித்தி
தன்னையுந்தந் துட்கலந்தான் றான். 111

## சத்தியவார்த்தை

### அறுசீரடி ஆசிரிய விருத்தம்

சிவ மெனும்பெயர்க் கிலக்கிய மாகியெச் செயலுந்தன் சமுகத்தே
நவ நிறைந்தபே ரிறைவர்க ளியற்றிட ஞானமா மணிமன்றில்
தவ நிறைந்தவர் போற்றிட வானந்தத் தனிநடம் புரிகின்றான்
எவ னவன்றிரு வாணையி திசைத்தன னினித்துய ரடையேனே. 112

### கலித்துறை

கண்கொண்ட பூதல மெல்லாஞ் சன்மார்க்கங் கலந்துகொண்டே
பண்கொண்ட பாடலிற் பாடிப் படித்துப் பரவுகின்றார்
விண்கொண்ட சிற்சபை யொன்றே நிறைந்து விளங்குகின்ற
தெண்கொண்ட மற்றை மதமார்க்கம் யாவு மிறந்தனவே. 113

சேத்தா ரெழுந்தனர் சுத்தசன் மார்க்கஞ் சிறந்ததுநான்
ஒத்தா ருபார்தவ ரில்லா வொருவனை யுற்றடைந்தே
சித்தாடு கின்றனன் சாகா வரமுஞ் சிறக்கப்பெற்றேன்
இத்தா ரணியி லெனக்கிணை யாரென் றியம்புவனே. 114

### நேரிசை வெண்பா

சர்க்கரையோத் தானெனக்கே தந்தானரு ளென்மனக்
கற்கரையச் செய்தே களிப்பித்தான் — கற்க
இனியா னருட்ஜோதி யெந்தையென்னு ளுற்றான்
இனியான் மயங்கே னிருந்து. 115

### கலித்துறை

அப்பனை யிப்பனை யாக்கிச் சிவிகை யமர்ந்தவன்சொல்
அப்பனை யென்னுயிர்க் கான செந்தேனை யமுதைபந்நாள்
அப்பனை யாழி கடத்திக் கரைவிட் டளித்தசபை
அப்பனைச் சிற்றம் பலவனை நான்றுதித் தாடுவனே. 116

### கட்டளைக்கலிப்பா

தொடேக்கவோநல்ல சொன்மலரில்லைநான் துதிக்கவோபத்தி சுத்தமுமில்லையுள்
ஒடுக்கவோமன மென்வசமில்லையூழ் உற்றஆணவ மாதிமலங்களைத்
தடுக்கவோதிட மில்லையென்மட்டிலே தயவுதானினக் கில்லையுபிரையும்
விடுக்கவோமன மில்லையென்செய்குவேன் விளங்குமன்றில் விளங்கியவள்ளலே. 117

### எழுசீரடி ஆசிரிய விருத்தம்

சனி தொலைந்தது தடை தவிர்ந்தது தயை மிகுந்தது சலமொடே
துனி தொலைந்தது சுமை தவிர்ந்தது சுப மிகுந்தது சுகமொடே
கனி யெதிர்ந்தது களை தவிர்ந்தது களி மிகுந்தது கனிவொடே
புனித மன்றிறை நடம விர்ந்தது புக ழுயர்ந்தது புவியிலே. 118

உரையு முற்றது வொளியு முற்றது வுணர்வு முற்றது வுண்மையே
பரையு முற்றது பதியு முற்றது பதமு முற்றது பற்றியே
புரையு மற்றது குறையு மற்றது புலையு மற்றது புன்மைசேர்
திரையு மற்றது நரையு மற்றது திரையு மற்று விழுந்ததே. 119

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

பண்ப னேகமுந் திரண்டொரு வாகியெம் பாக்கியம் போல்வந்த
நண்ப னேநினைப் பிரிந்தநாண் முதலிந்த நாள்வரை யுணவெல்லாம்
புண்ப னோர்ந்தபோ துண்டவர் கண்டுநிற் புகன்றுநின் னுடனிங்கே
உண்ப னேலஃ துணவென மதிப்பனீ துண்மையென் றுணர்வாயே. 120

விர்த்தகிரி

நேரிசை வெண்பா

ஆறு விளங்க வணிகிளர்தே ரூர்ந்தவுலாப்
பேறு விளங்கவுளம் பெற்றதுமன் — கூறுகின்ற
ஒன்றிரண்டு தாறுபுடை யோங்கும் பழமலையார்
மின்றிரண்டு நின்றசடை மேல். 121

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

ஆதிமலை யனாதிமலை யன்புமலை யெங்கும்
ஆனமலை ஞானமலை யானந்த மலைவான்
ஜோதிமலை துரியமலை துரியமுடிக் கப்பாற்
றோன்றுமலை தோன்றாத சூதான மலைவெண்
பூதிமலை சுத்தவனு பூதிமலை யெல்லாம்
பூத்தமலை வல்லியெனப் புகழுமலை தனையோர்
பாதிமலை முத்தரெலாம் பற்றுமலை யென்னும்
பழமலையைக் கிழமலையாய்ப் பகருவதென் னுலகே. 122

சாக்கியனு ரெறிந்தசிலை சகித்தமலை சித்த
சாந்தருளஞ் சார்ந்தோங்கித் தனித்தமலை சபையிற்
றாக்கியகா லொடுவிளங்குந் தூயமலை வேதஞ்
சொன்னமலை சொல்லிறந்த துரியநடு மலைவான்
ஆக்கியளித் தழிக்குமலை யழியாத மலைநல்
அன்பருக்கின் பந்தருமோ ரற்புதப்பொன் மலைநற்
பாக்கியங்க ளெல்லாமும் பழுத்தமலை யென்னும்
பழமலையைக் கிழமலையாய்ப் பகருவதென் னுலகே. 123

நேரிசை வெண்பா

ஆவியீ ரைந்தை யபரத்தே வைத்தோதில்
ஆவியீ ரைந்தை யகற்றலாம் — ஆவியீர்
ஐந்தறலா மாவியீ ரைந்துறலா மாவியீர்
ஐந்திடலா மோரிரண்டோ டாய்ந்து. 124

இதன் பொருள் :—

ஆவி—ஆன்ம அக்கர மென்னும், ஈரைந்து—பத்தாகிய ய கரத்தை, ஐ—சிவத்திற்கு, அபரத்தே—பின்னாக, வைத்து—பொருத்தி, ஓதில்—செபிக்கில், ஆ வி ஈரைந்தை—ஆ என்னும் ஆ பத்துக்களையும் வி என்னும் வி பத்துக்களையும், அகற்றலாம்—நீக்கிக் கொள்ளலாம், ஆவி—ஆன்ம இயற்கையை, ஈர்—கெடுக்கும், ஐந்து—பஞ்ச மலங்களையும், அறலாம்—களைந்து விடலாம், ஆவி—ஆன்மாவுக்கு உறுதியாய், ஈரைந்து—பத்தியை, உறலாம்-பொருந்தலாம், ஆய்ந்து—சேர்க்கும் வகை தெரிந்து, ஆவி—பிராணனது கலைகள், ஈரைந்து—பத்துடன், ஓர்—ஒரு, இரண்டோடு—இரண்டையுங் கழியாமல், இடலாம்—சேர்த்துக் கட்டிக் கொள்ளலாம்.

பொழிப்புரை :—

ஆன்ம அக்கர மென்னும் பத்தாகிய ய கரத்தை சிவத்திற்குப் பின்னாகப் பொருத்தி செபிக்கில், ஆபத்துக்களையும் விபத்துக்களையும் நீக்கிக் கொள்ளலாம். ஆன்ம இயற்கையைக் கெடுக்கும் பஞ்ச மலங்களையும் களைந்து விடலாம். ஆன்மாவுக்கு உறுதியாய் பத்தியைப் பொருந்தலாம். சேர்க்கும் வகை தெரிந்து பிராணனது கலைகள் பத்துடன் ஒரு இரண்டையுங் கழியாமல் சேர்த்துக் கட்டிக் கொள்ளலாம்.

அருட்பெருஞ்ஜோதி

## 133. நடராஜ அலங்காரம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

இரண்டே காற்கை முகந்தந்தீ ரின்ப நடஞ்செய் பெருமானீர்
இரண்டே காற்கை முகங்கொண்டீ ரென்னே யடிக ளென்றுரைத்தேன்
இரண்டே காற்கை முகம்புடைக்க விருந்தா பெண்ணைக்கென் றிங்கேநீ
இரண்டே காற்கை முகங்கொண்டா பென்றார் மன்றி னின்றாரே. 1

இதன் பொருள் :—

இன்பம்—பேரின்பம் தருவதாகிய, நடஞ்செய்—திருநடனத்தைப் புரியா நின்ற, பெருமானீர்—பெருமானாகிய நீர், இரண்டே—இரண்டே

யாகிய, காற்கு—பாதங்களையுடைய எனக்கு, ஐ—அழகிய, முகம்—முகம் ஒன்றினை, தந்தீர்—கொடுத்தீர், (இங்ஙனம் இருக்க), இரண்டே காற்கு—இரண்டு பாதாம்புயங்களுக்கு, ஐமுகம்—பஞ்சமுகங்களை, கொண்டீர்—கொண்டீராக இருக்கின்றீர், என்னே—யாதுபற்றி, அடிகள்—அடிகளே! என்றுரைத்தேன்—எனப்புகன்றேன். (அதற்கு) மன்றில் நின்றார்—அம்பலத்தின்கண் நின்ற இவர் (அடியாளைக் கண்ணுற்று), இரண்டேகால்—இரண்டு காலாகப் பெற்றநீ, கைமுகம் புடைக்க விருந்தாய்—கைத்த முகம் பெருக்கக் காட்டினை, எனக்கென்று—யாது பற்றி யென வினவி, இங்கே நீ—இப்போது இவ்விடத்து, இரண்டே காற்கு—இரு காலாகிய அரை (அல்குலுக்கு இன்பம் பெருக்க எண்ணி), ஐமுகம் கொண்டாய் என்றார்—சுமுகங் கொண்டனை எனப் புகல்கின்றனர். ஏ! தோழி! இஃது என்? எனவினவியது.

பொழிப்புரை:—

"பேரின்பம் தருவதாகிய திருநடனத்தைப் புரியாநின்ற பெருமானாகிய நீர், இரண்டேயாகிய பாதங்களையுடைய எனக்கு, அழகிய முகம் ஒன்றினைக் கொடுத்தீர். (இங்ஙனம் இருக்க) இரண்டு பாதாம்புயங்களுக்குப் பஞ்சமுகங்களைக் கொண்டீராக இருக்கின்றீர். யாதுபற்றி அடிகளே!" எனப் புகன்றேன். (அதற்கு) அம்பலத்தின்கண் நின்ற இவர் (அடியாளைக் கண்ணுற்று), இரண்டு காலாகப் பெற்ற நீ, கைத்தமுகம் பெருக்கக் காட்டினை, யாதுபற்றி "யென வினவி இப்போது இவ்விடத்து இருகாலாகிய அரை (அல்குலுக்கு இன்பம் பெருக்க எண்ணி) சுமுகங்கொண்டனை எனப் புகல்கின்றனர். ஏ! தோழி! இஃது என்?" எனவினவியது. 1

---

இரண்டே காற்கை முகங்கொண்டீ ரென்னை யுடையீ ரம்பலத்தீர்
இரண்டே காற்கை முகந்தந்தீ ரென்னை யிதுதா னென்றுரைத்தேன்
இரண்டே காற்கை முகங்கொண்டிங் கிருந்த நீயு மெனைக்கண்டே
இரண்டே காற்கை முகங்கொண்டா யென்றார் தோழி யிவர்வாழி. 2

இதன்பொருள்:—

"இரண்டே காற்கு—இருவினைவழி செல்லாதவர்களுக்கு, ஐமுகம்—ஆசாரிய முகத்தினை, கொண்டீர்—கொண்டீரா யிருக்கின்றீர். என்னை—அடியாளை, உடையீர்—உடையவரே! அம்பலத்தீர்—திருவம்பலத்தில் நடிக்கின்றவரே!, இரண்டே காற்கு—சூரியகலை சந்திரகலையாகிய வாசியனுபவத்திற்கு, ஐ—அழகிய, முகந்தந்தீர்—முகத்தினைத் தந்தவரே!, என்னை இது தானென்று—இஃது என்ன விஷயத்திற்கு என்று, உரைத்தேன்—செப்பினேன். (அதற்கு அன்னார்), இரண்டேகால், கை, முகங்கொண்டிங்கிருந்த

நீயும்—இரண்டு காலும், இருகையும், முகமும் அடையப்பெற்றிரா நின்ற நீயும், எனைக்கண்டே—நம்மைத் தரிசித்த தக்ஷணம் (நீமுன் உரைத்த வண்ணமே), இரண்டே காற்கு—வாசிக்கு, ஐமுகந் கொண்டாய்—அழகிய முகத்தினை, அநுபவ இடமாகக் கொண்டுவிட்டனை, என்றார்—என்கின்றனர் தோழி!, இவர் வாழி—இன்னார் நீடூழிவாழ்க!." எனத்தலைவி வாழ்த்தியதாகக் கொள்க.

பொழிப்புரை:—

"இருவினைவழி செல்லாதவர்களுக்கு, ஆசாரிய முகத்தினைக் கொண்டீரா யிருக்கின்றீர். அடியாரை உடையவரே! திருவம்பலத்தில் நடிக்கின்றவரே! சூரியகலை சந்திரகலையாகிய வாசியனுபவத்திற்கு அழகிய முகத்தினைத் தந்தவரே! இஃது என்ன விஷயத்திற்கு என்று செப்பினேன். (அதற்கு அன்னார்), இரண்டுகாலும், இருகையும், முகமும் அடையப்பெற்றிரா நின்ற நீயும், நம்மைத் தரிசித்த தக்ஷணம் (நீ முன் உரைத்த வண்ணமே) வாசிக்கு, அழகிய முகத்தினை அநுபவ இடமாகக் கொண்டுவிட்டனை, என்கின்றனர் தோழி! இன்னார் நீடூழி வாழ்க.!" எனத்தலைவி வாழ்த்தியதாகக் கொள்க.

இரண்டே காற்கை—தமிழில் எழுதினால் இரண்டு (உ), கால் (வ), கை, உவகை. இரண்டேகாற் கைமுகந் தந்தீர்-என்றதற்கு, விநாயகருக்கு கை—துதிக்கையுடைய முகத்தினைத் தந்தீர் எனப் பொருள் கூறுவாரும் உளர். தலைவி தலைவருக்குள் நடந்த அலங்கார விவகாரத்துள் விநாயகரைப்பற்றிக் கூறுதல் அவ்வளவு விசேடமன்றெனக் கொள்க. 2



ஆடுங் கருணைத் திருநடத்தீ ராடு மிடந்தான் யாதென்றேன்
பாடுந் திருவுஞ் சவுந்தரமும் பழமுங் காட்டு மிடமென்றார்
நாடும் படிநன் கருளுமென்றே னங்காய் முன்பி னொன்றேயாய்
ஈடுந் தியபன் னடுவுளதா லென்றார் தோழி யிவர்வாழி. 3

(குறிப்பு) ஆடுமிடம்—நடனஞ்செய்யுமிடம், பாடும்—வேதாகமங்களால் புகழப்படும், திருவும்—பொன் என்னுஞ் சொல்லும், சவுந்தரமும்—அழகு அழகுக்குப் பிரதிபதமாய அம் என்னும் சொல்லும், பழமும்—(பழம்=பலம் வடமொழி) பலம் என்னும் சொல்லும் சேர்ந்தால், பொன்னம்பலம் ஆகிறது. முன்பின் ஒன்றேயாய்-முன்னும் பின்னும் ஒரு சொல்லாகிய அம், பல்நடுவுளது—பல் என்னுஞ் சொல் நடுவுளது. அம்+பல் அம்+அம்பலம். 3

அருட்பெருஞ்ஜோதி

# 134. வருதருணப் பாடல்

அற்புதம்

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

ஐயனருள் வருகின்ற தருணமிது கண்டீர்
　ஐயமிலை ஐயமிலை ஐயனடி யானை
மெய்யனெனை யாட்கொண்ட வித்தகன்சிற் சபையில்
　விளங்குகின்ற சித்தனெலாம் வல்லவொரு விமலன்
துய்யனருட் பெருஞ்ஜோதி துரியநட நாதன்
　சுகவமுதன் என்னுடைய துரையமர்ந்திங் கிருக்க
வையமிசை திருக்கோயில் அலங்கரிமின் விரைந்தே
　மணியாலும் பொன்னாலும் மலராலும் வியந்தே. 1

தனித்தலைமைப் பெரும்பதியென் தந்தைவரு கின்ற
　தருணமிது சத்தியங்காண் சகதலத்தீர் கேண்மின்
இனித்தநறுங் கனிபோன்றே என்னுளந் தித்திக்க
　இன்னமுதம் அருத்தியெனை எழுலகும் போற்ற
மனித்தவுடம் பிதையழியா வாய்மையுடம் பாக்கி
　மன்னியசித் தெல்லாஞ்செய் வல்லபமுங் கொடுத்தே
கனித்தசிவா னந்தமெனும் பெரும்போகந் தனிலே
　களித்திடவைத் திடுகின்ற காலையுமிங் கிதுவே. 2

சத்தியவான் வார்த்தையிது தானுரைத்தேன் கண்டாய்
　சந்தேகம் இலையிதனிற் சந்தோடம் உறுவாய்
இத்தினமே அருட்ஜோதி எய்துகின்ற தினமாம்
　இனிவருமத் தினங்களெலாம் இன்பமுறு தினங்கள்
சுத்தசிவ சன்மார்க்கந் துலங்குமெலா வுலகுந்
　தூய்மையுறும் நீயுரைத்த சொல்லனைத்தும் பலிக்கும்
செத்தவர்கள் எழுந்துலகில் திரிந்துமகிழ்ந் திருப்பார்
　திருவருட்செங் கோலென்றுஞ் செல்லுகின்ற தாமே. 3

என்சாமி யெனதுதுரை என்னுயிர் நாயகமே
　இன்றுவந்து நானிருக்கும் இடத்திலமர் கின்றார்
பின்சாரும் இரண்டரைநா ழிகைக்குள்ளே யெனது
　பெருடம்பிற் கலந்துளத்தே பிரியாம லிருப்பார்
தன்சாதி யுடைப்பெரிய தவத்தாலே நான்றான்
　சாற்றுகின்றேன் அறிந்திதது சத்தியஞ் சத்தியமே
மின்சாரும் இடைமடவாய் என்மொழிநின் றனக்கே
　வெளியாகும் இரண்டரைநா ழிகைகடந்த போதே. 4

இங்ஙனம் எல்லாம் வல்லவர் ஓதுக என்றபடி உரைத்துளேன்.

அருட்பெருஞ்ஜோதி

# கண்ணிகள்

## 135. திருவருள் முறையீட்டுக் கண்ணி

இராகம் - பந்துவராளி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பற்றுநினைத் தெழுமிப் பாவிமனத் தீமையெலாம்
உற்று நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. 1

எள்ளேத நின்னிடத்தே யெண்ணுகின்ற தோறுமதை
உள்ளே நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. 2

துன்னுகின்ற தீமைநின்பாற் சூழ்ந்துரைக்குந் தோறுமதை
உன்னுகின்ற போதிலெனக் கூடுருவிப் போகுதடா. 3

எள்ளுகின்ற தீமைநின்பா லெண்ணுகின்ற தோறுமதை
உள்ளுகின்ற போதிலெனக் கூடுருவிப் போகுதடா. 4

மிக்க நிலைநிற்க விரும்பேன் பிழைகளெலாம்
ஒக்க நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. 5

கோகோ வெனுங்கொடியேன் கூறியகுற் றங்களெலாம்
ஓகோ நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. 6

பித்து மனக்கொடியேன் பேசியவன் சொல்லையெலாம்
ஒத்து நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. 7

தேர்ந்து தெரியாச் சிறியவனேன் தீமையெலாம்
ஓர்ந்து நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. 8

நிறுத்தி யறியே னிகழ்த்தியவென் சொல்லை
உறுத்தி நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. 9

தோன்றி விரியுமனத் துட்டனேன் வன்பிழையை
ஊன்றி நினைக்கிலெனக் கூடுருவிப் போகுதடா. 10

எண்ணினைப்ப தின்றிநினை யெள்ளி யுரைத்ததனை
உண்ணினைக்குந் தோறுமெனக் குள்ள முருகுதடா. 11

கடையவனேன் வைதகடுஞ் சொன்னினைக்குந் தோறும்
உடையவனே யென்னுடைய வுள்ள முருகுதடா. 12






பித்தனெனத் தீமை பிதற்றியதெண் ணுந்தோறும்
உத்தமனே யென்னுடைய வுள்ள முருகுதடா. 13

மன்றுடையாய் நின்னருளை வைதகொடுஞ் சொற்பொருளில்
ஒன்றை நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. 14

வெருவா மலையோ விளம்பியசொல் லெல்லாம்
ஒருவா நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. 15

புலைக்கொடியேன் புன்சொற் புகன்றதெண் ணுந் தோறும்
உலைக்கண்மெழு காகவென்ற னுள்ள முருகுதடா. 16

ஈடில் பெருந்தாயி னினியாய்நின் றண்ணருட்பால்
ஊடியசொல் லுன்னிலெனக் குள்ள முருகுதடா. 17

புரைத்தமன வஞ்சப் புலையேன் றிருவருளை
உரைத்தபிழை யெண்ணிலெனக் குள்ள முருகுதடா. 18

நாடி நினையா நவையுடையேன் புன்சொலெலாம்
ஓடி நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. 19

வெப்பில் கருணை விளக்கனையா யென்பிழையை
ஒப்பி நினைக்கிலெனக் குள்ள முருகுதடா. 20

அஞ்சலென் றுப்நின்பால் அடாதமொழி பேசியதை
அஞ்சி நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 21

மெய்யோர் சிறிதுமிலேன் வீண்மொழியா லாடியதை
ஐயோ நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 22

இத்தா ரணிக்குளெங்கு மில்லாத தீமைசெய்தேன்
அத்தா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 23

பொய்யால் விரிந்த புலைமனத்தேன் செய்பிழையை
ஐயா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 24

இப்பாவி நெஞ்சா லிழுக்குரைத்தே னுங்கதனை
அப்பா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 25

எண்ணுக் கொடுமையெலா மெண்ணியுரைத் தேனதனை
அண்ணா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 26

வெம்மான் மனத்து வினையேன் புகன்றதெலாம்
அம்மா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 27




எச்சோடு மில்லா திழிக்கேன் பிழைகளெலாம்
அச்சோ நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 28

வந்தோடி நைமனத்து வஞ்சகனேன் வஞ்சமெலாம்
அந்தோ நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 29

ஓவாக் கொடியே னுரைத்த பிழைகளெலாம்
ஆவா நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 30

கரைசேர வெண்ணாக் கடையேன் பிழையை
அரசே நினைக்கிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 31

மருளுடையேன் வஞ்ச மனத்தீமை யெல்லாம்
அருளுடையா யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 32

ஈண்டவனேன் வன்சொல் இயம்பியதை யென்னுடைய
ஆண்டவனே யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 33

வற்புதனேன் வஞ்ச மனப்பிழையை மன்றுடும்
அற்புதனே யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 34

துன்புடையேன் புன்மொழிகள் தூற்றியதை யெவ்வுயிர்க்கும்
அன்புடையா யெண்ணிலெனக் கஞ்சுங் கலங்குதடா. 35

கோதிக்கின்ற வன்மொழியாற் கூறியதை யையோ
மதிக்கின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. 36

சினங்கொண்ட போதெல்லாஞ் செப்பியவன் சொல்லை
மனங்கொள்ளுந் தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. 37

செய்தநன்றி யெண்ணாச் சிறியவனே னின்னருளை
வைததெண்ணுந் தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. 38

பொய்த்த மனத்தேன் புகன்றகொடுஞ் சொற்களெலாம்
வைத்துநினைக் குந்தோறும் வாளிட் டறுக்குதடா. 39

பொங்குகின்ற தீமை புகன்றதெலா மெண்ணியெண்ணி
மங்குகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா 40

ஊடுகின்ற சொல்லா லுரைத்ததனை யெண்ணியெண்ணி
வாடுகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. 41

உயங்குகின்றேன் வன்சொல் லுரைத்ததனை யெண்ணி
மயங்குகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. 42

சொல்வினவு நோக்காதே சொன்னதெலா மெண்ணுதொறும்
வல்வினையே னுள்ளகத்தே வாளிட் டறுக்குதடா. 43

மேல்வினவு நோக்காதே வேறுசொன்ன தெண்ணுதொறும்
மால்வினையே னுள்ளகத்தே வளிட்ட டறுக்குதடா. 44

விஞ்சகத்தா லந்தோ விளம்பியதை யெண்ணுதொறும்
வஞ்சகத்தே னுள்ளகத்தே வாளிட் டறுக்குதடா. 45

விலங்குகின்ற நெஞ்ச வினைவையெண்ணுந் தோறுமந்தோ
மலங்குகின்றே னுள்ளிடத்தே வாளிட் டறுக்குதடா. 46

தூய்மையிலா வன்மொழியாற் சொன்னவெலா மெண்ணுதொறும்
வாய்மையிலே னுள்ளகத்தே வாளிட் டறுக்குதடா. 47

கலிக்கின்ற வஞ்சக் கருத்தாற் கருதியதை
வலிக்கின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. 48

நீட்டுகின்ற வஞ்ச நெடுஞ்சொலெலா நெஞ்சகத்தே
மாட்டுகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. 49

பொருந்துகின்ற வஞ்சப் புதுமையெண்ணி யெண்ணியையோ
வருந்துகின்ற தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. 50

வெருவிக்கும் வஞ்ச வெறுஞ்சொலெலாம் நெஞ்சில்
வருவிக்குந் தோறுமுள்ளே வாளிட் டறுக்குதடா. 51

ஊடம்போ துன்னை யுரைத்தவெலா நாயடியேன்
நாடும்போ தெல்லாமென் னுடி நடுங்குதடா. 52

வாய்க்கடையா வன்சொல் வழங்கியவென் வன்மனத்தை
நாய்க்கடையே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. 53

கன்றி யுரைத்த கடுஞ்சொற் கடுவையெலாம்
நன்றியிலே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. 54

புன்மையினல் வன்சொற் புகன்றபுலைத் தன்மையெலாம்
நன்மையிலேன் எண்ணுதொறும் நாடி நடுங்குதடா. 55

ஊனேனெண்ணும் வஞ்ச வுளத்தா லுரைத்தவெலாம்
நானெண்ணுந் தோறுமென்ற னுடி நடுங்குதடா. 56

வஞ்சனையா லஞ்சாது வன்சொல் புகன்றவெலாம்
நஞ்சனையே னெண்ணுதொறும் நாடி நடுங்குதடா. 57

கோணனேடு நெஞ்சக் குரங்காற் குதித்ததெலாம்
நாணமிலே னென்னுதொறும் நாடி நடுங்குதடா. 58

ஊனமிலா நின்னை யுரைத்தகொடுஞ் சொல்லெலாம்
ஞானமிலே னென்னுதொறும் நாடி நடுங்குதடா. 59

எற்றே மதியிலியே னென்று துரைத்ததனைச்
சற்றே நினைத்திடினும் தாது கலங்குதடா. 60

இனியேது செய்வே னிகழ்ந்துரைத்த சொல்லைத்
தனியே நினைத்திடினுந் தாது கலங்குதடா. 61

நாயனையே னென்று மலங்கியவன் சொல்லெலாந்
தாயனையா யென்னுதொறுந் தாது கலங்குதடா. 62

நிற்குருகா வஞ்ச நினைவால் நினைத்தவெலாஞ்
சற்குருவே யென்னுதொறுந் தாது கலங்குதடா. 63

வெந்நரகில் வீழும் வினைவால் விளம்பியதை
என்னரசே யென்னுதொறு மென்னை விழுங்குதடா. 64

நன்கறியேன் வாளா நவின்ற நவையனைத்தும்
என்குருவே யென்னுதொறும் என்னை விழுங்குதடா. 65

ஆவ தறியா தடியே னிகழ்ந்தகொடும்
பாவ நினைக்கிற் பகீரென் றலைக்குதடா. 66

வந்திப் பறியேன் வழங்கியவன் சொல்லை யெலாம்
சிந்திக்கி னுள்ளே திடுக்கிட் டழுங்குதடா. 67

குற்ற நினைத்த கொடுஞ்சொலெலாமென் னுளத்தே
பற்றி நினைக்கிற் பயமா யிருக்குதடா. 68

எள்ளுகின்ற தீமை யெடுத்துரைத்தே னுங்கதனை
விள்ளுகின்ற தோறுமுள்ளம் வெந்து வெதும்புதடா. 69

அருட்பெருஞ்ஜோதி

## 136. திருவடிக்கண்ணி

இராகம் - நீலாம்புரி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

**மி**ன்னிடையாள் காண விளங்குமன்றி லாடுகின்றாய்
என்னுடையா யுன்றன் இணையடிதான் நோவாதா. 1

வன்னமுதே யின்ப மலிபமன்றி லாடுகின்றாய்
என்னமுதே யுன்றன் இணையடிதான் நோவாதா. 2

நண்ணியமெய் யன்பர் நயக்கமன்றி லாடுகின்றாய்
புண்ணியனே யுன்றனது பொன்னடிதான் நோவாதா. 3

அன்பரின்பங் கொள்ளநட மம்பலத்தே யாடுகின்றாய்
இன்புருவா முன்றன் இணையடிதான் நோவாதா. 4

நூலுணர்வா நுண்ணுணர்வி னேக்கநட மாடுகின்றாய்
மாலறியா வுன்றன் மலர்ப்பாதம் நோவாதா. 5

எள்ளலற வம்பலத்தே யின்பநட மாடுகின்றாய்
வள்ளலே யுன்றன் மலரடிதான் நோவாதா. 6

சைவ நிலைத்துத் தழைத்தோங்க வாடுகின்றாய்
தெய்வ மணியே திருவடிதான் நோவாதா. 7

எல்லாரு மின்புற் றிருக்கநட மாடுகின்றாய்
வல்லாரின் வல்லாய் மலர்ப்பாதம் நோவாதா. 8

அவமே கழிந்தின்பம் அன்பர்கொள வாடுகின்றாய்
சிவமே நினது திருவடிதான் நோவாதா. 9

தற்பரமா மன்றிற் றனிநடன மாடுகின்றாய்
சிற்பரமே யுன்றன் திருமேனி நோவாதா. 10

வில்வவேர் மாலை மிளிர்ந்தசைய வாடுகின்றாய
செல்வமே யுன்றன் திருமேனி நோவாதா. 11

அருட்பெருந்ஜோதி

# 137. பேரன்புக்கண்ணிகள்

*இராகம் - பந்துவராளி - ஆதிதாளம்*

அருட்பெருந்ஜோதி

**கற்றதென் றுஞ்** சாகாத கல்வியென்று கண்டுகொண்டுன்
அற்புதச்சிற் றம்பலத்தில் அன்புவைத்தேன் ஐயாவே. 1

ஈடணைகள் நீக்கிநமக் கின்பளிக்கு மென்றுமன்றில்
ஆடுந் திருவடிக்கே ஆசைவைத்தேன் ஐயாவே. 2

நானந்த மெய்தா நலம்பெறவே யென்னிமன்றில்
ஆனந்த நாடகத்துக் கன்புவைத்தேன் ஐபாவே. 3

வாடலறச் சாகா வரங்கொடுக்கு மென்றுமன்றில்
ஆடலடிப் பொன்மலர்க்கே அன்புவைத்தேன் ஐபாவே. 4

போற்புறவே பொன்றாப் பொருளளிக்கு மென்றுமன்றில்
அற்புதப்பொற் சேவடிக்கே அன்புவைத்தேன் ஐபாவே. 5

ஈனமறுத் தென்றும் இறவாமை நல்குமென்றே
ஞானமணி மன்றிடத்தே நண்புவைத்தேன் ஐபாவே. 6

ஓர்துணைநின் பொன்னடியென் றுன்னுகின்றே னுன்னையன்றி
யார்துணையும் வேண்டேனென் அன்புடைய ஐபாவே. 7

பூசைசெய்து பெற்றவுன்றன் பொன்னடிமே லன்றியயல்
ஆசையொன்று மில்லையெனக் கன்புடைய ஐபாவே. 8

இச்சைநின்மே லன்றியெனக் கௌ்ளளவும் வேறுமொன்றில்
இச்சையிலே நின்னாணை யென்னருமை ஐபாவே. 9

எப்படி நின்னுள்ள மிருக்கின்ற தென்னளவில்
அப்படிநீ செய்கவெனக் கன்புடைய ஐபாவே. 10

எவ்வண்ணம் நின்கருத்திங் கென்னளவி லெண்ணியதோ
அவ்வண்ணஞ் செய்கவெனக் கன்புடைய ஐபாவே. 11

தேசுறுநின் றண்ணருளாந் தெள்ளமுதங் கொள்ளவுள்ளே
ஆசைபொங்கு கின்றதெனக் கன்புடைய ஐபாவே. 12

மாசறுநின் பொன்னருளா மாமணிபெற் றுடவுள்ளே
ஆசைபொங்கு கின்றதெனக் கன்புடைய ஐபாவே. 13

நாசமிலா நின்னருளாம் ஞானமருந் துண்ணவுள்ளே
ஆசைபொங்கு கின்றதெனக் கன்புடைய ஐபாவே. 14

அருட்பெருஞ்ஜோதி

# 138. நெஞ்சொடு கிளத்தல்

கலித்தாழிசை

இராகம் - புன்னாகவாளி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

அடங்குநா ளில்லா தமர்ந்தானைக் காணற்கே
தொடங்குநாள் நல்லதன் றோ — நெஞ்சே
தொடங்குநாள் நல்லதன் றோ. 1

வல்லவ ரெல்லாரும் வல்லானைக் காணற்கே
நல்லநா ளெண்ணிய நாள் — நெஞ்சே
நல்லநா ளெண்ணிய நாள். 2

காலங் கடந்த கடவுளைக் காணற்குக்
காலங் கருதுவ தேன் — நெஞ்சே
காலங் கருதுவ தேன். 3

ஆல மமுதாக்கு மண்ணலைக் காணற்குக்
காலங் கருதுவ தேன் — நெஞ்சே
காலங் கருதுவ தேன். 4

தடையாது மில்லாத் தலைவனைக் காணற்கே
தடையாது மில்லைகண் டாய் — நெஞ்சே
தடையாது மில்லைகண் டாய். 5

கையு ளமுதத்தை வாயு ளமுதாக்கப்
[1] பையு ளுனக்கென் னையோ — நெஞ்சே
பையு ளுனக்கென் னையோ. 6

என்னுயிர் நாதனை யான்கண் டணைதற்கே
உன்னுவ தென்னைகண் டாய் — நெஞ்சே
உன்னுவ தென்னைகண் டாய். 7

நான்பெற்ற செல்வத்தை நான்பற்றிக் கொள்ளற்கே
ஏன்பற்று வாயென்ப தார் — நெஞ்சே
ஏன்பற்று வாயென்ப தார். 8

1. பையுள் என்பது—வருத்தம்.

தத்துவா தீதத் தலைவனைக் காணற்குத்
தத்துவ முன்னுவ தேன் — நெஞ்சே
தத்துவ முன்னுவ தேன். 9

ஒக்க வமுதத்தை யுண்டோ மினிச்சற்றும்
விக்கல் வராது கண்டாய் — நெஞ்சே
விக்கல் வராது கண்டாய். 10

அருட்பெருஞ்ஜோதி

## 139. மெய்யருள் வியப்பு

### வர்க்கமாலை என்னும் காலைப்பாட்டு

இராகம் - செஞ்சுருட்டி - ரூபகதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

**எனக்கு** முனக்கும் இசைந்த பொருத்தம் என்ன பொருத்தமோ
இந்தப் பொருத்தம் உலகில் பிறருக் கெய்தும் பொருத்தமோ.

சரணங்கள்

**தனக்கு** நிகரிங் கில்லா துயர்ந்த தம்ப மொன்றதே
தாவிப் போகப் போக நூலின் தரத்தில் நின்றதே
கனக்கத் திகைப்புற் றங்கே நானுங் கலங்கி வருந்தவே
கலக்க நீக்கித் தூக்கி வைத்தாய் நிலைபொருந்தவே. எனக்கு 1

இங்கோர் மலையி னடுவி லுயர்ந்த தம்ப நணுகவே
ஏறிப் போகப் போக நூலி னிழைபோல் நுணுகவே
அங்கே திகைத்து நடுங்கும் போதென் னடுக்க நீக்கியே
அதன்மே லுயர்ந்த நிலையில் வைத்தா யடிமை யாக்கியே. எனக்கு 2

இரவிற் பெரிய வெள்ளம் பரவி யெங்குந் தயங்கவே
யானுஞ் சிலரும் படகிலேறி யேம மயங்கவே
விரவிற் றனித்தங் கென்னை பொருகன் மேட்டி லேற்றியே
விண்ணி லுயர்ந்த மாடத் திருக்க விதித்தாய் போற்றியே. எனக்கு 3

மேலைப் பாற்சிவ கங்கை யென்னுமோர் தீர்த்தந் தன்னையே
மேவிப் படியிற் றவறி நீரில் விழுந்த வென்னையே
ஏலத் துகிலு முடம்பு நனையா தெடுத்ததே யொன்றோ
எடுத்தென் கரத்திற் பொற்பூ வணிந்த இறைவ னீயன்றோ. எனக்கு 4

என்ன துடலு முயிரும் பொருளும் நின்ன தல்லவோ
எந்தா யிதனைப் பெறுக வெனநா னின்று சொல்லவோ
சின்ன வயதி லென்னை யாண்ட திறத்தை நினைக்குதே
சிந்தை நினைக்கக் கண்ணீர் பெருக்கி யுடம்பை நனைக்குதே. எனக்கு 5

அப்பா நின்னை யன்றி யெங்கும் அணைப்பா ரில்லையே
அந்தோ நின்னை யன்றி யெங்கும் அருள்வா ரில்லையே
எப்பா லவர்க்கு நின்னை யன்றி யிறைமை யில்லையே
எனக்கு நின்மே லன்றி யுலகி லிச்சை யில்லையே. எனக்கு 6

அரசே யுன்னை யணைக்க வெனக்குள் ஆசை பொங்குதே
அணைப்போ மென்னு முண்மையா லென் ஆவி தங்குதே
விரைசேர் பாதம் பிடிக்க வென்கை விரைந்து நீளுதே
மேவிப் பிடித்துக் கொள்ளுந் தோறும் உவகை யாளுதே. எனக்கு 7

தனியன் மேல்நீ வைத்த தயவு தாய்க்கு மில்லையே
தகுமைந் தொழிலும் வேண்டுந் தோறுந் தருதல் வல்லையே
வினவு மெனக்கென் னுயிரைப் பார்க்க மிகவு நல்லையே
மிகவு நான்செய் குற்றங் குறித்து விடுவா யல்லையே. எனக்கு 8

என்னை யாண்ட வண்ண மெண்ணி யுள்ள முருகுதே
என்னை விழுங்கி யெங்கு மின்ப வெள்ளம் பெருகுதே
உன்ன வுன்ன மனமு முயிரு முடம்பு மினிக்குதே
உன்னோ டென்னை வேறென் றெண்ணின் மிகவும் பனிக்குதே. எனக்கு 9

உன்பே ரருளை நினைக்குந் தோறு முடம்பு பொடிக்குதே
உண்டு பசிதீர்ந் தாற்போற் காதல் மிகவுந் தடிக்குதே
அன்பே யமையு மென்ற பெரியர் வார்த்தை போயிற்றே
அன்போ ரணுவு மில்லா வெனக்கிங் கருளா லாயிற்றே. எனக்கு 10

நினைக்க நினைக்கத் தித்திப் பெனது நினைவிற் கொடுக்குதே
நின்பா லன்றிப் பிறர்பாற் செல்ல நெஞ்சு நடுக்குதே
எனைத்துன் பொழித்தாட் கொண்ட நின்னை யன்னை யென்பனே
எந்தா யன்பி லேனின் னடிக்கு முன்னை யன்பனே. எனக்கு 11

உன்னை மறக்கி லெந்தா யுயிரென் னுடம்பில் வாழுமோ
உன்பா லன்றிப் பிறர்பா லென்ற னுள்ளஞ் சூழுமோ
என்னைக் கொடுக்க வாங்கிக் கொண்ட தென்ன கருதியோ
எந்தாய் நின்னைக் கொடுக்க வென்பா லின்று வருதியோ. எனக்கு 12

நெடுநாள் முயன்றுங் காண்டற் கரிய நிலையைக் காட்டியே
நிறைந்தென் னகத்தும் புறத்துஞ் சூழ்ந்த வொளியை நாட்டியே
நடுநா டியநின் னருளுக் கென்மே லென்ன நாட்டமோ
நாய்க்குத் தவிசிட் டனைநின் றனக்கிங் கிதுவோ ராட்டமோ. எனக்கு 13

நாகா திபனு மயனு மாலு நறுமு றென்னவே
ஞான வமுத மளித்தாய் நானு முண்டு துன்னவே
சாகாக் கலையை யெனக்குப் பயிற்றித் தந்த தயவையே
சாற்றற் கரிது நினக்கென் கொடுப்ப தேதும் வியவையே. எனக்கு 14

யாது கருதி யென்னை யாண்ட டைய வையவோ
யானுன் னடிப்பொற் றுணைகட் குவந்து தொழும்பு செய்யவோ
ஓது கடவுட் கூட்ட மனைத்து மடிமை யல்லவோ
உடையாயவர்க்குள் ளெனைபு மொருவ னென்று சொல்லவோ. எனக்கு 15

தலையுங் காலுந் திரிந்து நோக்கித் தருக்கி னேனையே
தாங்கித் தெரித்த தயவை நினைக்கி லுருக்கு தூனையே
புலையுங் கொலையுந் தவிர்ந்த நெறியிற் புனிதர் மதிக்கவே
புகுவித் தாயை யென்வாய் துடிப்ப தேத்தித் துதிக்கவே. எனக்கு 16

தாயே யெனக்குத் தயவு புரிந்த கருணைத் தந்தையே
தனியே நின்னை நினைக்கக் கிளர்வ தெனது சிந்தையே
நாயே னெண்ண மனைத்து முடித்துக் கொடுத்த பண்பனே
நான்செய் தவத்தா லெனக்குக் கிடைத்த நல்ல நண்பனே. எனக்கு 17

ஏறு நிலையில் விரைந்து விரைந்திங் கென்னை யேற்றியே
இறங்கா திறங்கும் படிகண் முழுது மெடுத்தாய் போற்றியே
மாறாக் கருணை யென்மேல் வைக்க வந்த தென்னையோ
மதியி லேனின் னருட்குச் செய்த தவந்தான் முன்னையோ. எனக்கு 18

இடமும் வலமு மிதுவென் றறியா திருந்த வென்னையே
எல்லா மறிவித் தருள்செய் கருணை யென்னை யென்னையே
நடமு நடஞ்செய் யிடமு மெனக்கு நன்று காட்டியே
நாயி னேனை வளர்க்கின் றாய்நல் லமுத மூட்டியே. எனக்கு 19

விதுவுங் கதிரு மிதுவென் றறியும் விளக்க மின்றியே
விழித்து மயங்கி னேன்பாற் பெரிய கருணை யொன்றியே
அதுவு மதுவு மிதுவென் றெனக்குள் ளறியக் காட்டியே
அடிய னேனை வளர்க்கின் றாய்நல் லமுத மூட்டியே. எனக்கு 20

இருளு மொளியும் வந்த வகையை யெண்ணி யெண்ணியே
　　இரவும் பகலு மயங்கி னேனை யினிது நண்ணியே
அருளும் பொருளுங் கொடுத்து மயக்க நீக்கிக் காட்டியே
　　அன்பா லென்னை வளர்க்கின் றாய்நல் லமுத மூட்டியே. எனக்கு 21

அண்டத் தகத்தும் புறத்து முன்ற னாணை செல்லுதே
　　அவனே யெல்லாம் வல்லா னென்று மறைகள் சொல்லுதே
பிண்டத் தகத்தும் புறத்து நிறைந்த பெரிய ஜோதியே
　　பேயே னளவில் விளங்கு கின்ற தென்ன நீதியே. எனக்கு 22

கருணை நிதிநின் றன்னைக் காணக் கண்கள் துடிக்குதே
　　காண்போ மென்று நினைக்குந் தோறும் உடம்பு பொடிக்குதே
அருணை டகஞ்செய் பதங்கள் பாடி யாட விரைவதே
　　ஆடும் பொதுவை நினைக்க நினைக்க நெஞ்சங் கரைவதே. எனக்கு 23

அருளார் ஜோதி யென்னுள் விளங்க வளித்த காலத்தே
　　அடியேன் குறைகள் யாவுந் தவிர்ந்த திந்த ஞாலத்தே
பொருளா யெனையு நினைக்க வந்த புதுமை யென்னையோ
　　பொன்னென் றைய மதிப்ப துதவாத் துரும்பு தன்னையோ. எனக்கு 24

எனக்குள் நீயு முனக்குள் நானு மிருக்குந் தன்மையே
　　இன்று காட்டிக் கலக்கந் தவிர்த்துக் கொடுத்தாய் நன்மையே
தனக்குள் ளதுதந் தலைவர்க் குளதென் றறிஞர் சொல்வதே
　　சரியென் றெண்ணி எனது மனது களித்து வெல்வதே. எனக்கு 25

கருணைப் பொதுவிற் பெரிய ஜோதித் தருவிற் கனிந்ததே
　　கனித்த பெரிய தனித்த கனியென் கருத்து ளினித்ததே
தருணத் துண்டு மகிழ்வுற் றேனம் மகிழ்ச்சி சொல்லவே
　　தனித்துக் கரைந்த வெனது கருத்தின் றரத்த தல்லவே. எனக்கு 26

என்னு டுயிர்க்குத் துணைவ நின்னை யான் துதிக்கவே
　　என்ன தவஞ்செய் தேன்முன் னுலகு ளோர் மதிக்கவே
பொன்னூர் புயனு மயனும் பிறரும் பொருந்த லரியதே
　　புலைய னேனுக் களித்த கருணை மிகவும் பெரியதே. எனக்கு 27

என்கண் மணியு ளிருக்குந் தலைவ நின்னைக் காணவே
　　என்ன தவஞ்செய் தேன்முன் னயனு மரியு நாணவே
புன்க ணொழித்துத் தெள்ளா ரமுதம் புகட்டி யென்னையே
　　பொருளா யெண்ணி வளர்க்கின் றாய்நீ யெனக்கோ ரன்னையே. எனக்கு 28

அறிவி லேன்செய் குற்ற மனைத்தும் பொறுத்த நன்றியே
அமுது மளித்தா யார்செய் வார்க ளிந்த நன்றியே
செறி விலாத பொறியு மனமுஞ் செறிந்து நிற்கவே
செய்தாய் மேலுந் தெரித்தாய் சாகாக் கல்வி கற்கவே. எனக்கு 29

ஒருநா ழிகையில் யோக நிலையை யுணர்த்தி மாலையே
யோகப் பயனை முழுது மளித்தாய் மறுநாட் காலையே
திருநாள் நிலையுந் தீர்த்த நிலையுந் தெய்வ நிலையுமே
சிறியே னறியக் காட்டித் தெரித்தாய் வேதக் கலையுமே. எனக்கு 30

அண்டப் பரப்பின் திறங்க ளனைத்து மறிய வேண்டியே
ஆசைப் பட்ட தறிந்து தெரித்தா யறிவைத் தூண்டியே
பிண்டத் துயிர்கள் பொருந்தும் வகையும் பிண்டந் தன்னையே
பிரியும் வகையும் பிரியா வகையுந் தெரித்தாய் பின்னையே. எனக்கு 31

வேதா கமங்கள் புகன்ற விரிவை யொன்றொன் றாகவே
விளங்க விரைந்து தெரித்தாய் பயிலு மாசை போகவே
பூதா திகளைப் பொருத்தும் பகுதிப் பொருத்த முற்றுமே
பொய்மை நீக்கிக் காணக் காட்டித் தெரித்தாய் மற்றுமே. எனக்கு 32

வள்ளா லுன்னைப் பாடப் பாட வாய் மணக்குதே
வஞ்ச வினைக ளென்னைவிட் டோடித் தலை வணக்குதே
எள்ளா துனது புகழைக் கேட்கச் செவி நயக்குதே
எந்தாய் தயவை யெண்ணுந் தோறும் உளம் வியக்குதே. எனக்கு 33

இறைவா நின்னைக் கனவி லேனும் யான் மறப்பனோ
எந்தா யுலகத் தவர்கள் போல்நா னினி யிறப்பனோ
மறைவா சகமும் பொருளும் பயனு மதிக்கு மதியிலே
வாய்க்கக் கருணை புரிந்து வைத்தா யுயர்ந்த பதியிலே. எனக்கு 34

தலைவா வெனக்குக் கருணை யமுதந் தரவித் தலத்திலே
தவஞ்செய் தேனத் தவமு முன்ற னருள் வலத்திலே
அலைவா ரிதியிற் றுரும்பு போல அயனு மாலுமே
அலைய வெனக்கே யளிக்கின் றாய்நீ மேலு மேலுமே. எனக்கு 35

உடையா யெனக்குப் புரிந்த தயவை யுன்ன வுன்னவே
உடம்பு பூரிக் கின்ற தொளிர்பொன் மலைய தென்னவே
தடையா தினியுண் மூல மலத்தின் தடையும் போயிற்றே
சமய விகற்ப மெல்லா நீங்கிச் சமம தாயிற்றே. எனக்கு 36

மயங்குந் தோறு முள்ளும் புறத்து மயக்க நீக்கியே
　　மகிழ்வித் தின்று மொரு காலன்றி யொருகாற் றாக்கியே
உயங்கு மலங்க ளைந்தும் பசையற் றொழிந்து வெந்ததே
　　உன்பே ரருட்பொற் ஜோதி வாய்க்குந் தருணம் வந்ததே. எனக்கு 37

எனக்கு நின்னைப் போல முதற்கண் ஈந்து மதனையே
　　எரிப்பித் தாய்ப்பின் னெழுப்பிக் கொடுத்தா யருவ மதனையே
சினக்குங் கூற்றை யுதைப்பித் தொழித்துச் சிதைவு மாற்றியே
　　தேவர் கற்பம் பலவுங் காணச் செய்தாய் போற்றியே. எனக்கு 38

கள்ள மறியே னின்றுற் கண்ட காட்சி யொன்றுமே
　　கருத்தி லுளது வேறோர் விடயங் காணே னென்றுமே
உள்ள துரைக்கின் றேனின் னடிமே லாணை முன்னையே
　　உள்ளே விளங்கிக் காண்கின் றுய்க்கின் கொளிப்ப தென்னையே. எனக்கு

என்னை யடிமை கொண்டாய் நானு நினக்கு நல்லனோ
　　எல்லாம் வல்ல தலைவ நினக்கு நல்லன் அல்லனோ
முன்னை வினைக ளனைத்து நீக்கி யமுத மூட்டியே
　　மூவர்க் கரிய நிலையில் வைத்தா யென்னை நாட்டியே. எனக்கு 40

ஜோதி மலையிற் கண்டே னின்னைக் கண் களிக்கவே
　　துய்த்தே னமுத மகத்தும் புறத்தும் பரிம ளிக்கவே
ஓதி யுணர்தற் கரிய பெரிய வுணர்வை நண்ணியே
　　ஓதா தனைத்து முணர்கின் றேனின் னருளை யெண்ணியே. எனக்கு 41

ஏழு நிலைக ளோங்குந் தெய்வ மாட மொன்றிலே
　　ஏற்றிக் களிக்க வைத்தா யதன்மே லிலங்கு குன்றிலே
வாழும் பரிசுங் கவிக்குங் கொடையு மதிக்குந் தூசுமே
　　மகிழ்ந்துகொடுத்துப் பின்னுங்கொடுத்தாய் மணிப்பொற்காசுமே. எனக்கு

இந்த வுலகி லுள்ளார் பலரு மிகவு நன்மையே
　　என்பாற் செய்ய வைத்தா யிதுநின் னருளின் தன்மையே
அந்த வுலகி லுள்ளார் பலரு மென்னை நோக்கியே
　　அப்பா வாழி யெனவும் புரிந்தா யடிமை யாக்கியே. எனக்கு 43

அழியாக் கருணை யமுத வடிவி னெங்குஞ் ஜோதியே
　　அரசே யெனக்குள் விளங்கு மாதி யாம னாதியே
ஒழியாத் துயரை யொழித்த பெரிய கருணை யாளனே
　　ஒன்று மொன்றி லுபய மாகி யொளிருந் தாளனே. எனக்கு 44

பாலுந் தேனுங் கலந்த தென்ன வென்னு ளினிக்கவே
பரம ஞான வமுத மளிக்கின் றுய் தணிக்கவே
ஏழு முயிர்க ளெல்லா நினக்குப் பொதுவ தென்பரே
இன்று நோக்கி யோர வார னென்ப ரன்பரே. எனக்கு 45

ஐயா நான்செய் பிழைக ளேழு கடலிற் பெரியதே
அனைத்தும் பொறுத்த தயவு பிறருக் கரிய தரியதே
மெய்யா நீசெய் யுதவிக் கொருகைம் மாறு வேண்டுமே
வேண்டா தென்ன வறிந்து மெனக்குள் ளாசை தூண்டுமே. எனக்கு 46

பூத வெளியி னடமும் பகுதி வெளியி னட்டமும்
போக வெளியிற் கூத்தும் யோக வெளியு ளாட்டமும்
நாத வெளியிற் குனிப்பும் பரம நாத நடமுமே
நன்று காட்டிக் கொடுத்தா யென்று நவியாத் திடமுமே. எனக்கு 47

எட்டு மிரண்டு மிதுவென் றெனக்குச் சுட்டிக் காட்டியே
எட்டா நிலையி லிருக்கப் புரிந்தா யிட்டுக் கூட்டியே
துட்ட வினையைத் தீர்த்து ஞானச் சுடருள் ளேற்றியே
தூண்டா தென்றும் விளங்க வைத்தா யுண்மை சாற்றியே. எனக்கு 48

அருளாம் பெரிய வெளிக்குட் ஜோதி வடிவ னாகியே
அரசு செலுத்துந் தனித்த தலைமைப் பரம யோகியே
பொருளா யெனையு முளங்கொண் டளித்த புனித நாதனே
போற்று நாத முடிவில் நடஞ்செய் கமல பாதனே. எனக்கு 49

உருவு மருவு முபய நிலையு முடைய நித்தனே
உயிருள் நிறைந்த தலைவ னெல்லாம் வல்ல சித்தனே
மருவுந் துரிய வரையுள் நிறைந்து வயங்கும் பரமமே
மன்றிற் பரமா னந்த நடஞ்செய் கின்ற பிரமமே. எனக்கு 50

அன்னே யென்னை யாண்ட தலைவ வடியே னுள்ளமே
அமர்ந்த துணைவ வெனக்குக் கிடைத்த வமுத வெள்ளமே
பொன்னே பொன்னிற் பொலிந்து நிறைந்த புனித வானமே
புனித வானத் துள்ளே விளங்கும் பூரண ஞானமே. எனக்கு 51

சமயத் தெய்வம் பலவுஞ் சிறிய துரும்ப தென்னவே
சாற்றப் புகினுஞ் சாலா வருளின் பெருமை யுன்னவே
அமையு மண்டப் பகுதி பலவு மணுவின் பொடியிலே
அனந்தத் தொன்றென் றுரைத்துஞ்சாலா நின்பொன் னடியிலே. எனக்கு

அப்பா நின்னை யடைந்த வென்னை யொப்பா ரியாவரே
ஆறு றகன்ற நிலைமை யடைந்தா னென்பர் தேவரே
இப்பா ராதி பூத மடங்குங் காலு நின்னையே
ஏத்திக் களித்து வாழ்வே னிதற்கு மைய மென்னையே. எனக்கு 53

என்னை மறைத்த மறப்பை நீக்கி யென்னைக் காட்டியே
இறைவ நினையுங் காட்டி வளர்த்தா யமுத மூட்டியே
முன்னை மறைக்கு மெட்டா நினது பெருமை தன்னையே
முன்னி மகிழ்ந்து பாடப் புரிந்தா யடிமை யென்னையே. எனக்கு 54

எண்ணுந் தோறும் எண்ணுந் தோறும் என்னு ளினிக்குதே
இறைவ நின்னைப் பாட நாவில் அமுதஞ் சனிக்குதே
கண்ணுங் கருத்து நின்பா லன்றிப் பிறர்பாற் செல்லுமோ
கண்டே னுன்னை யினிமே லென்னை மாயை வெல்லுமோ. எனக்கு 55

விந்தோ நாத வெளியுங் கடந்து மேலு நீளுதே
மேலை வெளியுங் கடந்துன் னடிய ராணை யாளுதே
அந்தோ வுனது பெருமை சிறிது மறிவா ரில்லையே
அறிந்தா ருலகி லின்ப வடிவ மாவ ரொல்லையே. எனக்கு 56

இறுகப் பிடித்துக் கொண்டேன் பதத்தை யினிநான் விடுவனோ
எந்தாய் பாதம் பிடித்த கைபால் வேறு தொடுவனோ
குறுகப் பயந்து கூற்று மோடிக் குலைந்து போயிற்றே
கோவே யுன்ற னருட்சிற் ஜோதி யென்ன தாயிற்றே. எனக்கு 57

காய்க்கும் பருவந் தன்னைப் பழுத்த பருவ மாக்கியே
கனக சபையி னடிக்கின் றுயோர் காலைத் தூக்கியே
நாய்க்குத் தவிசிட் டொருபொன் முடியு நன்று சூட்டியே
நட்ட நடுவே வைத்தாய் கருணை யமுத மூட்டியே. எனக்கு 58

கல்லை நோக்கிக் கனிந்து பழுத்த கனிய தாக்கியே
கனக சபையி னடிக்கின் றுயோர் காலைத் தூக்கியே
புல்லை முடிக்கு மணிகின் றியன் புன்சொன் மாலையே
புனைந்தென் னுளத்தி லிருக்கப்புரிந்தாய் நின்பொற் காலையே. எனக்கு 59

சாதல் பிறத்த லென்னு மவத்தை தவிர்த்துக் காலையே
தனித்துன் னருளி னமுதம் புகட்டிக் கொடுத்தாய் மேலையே
ஓத வுணர்த லுவத்த லெனக்கு நின்பொற் பாதமே
உலக விடயக் காட்டிற் செல்லா தெனது போதமே. எனக்கு 60

அருளும் பொருளும் பெற்றே னடிய னாகி நானுமே
அஞ்சேன் மாயை வினைகட் கொருசிற் றளவ தேனுமே
இருளு நிறந்துக் கூற்றைத் துரத்தி யருட்சிற் ஜோதியே
என்ற னகத்தும் புறத்தும் விளங்கு கின்ற வாதியே. எனக்கு 61

காமக் கடலைக் கடந்து வெகுளிக் கடலை நீந்தினேன்
கடிய மயக்கக் கடலைத் தாண்டி யடியை யேந்தினேன்
சேமப் பொதுவி னடங்கண் டெனது சிறுமை நீங்கினேன்
சிற்றம் பலத்து நடங்கண் டுவந்து மிகவு மோங்கினேன். எனக்கு 62

தூங்கல் விழித்த லிரண்டு மெனக்குச் சமம தாயிற்றே
சகத்தில் வழங்கு மாயை வழக்குத் தவிர்ந்து போயிற்றே
ஏங்கல் சலித்த லிரண்டு மின்றி யிளைப்பு நீங்கினேன்
எந்தாய்கருணை யமுதுண் டின்பப் பொருப்பி லோங்கினேன். எனக்கு 63

உறவு பகையென் றிரண்டு மெனக்கிங் கொன்ற தாயிற்றே
ஒன்றென் றிரண்டென் றுளரும் பேத மோடிப் போயிற்றே
மறைவு நினைவென் றென்னை வலித்த வலிப்பு நீங்கினேன்
மன்றிற் பரமா னந்த நடங்கண் டின்ப மோங்கினேன். எனக்கு 64

உன்னைக் கண்டு கொண்டேன் கண்ட வுடனிங் கென்னையே
உலக மெல்லாங் கண்டு கொண்ட வுவப்பி தென்னையே
என்னைக் கண்டு கொண்ட காலத் திறைவ நின்னையே
யாருங் கண்டு கொண்டா ரில்லை யாங்க தென்னையே. எனக்கு 65

மலத்திற் புழுத்த புழுவு நிகர மாட்டா நாயினேன்
வள்ளல் கருணை யமுதுண் டின்ப நாட்டா னாயினேன்
குலத்திற் குறியிற் குணத்திற் பெருமை கொள்ளா நாயினேன்
கோதி லமுதுண் டெல்லா நலமு முள்ளா னாயினேன். எனக்கு 66

கடைய நாயிற் கடைய னாய்க்குங் கடைய னாயினேன்
கருணை யமுதுண் டின்ப நாட்டிற் குடைய னாயினேன்
விடயக் காட்டி லோடித் திரிந்த வெள்ளை நாயினேன்
விமலா நினக்கு மிகவுஞ் சொந்தப் பிள்ளை யாயினேன். எனக்கு 67

அயனு மாலுந் தேடித் தேடி யலர்ந்து போயினார்
அந்தோ இவன்முன் செய்த தவம்யா தென்ப ராயினார்
பயனுங் கருத மாட்டாத் தவள மாடத் துச்சியே
வயங்கு மணைமேல் வைத்தாய் சிறிய நாயை மெச்சியே. எனக்கு 68

வல்லா யுனது கருணை யமுதென் வாய்க்கு வந்ததே
மலமு மாயைக் குலமு வினையு முழுதும் வெந்ததே
எல்லா நலமு மான வதனை யுண்டு வந்ததே
இறவா தென்று மோங்கும் வடிவ மெனக்கு வந்ததே. எனக்கு 69

சிற்றம் பலத்தி னடங்கண் டவர்காற் பொடிகள் புல்லதே
சிருட்டி முதலோ ரைந்து தொழிலுஞ் செய்ய வல்லதே
பற்றம் பலத்தில் வைத்தார் தம்மைப் பணியும் பத்தரே
பரம பதத்த ரென்று பகர்வர் பரம முத்தரே. எனக்கு 70

சிருட்டி முதலோ ரைந்து தொழிலுஞ் செய்யென் றென்னையே
செல்வப் பிள்ளை யாக்கி வளர்க்கின் றாயி தென்னையே
தெருட்டித் திருப்பொற் பதத்தைக் காட்டி யமுத மூட்டியே
திகழ நடுவைத் தாய்சன் மார்க்க சங்கங் கூட்டியே. எனக்கு 71

அடிய னாக்கிப் பிள்ளை யாக்கி நேய னாக்கியே
அடிக ளாக்கிக் கொண்டா யென்னை யவல நீக்கியே
படியு ளோரும் வானு ளோரு மிதனை நோக்கியே
பதியு மோர வார னென்பர் பரிவு தேக்கியே. எனக்கு 72

அண்ணா வெனையும் பொருளென் றெண்ணி யிரவும் பகலுமே
அகத்தும் புறத்துந் திரிகின் றாயிவ் வுலகென் புகலுமே
தண்ணா ரமுத மிகவு மெனக்குத் தந்த தன்றியே
தனியே யின்னுந் தருகின் றாயென் னறிவி னன்றியே. எனக்கு 73

வேதா கமத்தி னடியு நடுவு முடியு மற்றுமே
வெட்ட வெளிய தாகி விளங்கக் கண்டேன் முற்றுமே
நாதா சிறிய நாய்க்குங் கடையேன் முற்றுங் கண்டதே
நானே கண்டே னெந்தாய் கருணை நாட்டங் கண்டதே. எனக்கு 74

புழுவிற் புழுத்த புழுவு நிகரப் போதா நாயினேன்
பொதுவில் நடிக்குந் தலைவ நினக்கே யடிமை யாயினேன்
தழுவற் கரிய பெரிய துரியத் தம்பத் தேறினேன்
தனித்தப் பாலோர் தவள மாடத் திருந்து தேறினேன். எனக்கு 75

கடைய னெனது கொடிய கடின நெஞ்சக் கல்லையே
கனிய தாக்கித் தூக்கிக் கொண்டாய் துரியத் தெல்லையே
உடையாய் துரியத் தலத்தின் மேனின் றோங்குந் தலத்திலே
உன்பா லிருக்க வைத்தா யென்னை யுவந்து வலத்திலே. எனக்கு 76

அறிந்த நாள்கள் தொடங்கி யிற்றைப் பகலின் வரையுமே
அடியேன் பட்ட பாட்டை நினைக்கிற் கல்லுங் கரையுமே
எறிந்த பாடு முழுதும் பெரிய இன்ப மாயிற்றே
எந்தாய் கருணை யெனக்கு மிகவுஞ் சொந்த மாயிற்றே. எனக்கு 77

பனிரண் டாண்டு தொடங்கி யிற்றைப் பகலின் வரையுமே
படியிற் பட்ட பாட்டை நினைக்கின் மலையுங் கரையுமே
துனியா தந்தப் பாடு முழுதுஞ் சுகம தாயிற்றே
துரையே நின்மெய் யருளிங் கெனக்குச் சொந்த மாயிற்றே. எனக்கு 78

ஈரா றாண்டு தொடங்கி யிற்றைப் பகலின் வரையுமே
எளியேன் பட்ட பாட்டை நினைக்கி லிரும்புங் கரையுமே
ஏரா யந்தப் பாடு முழுது மின்ப மாயிற்றே
இறைவா நின்மெய் யருளிங் கெனக்குச் சொந்த மாயிற்றே. எனக்கு 79

பாட்டா வுனது பதத்தை நாடிப் பாடும் வாயரே
பதியே யிந்த வுலகி லெனக்கு மிகவு நேயரே
நாட்டா ரெனினு நின்னை யுளத்து நாட்டா ராயிலோ
நயவேன் சிறிது நயத்தல் கயக்கு மெட்டிக் காயிலோ. எனக்கு 80

சின்ன வயது தொடங்கி யென்னைக் காக்குந் தெய்வமே
சிறியேன் மயங்குந் தோறு மயக்கந் தீர்க்குந் தெய்வமே
என்னை யவத்தைக் கடலின் றிங்ஙன் எடுத்த தெய்வமே
எல்லா நலமுந் தருமின் னமுதங் கொடுத்த தெய்வமே. எனக்கு 81

அச்சந் தீர்த்திங் கென்னை யாட்கொண் டருளு மமுதனே
அடியேன் பிழைக ளனைத்தும் பொறுத்து ளமர்ந்த வமுதனே
இச்சை யாவு முடித்துக் கொடுத்துள் ளிலங்குங் குரவனே
என்று மிறவாக் கல்வி யடியேற் கீந்த குரவனே. எனக்கு 82

உள்ளும் புறத்துங் கருணை யமுத மூட்டும் அன்னையே
ஓதா துணர வுணர்வு முணர்வை யுதவும் அன்னையே
தெள்ளுங் கருணைச் செங்கோல் செலுத்தச் செய்த அப்பனே
செல்வப் பிள்ளை யாக்கி யென்னுட் சேர்ந்த அப்பனே. எனக்கு 83

இரவும் பகலு மென்னைக் காத்துள் ளிருக்கு மிறைவனே
எல்லா வுலகும் புகழ வென்னைமே லேத்து மிறைவனே
கரவு நினையா தெனக்கு மெய்ம்மைக் காட்டுந் துணைவனே
களித்தென் றனையுஞ் சன்மார்க் கத்தில் நாட்டுந் துணைவனே. எனக்கு 84

சற்றும் வருந்தப் பாரா தென்னைத் தாங்கு நேயனே
தானு னென்று பிரித்தற் கரிய தரத்து நேயனே
முற்றுந் தனதை யெனக்குக் கொடுத்து முயங்கு நேயனே
முன்னேநான்செய் தவத்தாலெனக்குள் முளைத்தநேயனே. எனக்கு 85

நேயா நின்னை நினைக்க நினைக்க நெஞ்சங் களிக்குதே
நெடிய விழிக ளிரண்டு மின்ப நீர் துளிக்குதே
ஓயா துனது பெருமை நினைக்க வுவகை நீடுதே
உரைப்பா ரெவரென் றுலகிற் பலரை யோடித் தேடுதே. எனக்கு 86

பொன்னே நின்னை யுன்ன வுடம்பு புளக மூடுதே
பொதுவைக் காண வுள்ளே யாசை பொங்கி யாடுதே
என்னே பிறர்தம் வரவு நோக்கக் கண்கள் வெதும்புதே
எந்தாய் வரவை நினைக்கக் களிப்புப் பொங்கித் ததும்புதே. எனக்கு 87

மணியே நின்னைப் பொதுவிற் கண்ட மனிதர் தேவரே
மனிதர் கண்ணிற் பட்ட புல்லு மரமுந் தேவரே
அணியே நின்னைப் பாடு மடியர் தாமோ மூவரே
அவரைக் கண்டா ரவரைக் கண்டா ரவர்கள் மூவரே. எனக்கு 88

வாழ்வே நினது நடங்கண் டவரைச் சுத்த ரென்பனே
மலங்கண் மூன்றுந் தவிர்த்த சுத்த முத்த ரென்பனே
ஏழ்வே தனையு நீக்கி வாழு நித்த ரென்பனே
எல்லாஞ் செய்ய வல்ல ஞான சித்த ரென்பனே. எனக்கு 89

சிவமே நின்னைப் பொதுவிற் கண்ட செல்வர் தம்மையே
தேவர் கண்டு கொண்டு வணங்கு கின்ற நிம்மையே
தவமே புரிந்து நின்னை யுணர்ந்த சாந்த சித்தரே
தகுமைந் தொழிலுந் தாமே யியற்ற வாய்ந்த சித்தரே. எனக்கு 90

ஐவ ராலு நின்னை யறிதற் கருமை யருமையே
யாரே யறிவர் மறையு மறியா நினது பெருமையே
பொய் வராத வாய்கொண் டுன்னைப் போற்று மன்பரே
பொருளே நின்னை யறிவ ரவரே யழியா வின்பரே. எனக்கு 91

என்னைக் காட்டி யென்னு ளிலங்கும் நின்னைக் காட்டியே
இறங்கா நிலையி லேற்றி ஞான வமுத மூட்டியே
பொன்னைக் காட்டிப் பொன்னே நினது புகழைப் பாடியே
புந்தி களிக்க வைத்தா யழியா தென்னை நாடியே. எனக்கு 92

அண்ட கோடி யனைத்துங் காணுங் கண்க ளெய்தியே
அறிந்தே னெங்கைக் கனிபோ லவற்றி னுள்ள செய்தியே
பிண்ட கோடி முழுதுங் காணப் பெற்று நின்னையே
பேசிப் பேசி வியக்கின் றேனிப் பிறவி தன்னையே. எனக்கு 93

சிற்றம் பலத்தில் நடனங் காட்டிச் சிவத்தைக் காட்டியே
சிறப்பா யெல்லாம் வல்ல சித்தித் திறத்தைக் காட்டியே
குற்றம் பலவுந் தீர்த்தென் றனக்கோர் முடியுஞ் சூட்டியே
கோவே நீயு மென்றுட் கலந்து கொண்டாய் நாட்டியே. எனக்கு 94

சுத்த நிலையில் நடுநின் றெங்குந் தோன்றுஞ் ஜோதியே
துரிய வெளியைக் கடந்தப் பாலுந் துலங்குஞ் ஜோதியே
சித்த ருளத்திற் சுடர்செய் தோங்குந் தெய்வ ஜோதியே
சிற்றம் பலத்தி னடஞ்செய் தெனக்குட் சிறந்த ஜோதியே. எனக்கு 95

அன்றே யென்னை அடிய னாக்கி யாண்ட ஜோதியே
அதன்பின் பிள்ளை யாக்கி யருளிங் களித்த ஜோதியே
நன்றே மீட்டு நேய னாக்கி நயந்த ஜோதியே
நானும் நீயு மோன்றேன் றுரைத்து நல்கு ஜோதியே. எனக்கு 96

நீயே வலிந்திங் கென்னை யாண்ட நீதி ஜோதியே
நின்னைப் பாட வென்னை வளர்க்கு நிமல ஜோதியே
தாயே யெனவந் தென்னைக் காத்த தரும ஜோதியே
தன்மை பிறரா லறிதற் கரிய தலைமை ஜோதியே. எனக்கு 97

சாகாக் கல்வி யெனக்குப் பயிற்றித் தந்த ஜோதியே
தன்னேர் முடியொன் றெனது முடியிற் றரித்த ஜோதியே
ஏகாக் கரப்பொற் பீடத் தென்னை யேற்று ஜோதியே
எல்லாம் வல்ல சித்தி யாட்சி யீந்த ஜோதியே. எனக்கு 98

ஜோதி யெவையும் விளங்க விளக்குஞ் ஜோதி வாழியே
துரிய வெளியி னடுநின் றோங்குஞ் ஜோதி வாழியே
சூதி லாமெய்ச் சிற்றம் பலத்து ஜோதி வெல்கவே
துலங்கப் பொன்னம் பலத்தி லாடுஞ் ஜோதி வெல்கவே எனக்கு 99

சுத்த சிவசன் மார்க்க நீதி ஜோதி போற்றியே
சுகவாழ் வளித்த சிற்றம் பலத்து ஜோதி போற்றியே
சுத்த சுடர்ப்பொற் சபையி லாடுஞ் ஜோதி போற்றியே
ஜோதி முழுதும் விளங்க விளங்குஞ் ஜோதி போற்றியே. 100

எனக்கு முனக்கும் இசைந்த பொருத்தம் என்ன பொருத்தமோ
இந்தப் பொருத்தம் உலகில் பிறருக் கெய்தும் பொருத்தமோ.

அருட்பெருஞ்ஜோதி

---

# 140. வருகைக்கண்ணி

## வர்க்கமாலை என்னும் காலைப்பாட்டு

இராகம் - காம்போதி - அடதாளம்

அருட்பெருந்ஜோதி

பல்லவி

வாரீர் சிதம்பர வல்லி சிவகாம
வல்லி மணாளரே வாரீர்
மணிமன்ற வாணரே வாரீர்.

சரணங்கள்

அருட்பெருஞ் ஜோதியென் ஆண்டவ ரேதிரு
அம்பல வாணரே வாரீர்
அன்புடை யாளரே வாரீர். வாரீர் 1

அச்சந் தவிர்த்தென்னை ஆட்கொண் டருளிய
அந்தணரே யிங்கு வாரீர்
அம்பலத் தையரே வாரீர். வாரீர் 2

அன்புரு வானவர் இன்புற வுள்ளே
அறிவுரு வாயினீர் வாரீர்
அருட்பெருஞ் ஜோதியீர் வாரீர். வாரீர் 3

அண்டங்க ளெல்லாம் அணுவி லடக்கும்
அரும்பெருஞ் சித்தரே வாரீர்
அற்புதரே யிங்கு வாரீர். வாரீர் 4

அம்மையு மாயெனக் கப்பனு மாகியென்
அன்பனு மாயினீர் வாரீர்
அங்கண ரேயிங்கு வாரீர். வாரீர் 5

அல்ல லறுத்தென் அறிவை விளக்கிய
அம்பல வாணரே வாரீர்
செம்பொரு ளாயினீர் வாரீர். வாரீர் 6

அப்பணி பொன்முடி அப்பனென் றேத்துமெய்
அன்பருக் கன்பரே வாரீர்
இன்பந் தரவிங்கு வாரீர். வாரீர் 7

அச்சுதர் நான்முகர் உச்சியில் மெச்சும்
அடிக்கம லத்தீரே வாரீர்
நடிக்கவல் லீரிங்கு வாரீர். வாரீர் 8

அண்டர்க் கரும்பதந் தொண்டர்க் கெளிதில்
அளித்திட வல்லீரே வாரீர்
களித்தென்னை யாண்டீரே வாரீர். வாரீர் 9

அம்பர மான சிதம்பர நாடகம்
ஆடவல்லீ ரிங்கு வாரீர்
பாடவல்லீ ரிங்கு வாரீர். வாரீர் 10

ஆதி யநாதியென் றாரணம் போற்றும்
அரும்பெருஞ் ஜோதியீர் வாரீர்
ஆனந்த நாடரே வாரீர். வாரீர் 11

ஆகம வேதம் அனேக முகங்கொண்
டருச்சிக்கும் பாதரே வாரீர்
ஆருயிர் நாதரே வாரீர். வாரீர் 12

ஆசறும் அந்தங்கள் ஆறும் புகன்றநல்
ஆரியரே யிங்கு வாரீர்
ஆனந்தக் கூத்தரே வாரீர். வாரீர் 13

ஆல நிழற்கண் அமர்ந்தறஞ் சொன்னநல்
ஆரியரே யிங்கு வாரீர்
ஆனந்தக் கூத்தரே வாரீர். வாரீர் 14

ஆரமு தாகியென் ஆவியைக் காக்கின்ற
ஆனந்தரே யிங்கு வாரீர்
ஆடவல்லீ ரிங்கு வாரீர். வாரீர் 15

ஆதர வாயென் அறிவைத் தெளிவித்
தமுத மளித்தீரே வாரீர்
ஆடிய பாதரே வாரீர். வாரீர் 16

ஆதார மீதானத் தப்பாலுங் காண்டற்
கரும்பெருஞ் ஜோதியீர் வாரீர்
கரும்பி னினிக்கின்றீர் வாரீர். வாரீர் 17

ஆதியு மந்தமும் இல்லா வரும்பெரும்
ஜோதியரே யிங்கு வாரீர்
வேதியரே யிங்கு வாரீர். வாரீர் 18

ஆடல்கொண் டீர்திரு அம்பலத் தேயென்றன்
பாடல்கொண் டீரிங்கு வாரீர்
கூடவல்லீ ரிங்கு வாரீர். வாரீர் 19

ஆக்கங் கொடுத்தென் றன் தூக்கந் தடுத்தவென்
ஆண்டவரே யிங்கு வாரீர்
தாண்டவரே யிங்கு வாரீர். வாரீர் 20

ஆபத்தை நீக்கியோர் தீபத்தை யேற்றியென்
ஆணவம் போக்கினீர் வாரீர்
காணவந் தேனிங்கு வாரீர். வாரீர் 21

இதுதரு ணந்தரு ணந்தரு ணம்என்
இறையவரே யிங்கு வாரீர்
இடர்தவிர்த் தாட்கொண்டீர் வாரீர். வாரீர் 22

இச்சையின் வண்ணம் எனக்கருள் செய்ய
இதுதருண மிங்கு வாரீர்
இன்னமு தாயினீர் வாரீர். வாரீர் 23

இன்பங் கொடுத்தேயென் துன்பங் கெடுத்துள்
இருக்கின்ற நாதரே வாரீர்
இருக்கின் பொருளானீர் வாரீர். வாரீர் 24

இரவும் பகலும் இதயத்தி லூறி
இனிக்கு மமுதரே வாரீர்
இனித்தரியே னிங்கு வாரீர். வாரீர் 25

இன்னுந் தாழ்த்தங்கே இருப்ப தழகன்று
இதுதருண மிங்கு வாரீர்
இருமையு மாயினீர் வாரீர். வாரீர் 26

இடர்தவிர்த் தின்பம் எனக்களித் தாளற்
கிதுதருண மிங்கு வாரீர்
இனியவரே யிங்கு வாரீர். வாரீர் 27

இறையும் பொறுப்பரி தென்னுயிர் நாதரே
இத்தருண மிங்கு வாரீர்
இதநடஞ் செய்கின்றீர் வாரீர். வாரீர் 28

இம்மையி லேயெனக் கம்மையி லின்பம்
இதுவென் றளித்தீரே வாரீர்
இதயத் திருந்தீரே வாரீர். வாரீர் 29

இங்கங்கென் னாமலே எள்ளுக்கு ளெண்ணெய்போல்
எங்கும் நிறைந்தீரே வாரீர்
இந்தெழில் வண்ணரே வாரீர். வாரீர் 30

இணையொன்று மில்லா இணையடி யென்தலை
ஏறவைத்தீ ரிங்கு வாரீர்
இறுதியி லீரிங்கு வாரீர். வாரீர் 31

ஈன்றருளு மெந்தையும் என்குரு வும்மெனக்
கின்பமு மாயினீர் வாரீர்
அன்பருக் கன்பரே வாரீர். வாரீர் 32

ஈன மறுத்துமெய்ஞ் ஞான விளக்கென்
இதயத்தி லேற்றினீர் வாரீர்
உதயச் சுடரினீர் வாரீர். வாரீர் 33

ஈடறி யாதமெய் வீடுதந் தன்பரை
இன்புறச் செய்கின்றீர் வாரீர்
வன்பர்க் கரியீரே வாரீர். வாரீர் 34

ஈதிய லென்றுநின் றோதிய வேதத்திற்
கெட்டா திருந்தீரே வாரீர்
நட்டார்க் கெளியீரே வாரீர். வாரீர் 35

ஈச ரெனும்பல தேசர்கள் போற்றுமந்
நேசரே நீரிங்கு வாரீர்
நேசரே நீரிங்கு வாரீர். வாரீர் 36

ஈச ரெவரியர்க்கு நேசரென் றன்பர்கள்
ஏசநின்றீ ரிங்கு வாரீர்
நாசமில்லீ ரிங்கு வாரீர். வாரீர் 37

ஈறறி யாமறை யோனென் றறிஞர்
இயம்பநின் றீரிங்கு வாரீர்
வயந்தருவீ ரிங்கு வாரீர். வாரீர் 38

ஈதல்கண் டேமிகக் காதல்கொண் டேனெனக்
கீதல்செய்வீ ரிங்கு வாரீர்
ஓதரியீ ரிங்கு வாரீர். வாரீர் 39

ஈடணை யற்றநெஞ் சூடணை யுற்றுமற்
றீடணையீ ரிங்கு வாரீர்
ஆடவல் லீரிங்கு வாரீர். வாரீர் 40

ஈண்டறி வோங்கிடத் தூண்டறி வாகியுள்
ஈண்டுகின்றீ ரிங்கு வாரீர்
ஆண்டவரே யிங்கு வாரீர். வாரீர் 41

உள்ளதே யுள்ளது விள்ளது வென்றெனக்
குள்ள துரைசெய்தீர் வாரீர்
வள்ளல் விரைந்திங்கு வாரீர். வாரீர் 42

உருவா யருவாய் உருவரு வாயிவை
ஒன்றுமல்லீ ரிங்கு வாரீர்
என்றுநல்லீ ரிங்கு வாரீர். வாரீர் 43

உறவும் பகையும் உடைய நடையில்
உறவுமெண்ணே னிங்கு வாரீர்
பிறவுநண்ணே னிங்கு வாரீர். வாரீர் 44

உள்ளக் கருத்தைநான் வள்ளற் குரைப்பதென
உள்ளத் திருந்தீரே வாரீர்
விள்ளற் கரியீரே வாரீர். வாரீர் 45

உய்யவல் லார்க்கருள் செய்யவல் லீர்நானும்
உய்யவல்லேனிங்கு வாரீர்
செய்யவல்லீ ரிங்கு வாரீர். வாரீர் 46

உடையவ ராரிக் கடையவ னேனுக்கு
உடையவரே யிங்கு வாரீர்
தடைதவிர்ப்பீ ரிங்கு வாரீர். வாரீர் 47

உறங்கி யிறங்கும் உலகவர் போலநான்
உறங்கமாட் டேனிங்கு வாரீர்
இறங்கமாட் டேனிங்கு வாரீர். வாரீர் 48

உண்டுடுத் தின்னும் உழலமாட் டேனமு
துண்டி விரும்பினேன் வாரீர்
உண்டிதர விங்கு வாரீர். வாரீர் 49

உன்னுதோ றுன்னுதோ றுள்ளே யினிக்கின்ற
உத்தமரே யிங்கு வாரீர்
உற்றதுணை யானீர் வாரீர். வாரீர் 50

உம்மாணை யும்மாணை உம்மையல் லாலெனக்
குற்றவர் மற்றில்லை வாரீர்
உற்றறிந்தீ ரிங்கு வாரீர். வாரீர் 51

ஊன நடந்தவிர்த் தான நடங்காட்டும்
மோன நடேசரே வாரீர்
ஞான நடேசரே வாரீர். வாரீர் 52

ஊருமில் லீரொரு பேருமில் லீரறி
வோருமில் லீரிங்கு வாரீர்
யாருமில் லீரிங்கு வாரீர். வாரீர் 53

ஊறு சிவானந்தப் பேறு தருகின்ற
வீறுடை யீரிங்கு வாரீர்
நீறுடை யீரிங்கு வாரீர். வாரீர் 54

ஊன்றுநுஞ் சேவடி சான்று தரிக்கிலேன்
ஏன்றுகொள் வீரிங்கு வாரீர்
ஆன்றவ ரேயிங்கு வாரீர். வாரீர் 55

ஊற்றை யுடம்பிது மாற்றுயர் பொன்னென
ஏற்றம் அருள்செய்வீர் வாரீர்
தேற்றம் அருள்செய்வீர் வாரீர். வாரீர் 56

ஊடலில் லீரெனக் கூடவல் லீரென்னுள்
பாடல்சொல் வீரிங்கு வாரீர்
ஆடல்நல் லீரிங்கு வாரீர். வாரீர் 57

ஊக்கங் கொடுத்தென்றன் ஏக்கங் கெடுத்தருள்
ஆக்க மடுத்தீரே வாரீர்
தூக்கந் தவிர்த்தீரே வாரீர். வாரீர் 58

ஊமை யெழுத்தினுள் ஆமை யெழுத்துண்டென்
றோமை யறிவித்தீர் வாரீர்
சேமஞ் செறிவித்தீர் வாரீர். வாரீர் 59

ஊகமி லேன்பெற்ற தேக மழியாத
யோகங் கொடுத்தீரே வாரீர்
போகங் கொடுத்தீரே வாரீர். வாரீர் 60

ஊதியந் தந்தநல் வேதியரே யுண்மை
ஓதிய நாதரே வாரீர்
ஆதி யனாதியீர் வாரீர். வாரீர் 61

**என்**குறை தீர்த்தென்னுள் நன்குறை வீரினி
என்குறை யென்முன்னீர் வாரீர்
தங்குறை யில்லீரே வாரீர். வாரீர் 62

என்னுயி ராகியென் தன்னுயிர்க் குள்ளேயோர்
இன்னுயி ராயினீர் வாரீர்
என்னுயிர் நாதரே வாரீர். வாரீர் 63

என்கண் ணருள்செய்தென் புன்கண் விலக்கிய
என்கண் ணனையீரே வாரீர்
மின்கண் ணுதலீரே வாரீர்.　வாரீர்　64

எல்லா வுயிர்களும் நல்லா ரெனத்தொழும்
எல்லாம்வல்லீ ரிங்கு வாரீர்
சொல்லா நிலையினீர் வாரீர்.　வாரீர்　65

எட்டு மிரண்டுமென் றிட்டு வழங்குதல்
எட்டும்படி செய்தீர் வாரீர்
[1] எட்டுரு வாயினீர் வாரீர்.　வாரீர்　66

என்று கண்டாமிது நன்றுகொண் டாளுக
என்றுதந்தீ ரிங்கு வாரீர்
அன்றுவந்தீ ரின்று வாரீர்.　வாரீர்　67

எச்சம யங்களும் பொய்ச்சம யமென்றீர்
இச்சமய மிங்கு வாரீர்
மெய்ச்சம யந்தந்தீர் வாரீர்.　வாரீர்　68

என்பாற் களிப்பொடும் அன்பாலொன் றீந்திதை
இன்பாற் பெறுகென்றீர் வாரீர்
தென்பால் முகங்கொண்டீர் வாரீர்.　வாரீர்　69

எச்ச வுரையன்றென் இச்சை யெலாமும
திச்சைகண்டீ ரிங்கு வாரீர்
அச்சந் தவிர்த்தீரே வாரீர்.　வாரீர்　70

எண்ண மெல்லாமும தெண்ணமல் லால்வேறோர்
எண்ண மெனக்கில்லை வாரீர்
வண்ண மளிக்கின்றீர் வாரீர்.　வாரீர்　71

ஏராய நான்முகர் நாரா யணர்மற்றும்
பாராயணஞ் செய்வீர் வாரீர்
பூராய மாயினீர் வாரீர்.　வாரீர்　72

ஏம மிகுந்திரு வாம சுகந்தரும்
ஏம சபேசரே வாரீர்
சோம சிகாமணி வாரீர்.　வாரீர்　73

1. எட்டும் இரண்டும்—பத்து. (௧0) ய-ஆன்மா. எட்டுரு—அஷ்டமூர்த்தம், எட்டு உரு—(எட்டு தமிழில் எழுத 'அ' ஆகும்) அகாரவடிவம் எட்டுரு—அரு.

ஏதமி லாப்பர நாத முடிப்பொருள்
ஏதது சொல்லுவீர் வாரீர்
ஈத லுடையீரே வாரீர். வாரீர் 74

ஏக பராபர யோக [1] வெளிக்கப்பால்
ஏக வெளிநின்றீர் வாரீர்
ஏக ரனேகரே வாரீர். வாரீர் 75

ஏறி யிறங்கி இருந்தே னிறங்காமல்
ஏறவைத்தீ ரிங்கு வாரீர்
தேறவைத்தீ ரிங்கு வாரீர். வாரீர் 76

ஏகாந்த நன்னிலை யோகாந்தத் துள்ளதென்
றேகாந்தஞ் சொல்லினீர் வாரீர்
தேகாந்த மில்லீரே வாரீர். வாரீர் 77

ஏகாத கல்விதான் சாகாத கல்வியென்
றேகாத லாற்சொன்னீர் வாரீர்
வேகாத காலினீர் வாரீர். வாரீர் 78

ஏடா யிரமென்னைக் கோடா மொழியொன்றே
ஏடாவென் றீரிங்கு வாரீர்
ஈடாவா ரில்லீரே வாரீர். வாரீர் 79

ஏசாத தந்திரம் பேசாத மந்திரம்
ஈசான மேலென்றீர் வாரீர்
ஆசாதி யில்லீரே வாரீர். வாரீர் 80

ஏனென்பார் வேறிலை நானன்பாற் கூவுகின்
றேனென்பா லேனென்பீர் வாரீர்
ஆனின்பா லாடுவீர் வாரீர். வாரீர் 81

ஐந்து மலங்களும் வெந்து விழவெழுத்
தைந்துஞ்செய் யுமென்றீர் வாரீர்
இந்து சிகாமணி வாரீர். வாரீர் 82

ஐயமுற் றேனையிவ் வையங் கரியாக
ஐயந் தவிர்த்தீரே வாரீர்
மெய்யம் பலத்தீரே வாரீர். வாரீர் 83

1 பராபரயோகம் என்பது — ஞானயோகம், ஏகவெளி என்பது—ஞானஞானம்

ஐயர் நடம்புரி மெய்யரென் றோயுணர்க்
கையர்தொழ நின்றீர் வாரீர்
துய்ய ருளநின்றீர் வாரீர். வாரீர் 84

ஐவணங் காட்டுநம் மெய்வணம் வேட்டுநின்
றைவண ரேத்துவீர் வாரீர்
பொய்வணம் போக்குவீர் வாரீர். வாரீர் 85

ஒன்றே சிவமதை யொன்றுசன் மார்க்கமும்
ஒன்றேயென் றீரிங்கு வாரீர்
நன்றே நின்றீரிங்கு வாரீர். வாரீர் 86

ஒப்பாரில் லீருமக் கிப்பாரிற் பிள்ளைநான்
ஒப்பாரி யல்லகாண் வாரீர்
முப்பாழ் கடந்தீரே வாரீர். வாரீர் 87

1 ஒத்த விடந்தன்னில் நித்திரை செய்யென்றீர்
ஒத்த விடங்காட்ட வாரீர்
சித்த சிகாமணி வாரீர். வாரீர் 88

ஒட்டேமற் றில்லைநான் விட்டுப் பிரிகலேன்
ஒட்டுவைத் தேனும்மேல் வாரீர்
எட்டுக் குணத்தீரே வாரீர். வாரீர் 89

ஒருமை நிலையி லிருமையுந் தந்த
ஒருமையி னீரிங்கு வாரீர்
பெருமையி னீரிங்கு வாரீர். வாரீர் 90

ஒண்மை விரும்பினேன் அண்மையி லீகுவீர்
உண்மை சொன்னே னிங்கு வாரீர்
வண்மை யிடங்கொண்டீர் வாரீர். வாரீர் 91

ஓங்கார நாடகம் பாங்காகச் செய்கின்ற
ஓங்கார நாடரே வாரீர்
ஆங்கார நீக்கினீர் வாரீர். வாரீர் 92

ஓங்கும்பிண் டாண்டங்கள் தாங்கும் பெருவெளி
ஓங்கு நடேசரே வாரீர்
பாங்குசெய் வீரிங்கு வாரீர். வாரீர் 93

1. ஔவை வாக்கு. ஒத்தவிடம் என்பது—மேடுபள்ளமில்லாத இடம். மனம் ஒத்த இடம் என்பது - நினைப்பு மறப்பு அற்ற இடம். தத்துவாதீத நிலை என்பது - தனித்த இடம்.

ஓசையி னுள்ளேயோர் ஆசையு திக்கமேல்
ஓசைசெய் வித்தீரே வாரீர்
பாச மறுத்தீரே வாரீர். வாரீர் 94

ஓரா துலகினைப் பாரா திருநினைக்
கோரா வகையென்றீர் வாரீர்
பேரா நிலைதந்தீர் வாரீர். வாரீர் 95

ஓடாது மாயையை நாடாது நன்னெறி
ஊடா திருவென்றீர் வாரீர்
வாடா திருவென்றீர் வாரீர். வாரீர் 96

ஓலக் கபாடத்தைச் சாலத் திறந்தருள்
ஓலக்கங் காட்டினீர் வாரீர்
காலக் கணக்கில்லீர் வாரீர். வாரீர் 97

ஓடத்தி னின்றொரு மாடத்தி லேற்றிமெய்
யூடத்தைக் காட்டினீர் வாரீர்
வேடத்தைப் பூட்டினீர் வாரீர். வாரீர் 98

ஓமத்திலே நடுச் சாமத்திலே யெனை
1 ஓமத்த னாக்கினீர் வாரீர்
சாமத்த நீக்கினீர் வாரீர். வாரீர் 99

ஓமென்ப தற்குமுன் ஆமென் றுரைத்துடன்
ஊமென்று காட்டினீர் வாரீர்
நாமென்று நாட்டினீர் வாரீர். வாரீர் 100

ஔவிய மார்க்கத்தின் வெவ்விய னீக்கியே
செவ்விய னாக்கினீர் வாரீர்
ஒவ்வியொன் றாக்கினீர் வாரீர். வாரீர் 101

கண்ணனை யீருண்மைக் காணவென் றாசைக்
கடல்பொங்கு கின்றது வாரீர்
உடல்தங்கு கின்றது வாரீர். வாரீர் 102

கண்டணைந் தாலன்றிக் காதலடங் காதென்
கண்மணியீ ரிங்கு வாரீர்
உண்மணியீ ரிங்கு வாரீர். வாரீர் 103

1 ஓமத்தன் என்பது—உருவருவ வடிவம்; பிரணவதேகம்.
சாமத்தம் என்பது—சாகுந்தன்மையை

கட்டிக்கொண் டும்மைக் கலந்துகொளல் வேண்டும்
காரணரே யிங்கு வாரீர்
பூரணரே யிங்கு வாரீர். 104

வாரீர் சிதம்பர வல்லி சிவகாம
வல்லி மணாளரே வாரீர்
மணிமன்ற வாணரே வாரீர்

அருட்பெருஞ்ஜோதி

## 141. வேட்கைக் கண்ணி

இராகம் - ஆனந்தபைரவி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

அணையவாரீ ரென்னை அணையவாரீர்
அணிகிளர்சிற் றம்பலத்தீர் அணையவாரீர்.

சரணங்கள்

இயற்கையுண்மை வடிவினரே அணையவாரீர்
எல்லாஞ்செய் வல்லவரே அணையவாரீர்
இயற்கைவிளக் கத்தவரே அணையவாரீர்
எல்லார்க்கு நல்லவரே அணையவாரீர்
1 இயற்கையின்ப மானவரே அணையவாரீர்
இறைமையெலா முடையவரே அணையவாரீர்
இயற்கைநிறை வானவரே அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணைய 1

உலகமெலா முடையவரே அணையவாரீர்
உண்மையுரைக் கின்றவரே அணையவாரீர்
கலகமறுத் தாண்டவரே அணையவாரீர்
கண்ணனைய காதலரே அணையவாரீர்
அலகறியாப் பெருமையரே அணையவாரீர்
அற்புதப்பொற் ஜோதியரே அணையவாரீர்
இலகுசபா பதியவரே அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணைய 2

1 இயற்கை உண்மை என்பது—சத்து; இயற்கை விளக்கம் என்பது—சித்து; இயற்கை இன்பம் என்பது—ஆனந்தம்.

போதுவில்நடிக் கின்றவரே அணையவாரீர்
பொற்புடைய புண்ணியரே அணையவாரீர்
மதுவிலினிக் கின்றவரே அணையவாரீர்
மன்னியவென் மன்னவரே அணையவாரீர்
விதுவினமு தானவரே அணையவாரீர்
மெய்புரைத்த வித்தகரே அணையவாரீர்
இதுதருண மிறையவரே அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணைய 3

வினைமாலை நீத்தவரே அணையவாரீர்
வேதமுடிப் பொருளவரே அணையவாரீர்
அனைமாலைக் காத்தவரே அணையவாரீர்
அருட்பெருஞ் ஜோதிப்பதியீர் அணையவாரீர்
புனைமாலை வேய்ந்தவரே அணையவாரீர்
பொதுவினிறை பூரணரே அணையவாரீர்
எனைமாலை யிட்டவரே அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணைய 4

சிறுவயதி லெனைவிழைந்தீர் அணையவாரீர்
சித்தசிகா மணியேநீர் அணையவாரீர்
உறுவயதிங் கிதுதருணம் அணையவாரீர்
உண்மைசொன்ன வுத்தமரே அணையவாரீர்
பொறுமைமிக வுடையவரே அணையவாரீர்
பொய்யாத வாசகரே அணையவாரீர்
இறுதிதவிர்த் தாண்டவரே அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணைய 5

சாதிமதந் தவிர்த்தவரே அணையவாரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீர் அணையவாரீர்
ஆதியந்த மில்லவரே அணையவாரீர்
ஆரணங்கள் போற்றநின்றீர் அணையவாரீர்
ஓதியுணர் வரியவரே அணையவாரீர்
உள்ளபடி யுரைத்தவரே அணையவாரீர்
ஈதிசைந்த தருணமிங்கே அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணைய 6

அன்பாட்டை விழைந்தவரே அணையவாரீர்
அருட்ஜோதி வடிவினரே அணையவாரீர்
துன்பாட்டை யொழித்தவரே அணையவாரீர்
துரியநிறை பெரியவரே அணையவாரீர்
பின்பாட்டுக் காலமிதே அணையவாரீர்
பிச்சேற்று கின்றவரே அணையவாரீர்
என்பாட்டை யேற்றவரே அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணைய 7

அரைக்கணமுந் தரியேனு னணையவாரீர்
ஆணையும்மே லாணையென்னை அணையவாரீர்
புரைக்கணங்கண் டறியேனு னணையவாரீர்
பொன்மேனிப் புண்ணியரே அணையவாரீர்
வரைக்கணஞ்செய் வித்தவரே அணையவாரீர்
மன்றில்நடிக் கின்றவரே அணையவாரீர்
இரைக்கணவு தருணமிதே அணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணைய 8

கருணைநடஞ் செய்பவரே அணையவாரீர்
கண்மணியிற் கலந்தவரே அணையவாரீர்
அருணிறைசிற் சபையவரே அணையவாரீர்
அன்பர்குறை தீர்த்தவரே அணையவாரீர்
தருணமிது விரைந்தென்னை அணையவாரீர்
சத்தியரே நித்தியரே அணையவாரீர்
இருணிறைந்தார்க் கறிவரியீ ரணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணைய 9

சேரவும்மே லாசைகொண்டே னணையவாரீர்
திருவுளமே யறிந்ததெல்லா மணையவாரீர்
ஆரெனக்கிங் கும்மையல்லா லணையவாரீர்
அயலறியே னுணையும்மே லணையவாரீர்
ஈரகத்தே னல்லவிங்கே அணையவாரீர்
என்னாசை பொங்குகின்ற தணையவாரீர்
ஏரகத்தே யமர்ந்தருள்வீ ரணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். அணைய 10

கலந்துகொள வேண்டுகின்றே னணையவாரீர்
காதல்பொங்கு கின்றதென்னை அணையவாரீர்
புலந்தறியேன் விரைகின்றே னணையவாரீர்
புணர்வதற்குத் தருணமிதே அணையவாரீர்
அலந்தவிடத் தருள்கின்றீ ரணையவாரீர்
அரைக்கணமு மினித்தரியே னணையவாரீர்
இலங்தைதநறுங் கனியனையீ ரணையவாரீர்
என்னுடைய நாயகரே அணையவாரீர். 11

அணையவாரீ ரென்னை அணையவாரீர்
அணிகிளர்சிற் றம்பலத்தீ ரணையவாரீர்.

அருட்பெருஞ்ஜோதி

## 142. ஆடலமுதக்கண்ணி

இராகம் - மோகனம் - ஏகதாளசாப்பு

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

ஆடவாரீ ரென்னோ டாடவாரீர்
அம்பலத்தே யாடுகின்றீ ராடவாரீர்.

சரணங்கள்

தன்மைபிறர்க் கறிவரியீ ராடவாரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீ ராடவாரீர்
வன்மைமனத் தவர்க்கரியீ ராடவாரீர்
வஞ்சமிலா நெஞ்சகத்தீ ராடவாரீர்
தொன்மைமறை முடியமர்ந்தீ ராடவாரீர்
துரியபதங் கடந்தவரே ஆடவாரீர்
இன்மைதவிர்த் தெனையணைந்தீ ராடவாரீர்
என்னுடைய நாயகரே ஆடவாரீர். ஆடவாரீர் 1

திருவாளர் போற்றவென்னோ டாடவாரீர்
திருவனையார் வாழ்த்தவிங்கே ஆடவாரீர்
பெருவாய்மைப் பெருந்தகையீ ராடவாரீர்
பேராசைப் பொங்குகின்றே னாடவாரீர்

உருவாகி யோங்குகின்றீ ராடவாரீர்
உத்தமரே யிதுதருண மாடவாரீர்
இருவானை ரேத்தநின்றீ ராடவாரீர்
என்னுடைய நாயகரே ஆடவாரீர். ஆடவாரீர் 2

வேற்றுமுகம் பாரேனென்றே னாடவாரீர்
வெட்கமெல்லாம் விட்டுவிட்டே னாடவாரீர்
மாற்றுதற்கென் னாதியென்றே னாடவாரீர்
மாற்றிலுயிர் மாய்ப்பேன்கண்டீ ராடவாரீர்
கூற்றுதைத்த சேவடியீ ராடவாரீர்
கொண்டுகுலங் குறியாதீ ராடவாரீர்
ஏற்றதனித் தருணமிதே ஆடவாரீர்
என்னுடைய நாயகரே ஆடவாரீர். ஆடவாரீர் 3

இல்லாமை நீக்கிநின்றீ ராடவாரீர்
என்னைமண மாலையிட்டீ ராடவாரீர்
கொல்லாமை நெறியென்றீ ராடவாரீர்
குற்றமெலாங் குணங்கொண்டீ ராடவாரீர்
நல்லார்சொல் நல்லவரே ஆடவாரீர்
நற்றாயி னினியவரே ஆடவாரீர்
எல்லாஞ்செய் வல்லவரே ஆடவாரீர்
என்னுடைய நாயகரே ஆடவாரீர். ஆடவாரீர் 4

ஆசைகொண்டே னுடையவென்றே னாடவாரீர்
ஆசைவெட்க மறியாதா லாடவாரீர்
ஓசைகொண்ட தெங்குமிங்கே ஆடவாரீர்
உம்மாணை யும்மைவிடே னாடவாரீர்
காசுபணத் தாசையிலே னாடவாரீர்
கைபிடித்தாற் போதுமென்றே னாடவாரீர்
ஏசறநீத் தென்னையாண்டீ ராடவாரீர்
என்னுடைய நாயகரே ஆடவாரீர். ஆடவாரீர் 5

சன்மார்க்க நெறிவைத்தீ ராடவாரீர்
சாகாத வரந்தந்தீ ராடவாரீர்
கன்மார்க்க மனங்கரைத்தீ ராடவாரீர்
கண்ணிசைந்த கணவரேநீ ராடவாரீர்
சொன்மார்க்கப் பொருளானீ ராடவாரீர்
சுத்தவருட் ஜோதியரே ஆடவாரீர்
என்மார்க்க முளத்துகந்தீ ராடவாரீர்
என்னுடைய நாயகரே ஆடவாரீர். ஆடவாரீர் 6

அண்டமெலாங் கண்டவரே ஆடவாரீர்
அகண்டபரி பூரணரே ஆடவாரீர்
பண்டமெலாம் படைத்தவரே ஆடவாரீர்
பற்றொருவி யில்லவரே ஆடவாரீர்
கொண்டெனைவந் தாண்டவரே ஆடவாரீர்
கூத்தாட வல்லவரே ஆடவாரீர்
எண்டகுபொற் சபையுடையீ ராடவாரீர்
என்னுடைய நாயகரே ஆடவாரீர். ஆடவாரீர் 7

பேதநினை யாதுவிரைந் தாடவாரீர்
பின்பாட்டுக் காலையிதே ஆடவாரீர்
ஓதவுல வாதவரே ஆடவாரீர்
உள்ளாசை பொங்குகின்ற தாடவாரீர்
சாதலறுத் தெனையாண்ட ராடவாரீர்
தனித்தலைமைப் பெரும்பதியீ ராடவாரீர்
ஏதமறுத் தவர்க்கினியீ ராடவாரீர்
என்னுடைய நாயகரே ஆடவாரீர். ஆடவாரீர் 8

கள்ளமொன்று மறியேனு டைவாரீர்
கைகலந்து கொண்டீரென் றோ டாடவாரீர்
உள்ளபடி யுரைக்கின்றே னாடவாரீர்
உம்மாசை பொங்குகின்ற தாடவாரீர்
தள்ளரியே னென்னோடிங்கே ஆடவாரீர்
தாழ்க்கிலிறை யுந்தரியே னாடவாரீர்
எள்ளலறுத் தாண்டுகொண்ட ராடவாரீர்
என்னுடைய நாயகரே ஆடவாரீர். ஆடவாரீர் 9

நச்சுகின்றே னிச்சலிங்கே ஆடவாரீர்
நாணமச்சம் விட்டேனென் றோ டாடவாரீர்
விச்சையெலாந் தந்துகளித் தாடவாரீர்
வியந்துரைத்த தருணமிதே ஆடவாரீர்
எச்சுகமு மாகிநின்றீ ராடவாரீர்
எல்லாஞ்செய் வல்லவரே ஆடவாரீர்
இச்சைமய மாயிருந்தே னாடவாரீர்
என்னுடைய நாயகரே ஆடவாரீர். ஆடவாரீர் 10

என்னுயிருக் குயிரானீ ராடவாரீர்
என்னறிவுக் கறிவானீ ராடவாரீர்
என்னுடை யன்பிற்கலந்தீ ராடவாரீர்
என்னுடை யுள்ளத்திருந்தீ ராடவாரீர்

என்னுரிமைத் தாயனையீ ராடவாரீர்
எனதுதனித் தந்தையரே ஆடவாரீர்
என்னொருமைச் சற்குருவே ஆடவாரீர்
என்னுடைய நாயகரே ஆடவாரீர். 11

ஆடவாரீர் என்னோ டாடவாரீர்
அம்பலத்தே யாடுகின்றீ ராடவாரீர்.

அருட்பெருஞ்ஜோதி

## 143. ஆனந்தமேலீடு

இராகம் - பியாகடை - அடதாளசாப்பு

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

ஆடேடி பந்து ஆடேடி பந்து
ஆடேடி பந்து ஆடேடி பந்து.

சரணங்கள்

வாழியென் தோழி யென்வார்த்தை கேளென்றும்
மரண மில்லாவரம் நான்பெற்றுக் கொண்டேன்
சூழியற் செஞ்சுடர் தோற்றுறு கீழ்பாற்
றாய்த்திசை நோக்கினேன் சித்திகழ் சித்தி
ஊழிதோ றூழிநின் றுடுவன் நீயும்
உன்னுதி யேலிங்கே மன்னரு ளாணை
ஆழி கரத்தணிந் தாடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 1

இசையாமற் போனவ ரெல்லாரு நாண
இறவாப் பெருவரம் யான்பெற்றுக் கொண்டேன்
வசையாது மில்லாத மேற்றிசை நோக்கி
வந்தேனென் றோழிநீ வாழிகாண் வேறு
நசையாதே யென்னுடை நண்பது வேண்டில்
நன்மார்க்க மாஞ்சுத்த சன்மார்க்கந் தன்னில்
அசையாமல் நின்றிங்கே ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 2

இன்பாலே யுலகத்தா ரெல்லாருங் காண
இறவாப் பெருவரம் யான்பெற்றுக் கொண்டேன்
தென்பாலே நோக்கினேன் சித்தாடு கின்ற
திருநா ளிதுதொட்டுச் சேர்ந்தது தோழி
துன்பாலே யசைந்தது நீக்கியென் னோடே
சுத்தசன் மார்க்கத்தி லொத்தவ ளாகி
அன்பாலே யறிவாலே ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 3

சதுமறை யாகம சாத்திர மெல்லாஞ்
சந்தைப் படிப்புநஞ் சொந்தப் படிப்போ
விதுநெறி சுத்தசன் மார்க்கத்திற் சாகா
வித்தையைக் கற்றன னுத்தர மெனுமோர்
பொதுவளர் திசைநோக்கி வந்தன னென்றும்
பொன்றுமை வேண்டிடி லென்தோழி நீதான்
அதுவிது வென்னுமை லாடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 4

தப்பாலே சகத்தவர் சாவே துணிந்தார்
தாமுள நாணநான் சாதலைத் தவிர்த்தே
எப்பாலு மெக்காலு மிருத்தலே பெற்றேன்
என்தோழி வாழிநீ யென்னோடு கூடி
துப்பாலே விளங்கிய சுத்தசன் மார்க்க
ஜோதியென் றோதிய வீதியை விட்டே
அப்பாலே போகாம லாடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 5

வெங்கேத மரணத்தை விடுவித்து விட்டேன்
விச்சை யெலாங்கற்றென் னிச்சையின் வண்ணம்
எங்கேயு மாடுதற் கெய்தினேன் தோழி
என்மொழி சத்திய மென்னோடுங் கூடி
இங்கே களிப்பது நன்றிந்த வுலகோ
ஏதக் குழியி விழுக்கு மதனால்
அங்கே பாராதேநீ ஆடேடி பந்து
அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. ஆடேடி 6

சிவமே பொருளென் றறிவா லறிந்தேன்
செத்தாரை மீட்கின்ற திண்மையைப் பெற்றேன்
உவமைய மில்லாத வொருநிலை தன்னில்
ஒன்றிரண் டென்னாத வுண்மையில் நின்றேன்

தவமே புரிகின்று ரெல்லாருங் காணத்
　　தயவா லழைக்கின்றேன் கயவாதே தோழி
அவமே போகாதென்றோ டாடேடி பந்து
　　அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து.　　ஆடேடி 7

துஞ்சாத நிலையொன்று சுத்தசன் மார்க்கச்
　　சூழலி லுண்டது சொல்லள வன்றே
எஞ்சாத வருளாலே யான்பெற்றுக் கொண்டேன்
　　இறந்தாரை யெல்லா மெழுப்புதல் வல்லேன்
விஞ்சாத வறிவாலே தோழிநீ யிங்கே
　　வேதுசெய் மரணத்துக் கெதுசெய்வே மென்றே
அஞ்சாம லென்னோடே ஆடேடி பந்து
　　அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து.　　ஆடேடி 8

ஈரமு மன்புங்கொண் டின்னருள் பெற்றேன்
　　என்மார்க்க மிறவாத சன்மார்க்கந் தோழி
காரமு மிகுபுளிச் சாரமுந் துவர்ப்புங்
　　கைப்போடே உப்போடே கசப்போடே கூட்டி
ஊரமு துண்டுநீ யொழியாதே அந்தோ
　　ஊழிதோ றூழியு முலவாமை நல்கும்
ஆரமு துண்டென்னோ டாடேடி பந்து
　　அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து.　　ஆடேடி 9

துதிசெயு முத்தருஞ் சித்தருங் காணச்
　　சுத்தசன் மார்க்கத்தி லுத்தம ஞானப்
பதிசெயுஞ் சித்திகள் பற்பல வாகப்
　　பாரிடை வானிடைப் பற்பல காலம்
விதிசெயப் பெற்றன னின்றுதொட் டென்றும்
　　மெய்யருட் ஜோதியால் விளைவிப்ப னீயவ்
அதிசயம் பார்க்கலா மாடேடி பந்து
　　அருட்பெருஞ் ஜோதிகண் டாடேடி பந்து. 10

ஆடேடி பந்து ஆடேடி பந்து
ஆடேடி பந்து ஆடேடி பந்து

அருட்பெருஞ்ஜோதி

# 144. ஆனந்தக் களிப்பு [1]

இராகம் - இந்துஸ்தானி - அனுஷிததாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

ஞான மருந்திம் மருந்து — சுகம்
நல்கிய சிற்சபா நாத மருந்து

சரணங்கள்

அருட்பெருஞ் ஜோதி மருந்து — என்னை
ஐந்தொழில் செய்தற் களித்த மருந்து
பொருட்பெரும் போக மருந்து — என்னைப்
புறத்தும் அகத்தும் புணர்ந்த மருந்து. ஞான 1

எல்லாஞ்செய் வல்ல மருந்து — என்னுள்
என்றும் விடாமல் இனிக்கு மருந்து
சொல்லால் அளவா மருந்து — சுயஞ்
ஜோதி அருட்பெருஞ் ஜோதி மருந்து. ஞான 2

காணாது காட்டு மருந்து — என்றன்
கையிற்பொற் கங்கணங் கட்டு மருந்து
ஆணாகிப் பெண்ணாம் மருந்து — அது
வாகி மணிமன்றி லாடு மருந்து. ஞான 3

சுத்தசன் மார்க்க மருந்து — அருட்
ஜோதி மலையில் துலங்கு மருந்து
சித்துரு வான மருந்து — என்னைச்
சித்தெலாம் செய்யச்செய் வித்த மருந்து. ஞான 4

அன்பர்க் கெளிய மருந்து — மற்றை
ஐவர்க்குங் காண்டற் கரிய மருந்து
என்பற்றி லோங்கு மருந்து — என்னை
இன்ப நிலையி லிருத்து மருந்து. ஞான 5

நாதாந்த நாட்டு மருந்து — பர
ஞான வெளியில் நடிக்கு மருந்து
போதாந்தற் கெய்து மருந்து — என்னுள்
பொன்னடி காட்டிப் புணர்ந்த மருந்து. ஞான 6

ஆதி அநாதி மருந்து — திரு
அம்பலத் தேநட மாடு மருந்து
ஜோதி மயமா மருந்து — என்னைச்
சோதியா தாண்ட துரிய மருந்து. ஞான 7

ஆறந்தத் தோங்கு மருந்து — அதற்
கப்பாலுக் கப்பாலு மான மருந்து
ஊறந்த மில்லா மருந்து — எனக்
குள்ளே கலந்த வுறவா மருந்து. ஞான 8

என்னுயிர்க் கன்பா மருந்து — கலந்
தென்னுயிர்க் குள்ளே யிருந்த மருந்து
என்னுயிர் காக்கு மருந்து — என்றும்
என்னுயி ராகிய இன்ப மருந்து. ஞான 9

என்னறி வுட்கொள் மருந்து — என்றும்
என்னறி வாகி யிலங்கு மருந்து
என்னறி வின்ப மருந்து — என்னுள்
என்னறி வுக்கறி வென்னு மருந்து. ஞான 10

என்குரு வான மருந்து — என்றும்
என்தெய்வ மாகி யிருக்கு மருந்து
என்னன்னை யென்னு மருந்து — என்றும்
என்றந்தை யாகிய வின்ப மருந்து. ஞான 11

என்பெரு வாழ்வா மருந்து — என்றும்
என்செல்வ மாகி யிருக்கு மருந்து
என்னுயிர் நட்பா மருந்து — எனக்
கெட்டெட்டுச் சித்தியு மீந்த மருந்து. ஞான 12

என்னிறை யான மருந்து — மகிழ்ந்
தெனக்குத்தன் பொன்மேனி யீந்த மருந்து
தன்னறி வாகு மருந்து — என்னைத்
தந்த மருந்தென்றன் சொந்த மருந்து. ஞான 13

உள்ளத்தி னுள்ளா மருந்து — என்றன்
உயிருக் கநாதி யுறவா மருந்து
தெள்ளத் தெளிக்கு மருந்து — என்னைச்
சிவமாக்கிக் கொண்ட சிவாய மருந்து. ஞான 14

மெய்ப்பொரு ளென்னு மருந்து — எல்லா
வேதா கமத்தும் விளங்கு மருந்து
கைப்பொரு ளான மருந்து — மூன்று
கண்கொண்ட வென்னிரு கண்ணுண் மருந்து. ஞான 15

மதியில் விளைந்த மருந்து — யார்க்கும்
மதிக்கப் படாதபொன் வண்ண மருந்து
கதிதரு மின்ப மருந்து — அருட்
கண்ணுறலென் றன்னைக் கலந்த மருந்து. ஞான 16

கற்பூர ஜோதி மருந்து — பசுங்
கற்பூர நன்மணங் காட்டு மருந்து
பொற்பூவி னேங்கு மருந்து — என்றற்
போதந் தவிர்த்தசிற் போத மருந்து. ஞான 17

மேலை வெளியா மருந்து — நான்
வேண்டுந் தோறெல்லாம் விளையு மருந்து
சாலை விளக்கு மருந்து — சுத்த
சமரச சன்மார்க்க சங்க மருந்து. ஞான 18

என்னைத் தானாக்கு மருந்து — இங்கே
இறந்தாரை யெல்லா மெழுப்பு மருந்து
துன்னுமெய்ச் சோதி மருந்து — அருட்
ஜோதியா லென்னைத் துலக்கு மருந்து. ஞான 19

பொய்யர்க் கரிதா மருந்து — என்னைப்
புறத்து மகத்தும் புணர்ந்த மருந்து
கையிற் கிடைத்த மருந்து — சிவ
காமக் கொடியைக் கலந்த மருந்து. ஞான 20

ஆணவந் தீர்க்கு மருந்து — பர
மானந்தத் தாண்டவ மாடு மருந்து
மாணவ வண்ண மருந்து — என்னை
வலிய வழைத்து வளர்க்கு மருந்து. ஞான 21

வானடு வான மருந்து — என்னை
மாமணி மேடைமேல் வைத்த மருந்து
ஊனந் தவிர்த்த மருந்து — கலந்
துள்ளே யினிக்கின்ற வுண்மை மருந்து. ஞான 22

மலையி லக்கான மருந்து — என்றன்
　　மறைப்பைத் தவிர்த்தமெய் வாழ்க்கை மருந்து
கலைநலங் காட்டு மருந்து — எங்குங்
　　கண்ணுகிக் காணுங் கனத்த மருந்து.　　ஞான 23

அற்புத ஜோதி மருந்து — எல்லாம்
　　ஆகியன் றாகி யமர்ந்த மருந்து
தற்பதந் தந்த மருந்து — எங்குந்
　　தானே தாளுகித் தனித்த மருந்து.　　ஞான 24

தன்னை யளித்த மருந்து — என்றுஞ்
　　சாகாத நல்வரந் தந்த மருந்து
பொன்னடி ஈந்த மருந்து — அருட்
　　போனகந் தந்த புனித மருந்து.　　ஞான 25

கண்ணுக் கினிய மருந்து — என்றன்
　　கைப்பொரு ளாந்தங்கக் கட்டி மருந்து
எண்ணுக் கடங்கா மருந்து — என்னை
　　ஏதக் குழிவிட் டெடுத்த மருந்து.　　ஞான 26

சுட்டப் படாத மருந்து — என்றன்
　　தூக்கமுஞ் சோர்வுந் தொலைத்த மருந்து
எட்டுதற் கொண்ண மருந்து — நான்
　　எட்டிப் பிடிக்க இசைந்த மருந்து.　　ஞான 27

உன்னற் கரிதா மருந்து — எனக்
　　குள்ளும் புறத்தும் உலாவு மருந்து
தன்னந் தனித்த மருந்து — சுத்தச்
　　சாக்கிரா தீதச் சபேச மருந்து.　　ஞான 28

ஒன்றிலொன் றான மருந்து — அந்த
　　ஒன்றி லிரண்டாகி யோங்கு மருந்து
அன்றிமூன் றான மருந்து — நான்
　　காகி யைந்தாகி யமர்ந்த மருந்து.　　ஞான 29

வெளிக்குள் வெளியா மருந்து — எல்லா
　　வெளியுங் கடந்து விளங்கு மருந்து
ஒளிக்குள் ளொளியா மருந்து — எல்லா
　　ஒளியுந் தாளுகிய வுண்மை மருந்து.　　ஞான 30

ஆறுறுக் கப்பான் மருந்து — அதற்
கப்புறத் தீராறுக் கப்பான் மருந்து
ஈறுதி யெல்லா மருந்து — என்னை
எல்லாஞ் செயச்செய்த இன்ப மருந்து. ஞான 31

ஆரணத் தோங்கு மருந்து — அருள்
ஆகம மாகி அண்ணிக்கு மருந்து
காரணங் காட்டு மருந்து — எல்லாங்
கண்ட மருந்தென்னுட் கொண்ட மருந்து. ஞான 32

மலமைந்து நீக்கு மருந்து — புவி
வானண்ட மெல்லாம் வளர்க்கு மருந்து
நலமிக் கருளு மருந்து — தானே
நானாகித் தானாக நாட்டு மருந்து. 33

ஞான மருந்திம் மருந்து — சுகம்
நல்கிய சிற்சபா நாத மருந்து.

அருட்பெருஞ்ஜோதி

## 145. ஆனந்தக் களிப்பு [2]

இங்கிலீஷ்மெட்டு

இராகம் - சங்கராபரணம் - அடதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

சிவசிவ சிவசிவ ஜோதி — சிவ
சிவசிவ சிவசிவ சிவசிவ ஜோதி
சிவசிவ சிவசிவ ஜோதி.

சரணங்கள்

சிற்பர மாம்பரஞ் ஜோதி — அருட்
சித்தெல்லாம் வல்ல சிதம்பர ஜோதி
தற்பர தத்துவ ஜோதி — என்னைத்
தானாக்கிக் கொண்ட தயாநிதி ஜோதி. சிவசிவ 1

சித்துரு வாஞ்சயஞ் ஜோதி — எல்லாஞ்
செய்திட வல்ல சிதம்பர ஜோதி
அத்துவி தானந்த ஜோதி — என்னை
ஆட்கொண் டருளுஞ்சிற் றம்பல ஜோதி. சிவசிவ 2

சின்மய மாம்பெருஞ் ஜோதி — அருட்
செல்வ மளிக்குஞ் சிதம்பர ஜோதி
தன்மய மாய்நிறை ஜோதி — என்னைத்
தந்தமெய் ஜோதி சதானந்த ஜோதி. சிவசிவ 3

ஆதியீ றில்லாமுற் ஜோதி — அரன்
ஆதியர் தம்மை அளித்தபிற் ஜோதி
ஓதி யுணர்வருஞ் ஜோதி — எல்லா
உயிர்களி னுள்ளும் ஒளிர்கின்ற ஜோதி. சிவசிவ 4

மன்னிய பொன்வண்ண ஜோதி — சுக
வண்ணத்த தாம்பெரு மாணிக்க ஜோதி
துன்னிய வச்சிர ஜோதி — முத்து
ஜோதி மரகத ஜோதியுட் ஜோதி. சிவசிவ 5

பார்முத லைந்துமாஞ் ஜோதி — ஐந்திற்
பக்கமேல் கீழ்நடுப் பற்றிய ஜோதி
ஓரைம் பொறியுரு ஜோதி — பொறிக்
குள்ளும் புறத்தும் ஒளிர்கின்ற ஜோதி. சிவசிவ 6

ஐம்புல முந்தானுஞ் ஜோதி — புலத்
தகத்தும் புறத்து மலர்ந்தொளிர் ஜோதி
பொய்ம்மயல் போக்குமுட் ஜோதி — மற்றைப்
பொறிபுலன் உள்ளும் புறத்துமாஞ் ஜோதி. சிவசிவ 7

மனமாதி யெல்லாமாஞ் ஜோதி — அவை
வாழ வகம்புறம் வாழ்கின்ற ஜோதி
இனமான வுள்ளக ஜோதி — சற்றும்
ஏறு திறங்கா திபக்குமோர் ஜோதி. சிவசிவ 8

முக்குணமு மூன்றுஞ் ஜோதி — அவை
முன்பின் னியங்க முடுக்கிய ஜோதி
எக்குணத் துள்ளுமாஞ் ஜோதி — குணம்
எல்லாங் கடந்தே யிலங்கிய ஜோதி. சிவசிவ 9

பகுதிமுன் னாகிய ஜோதி — மூலப்
பகுதிகள் மூன்றும் படைத்தருள் ஜோதி
விகுதி பலவாக்குஞ் ஜோதி — சற்றும்
விகுதியொன் றின்றி விளக்கிய ஜோதி. சிவசிவ 10

காலமுதற் காட்டுஞ் ஜோதி — கால
காரணத் தப்பால் கடந்தொளிர் ஜோதி
கோலம் பலவாகுஞ் ஜோதி — ஒன்றுங்
குறிக்கப் படாச்சிற் குணப்பெருஞ் ஜோதி. சிவசிவ 11

தத்துவ மெல்லாமாஞ் ஜோதி — அந்தத்
தத்துவ மெல்லாந் தருவிக்குஞ் ஜோதி
அத்துவிதப் பெருஞ் ஜோதி — எல்லாம்
அருளில் விளங்க வமர்த்திய ஜோதி. சிவசிவ 12

சத்தர்க ளெல்லாமாஞ் ஜோதி — அவர்
சத்திக ளெல்லாந் தழைப்பிக்குஞ் ஜோதி
முத்த ரனுபவ ஜோதி — பர
முத்தியாஞ் ஜோதிமெய்ச் சித்தியாஞ் ஜோதி. சிவசிவ 13

ஆறந்தத் தேநிறை ஜோதி — அவைக்
கப்புறத் தப்பாலு மாகிய ஜோதி
வீறும் பெருவெளி ஜோதி — மேலும்
வெட்ட வெளியில் விளங்கிய ஜோதி. சிவசிவ 14

பேரருட் ஜோதியுட் ஜோதி — அண்ட
பிண்டங்க ளெல்லாம் பிறங்கிய ஜோதி
வாரமுற் றோங்கிய ஜோதி — மன
வாக்குக் கெட்டாததோர் மாமணி ஜோதி. சிவசிவ 15

ஒன்றான பூரண ஜோதி — அன்பில்
ஒன்றாத உள்ளத்தி லொன்றாத ஜோதி
என்று மொளிர்கின்ற ஜோதி — என்னுள்
என்றும் விளங்கிய என்னுயிர் ஜோதி. சிவசிவ 16

மெய்யேமெய் யாகிய ஜோதி — சுத்த
வேதாந்த வீட்டில் விளங்கிய ஜோதி
துய்ய சிவானந்த ஜோதி — குரு
துரியத் தலத்தே துலங்கிய ஜோதி. சிவசிவ 17

சிவமய மாஞ்சுத்த ஜோதி — சுத்த
சித்தாந்த வீட்டில் சிறந்தொளிர் ஜோதி
உவமை யில்லாப்பெருஞ் ஜோதி — என
துள்ளே நிரம்பி யொளிர்கின்ற ஜோதி. சிவசிவ 18

என்னைத் தானாக்கிய ஜோதி — இங்கே
இறந்தாரை யெல்லா மெழுப்புமோர் ஜோதி
அன்னைக்கு மிக்கருட் ஜோதி — என்னை
ஆண்டமு தந்தந்த ஆனந்த ஜோதி. சிவசிவ 19

சித்தஞ் சிவமாக்குஞ் ஜோதி — நான்
செய்த தவத்தால் தெரிந்தவுட் ஜோதி
புத்தமு தாகிய ஜோதி — சுக
பூரண மாயொளிர் காரண ஜோதி. சிவசிவ 20

தம்பத்தி லேற்றிய ஜோதி — அப்பால்
சார்மணி மேடைமேற் றன்வைத்த ஜோதி
விம்பப் பெருவெளி ஜோதி — அங்கே
வீதியும் வீடும் விளக்கிய ஜோதி. சிவசிவ 21

சுகமய மாகிய ஜோதி — எல்லா
ஜோதியு மான சொரூபவுட் ஜோதி
அகமிதந் தீர்த்தருள் ஜோதி — சச்சி
தானந்த ஜோதி சதானந்த ஜோதி. சிவசிவ 22

நித்த பரானந்த ஜோதி — சுத்த
நிரதி சயானந்த நித்திய ஜோதி
அத்துவி தானந்த ஜோதி — எல்லா
ஆனந்த வண்ணமு மாகிய ஜோதி. சிவசிவ 23

பொய்யாத புண்ணிய ஜோதி — எல்லாப்
பொருளும் விளங்கப் புணர்த்திய ஜோதி
நையா தருள்செய்த ஜோதி — ஒரு
நானுந் தானுமொன் றாய் நண்ணிய ஜோதி. சிவசிவ 24

கண்ணிற் கலந்தருள் ஜோதி — உளக்
கண்ணுயிர்க் கண்ணருட் கண்ணுமாஞ் ஜோதி
எண்ணிற் படாப்பெருஞ் ஜோதி — நான்
எண்ணிய வண்ண மியற்றிய ஜோதி. சிவசிவ 25

விந்து வொளிநடு ஜோதி — பர
விந்து வொளிக்குள் விளங்கிய ஜோதி
நந்துயர் தீர்த்தருட் ஜோதி — பர
நாதாந்த நாட்டுக்கு நாயக ஜோதி. சிவசிவ 26

தானன்றி யொன்றிலா ஜோதி — என்னைத்
தன்மய மாக்கிய சத்திய ஜோதி
நானின்று கண்டதோர் ஜோதி — தானே
நானாகி வாழ்ந்திட நல்கிய ஜோதி. சிவசிவ 27

தன்னிக ரில்லதோர் ஜோதி — சுத்த
சன்மார்க்க சங்கந் தழுவிய ஜோதி
என்னுள் நிறைந்தமெய் ஜோதி — என்னை
ஈன்றைந் தொழில்செய்யென் றேவிய ஜோதி. சிவசிவ 28

அச்சந் தவிர்த்தமெய் ஜோதி — என்னை
ஆட்கொண் டருளிய அம்பல ஜோதி
இச்சை யெலாந்தந்த ஜோதி — உயிர்க்
கிங்குமங் கென்றுமெ லெங்குமாஞ் ஜோதி. சிவசிவ 29

காலையில் நான்கண்ட ஜோதி — எல்லாக்
காட்சியும் நான்காணக் காட்டிய ஜோதி
ஞாலமும் வானுமாஞ் ஜோதி — என்னுள்
நானாகித் தானாகி நண்ணிய ஜோதி. சிவசிவ 30

ஏகாந்த மாகிய ஜோதி — என்னுள்
என்றும் பிரியா திருக்கின்ற ஜோதி
சாகா வரந்தந்த ஜோதி — என்னைத்
தானாக்கிக் கொண்டதோர் சத்திய ஜோதி. சிவசிவ 31

சுத்த சிவமய ஜோதி — என்னை
ஜோதி மணிமுடி சூட்டிய ஜோதி
சத்திய மாம்பெருஞ் ஜோதி — நானே
தானாகி யாளத் தயவுசெய் ஜோதி. 32

சிவசிவ சிவசிவ ஜோதி — சிவ
சிவசிவ சிவசிவ சிவசிவ ஜோதி
சிவசிவ சிவசிவ ஜோதி.

அருட்பெருஞ்ஜோதி

—௵—

# 146. ஆனந்தக் களிப்பு 3

இராகம் - கமாஸ் - ஆதிதாளம்.

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

ஜோதியுட் ஜோதியுட் ஜோதி — சுத்த
ஜோதி சிவஜோதி ஜோதியுட் ஜோதி
ஜோதியுட் ஜோதியுட் ஜோதி.

சரணங்கள்

சிவமே பொருளென்று தேற்றி — என்னைச்
சிவவெளிக் கேறுஞ் சிகரத்தி லேற்றி
சிவமாக்கிக் கொண்டது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 1

வித்தெல்லா மொன்றென்று நாட்டி — அதில்
விளைவு பலபல வேறென்று காட்டி
சித்தெல்லாந் தந்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 2

சொல்வந்த அந்தங்க ளாறும் — ஒரு
சொல்லாலே ஆமென்றச் சொல்லாலே வீறும்
செல்வங் கொடுத்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 3

தங்கோ லளவெனக் கோதிச் — சுத்த
சமரச சத்திய சன்மார்க்க நீதிச்
செங்கோ லளித்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 4

ஆபத்தை நீக்கி வளர்த்தே — சற்றும்
அசையாமல் அவியாம லடியே னுளத்தே
தீபத்தை வைத்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 5

மெய்யொன்று சன்மார்க்க மேதான் — என்றும்
விளங்கப் படைப்பாதி மெய்த்தொழில் நீதான்
செய்யென்று தந்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 6

என்பால் வருபவர்க் கின்றே — அருள்
ஈகின்றேன் ஈகின்றேன் ஈகின்றே னென்றே
தென்பா லிருந்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 7

துரிய தலமூன்றின் மேலே — சுத்த
துரியப் பதியி லதுவத னாலே
தெரியத் தெரிவது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 8

பரைதூக்கிக் காட்டிய காலே — ஆதி
பரையிவர்க் கப்பாலப் பாலென்று மேலே
திரைதூக்கிக் காட்டுதல் பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 9

தற்பர மேவடி வாகி — அது
தன்னைக் கடந்து தனியுரு வாகிச்
சிற்பரத் துள்ளது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 10

நவவெளி நால்வகை யாதி — ஒரு
நடுவெளிக் குள்ளே நடத்திய நீதி
சிவவெளி யாமிது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 11

மேருவெற் புச்சியின் பாலே — நின்று
விளங்குமோர் தம்பத்தின் மேலுக்கு மேலே
சேருமோர் மேடைமேற் பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 12

ஆரண வீதிக் கடையும் — சுத்த
ஆகம வீதிக ளந்தக் கடையும்
சேர நடுக்கடை பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 13

பாடல் மறைகளோர் கோடி — அருட்
பாத வுருவ சொருபங்கள் பாடி
தேட இருந்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 14

நீடு சிவகாமங் கோடி — அருள்
நேருறப் பாடியு மாடியு மோடி
தேட இருந்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 15

பத்தி நெறியிற் செழித்தே — அன்பிற்
பாடுமெய் யன்பர் பதியிற் பழுத்தே
தித்தித் திருப்பது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 16

பித்தாடு மாயைக்கு மேலே — சுத்த
பிரம வெளியினிற் பேரரு ளாலே
சித்தாடு கின்றது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 17

தருநெறி யெல்லாமுள் வாங்கும் — சுத்த
சன்மார்க்க மென்றோர் தனிப்பேர்கொண் டோங்குந்
திருநெறிக் கேசென்று பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 18

எம்பொரு ளெம்பொரு ளென்றே — சொல்லும்
எல்லாச் சமயத்துள் எல்லார்க்கும் ஒன்றே
செம்பொரு ளென்பது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 19

சைவ முதலாக நாட்டும் — பல
சமயங்க ளெல்லாந் தனித்தனிக் காட்டுந்
தெய்வ மிதுவந்து பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 20

எள்ளலில் வான்முதல் மண்ணும் — அமு
தெல்லா மிதிலோ ரிறையள வென்னும்
தெள்ளமு தாமிது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 21

எத்தாலு மாகாதே அம்மா — என்றே
எல்லா வுலகு மியம்புதல் சும்மா
செத்தாரை மீட்பது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 22

பிறந்து பிறந்துழன் றேனை — என்றும்
பிறவா திறவாப் பெருமைதந் தானைச்
சிறந்தொளிர் வித்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 23

வருவித்த வண்ணமு நானே — இந்த
மாநிலத் தேசெயும் வண்ணமுந் தானே
தெரிவித் தருளிற்றுப் பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 24

பாரிடம் வானிட மற்றும் — இடம்
பற்றிய முத்தர்கள் சித்தர்கள் முற்றும்
சேரிட மாமிது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 25

உய்பிள்ளை பற்பல ராவல் — கொண்டே
உலகத் திருப்பவிங் கென்னைத்தன் னேவல்
செய்பிள்ளை யாக்கிற்றுப் பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 26

உருவு முணர்வுஞ்செய் நன்றி — அறி
வுளமு மெனக்கே யுதவிய தன்றித்
திருவுங் கொடுத்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 27

எண்ணிய வெண்ணங்க ளெல்லாம் — நான்
எண்ணிய வாறே யினிதுதந் தென்னைத்
திண்ணிய னாக்கிற்றுப் பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. ஜோதி 28

பேருல கெல்லா மதிக்கத் — தன்
பிள்ளையென் றென்னைப் பெயரிட் டழைத்தே
சீருறச் செய்தது பாரீர் — திருச்
சிற்றம் பலத்தே திருநட ஜோதி. 29

ஜோதியுட் ஜோதியுட் ஜோதி — சுத்த
ஜோதி சிவஜோதி ஜோதியுட் ஜோதி
ஜோதியுட் ஜோதியுட் ஜோதி.

அருட்பெருஞ்ஜோதி

# 147. நெஞ்சொடு கிளத்தல்

இராகம் - இந்துஸ்தான் காபி - சாப்பு தாளம்.

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

அஞ்சாதே நெஞ்சே அஞ்சாதே
அஞ்சாதே நெஞ்சே அஞ்சாதே.

சரணங்கள்

வஞ்சமி லாநாம் வருந்திடி லப்போதே
அஞ்சலென் பாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 1

துய்ய அருட்பெருஞ் ஜோதியார் நம்முடை
அய்ய ரிதோதிரு அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 2

மண்ணில் நமையாண்ட வள்ளலார் நம்முடை
அண்ண லிதோதிரு அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 3

இப்புவி யில்நம்மை யேன்றுகொண் டாண்டநம்
அப்ப ரிதோதிரு அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 4

சித்த ரெலாம்வல்ல தேவர் நமையாண்ட
அத்த ரிதோதிரு அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 5

ஜோதி அருட்பெருஞ் ஜோதியார் நம்முடை
ஆதி யிதோதிரு அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 6

தாண்டவ ரெனைத் தான்தடுத் தாட்கொண்ட
ஆண்டவ ரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 7

வன்பர் மனத்தை மதியா தவர்நம
தன்ப ரிதோதிரு அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 8

தெருளுடை யாரெலாஞ் செய்யவல் லார்திரு
அருளுடை யாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 9

நம்மையாட் கொள்ள நடம்புரி வார்நம
தம்மையி னோடிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 10

தன்னை யொப்பார்சிற் சபைநடஞ் செய்கின்றார்
அன்னை யொப்பாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 11

பாடுகின் றார்க்கருட் பண்பினர் ஞானக்கூத்
தாடுகின்ற ரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 12

காதரிப் பார்கட்குக் காட்டிக் கொடார்நம்மை
ஆதரிப் பாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 13

நீளவல் லார்க்குமேல் நீளவல்லார் நம்மை
ஆளவல்லா ரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 14

இன்புடை யார்நம் மிதயத் தமர்ந்தபேர்
அன்புடையா ரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 15

உபய பதத்தைநம் உச்சிமேற் சூட்டிய
அபய ரிதோதிரு அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 16

வேண்டுகோண் டாவென்னை மேனிலைக் கேற்றியே
ஆண்டுகொண் டாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 17

எச்சம்பெ றேல்மகனே யென்றென் னுள்ளூற்ற
அச்சந் தவிர்த்தவர் அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 18

நமுதன் முதற்பல நன்மையு மாப்ஞான
அமுத ரிதோதிரு அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 19

செடிகள் தவிர்த்தருட் செல்வ மளிக்கின்ற
அடிக ளிதோதிரு அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 20

விரசுல கெல்லாம் விரித்தைந் தொழில்தரும்
அரசுடை யாரிதோ அம்பலத் திருக்கின்றார். அஞ்சாதே 21

செறிவுடை யாருளத் தேநடஞ் செய்கின்ற
அறிவுரு வாரிதோ அம்பலத் திருக்கின்றார். 22

அஞ்சாதே நெஞ்சே அஞ்சாதே
அஞ்சாதே நெஞ்சே அஞ்சாதே.

அருட்பெருஞ்ஜோதி

## இரண்டாவது திருமுறை

# 148. ஆனந்தக் களிப்பு 4

இராகம் - நாதநாமக்கிரியை - ரூபக தாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

நல்ல மருந்திம் மருந்து — சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து. நல்ல

சரணங்கள்

அருள்வடி வான மருந்து — நம்முள்
அற்புத மாக அமர்ந்த மருந்து
இருளற வோங்கு மருந்து — அன்பர்க்
கின்புரு வாக இருந்த மருந்து. நல்ல 1

சஞ்சலந் தீர்க்கு மருந்து — எங்குந்
தானேதா னாகித் தழைக்கு மருந்து
அஞ்சலென் றருளு மருந்து — சச்சி
தானந்த மாக அமர்ந்த மருந்து. நல்ல 2

வித்தக மான மருந்து — சதுர்
வேத முடிவில் விளங்கு மருந்து
தத்துவா தீத மருந்து — என்னைத்
தானாக்கிக் கொண்ட தயாள மருந்து. நல்ல 3

பிறப்பை யொழிக்கு மருந்து — யார்க்கும்
பேசப் படாத பெரிய மருந்து
இறப்பைத் தவிர்க்கு மருந்து — என்னுள்
என்றும் மதுரித் தினிக்கு மருந்து. நல்ல 4

நானது வாகு மருந்து — பர
ஞான வெளியில் நடிக்கு மருந்து
மோன வடிவா மருந்து — ஜீவன்
முத்த ருளத்தே முடிக்கு மருந்து. நல்ல 5

புத்தமு தாகு மருந்து — பார்த்த
போதே பிணிகளைப் போக்கு மருந்து
பத்த ரருந்து மருந்து — அனு
பானமுந் தானும் பரம மருந்து. நல்ல 6

மாலயன் தேடு மருந்து — முன்னம்
மார்க்கண்ட ரைச்சாக்க வந்த மருந்து
காலனைச் சாய்த்த மருந்து — தேவர்
காணுங் கனவினுங் காணு மருந்து. நல்ல 7

தற்பர யோக மருந்து — உப
சாந்த ருளத்திடைச் சார்ந்த மருந்து
சிற்பர யோக மருந்து — உயர்
தேவரெல் லாந்தொழுந் தெய்வ மருந்து. நல்ல 8

அம்பலத் தாடு மருந்து — பர
மானந்த வெள்ளத் தழுத்து மருந்து
எம்பல மாகு மருந்து — வேளூர்
என்னுந் தலத்தி லிருக்கு மருந்து. நல்ல 9

சேதப்ப டாத மருந்து — உண்டாற்
றேன்போ லினிக்குந் தெவிட்டா மருந்து
பேதப்ப டாத மருந்து — மலைப்
பெண்ணிடங் கொண்ட பெரிய மருந்து. நல்ல 10

ஆர்க்கு மரிதா மருந்து — தானே
ஆதி யநாதியு மான மருந்து
சேர்க்கும் புனித மருந்து — தன்னைத்
தேடுவோர் தங்களை நாடு மருந்து. நல்ல 11

புண்ணியர்க் கான மருந்து — பரி
பூரண மாகப் பொருந்து மருந்து
எண்ணிய வின்ப மருந்து — எம
தெண்ணமெல் லாமுடித் திட்ட மருந்து. நல்ல 12

பால்வண்ண மாகு மருந்து — அதிற்
பச்சை நிறமும் படர்ந்த மருந்து
நூல்வண்ண நாடு மருந்து — உள்ளே
நோக்குகின் றோர்களை நோக்கு மருந்து. நல்ல 13

பார்க்கப் பசிபோ மருந்து — தன்னைப்
பாராத வர்களைச் சேரா மருந்து
கூர்க்கத் தெரிந்த மருந்து — அநு
கூல மருந்தென்று கொண்ட மருந்து. நல்ல 14

கோதிலா தோங்கு மருந்து — அன்பர்
கொள்ளைகொண் டுண்ணக் குலாவு மருந்து
மாதொரு பாக மருந்து — என்னை
வாழ்வித்த வென்கண் மணியா மருந்து. நல்ல 15

ஏக வுருவா மருந்து — மிக்க
ஏழைக ளுக்கு மிரங்கு மருந்து
சோகந் தவிர்க்கு மருந்து — பரஞ்
ஜோதியென் றன்பர் துதிக்கு மருந்து. நல்ல 16

கோமளங் கூடு மருந்து — நலங்
கொடுக்கத் துஜங்கட்டிக் கொண்ட மருந்து
நாமள வாத மருந்து — நம்மை
நாமறி யும்படி நண்ணு மருந்து. நல்ல 17

செல்வந் தழைக்கு மருந்து — என்றுந்
தீரா வினையெலாந் தீர்த்த மருந்து
நல்வந் தனைகொண் மருந்து — பர
நாதாந்த வீட்டினு நண்ணு மருந்து. நல்ல 18

வாய்பிடி யாத மருந்து — மத
வாதமும் பித்தமு மாய்க்கு மருந்து
நோய்பொடி யாக்கு மருந்து — அன்பர்
நோக்கிய நோக்கினுள் நோக்கு மருந்து. நல்ல 19

பேணுசை தீர்க்கு மருந்து — பொருட்
பேராசை யெல்லாம் பிளக்கு மருந்து
மண்ணுசை தீர்க்கு மருந்து — எல்லாம்
வல்ல மருந்தென்று வாழ்த்து மருந்து. நல்ல 20

என்றுங் கெடாத மருந்து — வரும்
எல்லாப் பிணிக்கு மிதுவே மருந்து
துன்றுஞ் சிவோக மருந்து — நம்மைச்
சூழ்ந்திரு மைக்குந் துணையா மருந்து. நல்ல 21

கண்ணொளி காட்டு மருந்து — அம்மை
கண்டு கலந்து களிக்கு மருந்து
விண்ணொளி யாகு மருந்து — பர
வீடு தருங்கங்கை வேணி மருந்து. நல்ல 22

காயாம்பூ வண்ண மருந்து — ஒரு
கஞ்ச மலர்மிசைக் காணு மருந்து
தாயாங் கருணை மருந்து — சிற்
சதாசிவ மானமெய்ஞ் ஞான மருந்து. நல்ல 23

அளவைக் கடந்த மருந்து — யார்க்கும்
அருமை யருமை அருமை மருந்து
உளவிற் கிடைக்கு மருந்து — ஒன்றும்
ஒப்புயர் வில்லா துயர்ந்த மருந்து. நல்ல 24

தன்மய மாகு மருந்து — சிவ
சாதனர் நெஞ்சிற் றழைக்கு மருந்து
சின்மய ஜோதி மருந்து — அட்ட
சித்தியு முத்தியுஞ் சேர்க்கு மருந்து. நல்ல 25

மறந்தா லொளிக்கு மருந்து — தன்னை
மறவா தவருள் வழங்கு மருந்து
இறந்தா லெழுப்பு மருந்து — எனக்
கென்றுந் துணையா யிருக்கு மருந்து. நல்ல 26

கரும்பி னினிக்கு மருந்து — கடுங்
கண்டகர்க் கெல்லாங் கசக்கு மருந்து
இரும்பைக் குழைக்கு மருந்து — பே
ரின்ப வெள்ளத்தே யிழுக்கு மருந்து. நல்ல 27

அணிமணி கண்ட மருந்து — அருள்
ஆனந்த சுத்த அகண்ட மருந்து
பிணிதவி ரின்ப மருந்து — யார்க்கும்
பேசா மருந்தென்று பேசு மருந்து. நல்ல 28

மூவர்க் கரிய மருந்து — செல்வ
முத்துக் குமாரனை யீன்ற மருந்து
நாவிற் கினிய மருந்து — தைப
ஞ்பகி கண்டு தழுவு மருந்து. 29

நல்ல மருந்திம் மருந்து — சுகம்
நல்கும் வைத்திய நாத மருந்து.

அருட்பெருஞ்ஜோதி

## இரண்டாவது திருமுறை

# 149. பாங்கியர்க் கறிவுறுத்தல்

### கண்ணிகள்

இராகம் - ஆனந்த பைரவி - ஆதிதாளம்.

அருட்பெருஞ்ஜோதி

அம்பலத்தி லாடுகின்றார் பாங்கிமாரே — அவர்
ஆட்டங்கண்டு நாட்டங்கொண்டேன் பாங்கிமாரே. 1

ஆடுகின்ற சேவடிமேற் பாங்கிமாரே — மிக
ஆசைகொண்டு வாடுகின்றேன் பாங்கிமாரே. 2

இன்பவடி வாய்ச்சபையிற் பாங்கிமாரே — நடம்
இட்டவர்மே லிட்டம் வைத்தேன் பாங்கிமாரே. 3

ஈனவுடற் கிச்சைவையேன் பாங்கிமாரே — நட
னேசர்தமை யெய்தும்வண்ணம் பாங்கிமாரே. 4

உத்தமர்பொன் னம்பலத்தே பாங்கிமாரே — இன்ப
உருவாகி யோங்குகின்றார் பாங்கிமாரே. 5

ஊனவுல கைக்கருதேன் பாங்கிமாரே — மன்றில்
உத்தமருக் குறவாவேன் பாங்கிமாரே. 6

கற்பனையெல் லாங்கடந்தார் பாங்கிமாரே — என்றன்
கற்பனைக்குட் படுவாரோ பாங்கிமாரே. 7

கண்டிலர்நான் படும்பாடு பாங்கிமாரே — மூன்று
கண்ணுடையா ரென்பாரைபோ பாங்கிமாரே. 8

கன்மனமேல் லாங்கரைப்பார் பாங்கிமாரே — மனங்
கரையாரென் னளவிலே பாங்கிமாரே. 9

கள்ளமொன்று மறியேனுன் பாங்கிமாரே — என்னைக்
கைவிடவுந் துணிவாரோ பாங்கிமாரே. 10

கற்பழித்துக் கலந்தாரே பாங்கிமாரே — இன்று
கைநழுவ விடுவாரோ பாங்கிமாரே. 11

கண்டவரெல் லாம்பழிக்கப் பாங்கிமாரே — என்றன்
கன்னியழித் தேயொளித்தார் பாங்கிமாரே. 12

காமனைக்கண் ணாலெரித்தார் பாங்கிமாரே — என்றன்
காதலைக்கண் டறிவாரோ பாங்கிமாரே. 13

காவலையெல் லாங்கடந்து பாங்கிமாரே — என்னைக்
கைகலந்த கள்ளரவர் பாங்கிமாரே. 14

காணவிழைந் தேனவரைப் பாங்கிமாரே — கொண்டு
காட்டுவாரை யறிந்திலேன் பாங்கிமாரே. 15

கிட்டவர வேண்டுமென்றார் பாங்கிமாரே — நான்
கிட்டுமுன்னே எட்டநின்றார் பாங்கிமாரே. 16

கின்னரங்கே ளென்றிசைத்தார் பாங்கிமாரே — நான்
கேட்பதன்முன் சேட்படுத்தார் பாங்கிமாரே. 17

கிள்ளையைத்தூ தாவிடுத்தேன் பாங்கிமாரே — அது
கேட்டுவரக் காணேனையோ பாங்கிமாரே. 18

கீதவகை பாடிநின்றார் பாங்கிமாரே — அது
சேட்டுமதி மயங்கினேன் பாங்கிமாரே. 19

கீழ்மைகுறி யாமலென்னைப் பாங்கிமாரே — மனக்
கேண்மைகுறித் தாரேயன்று பாங்கிமாரே. 20

கீடமனை யேனெனையும் பாங்கிமாரே — அடிக்
கேயடிமை கொண்டாரன்று பாங்கிமாரே. 21

குற்றமெல்லாம் குணமாகப் பாங்கிமாரே — கொள்ளுங்
கொற்றவரென் கொழுநர்காண் பாங்கிமாரே. 22

குற்றமொன்றுஞ் செய்தறியேன் பாங்கிமாரே — என்னைக்
கொண்டுகுலம் பேசுவாரோ பாங்கிமாரே. 23

குஞ்சிதப்பொற் பாதங்கண்டாற் பாங்கிமாரே — உள்ள
குறையெல்லாந் தீருங்கண்டீர் பாங்கிமாரே. 24

கூற்றுதைத்த பாதங்கண்டீர் பாங்கிமாரே — நங்கள்
குடிக்கெல்லாங் குலதெய்வம் பாங்கிமாரே. 25

கூறரிய பதங்கண்டு பாங்கிமாரே — களி
கொண்டுநிற்க விழைந்தேனான் பாங்கிமாரே. 26

கூடல்விழைந் தேனவரைப் பாங்கிமாரே — அது
கூடும்வண்ணங் கூட்டிடுவீர் பாங்கிமாரே. 27

அருட்பெருந்ஜோதி

## இரண்டாவது திருமுறை

# 150. வெண்ணிலா

### கண்ணிகள்

இராகம் - புன்னாகவராளி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

தன்னையறிந் தின்பமுற வெண்ணிலாவே — ஒரு
தந்திரநீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே. 1

நாதமுடி மேலிருந்த வெண்ணிலாவே — அங்கே
நானும்வர வேண்டுகின்றேன் வெண்ணிலாவே. 2

சச்சிதா னந்தக்கடலில் வெண்ணிலாவே — நானுந்
தாழ்ந்துவிழ வேண்டுகின்றேன் வெண்ணிலாவே. 3

இராப்பகலில் லாவிடத்தே வெண்ணிலாவே — நானும்
இருக்க வெண்ணி வாடுகின்றேன் வெண்ணிலாவே. 4

தேசுநிற மாய்நிறைந்த வெண்ணிலாவே — நானுஞ்
சிவமயமா யாய்விழைந்தேன் வெண்ணிலாவே. 5

போதநடு வூடிருந்த வெண்ணிலாவே — மலப்
போதமற வேண்டுகின்றேன் வெண்ணிலாவே. 6

ஆருமறி யாமலிங்கே வெண்ணிலாவே — அரு
ளாளர்வரு வாரோசொல்லாய் வெண்ணிலாவே. 7

அந்தரங்க சேவைசெய்ய வெண்ணிலாவே — எங்கள்
அய்யர்வரு வாரோசொல்லாய் வெண்ணிலாவே. 8

வேதமுடி மேலிருந்த வெண்ணிலாவே — மல
வேதையுள வேதுசொல்லாய் வெண்ணிலாவே. 9

குண்டலிப்பால் நின்றிலங்கும் வெண்ணிலாவே — அந்த
குண்டலிப்பால் வேண்டுகின்றேன் வெண்ணிலாவே. 10

ஆதியந்த மென்றுரைத்தார் வெண்ணிலாவே — அந்த
ஆதியந்த மாவதென்ன வெண்ணிலாவே. 11

வித்திலாம லேவிளைந்த வெண்ணிலாவே — நீதான்
விளைந்தவண்ண மேதுசொல்லாய் வெண்ணிலாவே. 12

முப்பொருளு மொன்றதென்பார் வெண்ணிலாவே — அந்த
மூன்றுமொன்றாய் முடிந்ததென்ன வெண்ணிலாவே. 13

நானதுவாய் நிற்கும்வண்ணம் வெண்ணிலாவே — ஒரு
ஞானநெறி சொல்லுகண்டாய் வெண்ணிலாவே. 14

ஞானமய மாய்விளங்கும் வெண்ணிலாவே — என்னை
நானறியச் சொல்லுகண்டாய் வெண்ணிலாவே. 15

வாசிவாசி யென்றுரைத்தார் வெண்ணிலாவே — அந்த
வாசியென்னப் பேசுகண்டாய் வெண்ணிலாவே. 16

ஐந்தலைப்பாம் பாட்டுகின்றார் வெண்ணிலாவே — அவர்
அம்பலத்தில் நின்றதென்ன வெண்ணிலாவே. 17

ஓரெழுத்தில் ஐந்துண்டென்பார் வெண்ணிலாவே — அது
ஊமையெழுத் தாவதென்ன வெண்ணிலாவே. 18

அம்பலத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே — அவர்
ஆடுகின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே. 19

அந்தரத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே — அவர்
ஆடும்வகை யெப்படியோ வெண்ணிலாவே. 20

அணுவிலணு வாயிருந்தார் வெண்ணிலாவே — எங்கும்
ஆகின்ற வண்ணமென்ன வெண்ணிலாவே. 21

அண்டபகி ரண்டமெல்லாம் வெண்ணிலாவே — ஐயர்
ஆட்டமென்று சொல்வதென்ன வெண்ணிலாவே. 22

அம்பரத்தி லாடுகின்றார் வெண்ணிலாவே — என்னை
ஆட்டுகின்றா ரிம்பரத்தே வெண்ணிலாவே. 23

அருட்பெருஞ்ஜோதி

இரண்டாவது திருமுறை

# 151. நடேசர் கொம்மி

இராகம் - ஆனந்தபைரவி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

கொம்மியடிப் பெண்கள் கொம்மியடி — இரு
கொங்கை குலுங்கவே கொம்மியடி.

அனுபல்லவி

நம்மை யாளும்பொன் னம்பல வாணனை
நாடிக் கொம்மி யடியுங்கடி — பதம் — பாடிக் கொம்மி யடியுங்கடி.

சரணங்கள்

காம மகற்றிய தூயனடி — சிவ — காம சௌந்தரி நேயனடி
மாமறை யோதுசெவ் வாயனடி — மணி — மன்றெனு ஞானவா காயனடி. 1

ஆனந்தத் தாண்டவ ராஜனடி — நமை — ஆட்கொண் டருளிய தேஜனடி
வானந்த மாமலை மங்கைமகிழ் — வடி — வாளனடி மணா வாளனடி. 2

கல்லைக் கனிவிக்குஞ் சுத்தனடி — முடி — கங்கைக் கருளிய கர்த்தனடி
தில்லைச் சிதம்பர சித்தனடி — தேவ — சிங்கமடி உயர் தங்கமடி. 3

பெண்ணொரு பால்வைத்த மத்தனடி — சிறு — பிள்ளைக் கறிகொண்ட பித்தனடி
நண்ணி நமக்கரு ளத்தனடி — மிக — நல்லனடி யெல்லாம் வல்லனடி. 4

அம்பலத் தாடல்செய் ஐயனடி — அன்ப — ரன்புக் கெளிதரு மெய்யனடி
தும்பை முடிக்கணி தூயனடி — சுயஞ் — ஜோதி யடிபரஞ் ஜோதியடி. 5

அருட்பெருஞ்ஜோதி



இரண்டாவது திருமுறை

# 152. சிலதா லம்வாதம்

கண்ணிகள்

இராகம் - சிந்துபைரவி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

தண்மதி யொண்முகப் பெண்மணியே — உன்னைத்
தான்கொண்ட நாயக ராரேடி?
அண்மையிற் பொன்னணி அம்பலத் தாடல்செய்
ஐய ரமுத ரழகரடி. 1

செங்கயற் கண்மட மங்கை நல்லாய் — உன்றன்
செங்கை பிடித்தவ ராரேடி?
அங்கய லாரன்று பொன்னம்ப லத்திதங்கள்
ஆனந்தத் தாண்டவ ராஜனடி. 2

கன்னற் சுவைமொழி மின்னிடையாய் — உன்னைக்
கன்னி யழித்தவ ராரேடி?
உன்னற் கரியபொன் னம்பலத் தாடல்செய்
உத்தம ரானந்த சித்தரடி. 3

தீமையி லாதபெண் மாமயிலே — உன்னைச்
சேர்ந்து கலந்தவ ராரேடி?
தாமமு டிக்கணிந் தம்பலத் தேயின்பத்
தாண்டவஞ் செய்யுஞ் சதுரரடி. 4

அன்னநடைப் பெண்க ளாரமுதே — உன்னை
அன்பிற் புணர்ந்தவ ராரேடி?
துன்ன லுடையின ரம்பலத் தேநின்ற
தூய திருநட ராயரடி. 5

காரள கப்பெண் சிகாமணியே — உன்றன்
கற்பை யழித்தவ ராரேடி?
பேரளவைக் கடந் தம்பலத் தேநின்ற
பித்தர் பரானந்த நித்தரடி. 6

அருட்பெருஞ்ஜோதி

# கீர்த்தனைகள்

## இரண்டாவது திருமுறை

## 153. நடேசர் கீர்த்தனை 1

இராகம் - தோடி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

தெண்டனிட்டே னென்று சொல்லடி — சுவாமிக்கு நான்
தெண்டனிட்டே னென்று சொல்லடி.

அனுபல்லவி

தண்டலை விளங்குந் தில்லைத் தலத்திற் பொன்னம் பலத்தே
கண்டவர் மயங்கவேடங் கட்டியாடு கின்றவர்க்கு.　　தெண்ட

சரணங்கள்

கற்பூர வாசம்வீசும் பொற்பாந் திருமுகத்தே
கனிந்த புன்னகையாடக் கருணைக் கடைக்கணுட
அற்பார்பொன் னம்பலத்தே ஆனந்தத் தாண்டவம்
ஆடிக்கொண் டேயென்னை ஆட்டங்கண் டாருக்கு.　　தெண்ட　1

இழிந்தாலு நம்மையிங்கே யேற்றுவா ரென்றடைந்தால்
ஏற்றுவார் போலேபின்னு மிழியவைப் பாருக்குப்
பழந்தா நழுவிமெல்லப் பாலில் விழுந்ததென்னப்
பசப்பிப் பசப்பியன்பர் பண்டம் பறிப்பவர்க்கு.　　தெண்ட　2

சுட்டதிரு நீறுபூசித் தொங்தோமென் றுடிவார்க்குத்
தோன்றுதலை மாலையணி தோள்விளங்க வருவார்க்குப்
பிட்டுக்காசை பட்டுமாறன் பிரம்படி பட்டவர்க்குப்
பிள்ளைக்கறிக் காசைகொண்ட கள்ளத்தவ வேடருக்கு.　　தெண்ட　3

வாழ்ந்தாரை மேன்மேலும் வாழச்செய் பவருக்கு
மாசுபறித் தவர்கையிற் காசுபறிக் கின்றவர்க்குத்
தாழ்ந்தாரை யடிக்கடி தாழக்காண் பவருக்குத்
தானுகி நானுகித் தனியேநின் றவருக்கு.　　தெண்ட　4

ஆதியந்த நடுவில்லா ஆனந்த நாடருக்கு
அண்டருயிர் காத்தமணி கண்டசசி கண்டருக்கு
ஜோதிமய மாய்விளங்குந் தூயவடி வாளருக்குத்
தொண்டர்குடி கெடுக்கவே துஜங்கட்டிக் கொண்டவர்க்கு. தெண் 5

பாட்டுக்காசைப் பட்டுமுன்னம் பரவைதன் வாயிலிற்போய்ப்
பண்புரைத்துத் தூதனென்றே பட்டங்கட்டிக் கொண்டவர்க்கு
வீட்டுக்காசைப் படுவாரை வீட்டைவிட்டுத் துரத்தியே
வேட்டாண்டி யாயுலகில் ஓட்டாண்டி யாக்குவார்க்கு. தெண்ட 6

தாய்வயிற்றிற் பிறவாது தானே முளைத்தவர்க்கு
ஜாதிகுல மறியாது தாண்டவஞ்செய் கின்றவர்க்கு
ஏய தொழிலருளு மென்பிராண நாயகர்க்கு
ஏமாந்த வரையெல்லாம் ஏமாத்து மீசருக்கு. தெண்ட 7

அருட்பெருஞ்ஜோதி

---

இரண்டாவது திருமுறை

## 154. நடேசர் கீர்த்தனை 2

இராகம் - காம்போதி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

இன்னந் தயவுவர இலையா — உனக்கென்மீதில்
என்ன வர்மஞ் சொலையா.

சரணங்கள்

அன்னம் பாலிக்குந் தில்லைப் பொன்னம்பலத்தி லாடும்
அரசே — அரசே — அரசே — யென் றலறவும். இன்னந் 1

சின்னஞ் சிறுவயதி லென்னை யடிமைகொண்ட
சிவமே — சிவமே — சிவமே — யென் றலறவும். இன்னந் 2

முன்னம் பிழைபொறுத்தா யின்னம் பொறுதுவிட்டால்
முறையோ — முறையோ — முறையோ — வென் றலறவும். இன்னந் 3

தன்னை யறியாவென்னை யின்ன லுறச்செய்தாயே
தகுமோ — தகுமோ — தகுமோ — வென் றலறவும். இன்னந் 4

பண்டு மகிழ்ந்தெனை யாட்கொண்டு கருணைசெய்த
பரமே — பரமே — பரமே — யென் றலறவும். இன்னந் 5

கோண்டு குலம்பேசுவா ருண்டோ வுலகிலெங்கள்
குருவே — குருவே — குருவே —யென் றலறவும். இன்னந் 6

அருட்பெருஞ்ஜோதி

## ஐந்தாவது திருமுறை

# 155. சண்முகர் கொம்மி

இராகம் - ஆனந்தபைரவி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

குறவர் குடிசை நுழைந்தாண்டி — அந்தக்
கோமாட்டி யெச்சில் விழைந்தாண்டி
துறவர் வணங்கும் புகழாண்டி — அவன்
தோற்றத்தைப் பாடி யடியுங்கடி. 1

மாமயி லேறி வருவாண்டி — அன்பர்
வாழ்த்த வரங்கள் தருவாண்டி
தீமையி லாத புகழாண்டி — அவன்
சீர்த்தியைப் பாடி யடியுங்கடி. 2

பன்னிரு தோள்க ளுடையாண்டி — கொடும்
பாவிகள் தம்மை யடையாண்டி
என்னிரு கண்க ளனையாண்டி — அவன்
ஏற்றத்தைப் பாடி யடியுங்கடி. 3

வேங்கை மரமாகி நின்றாண்டி — வந்த
வேடர்தமை யெலாம் வென்றாண்டி
தீங்குசெய் சூரனைக் கொன்றாண்டி — அந்த
தீரனைப் பாடி யடியுங்கடி. 4

சீர்திகழ் தோகை மயின்மேலே — இளஞ்
செஞ்சுடர் தோன்றுந் திறம்போலே
கூர்வடி வேல்கொண்டு நம்பெருமான் — வருங்
கோலத்தைப் பாருங்கள் கோதையர்காள். 5

ஆறு முகங்களிற் புன்சிரிப்பும் — இரண்
டாறு புயந்திக ழற்புதமும்
வீறு பரஞ்சுடர் வண்ணமுமோர் — திரு
மேனியும் பாருங்கள் வெள்வளைகாள். 6

ஆனந்த மான வமுதனடி — பர
மானந்த நாட்டுக் கரசனடி
தானந்த மில்லாச் சதுரனடி — சிவ
சண்முக நங்குரு சாமியடி. 7

வேதமுடி சொல்லு நாதனடி — சதுர்
வேதமுடி திகழ் பாதனடி
நாத வடிவுகொள் நீதனடி — பர
நாதங் கடந்த நலத்தனடி. 8

தத்துவத் துள்ளே யடங்காண்டி — பர
தத்துவ மன்றித் தடங்காண்டி
சத்துவ ஞான வடிவாண்டி — சிவ
சண்முக நாதனைப் பாடுங்கடி. 9

சச்சிதா னந்த வுருவாண்டி — பர
தற்பர போகந் தருவாண்டி
உச்சிதா மன்பர்க் குறவாண்டி — அந்த
உத்தம தேவனைப் பாடுங்கடி. 10

அற்புத மான வழகனடி — துதி
அன்பர்க் கருள்செய் குழகனடி
சிற்பர யோகத் திறத்தனடி — அந்தச்
சேவகன் சீர்த்தியைப் பாடுங்கடி. 11

சைவந் தழைக்கத் தழைத்தாண்டி — ஞான
சம்பந்தர்ப் பேர்கொண் டழைத்தாண்டி
பொய்வந்த வுள்ளத்திற் போகாண்டி — அந்த
புண்ணியன் பொன்னடி போற்றுங்கடி. 12

வாசி நடத்தித் தருவாண்டி — ஒரு
வாசியி லிங்கே வருவாண்டி
ஆசில் கருணை யுருவாண்டி — அவன்
அற்புதத் தாண்மல ரேத்துங்கடி. 13

இராப்பக லில்லா விடத்தாண்டி — அன்பர்
இன்ப வுளங்கொள் நடத்தாண்டி
அராப்பளி யீந்த திடத்தாண்டி — அந்த
அண்ணலைப் பாடி யடியுங்கடி. 14

ஒன்றிரண் டான வுளவாண்டி — அந்த
ஒன்றிரண்டாகா வளவாண்டி
மின்றிரண் டன்ன வடிவாண்டி — அந்த
மேலவன் சீர்த்தியைப் பாடுங்கடி. 15

சிவசண்முக சிவஞானதேசிகன் திருவடி வாழ்க

—௦—

ஐந்தாவது திருமுறை

# 156. சண்முகர் காலைப்பாட்டு

இராகம் - காபி - சாப்புதாளம்

அருட்பெருஞ்ஜோதி

வாரும்வா ருந்தெய்வ வடிவேல் முருகரே
வள்ளி மணாளரே வாரும்
புள்ளி மயிலோரே வாரும். 1

சங்க மொலித்தது தாழ்கடல் விம்மிற்றுச்
சண்முக நாதரே வாரும்
உண்மை விநோதரே வாரும். 2

பொழுது விடிந்தது பொற்கோழி கூவிற்றுப்
பொன்னனை வேலரே வாரும்
மின்னார் முந்நூலரே வாரும். 3

காகங் கரைந்தது காலையு மாயிற்றுக்
கண்ணுதல் சேயரே வாரும்
ஒண்ணுதல் நேயரே வாரும். 4

செங்கதிர் தோன்றிற்றுத் தேவர்கள் சூழ்ந்தனர்
செங்கல்வ ராயரே வாரும்
எங்குரு நாதரே வாரும். 5

அருண னுதித்தனன் அன்பர்கள் சூழ்ந்தனர்
ஆறுமுகத் தோரே வாரும்
மாறிலகத் தோரே வாரும். 6

சூரியன் தோன்றினன் தொண்டர்கள் சூழ்ந்தனர்
சூரசங் காரரே வாரும்
வீரசிங் காரரே வாரும். 7

வீணை முரன்றது வேதியர் சூழ்ந்தனர்
வேலாயுதத் தோரே வாரும்
காலாயுதத் தோரே வாரும். 8

சேவ லொலித்தது சின்னம் பிடித்தனர்
தேவர்கள் தேவரே வாரும்
மூவர் முதல்வரே வாரும். 9

பத்தர்கள் சூழ்ந்தனர் பாடல் பயின்றனர்
பன்னிரு தோளரே வாரும்
பொன்மலர்த் தாளரே வாரும். 10

மாலை கொணர்ந்தனர் மஞ்சனம் போந்தது
மாமயில் வீரரே வாரும்
தீமையில் தீரரே வாரும். 11

தொண்டர்கள் நாடினர் தோத்திரம் பாடினர்
சுப்பிர மணியரே வாரும்
வைப்பி னணியரே வாரும். 12

சிவசண்முக சிவஞானதேசிகன் திருவடி வாழ்க



# 157. இது நல்ல தருணம்

இராகம் - கல்யாணி - அடதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

இதுநல்ல தருணம் — அருள் செய்ய
இதுநல்ல தருணம்

அநுபல்லவி

பொதுநல்ல நடம்வல்ல புண்ணிய பேகேளும்
பொய்யே துஞ் சொல்கிலேன் மெய்யே புகல்கின்றேன். இது

சரணங்கள்

மதித்த சமயமத வழக்கெல்லா மாய்ந்தது
வருணாச் சிரமமெனு மபக்கமுஞ் சாய்ந்தது
கொதித்த லோகாசாரக் கொதிப்பெல்லாம் ஒழிந்தது
கொலையுங் களவுமற்றைப் புலையும் அழிந்தது. இது 1

குறித்த வேதாகமக் கூச்சலும் அடங்கிற்று
கொதித்த மனமுருட்டுக் குரங்கு முடங்கிற்று
வெறித்தவெவ் வினைகளும் வெந்து குலைந்தது
விந்தைசெய் கொடுமாயைச் சந்தையுங் கலைந்தது. இது 2

கோபமுங் காமமுங் குடிகெட்டுப் போயிற்று
கொடியவோ ராங்காரம் பொடிப்பொடி யாயிற்று
தாபமுஞ் சோபமுந் தான்றானே சென்றது
தத்துவ மெல்லாமென் றன்வச நின்றது. இது 3

கரையா வெனதுமனக் கல்லுங் கரைந்தது
கலந்து கொளற்கென் கருத்தும் விரைந்தது
புரையா நிலையிலென் புந்தியுந் தங்கிற்று
பொய்படாக் காதல் ததும்பிமேற் பொங்கிற்று. 4

இதுநல்ல தருணம் — அருள்செய்ய
இதுநல்ல தருணம்.

அருட்பெருஞ்ஜோதி

# 158. புண்ணியம்

இராகம் - உசேனி - அடதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

என்ன புண்ணியஞ் செய்தேனோ — அம்மாநான்
என்ன புண்ணியஞ் செய்தேனோ.

அனுபல்லவி

மன்னர்நாத ரம்பலவர் வந்தார்வந்தா ரென்றேதிருச்
சின்னநாத மென்னிரண்டு செவிகளினுட் சொல்கின்றதே. என்ன

சரணங்கள்

பொருணான் முகனுமாலுந் தெருணான் மறைநாலும்
போற்றுஞ் சிற்றம்பலத்தே பேற்று மணிவிளக்காய்
அருணா டகம்புரியுங் கருணா நிதியருள்னை
ஆளவந்தார் வந்தாரென்றேக் காளநாதஞ் சொல்கின்றதே. என்ன

பாடியநல் லோர்தமக்கே நாடியசெல் லாமளிப்பார்
பத்திவலை யுட்படுவார் சத்தியர் நித்தியர்மன்றில்
ஆடியபொற் பாதர்வேதந் தேடியசிற் போதருள்னை
அணையவந்தார் வந்தாரென்றே இணையில்நாதஞ் சொல்கின்றதே. என்ன

எந்தரமுங் கொண்டஞான சுந்தரரென் மணவாளர்
எல்லாஞ்செய் வல்லசித்தர் நல்லோ ருளத்தமர்ந்தார்
மந்திரமா மன்றிலின்பந் தந்தநட ராஜருன்னை
மருவவந்தார் வந்தாரென்று தெருவில்நாதஞ் சொல்கின்றதே. என்ன

ஓதியேந்த விதத்தாலும் வேதியனுந் தேர்வரியார்
ஓங்கார பஞ்சகத்தே பாங்காக நடிக்கின்றார்
ஆதியந்தங் காண்பரிய ஜோதிசுயஞ் ஜோதியுன்னோ
டாடவந்தார் வந்தாரென்றே நாடிநாதஞ் சொல்கின்றதே. என்ன 4

அற்புதப்பே ரழகாளர் சொற்பதங் கடந்துநின்றார்
அன்பரெலாந் தொழுமன்றில் இன்பநடம் புரிகின்றார்
சிற்பரெல் லாமும்வல்ல தற்பரர் விரைந்திங்குன்னைச்
சேரவந்தார் வந்தாரென்றேங் காரநாதஞ் சொல்கின்றதே. என்ன 5

ஆரணர் காரணரெல்லாம் பூரணரென் றேத்துகின்ற
ஐயர்திரு அம்பலவர் மெய்யரெல்லாம் வல்லசித்தர்
காரணமுங் காரியமுந் தாரணிநீ யாகவுன்னைக்
காணவந்தார் வந்தாரென்றே வேணுநாதஞ் சொல்கின்றதே. என்ன 6

பாகார் மொழியாள்சிவ மாகாம வல்லிநாளும்
பார்த்தாட மணிமன்றில் கூத்தாடு கின்றசித்தர்
வாகா வுனக்கேயென்றுஞ் சாகா வரங்கொடுக்க
வலியவந்தார் வந்தாரென்றே வலியநாதஞ் சொல்கின்றதே. 7

என்ன புண்ணியஞ் செய்தேனோ — அம்மாநான்
என்ன புண்ணியஞ் செய்தேனே.

அருட்பெருஞ்ஜோதி

## 159. வருவார் அழைத்து வாடி

இராகம் - பியாகடை - அடதாளசாப்பு

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

வருவா ரழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே
வந்தாற் பெறலாம் நல்ல வரமே.

அனுபல்லவி

திருவார்பொன் னம்பலத்தே செழிக்குங் குஞ்சித பாதர்
சிவசிதம் பரபோதர் தெய்வச் சபாநாதர். வரு

சரணங்கள்

சிந்தை களிக்கக்கண்டு சிவானந்த மதுவுண்டு
தெளிந்தோ ரெல்லாருந்தொண்டு செய்யப் பவுரிகொண்டு
இந்த வெளியில்நடம் இடத்துணிந் தீரேயங்கே
இதைவிடப் பெருவெளி இருக்குதென் றுலிங்கே. வரு 1

இடுக்கி லாமலிருக்க இடமுண்டு நடஞ்செய்ய
இங்கம் பலமொன்றங்கே எட்டம் பலமுண்டைய
ஒடுக்கி லிருப்பதென்ன உளவுசண்டு கொள்வீரென்றால்
உண்மையிது வஞ்சமல்ல உன்மேலாணை யென்றுசொன்னால். வரு 2

மெல்லியல் சிவகாம வல்லி யுடன்களித்து
விளையா டவுமெங்கள் வினையோ டவுமொளித்து
எல்லையிலின் பந்தரவும் நல்லசம யந்தானிது
இங்குமங்கும் நடமாடி இருக்கலா மென்றபோது. 3

வருவா ரழைத்துவாடி வடலூர் வடதிசைக்கே
வந்தாற் பெறலாம் நல்ல வரமே.
அருட்பெருஞ்ஜோதி

## 160. பெருவழக்கு

இராகம் - பைரவி - ரூபகதாளம்
அருட்பெருஞ்ஜோதி
பல்லவி

இவர்க்கு மெனக்கும்பெரு வழக்கிருக் கின்றதது
என்றுந் தீரா வழக்குக் காணடி.

அனுபல்லவி

எவர்க்கும் பெரியவர்பொன் னம்பலத் தேநடம்
இட்டா ரெனக்குமாலை இட்டா ரிதோவந்தார். இவர்

சரணங்கள்

அன்றிதோ வருகின்றே னென்று போனவரங்கே
ஆர்செய்த தடையாலோ இருந்தாரென் கையிற்சங்கை
இன்று தங்கையிற்கொண்டே வந்துநிற் கின்றாரிங்கே
இந்தக் கதவைமூடு இவர்போவ தினியெங்கே. இவர் 1

அவரவ ருலகத்தே ஆறிக்தலர் தூற்றப்பட்டேன்
அன்றுபோ னவரின்று வந்துநிற்கின்றார் கெட்டேன்
இவர்சூதை யறியாதே முன்னம் ஏமாந்துவிட்டேன்
இந்தக் கதவைமூடு இனியெங்கும் போகவொட்டேன். இவர் 2

சின்ன வயதிலென்னைச் சேர்ந்தார்புன் னகையோடு
சென்றார் தயவாலின்று வந்தார் இவர்க்காரீடு
என்னைவிட் டினியிவர் எப்படி போவாரோடு
இந்தக் கதவைமூடு இரட்டைத்தாட் கோலைப்போடு. 3

இவர்க்கு மெனக்கும்பெரு வழக்கிருக் கின்றதது
என்றுந் தீரா வழக்குக் காணடி.
அருட்பெருஞ்ஜோதி

# 161. ஆடியபாதம்

இராகம் - தன்யாசி - ரூபகதாளம்.
அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

ஆடிய பாத மன்றாடிய பாதம்
ஆடிய பாதம் நின்றாடிய பாதம்.

சரணங்கள்

பாடிய வேதங்கள் தேடிய பாதம்
பத்திசெய் பத்தர்க்குத் தித்திக்கும் பாதம்
நாடிய மாதவர் நேடிய பாதம்
நாதாந்த நாட்டுக்கு நாயக பாதம். ஆடிய 1

தீராத வல்வினை தீர்க்கின்ற பாதம்
தெய்வங்க ளெல்லாந் தெரிசிக்கும் பாதம்
வாரா வரவாகி வந்தபொற் பாதம்
வஞ்ச மனத்தில் வசியாத பாதம். ஆடிய 2

ஆரா வமுதாகி அண்ணிக்கும் பாதம்
அன்ப ருளத்தே அமர்ந்தருள் பாதம்
நாரா யணன்விழி நண்ணிய பாதம்
நான்புனை பாடல் நயந்த பொற்பாதம். ஆடிய 3

நல்லவ ரெல்லாம் நயக்கின்ற பாதம்
நாத முடிவில் நடிக்கின்ற பாதம்
வல்லவர் சொல்லெல்லாம் வல்லபொற் பாதம்
மந்திர யந்திர தந்திர பாதம். ஆடிய 4

எச்சம யத்தும் இலங்கிய பாதம்
எள்ளுக்குள் எண்ணெய்போல் எங்குமாம் பாதம்
அச்சந் தவிர்த்தென்னை ஆட்கொண்ட பாதம்
ஆனந்த நாட்டுக் கதிபதி பாதம். ஆடிய 5

தேவர்க ளெல்லாருஞ் சிந்திக்கும் பாதம்
தெள்ளமு தாயுளந் தித்திக்கும் பாதம்
மூவருங் காணா முழுமுதற் பாதம்
முப்பாழுக் கப்பால் முளைத்த பொற்பாதம். ஆடிய 6

துரிய வெளிக்கே உரிய பொற்பாதம்
சுகமய மாகிய சுந்தரப் பாதம்
பெரிய பொருளென்று பேசும் பொற்பாதம்
பேறெல்லாந் தந்த பெரும்புகழ்ப் பாதம். ஆடிய 7

சாகா வரந்தந்த தாரக பாதம்
சச்சிதா னந்த சதோதய பாதம்
தேகாதி யெல்லாஞ் சிருட்டிக்கும் பாதம்
திதிமுதல் ஐந்தொழில் செய்கின்ற பாதம். ஆடிய 8

ஓங்கார பீடத் தொளிர்கின்ற பாதம்
ஒன்று யிரண்டாகி ஓங்கிய பாதம்
தூங்காத தூக்கத்திற் றூக்கிய பாதம்
துரியத்தி னூன்றித் துலங்கிய பாதம். ஆடிய 9

ஐவண்ண முங்கொண்ட அற்புதப் பாதம்
அபய ரெல்லார்க்கு மமுதான பாதம்
கைவண்ண நெல்லிக் கனியாகும் பாதம்
கண்ணுங் கருத்துங் கலந்த பொற்பாதம். ஆடிய 10

ஆருயிர்க் காதார மாகிய பாதம்
அண்ட பிண்டங்கள் அளிக்கின்ற பாதம்
சாருயிர்க் கின்பந் தருகின்ற பாதம்
சத்திய ஞான தயாநிதி பாதம். ஆடிய 11

தாங்கி யெனைப்பெற்ற தாயாகும் பாதம்
தந்தையு மாகித் தயவுசெய் பாதம்
ஓங்கியென் னுள்ளே உறைகின்ற பாதம்
உண்மை விளங்க உரைத்தபொற் பாதம். ஆடிய 12

எண்ணிய வாறே எனக்கருள் பாதம்
இறவா நிலையில் இருத்திய பாதம்
புண்ணியர் கையுட் பொருளாகும் பாதம்
பொய்ய ருளத்திற் பொருந்தாத பாதம். ஆடிய 13

ஆறந்தத் துள்ளும் அமர்ந்தபொற் பாதம்
ஆதி யனாதியு மாகிய பாதம்
மாறந்த மில்லாவென் வாழ்முதற் பாதம்
மண்முத லைந்தாய் வயங்கிய பாதம். ஆடிய 14

அருட்பெருஞ் ஜோதிய தாகிய பாதம்
அம்மையு மப்பனு மாகிய பாதம்
பொருட்பெரும் போகம் புணர்த்திய பாதம்
பொன்வண்ண மாகிய புண்ணிய பாதம். ஆடிய 15

நாரண னாதியர் நாடரும் பாதம்
நான்தவத் தாற்பெற்ற நற்றுணைப் பாதம்
ஆரண மாகமம் போற்றிய பாதம்
ஆசைவிட் டார்க்கே அணிமையாம் பாதம். 16

ஆடிய பாத மன்றாடிய பாதம்
ஆடிய பாதம் நின்றாடிய பாதம்.

அருட்பெருஞ்ஜோதி

## 162. அபயம்

இராகம் - தோடி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

அபயம் அபயம் அபயம் அபயம்.

சரணங்கள்

உபயம தாயென் உறவாய்ச் சிதம்பர
சபையில் நடஞ்செயுஞ் சாமி பதத்திற்கே. அபயம் 1

எம்பலத் தாலெம்மை யென்றுகொளத் தில்லை
அம்பலத் தாடுமெம் ஐயர் பதத்திற்கே. அபயம் 2

தவசிதம் பரமாகித் தன்பய மாய்ச்செயுஞ்
சிவசிதம் பரமகா தேவர் பதத்திற்கே. அபயம் 3

ஒன்றும் பதத்திற் குயர்பொரு ளாகியே
என்றுமென் னுள்ளத் தினிக்கும் பதத்திற்கே. அபயம் 4

வானந்த மாந்தில்லை மன்றிடை யென்றுநின்
றானந்தத் தாண்டவ மாடும் பதத்திற்கே. அபயம் 5

நாராய ணனொடு நான்முக னாதியர்
பாரா யணஞ்செயும் பதும பதத்திற்கே. அபயம் 6

அன்பர் செயும்பிழை ஆயிரமும் பொறுத்
தின்ப மளிக்குநம் ஈசர் பதத்திற்கே. அபயம் 7

குற்றஞ் செயினுங் குணமாகக் கொண்டுநம்
அற்றந் தவிர்க்குநம் அப்பர் பதத்திற்கே. அபயம் 8

செம்பொரு ளாகிச் சிதம்பரத் தேயென்றும்
நம்பொரு ளான நடேசர் பதத்திற்கே. அபயம் 9

வெச்சென்ற மாயை வினையாதி யால்வந்த
அச்சந் தவிர்க்குநம் ஐயர் பதத்திற்கே. அபயம் 10

எண்ணிய எண்ணங்கள் எல்லா முடிக்குநம்
புண்ணிய ஞானதெய்வப் பொன்னடிப் போதுக்கே. அபயம் 11

மன்னம் பரத்தே வடிவில் வடிவாகிப்
பொன்னம் பலத்தாடும் பொன்னடிப் போதுக்கே. அபயம் 12

நாத முடிவில் நடம்புரிந் தன்பர்க்குப்
போத மளிக்கின்ற பொன்னடிப் போதுக்கே. அபயம் 13

உச்சி தாழ்கின்ற உறவோர் உறவான
சச்சி தானந்தத் தனிநடப் போதுக்கே. அபயம் 14

சித்தமு முள்ளமுந் தித்தித் தினிக்கின்ற
புத்தமு தாகிய பொன்னடிப் போதுக்கே. 15

அபயம் அபயம் அபயம்

அருட்பெருஞ்ஜோதி

## 163. அற்புதம்

இராகம் - தர்பார் - ரூபகதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

அற்புதம் அற்புதமே — அருள்
அற்புதம் அற்புதமே.

சரணங்கள்

சிற்பதம் பொற்பதஞ் சேரே சிறந்தது
சித்தாடு கின்ற திருநாள் பிறந்தது
கற்பத நெஞ்சக் கரிசு துறந்தது
கற்றபொய்ந் நூல்கள் கணத்தே மறந்தது. அற்புதம் 1

செத்தா ரெழுகின்ற திருநா ளடுத்தது
சிவநெறி யொன்றே எங்குந்தலை யெடுத்தது
இத்தா ரணிமுதல் வானு முடித்தது
இறவா வரந்தா னெனக்குக் கொடுத்தது. அற்புதம் 2

ஆனந்த நாடகம் ஆடுதல் சார்ந்தது
அடுத்த தருணம் இதுவாக நேர்ந்தது
ஈனந்த மாயை இருள்வினை சோர்ந்தது
என்னருட் ஜோதியென் உள்ளத்தி லார்ந்தது. அற்புதம் 3

சத்திய ஞான சபையென்னுட் கண்டனன்
சன்மார்க்க சித்தியை நான்பெற்றுக் கொண்டனன்
நித்திய ஞான நிறையமு துண்டனன்
நிந்தை யுலகியற் சந்தையை விண்டனன். அற்புதம் 4

வஞ்சக ரஞ்சினர் வாய்மூடிச் சென்றனர்
வந்து திரும்பவும் வாயிலில் நின்றனர்
தஞ்ச மெமக்கருள் சாமிநீ யென்றனர்
சன்மார்க்க சங்கத் தவர்களோ வென்றனர். அற்புதம் 5

புறங்கூறி னோரெல்லாம் புல்லெனப் போயினர்
பொற்படிக் கீழ்ப்புற மீளவு மேயினர்
மறங்கூறி னோரென்செய் வோமென்று கூயினர்
வாழிய வென்றுசொல் வாயின ராயினர். அற்புதம் 6

வெவ்வினைக் காடெலாம் வேரோடு வெந்தது
வெய்ய மாமாயை விரிவற்று நொந்தது
செவ்விய ஞானஞ் சிறப்புற வந்தது
சித்திகள் யாவையுஞ் செய்திடத் தந்தது. அற்புதம் 7

சாதி சமயச் சழக்கெலா மற்றது
சன்மார்க்க ஞான சபைநிலை பெற்றது
மேதினி யிற்சாகா வித்தையைக் கற்றது
மெய்யருட் ஜோதியென் னுள்ளத்தி லுற்றது. 8

அற்புதம் அற்புதமே — அருள்
அற்புதம் அற்புதமே.

அருட்பெருஞ்ஜோதி

# 164. காட்சிக்கண்ணி

இராகம் - எதுகுலகாம்போதி - அடதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி — அம்மா
அற்புதக் காட்சியடி.

சரணங்கள்

ஜோதி மலையொன்று தோன்றிற் றதிலொரு
வீதியுண் டாச்சுதடி — அம்மா
வீதியுண் டாச்சுதடி. ஆணி 1

வீதியிற் சென்றேனவ் வீதி நடுவொரு
மேடை யிருந்ததடி — அம்மா
மேடை யிருந்ததடி. ஆணி 2

மேடை மேலேறினேன் மேடைமே லங்கொரு
கூட மிருந்ததடி — அம்மா
கூட மிருந்ததடி. ஆணி 3

கூடத்தை நாடவக் கூடமே லேழ்நிலை
மாட மிருந்ததடி — அம்மா
மாட மிருந்ததடி. ஆணி 4

ஏழ்நிலைக் குள்ளும் இருந்த அதிசயம்
என்னென்று சொல்வனடி — அம்மா
என்னென்று சொல்வனடி. ஆணி 5

ஓர்நிலை தன்னில் ஒளிர்முத்து வெண்மணி
சீர்நிலை யாச்சுதடி — அம்மா
சீர்நிலை யாச்சுதடி. ஆணி 6

பாரோர் நிலையிற் கருநீலஞ் செய்ய
பவளம தாச்சுதடி — அம்மா
பவளம தாச்சுதடி. ஆணி 7

மற்றோர் நிலையில் மரகதப் பச்சைசெம்
மாணிக்க மாச்சுதடி — அம்மா
மாணிக்க மாச்சுதடி. ஆணி 8

பின்னோர் நிலையிற் பெருமுத்து வச்சிரப்
பேர்மணி யாச்சுதடி — அம்மா
பேர்மணி யாச்சுதடி. ஆணி 9

வேறோர் நிலையில் மிகும்பவ ளத்திரள்
வெண்மணி யாச்சுதடி — அம்மா
வெண்மணி யாச்சுதடி. ஆணி 10

புகலோர் நிலையிற் பொருந்திய பன்மணி
பொன்மணி யாச்சுதடி — அம்மா
பொன்மணி யாச்சுதடி. ஆணி 11

பதியோர் நிலையிற் பகர்மணி யெல்லாம்
படிகம தாச்சுதடி — அம்மா
படிகம தாச்சுதடி. ஆணி 12

ஏழ்நிலை மேலே யிருந்ததோர் தம்பம்
இசைந்தபொற் றம்பமடி — அம்மா
இசைந்தபொற் றம்பமடி. ஆணி 13

பொற்றம்பங் கண்டேறும் போதுநான் கண்ட
புதுமையென் சொல்வனடி — அம்மா
புதுமையென் சொல்வனடி. ஆணி 14

ஏறும்போ தங்கே யெதிர்ந்த வகைசொல
என்னள வல்லவடி — அம்மா
என்னள வல்லவடி. ஆணி 15

ஆங்காங்கே சத்திகள் ஆயிர மாயிரம்
ஆகவந் தார்களடி — அம்மா
ஆகவந் தார்களடி. ஆணி 16

வந்து மயக்க மயங்காமல் நானருள்
வல்லபம் பெற்றேனடி — அம்மா
வல்லபம் பெற்றேனடி. ஆணி 17

வல்லபத் தாலந்த மாதப்பத் தேறி
மணிமுடி கண்டேனடி — அம்மா
மணிமுடி கண்டேனடி. ஆணி 18

மணிமுடி மேலோர் கொடுமுடி நின்றது
மற்றது கண்டேனடி — அம்மா
மற்றது கண்டேனடி. ஆணி 19

கொடுமுடி மேலாயி ரத்தெட்டு மாற்றுப்பொற்
கோயி லிருந்ததடி — அம்மா
கோயி லிருந்ததடி. ஆணி 20

கோயிலைக் கண்டங்கே கோபுர வாயிலில்
கூசாது சென்றேனடி — அம்மா
கூசாது சென்றேனடி. ஆணி 21

கோபுர வாயிலுட் சத்திகள் சத்தர்கள்
கோடிபல் கோடியடி — அம்மா
கோடிபல் கோடியடி. ஆணி 22

ஆங்கவர் வண்ணம்வெள் வண்ணம்செவ் வண்ணமுன்
ஐவண்ண மாகுமடி — அம்மா
ஐவண்ண மாகுமடி. ஆணி 23

அங்கவ ரெல்லாமிங் காரிவ ரென்னவும்
அப்பாலே சென்றேனடி — அம்மா
அப்பாலே சென்றேனடி. ஆணி 24

அப்பாலே சென்றேனங் கோர்திரு வாயிலில்
ஐவ ரிருந்தாரடி — அம்மா
ஐவ ரிருந்தாரடி. ஆணி 25

மற்றவர் நின்று வழிகாட்ட மேலோர்
மணிவாயி லுற்றேனடி — அம்மா
மணிவாயி லுற்றேனடி. ஆணி 26

எண்ணுமவ் வாயிலிற் பெண்ணோ டாணுக
இருவ ரிருந்தாரடி — அம்மா
இருவ ரிருந்தாரடி. ஆணி 27

அங்கவர் காட்ட அணுக்கத் திருவாயில்
அன்பொடு கண்டேனடி — அம்மா
அன்பொடு கண்டேனடி. ஆணி 28

அத்திரு வாயிலில் ஆனந்த வல்லியென்
அம்மை யிருந்தாளடி — அம்மா
அம்மை யிருந்தாளடி. ஆணி 29

அம்மை யைக்கண் டேன் அவளருள் கொண்டேன்
அமுதமு முண்டேனடி — அம்மா
அமுதமு முண்டேனடி. ஆணி 30

தாங்கும் அவளரு ளாலே நடராஜர்
சந்நிதி கண்டேனடி — அம்மா
சந்நிதி கண்டேனடி. ஆணி 31

சந்நிதி யிற்சென்று நான்பெற்ற பேறது
சாமி யறிவாரடி — அம்மா
சாமி யறிவாரடி. 32

ஆணிப்பொன் னம்பலத் தேகண்ட காட்சிகள்
அற்புதக் காட்சியடி — அம்மா
அற்புதக் காட்சியடி.

அருட்பெருஞ்ஜோதி

## 165. அக்கச்சி

இராகம் - எதுகுலகாம்போதி - அடதாளம்

அருட்பெருஞ்ஜோதி

**வா**னத்தின் மீது மயிலாடக் கண்டேன்
மயில்குயி லாச்சுதடி — அக்கச்சி
மயில்குயி லாச்சுதடி. 1

துள்ளலை விட்டுத் தொடங்கினேன் மன்றாடும்
வள்ளலைக் கண்டேனடி — அக்கச்சி
வள்ளலைக் கண்டேனடி. 2

ஜாதி சமயச் சழக்கைவிட் டேனருட்
ஜோதியைக் கண்டேனடி — அக்கச்சி
ஜோதியைக் கண்டேனடி. 3

பொய்யை யொழித்துப் புறப்பட்டேன் மன்றாடும்
ஐயரைக் கண்டேனடி — அக்கச்சி
ஐயரைக் கண்டேனடி. 4

அருட்பெருஞ்ஜோதி

# 166. ஆனந்தமேலீடு 1

இராகம் - சஹானா - அடதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பல்லவி

ஊதூது சங்கே ஊதூது சங்கே
ஊதூது சங்கே ஊதூது சங்கே.

சரணங்கள்

கைவிட மாட்டானென் றூதூது சங்கே
கனக சபையானென் றூதூது சங்கே
பொய்விடச் செய்தானென் றூதூது சங்கே
பூசை பலித்ததென் றூதூது சங்கே. ஊதூது 1

தூக்கந் தொலைத்தானென் றூதூது சங்கே
துன்பந் தவிர்த்தானென் றூதூது சங்கே
ஏக்கங் கெடுத்தானென் றூதூது சங்கே
ஏம சபையானென் றூதூது சங்கே. ஊதூது 2

பொன்னடி தந்தானென் றூதூது சங்கே
பொன்னம் பலத்தானென் றூதூது சங்கே
இன்ன லறுத்தானென் றூதூது சங்கே
என்னுள் அமர்ந்தானென் றூதூது சங்கே. ஊதூது 3

அச்சந் தவிர்த்தானென் றூதூது சங்கே
அம்பல வாணனென் றூதூது சங்கே
இச்சை யளித்தானென் றூதூது சங்கே
இன்பங் கொடுத்தானென் றூதூது சங்கே. ஊதூது 4

என்னுயிர் காத்தானென் றூதூது சங்கே
இன்பம் பலித்ததென் றூதூது சங்கே
பொன்னுருத் தந்தானென் றூதூது சங்கே
பொற்சபை யப்பனென் றூதூது சங்கே. ஊதூது 5

சிவமாக்கிக் கொண்டானென் றூதூது சங்கே
சிற்றம் பலத்தானென் றூதூது சங்கே
நவநோக் களித்தானென் றூதூது சங்கே
நானவ னானேனென் றூதூது சங்கே. ஊதூது 6

நாத முடியானென் றூதூது சங்கே
ஞான சபையானென் றூதூது சங்கே
பாத மளித்தானென் றூதூது சங்கே
பலித்தது பூசையென் றூதூது சங்கே. ஊதூது 7

தெள்ளமு தானானென் றூதூது சங்கே
சிற்சபை யப்பனென் றூதூது சங்கே
உள்ளம் உவந்தானென் றூதூது சங்கே
உள்ள துரைத்தானென் றூதூது சங்கே. ஊதூது 8

என்னறி வானானென் றூதூது சங்கே
எல்லாஞ்செய் வல்லானென் றூதூது சங்கே
செந்நிலை தந்தானென் றூதூது சங்கே
சிற்சபை யப்பனென் றூதூது சங்கே. ஊதூது 9

இறவாமை யீந்தானென் றூதூது சங்கே
எண்ணம் பலித்ததென் றூதூது சங்கே
திறமே யளித்தானென் றூதூது சங்கே
சிற்றம் பலத்தானென் றூதூது சங்கே. ஊதூது 10

கரவு தவிர்ந்ததென் றூதூது சங்கே
கருணை கிடைத்ததென் றூதூது சங்கே
இரவு விடிந்ததென் றூதூது சங்கே
எண்ணம் பலித்ததென் றூதூது சங்கே. ஊதூது 11

எல்லாஞ்செய் வல்லானென் றூதூது சங்கே
எல்லார்க்கு நல்லானென் றூதூது சங்கே
எல்லா முடையானென் றூதூது சங்கே
எல்லாமும் ஆனானென் றூதூது சங்கே. ஊதூது 12

கருணா நிதியனென் றூதூது சங்கே
கடவு ளவனேயென் றூதூது சங்கே
அருணா டகத்தானென் றூதூது சங்கே
அம்பல ஜோதியென் றூதூது சங்கே. ஊதூது 13

தன்னிக ரில்லானென் றூதூது சங்கே
தலைவ னவனேயென் றூதூது சங்கே
பொன்னியல் வண்ணனென் றூதூது சங்கே
பொதுநடஞ் செய்வானென் றூதூது சங்கே. ஊதூது 14

ஆனந்த நாதனென் றாதூது சங்கே
அருளுடை யப்பனென் றாதூது சங்கே
தானந்த மில்லானென் றாதூது சங்கே
தத்துவ ஜோதியென் றாதூது சங்கே. ஊதூது 15

போய்விட் டகன்றேனென் றாதூது சங்கே
புண்ணிய ஞானியென் றாதூது சங்கே
மெய்தொட்டு நின்றேனென் றாதூது சங்கே
மேல்வெளி கண்டேனென் றாதூது சங்கே. ஊதூது 16

அருட்பெருஞ்ஜோதி

# 167. ஆனந்தமேலீடு 2

இராகம் - தன்யாசி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

அம்பலவர் வந்தாரென்று சின்னம்பிடி
அற்புதஞ்செய் கின்றாரென்று சின்னம்பிடி
செம்பல னளித்தாரென்று சின்னம்பிடி
சித்திநிலை பெற்றதென்று சின்னம்பிடி. 1

சிற்சபையைக் கண்டோமென்று சின்னம்பிடி
சித்திகள்செய் கின்றோமென்று சின்னம்பிடி
பொற்சபை புகுந்தோமென்று சின்னம்பிடி
புந்திமகிழ் கின்றோமென்று சின்னம்பிடி. 2

ஞானசித்தி புரமென்று சின்னம்பிடி
நாடகஞ்செய் யிடமென்று சின்னம்பிடி
ஆனசித்தி செய்வோமென்று சின்னம்பிடி
அருட்ஜோதி பெற்றோமென்று சின்னம்பிடி. 3

கோடிகட்டிக் கொண்டோமென்று சின்னம்பிடி
கூத்தாடு கின்றோமென்று சின்னம்பிடி
அடிமுடியைக் கண்டோமென்று சின்னம்பிடி
அருளமுதம் உண்டோமென்று சின்னம்பிடி. 4

அப்பர்வரு கின்றாரென்று சின்னம்பிடி
அற்புதஞ்செய் வதற்கென்று சின்னம்பிடி
செப்பநிலை பெற்றதென்று சின்னம்பிடி
சித்திபுரம் இடமென்று சின்னம்பிடி. 5

தானே நானானேனென்று சின்னம்பிடி
சத்தியஞ் சத்தியமென்று சின்னம்பிடி
ஊனே புகுந்ததென்று சின்னம்பிடி
ஒளிவண்ண மானதென்று சின்னம்பிடி. 6

வேகாத காலுணர்ந்து சின்னம்பிடி
வேகா நடுத்தெரிந்து சின்னம்பிடி
சாகாத் தலையறிந்து சின்னம்பிடி
சாகாத கல்விகற்றுச் சின்னம்பிடி. 7

மீதான நிலையேறிச் சின்னம்பிடி
வெட்டவெளி நடுநின்று சின்னம்பிடி
வேதாக மங்கடந்து சின்னம்பிடி
வேதாந்த சித்தாந்த சின்னம்பிடி. 8

பன்மார்க்க முங்கடந்து சின்னம்பிடி
பன்னிரண்டின் மீதுநின்று சின்னம்பிடி
சன்மார்க்க மார்க்கமென்று சின்னம்பிடி
சத்தியஞ்செய் கின்றோமென்று சின்னம்பிடி. 9

சித்தாடு கின்றாரென்று சின்னம்பிடி
செத்தா ரெழுவாரென்று சின்னம்பிடி
இத்தா ரணியிலென்று சின்னம்பிடி
இதுவே தருணமென்று சின்னம்பிடி. 10

அருட்பெருஞ்ஜோதி



# 168. ஆனந்தமேலீடு 3

இராகம் - சஹானா - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

**கையறவி** லாதுநடுக் கண்புருவப் பூட்டு
கண்டுகளி கொண்டுதிறந் தண்டுநடு நாட்டு
ஐயர்மிக வுய்யும்வகை யப்பர்விளை யாட்டு
ஆடுமிதென் றேமறைகள் பாடுவது பாட்டு. 1

சிற்சபையும் பொற்சபையுஞ் சொந்தமென தாச்சு
தேவர்களு மூவர்களும் பேசுவதென் பேச்சு
இச்சமய வாழ்விலெனக் கென்னையினி யேச்சு
என்பிறவித் துன்பமெலா மின்றோடே போச்சு. 2

ஐயரருட் ஜோதியர சாட்சியென தாச்சு
ஆரணமு மாகமமும் பேசுவதென் பேச்சு
எய்புலக வாழ்விலெனக் கென்னையினி யேச்சு
என்பிறவித் துன்பமெலா மின்றோடே போச்சு. 3

ஈசனரு ளாற்கடலி லேற்றதொரு வோடம்
ஏறிக்கரை யேறினே னிருந்ததொரு மாடம்
தேசுறுமம் மாடநடுத் தெய்வமணிப் பீடம்
தீபவொளி கண்டவுடன் சேர்ந்ததுசந் தோடம். 4

மேருமலை உச்சியில் விளங்குகம்ப நீட்சி
மேவுமதன் மேலுலகில் வீறுமர சாட்சி
சேருமதிற் கண்டபல காட்சிகள்கண் காட்சி
செப்பலரி தாமிதற்கென் அப்பனருள் சாட்சி. 5

துரியமலை மேலுளதோர் ஜோதிவள நாடு
தோன்றுமதில் ஐயர்நடஞ் செய்யுமணி வீடு
தெரியுமது கண்டவர்கள் காணிலுயி ரோடு
செத்தவ ரெழுவாரென்று கைத்தாளம் போடு. 6

சொல்லால் அளப்பரிய ஜோதிவரை மீது
தூயதுரி யப்பதியில் நேயமறை போது
எல்லாஞ்செய் வல்லசித்தர் தம்மையுறும் போது
இறந்தா ரெழுவாரென்று பறந்தாரை யூது. 7

சிற்போதும் பொற்போதும் நானறிய லாச்சு
சித்தர்களும் முத்தர்களும் பேசவதென் பேச்சு
இப்பெரிய இவ்வுலகில் என்னையினி யேச்சு
என்பிறவித் துன்பமெலா மின்றோடே போச்சு. 8

வலதுசொன்ன பேர்களுக்கு வந்ததுவாய்த் தாழ்வு
மற்றவரைச் சேர்ந்தவர்க்கும் வந்ததலைத் தாழ்வு
வலதுபுஜம் ஆடநம்பால் வந்ததருள் வாழ்வு
மற்றுநமைச் சூழ்ந்தவர்க்கும் வந்ததுநல் வாழ்வு. 9

அம்பலத்தில் எங்களைய ராடியநல் லாட்டம்
அன்பொடு துதித்தவருக் கானதுசொல் லாட்டம்
வம்புசொன்ன பேர்களுக்கு வந்ததுமல் லாட்டம்
வந்ததலை யாட்டமன்றி வந்ததுபல் லாட்டம். 10

நாத்திகஞ்சொல் கின்றவர்தம் நாக்குமுடை நாக்கு
நாக்குருசி கொள்ளுவது நாறியபிண் ணாக்கு
சீர்த்திபெறும் அம்பலவர் சீர்புகன்ற வாக்கு
செல்வாக்கு நல்வாக்கு தேவர்திரு வாக்கு. 11

அருட்பெருஞ்ஜோதி

---

# 169. பிரபஞ்சவெற்றி

இராகம் - அடாணா - ரூபகதாளம்

அருட்பெருஞ்ஜோதி

அருட்ஜோதி யானேனென் றறையப்பா முரசு
அருளாட்சி பெற்றேனென் றறையப்பா முரசு
மருட்சார்பு தீர்ந்தேனென் றறையப்பா முரசு
மரணந் தவிர்ந்தேனென் றறையப்பா முரசு.

அருட்பெருஞ்ஜோதி

---

# நாமாவளி

## 170. அம்பலத்தரசே

அருட்பெருஞ்ஜோதி

இராகம் - இந்துஸ்தான் பியாக் - ஆதிதாளம்

அம்பலத் தரசே அரு மருந்தே
ஆனந்தத் தேனே அருள் விருந்தே. 1

பொதுநடத் தரசே புண்ணி யனே
புலவரெலாம் புகழ் கண்ணி யனே. 2

மலைதரு மகளே மட மயிலே
மதிமுக அமுதே இளங் குயிலே. 3

ஆனந்தக் கொடியே இளம் பிடியே
அற்புதத் தேனே மலை மானே. 4

சிவசிவ சிவசிவ சின்மய தேஜா
சிவசுந் தரகுஞ் சிதநட ராஜா. 5

படன விவேக பரம்பர வேதா
நடன சபேச சிதம்பர நாதா. 6

அரிபிர மாதியர் தேடிய நாதா
அரகர சிவசிவ ஆடிய பாதா. 7

அந்தண வங்கண அம்பர போகா
அம்பல நம்பர அம்பிகை பாகா. 8

அம்பர விம்ப சிதம்பர நாதா
அஞ்சித ரஞ்சித குஞ்சித பாதா. 9

தந்திர மந்திர யந்திர பாதா
சங்கர சங்கர சங்கர நாதா. 10

கனக சிதம்பர கங்கர புரஹர
அனக பரம்பர சங்கர ஹரஹர. 11

சகல கலாண்ட சராசர காரண
சகுண சிவாண்ட பராபர பூரண. 12

இக்கரை கடந்திடில் அக்கரை யே
இருப்பது சிதம்பர சர்க்கரை யே. 13

என்னுயி ருடம்பொடு சித்தம தே
இனிப்பது நடராஜ புத்தமு தே. 14

ஐயர் திருச்சபை யாடக மே
ஆடுத லானந்த நாடக மே. 15

உத்தர ஞான சிதம்பர மே
சித்தியெ லாந்தரு மம்பர மே. 16

அம்பல வாசிவ மாதே வா
வம்பல வாவிங்கு வாவா வா 17

நடராஜ னெல்லார்க்கு நல்லவ னே
நல்லவெ லாஞ்செய வல்லவ னே. 18

ஆனந்த நாடகங் கண்டோ மேபர
மானந்த போனகங் கொண்டோ மே. 19

சகள உபகள நிட்கள நாதா
உகள சததள மங்கள பாதா. 20

சந்தத முஞ்சிவ சங்கர பஜனம்
சங்கித மென்பது சற்சன வசனம். 21

சங்கர சிவசிவ மாதே வா
எங்களை யாட்கொள வாவா வா. 22

அரகர சிவசிவ மாதே வா
அருளமு தந்தர வாவா வா. 23

நடன சிகாமணி நவமணி யே
திடனக மாமணி சிவமணி யே. 4

நடமிடு மம்பல நன்மணி யே
புடமிடு செம்பல பொன்மணி யே. 25

உவட்டாது சித்திக்கும் உள்ளம தே
தெவிட்டாது தித்திக்குந் தெள்ளமு தே. 26

நடராஜ வள்ளலை நாடுத லே
நற்றொழி லாம்விளை யாடுத லே. 27

அருட்போது நடமிடு தாண்டவ னே
அருட்பெருஞ் ஜோதியென் ஆண்டவ னே. 28

நடராஜ மாணிக்கம் ஒன்றது வே
நண்ணுத லாணிப்பொன் மன்றது வே. 29

நடராஜ பலமது நம்பல மே
நடமாடு வதுதிரு அம்பல மே. 30

நடராஜர் பாட்டே நறும் பாட்டு
ஞாலத்தார் பாட்டெல்லாம் வெறும் பாட்டு. 31

சிதம்பரப் பாட்டே திருப் பாட்டு
ஜீவர்கள் பாட்டெல்லாந் தெருப் பாட்டு. 32

அம்பலப் பாட்டே அருட் பாட்டு
அல்லாத பாட்டெல்லா மருட் பாட்டு. 33

அம்பல வாணனை நாடின னே
அவனடி யாரொடுங் கூடின னே. 34

தம்பத மாம்புகழ் பாடின னே
தந்தன வென்றுகூத் தாடின னே. 35

நான்சொன்ன பாடலுங் கேட்டா ரே
ஞான சிதம்பர நாட்டா ரே. 36

இனித்துயர் படமாட்டேன் விட்டே னே
என்குரு மேலாணை யிட்டே னே. 37

இனிப்பாடு படமாட்டேன் விட்டே னே
என்னப்பன் மேலாணை யிட்டே னே. 38

சன்மார்க்கம் நன்மார்க்கம் நன் மார்க்கம்
சகமார்க்கந் துன்மார்க்கந் துன் மார்க்கம். 39

நாதாந்த நாட்டுக்கு நாயக ரே
நடராஜ ரேசபா நாயக ரே. 40

நான் சொல்லு மிதுகேளீர் சத்தியமே
நடராஜ வெனில் வரு நித்தியமே. 41

நல்லோ ரெல்லார்க்குஞ் சபா பதியே
நல்வர மீயுந் தயா நிதியே. 42

நடராஜர் தன்னடம் நன்னட மே
நடம்புரி கின்றதும் என்னிட மே. 43

சிவகாம வல்லிக்கு மாப்பிள்ளை யே
திருவாள னானவன் சீர்ப்பிள்ளை யே. 44

சிவகாம வல்லியைச் சேர்ந்தவ னே
சித்தெல்லாஞ் செய்திடத் தேர்ந்தவ னே. 45

இறவா வரந்தரு நற்சபை யே
எனமறை புகழ்வது சிற்சபை யே. 46

என்னிரு கண்ணுள் இருந்தவ னே
இறவா தருளு மருந்தவ னே. 47

சிற்சபை யப்பனை யுற்றே னே
சித்தி யெலாஞ் செயப் பெற்றே னே. 48

அம்பல வாணர்தம் அடியவ ரே
அருளர சாள்மணி முடியவ ரே. 49

அருட்பெருஞ் ஜோதியைக் கண்டே னே
ஆனந்தத் தெள்ளமு துண்டே னே. 50

இருட்பெரு மாயையை விண்டே னே
எல்லாஞ்செய் சித்தியைக் கொண்டே னே. 51

கருணா நிதியே குணநிதி யே
கதிமா நிதியே கலாநிதி யே. 52

தருணா பதியே சிவபதி யே
தனிமா பதியே சபாபதி யே. 53

கருணா நிதியே சபாபதி யே
கதிமா நிதியே பசுபதி யே. 54

சபாபதி பாதம் தபோ பிரசாதம்
தயாநிதி போதம் சதோதய வேதம். 55

கருணாம் பரவர கரசிர பவபவ
அருணாம் பரதர ஹரஹர சிவசிவ. 56

கனகா கரபுர ஹரசிர கரதர
கருணா கரபர சுரவர ஹரஹர. 57

கனக சபாபதி பசுபதி நவபதி
அனக உமாபதி அதிபதி சிவபதி. 58

வேதாந்த பராம்பர ஜய ஜய
நாதாந்த நடாம்பர ஜய ஜய. 59

ஏகாந்த சர்வேச சமோ தம
யோகாந்த நடேச நமோ நம. 60

ஆதாம்பர ஆடக அதி சய
பாதாம்புஜ நாடக ஜய ஜய. 61

போதாந்த புரேச சிவா கம
நாதாந்த நடேச நமோ நம. 62

ஜால கோலகன காம்பர சாயக
காலகால வன காம்பர நாயக. 63

உபல சிரதல சுபகண வங்கண
சுபல கரதல கணபண கங்கண. 64

அபய வரதகர தலபுரி காரண
உபய பரதபத பரபரி பூரண. 65

அகர வுகரசுப கரவர சினகர
தகர வகரநவ புரசிர தினகர. 66

வகர சிகரதின கரசசி கரபுர
மகர வகரவர புரஹர ஹரஹர. 67

பரம மந்த்ரசக ளாகள கரணு
படன தந்த்ரநிக மாகம சரணு. 68

அனந்த கோடிகுண கரகர ஜொலிதா
அகண்ட வேதசிர கரதர பலிதா. 69

பரிபூரண ஞான சிதம் பர
பதிகாரண நாத பரம் பர. 70

சிவ ஞானப தாடக நாடக
சிவ போத பரோகள கூடக. 71

சகல லோகபர காரக வாரக
சபள யோகசர பூரக தாரக. 72

சத்வ போதக தாரண தன்மய
சத்ய வேதக பூரண சின்மய. 73

வரகே சாந்த மகோதய காரிய
பரபா சாந்த சுகோதய சூரிய. 74

பளித தீபக சோபித பாதா
லளித ரூபக ஸ்தாபித நாதா. 75

அனுர்த கோபகரு ணம்பக நாதா
அமிர்த ரூபதரு ணம்புஜ பாதா. 76

அம்போ ருகபத அரஹர கங்கர
சம்போ சிவசிவ சிவசிவ சங்கர. 77

சிதம்பர காசா பரம்பிர காசா
சிதம்ப ரேசா சுயம்பிர காசா. 78

அருட்பிர காசம் பரப்பிர காசம்
அகப்பிர காசம் சிவப்பிர காசம் 79

நடப்பிர காசம் தவப்பிர காசம்
நவப்பிர காசம் சிவப்பிர காசம். 80

நாத பரம்பரனேபர நாத சிதம்பரனே
நாத திகம்பரனே தசநாத சுதந்தரனே. 81

ஞான நடத்தவனே பரஞானி யிடத்தவனே
ஞான வரத்தவனே சிவஞான புரத்தவனே. 82

ஞான சபாபதியே மறைநாடு சதாகதியே
தீன தயாநிதியே பரதேவி யுமாபதியே. 83

புத்தந்தரும் போதா வித்தந்தருந் தாதா
நித்தந்தரும் பாதா சித்தந்திரும் பாதா. 84

அருட்பெருஞ்ஜோதி

## 171. போகம் சுகபோகம்

இராகம் - சங்கராபரணம் - இங்கிலீஷ் மெட்டு - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

போகஞ் சுகபோகஞ் சிவபோகம் அதுநித்யம்
ஏகஞ் சிவமேகஞ் சிவமேகம் இதுசத்யம். 1

நலமங்கல முறுமம்பல நடனம்மது நடனம்
பலநன்கருள் சிவசங்கர படனம்மது படனம். 2

அருட்பெருஞ்ஜோதி

## 172. சூதுமன்னு விந்தையே

இராகம் - சங்கராபரணம் - இங்கிலீஷ் நோட்டு - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

சூதுமன்னு விந்தையே சூடலென்ன நிந்தையே
கோதுவிண்ட சிந்தையே கோயில்கொண்ட தந்தையே. 1

அன்புமூந்து சிந்தையே அம்பலங்கொள் விந்தையே
இன்பமென்பன் எந்தையே எந்தைதந்தை தந்தையே. 2

ஞானசித்தி புரத்தனே நாதசத்தி பரத்தனே
வானமுத்த தரத்தனே வாதவித்தை வரத்தனே. 3

நீயென்னப்பன் அல்லவா நினக்குமின்னஞ் சொல்லவா
தாயின்மிக்க நல்லவா சர்வசித்தி வல்லவா. 4

பலத்திற்றன்னம் பலத்திற்பொன்னம் பலத்திற்றுன்னு நலத்தனே
பதத்திற்பன்னும் பரத்திற்றுன்னும் பரத்தின் மன்னுங் குலத்தனே. 5

ஆயவாய நேயஞேய மாயஞாய வாதியே
தூயவாய காயதேய தோயமேய ஜோதியே. 6

ஆதவாத வேதகீத வாதவாத வாதியே
சூதவாத பாதநாத சூதஜாத ஜோதியே. 7

அங்கசங்க மங்கைபங்க ஆதிஆதி ஆதியே
துங்கபுங்க வங்கலிங்க ஜோதிஜோதி ஜோதியே. 8

அத்தமுத்த அத்தமுத்த ஆதிஆதி ஆதியே
சுத்தசித்த சுத்தசித்த ஜோதிஜோதி ஜோதியே. 9

அஞ்சலஞ்ச லென்றுவந்தென் நெஞ்சமர்ந்த குழகனே
வஞ்சநஞ்ச முண்டகண்ட மன்றுள்நின்ற அழகனே. 10

தொண்டர்கண்டு கண்டுமொண்டு கொண்டுணுண்ட இன்பனே
அண்டரண்டம் உண்டவிண்டு தொண்டுமண்டும் அன்பனே. 11

கந்ததோந்த பந்தசிந்து சிந்தவந்த காலமே
எந்தமெந்த சந்தமுந்து மந்தவந்த கோலமே. 12

என்றுமென்றி னொன்றுமன்றுள் நன்றுநின்ற வீசனே
ஒன்றுமொன்று மொன்றுமொன்று மொன்றதென்ற தேசனே. 13

எட்டவெட்டி யொட்டவொட்டு மிட்டதிட்ட கீர்த்தியே
அட்டவட்ட நட்டமிட்ட சிட்டவட்ட மூர்த்தியே. 14

சேரிகார சாரவார சீரகார ஹாரனே
ஓருகார தோரதீர வாரவார தூரனே. 15

வெய்யநோய்ய நையநைய மெய்புகன்ற துய்யனே
ஐபரைய நைபுய்வைய முய்யநின்ற வையனே. 16

பாசநாச பாபநாச பாததேச வீசனே
வாசவாச தாசர்நேச வாசகாச பேசனே. 17

உரியதுரிய பெரியவெளியில் ஒளியிலொளிசெய் நடனனே
பிரியவரிய பிரியமுடைய பெரியரிதய படனனே. 18

அகிலபுவன வுயிர்கள் தழைய அபயமுதவும் அமலனே
அபனுமரியும் அரனுமகிழ அருணநடன விமலனே. 19

அகரவுகர மகரவகர வமுதசிகர சரணமே
அபரசபர வமனசமன வமலநிமல சரணமே. 20

தகரககந நடனகடன சகளவகள சரணமே
சகுணநிகுண சகமநிகம சகிதவிகித சரணமே. 21

அனகவனஜ வமிதவமிர்த வகலவகில சரணமே
அதுலவனத வசுதவசல வநிலவனல சரணமே. 22

தனககனக சபையவபய சரதவரத சரணமே
சதுரசதுர சகசசரித தருணசரண சரணமே. 23

உளமுமுணர்வும் உயிருமொளிர ஒளிருமொருவ சரணமே
உருவினுருவும் உருவுளுருவும் உடைய தலைவ சரணமே. 24

இளகுமிதய கமலமதனை யிறைகொளிறைவ சரணமே
இருமையொருமை நலமுமருளும் இனியசமுக சரணமே. 25

அடியுநடுவே முடியுமறிய வரியபெரிய சரணமே.
அடியரிதய வெளியினடன மதுசெயதிப சரணமே. 26

ஒழிவில்கருணை அமுதமுதவும் உபலவடிவ சரணமே
உலகமுழுது முறையநிறையு முபயசரண சரணமே. 27

அறிவுளறியு மறிவையறிய வருளுநிமல சரணமே
அவசமுறுமெய் அடியரிதயம் அமருமமல சரணமே. 28

இருமையுலகி லுயிரையுடலி லிணைசெயிறைவ சரணமே
எனையுமொருவ னெனவுளுணரும் எனதுதலைவ சரணமே. 29

நினையுநினைவு கனியவினிய நிறைவுதருக சரணமே
நினையுமெனையு மொருமைபுரியும் நெறியினிறுவு சரணமே. 30

வனையுமதுர வமுதவுணவு மலியவுதவு சரணமே
மருவுசபையில் நடனவரத வருகவருக சரணமே. 31

நினைக்கில்நெஞ்ச மினிக்குமென்ற நிருத்தமன்றி லொருத்தனே
நினைக்குமன்பர் நிலைக்கநின்று பொருத்துகின்ற கருத்தனே. 32

மயங்கிநெஞ்சு கலங்கிநின்று மலங்கினேனை யாண்டவா
வயங்கிநின்று துலங்குமன்றி லிலங்குஞான தாண்டவா. 33

களங்கவாத களங்கொள்சூத ருளங்கொளாத பாதனே
களங்கிலாத வுளங்கொள்வாருள் விளங்கு ஞானநாதனே. 34

தடுத்தமலத்தைக் கெடுத்துநலத்தைக் கொடுத்தகருணைத் தந்தையே
தனித்தநிலத்தி லினித்தகுலத்திற் குனித்தவடிகொ ளெந்தையே. 35

எச்சநீட்டி விச்சைகாட்டி யிச்சையூட்டு மின்பனே
அச்சமோட்டி யச்சுநாட்டி வைச்சுளாட்டு மன்பனே. 36

சபாசிவா மஹாசிவா சகாசிவா சிகாசிவா
சதாசிவா சதாசிவா சதாசிவா சதாசிவா. 37

வாசிவா சதாசிவா மஹாசிவா தயாசிவா
வாசிவா சிவாசிவா சிவாசிவா சிவாசிவா. 38

அருட்பெருஞ்ஜோதி

## 173. நடுநாடி நடுநாடி

இராகம் - மோகனம் - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

நடுநாடி நடுநாடி நடமாடு பதியே
நடராஜ நடராஜ நடராஜ நிதியே. 1

நடுநாடி யொடுகூடி நடமாடு முருவே
நடராஜ நடராஜ நடராஜ குருவே. 2

நடுநாடி யிடைநாடி நடமாடு நலமே
நடராஜ நடராஜ நடராஜ பலமே. 3

அருட்பெருஞ்ஜோதி

## 174. தங்குறுவம்பு

இராகம் - பியாக் - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

தங்குறுவம்பு மங்கநிரம்பு சங்கமியம்பு நங்கொழுகொம்பு
சங்கரசம்பு சங்கரசம்பு சங்கரசம்பு சங்கரசம்பு. 1

சந்தமியன்று அந்தணர்நன்று சந்ததநின்று வந்தனமென்று
சந்திசெய்மன்று மந்திரமொன்று சங்கரசம்பு சங்கரசம்பு. 2

நனந்தலைவீதி நடந்திடுஜோதி நலங்கொளுமாதி நடம்புரிநீதி
தினங்கலையோதி சிவந்தருமோதி சிதம்பரஜோதி சிதம்பரஜோதி. 3

நகப்பெருஞ்ஜோதி சுகப்பெருஞ்ஜோதி
நவப்பெருஞ்ஜோதி சிவப்பெருஞ்ஜோதி
அகப்பெருஞ்ஜோதி நடப்பெருஞ்ஜோதி
அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி. 4

உமைக்கொருபாதி கொடுத்தருணீதி உவப்புறுவேதி நவப்பெருவாதி
அமைத்திடுபூதி யகத்திடுமாதி அருட்சிவஜோதி அருட்சிவஜோதி. 5

அகரசபாபதி சிகரசபாபதி அனகசபாபதி கனகசபாபதி
மகரசபாபதி யுகரசபாபதி வரதசபாபதி சரதசபாபதி. 6

அமலசபாபதி அபயசபாபதி அமுதசபாபதி அகிலசபாபதி
நிமலசபாபதி நிபுணசபாபதி நிலையசபாபதி நிபிடசபாபதி. 7

பரநடஞ்சிவ சிதம்பரநடமே பதிநடஞ்சிவ சபாபதிநடமே
திருநடனம்பர குருநடமே சிவநடமம்பர நவநடமே. 8

அம்பலத்தொருநட முருநடமே அருநடமொருநட் திருநடமே
எம்பலத்தொருநடம் பெருநடமே இதன்பரத்திடுநடம் குருநடமே. 9

வேறு

அஞ்சோ டஞ்சவை யேலாதே அங்கோ டிங்கென லாகாதே
அந்தோ வெந்துயர் சேராதே அஞ்சோ கஞ்சுக மோவாதே
தஞ்சோ பங்கொலை சாராதே சந்தோ டஞ்சிவ மாமீதே
சம்போ சங்கர மாதேவா சம்போ சங்கர மாதேவா. 10

வேறு

எந்தா யென்றிடி லிந்தா நம்பத மென்றீ யும்பர மன்று டும்பதம்
என்றே டிந்தன நன்று மங்கண வெங்கோ மங்கள வெஞ்சா நெஞ்சக
சந்தே கங்கெட நந்தா மந்திர சந்தோ டம்பெற வந்தா ளந்தண
சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர. 11

நஞ்சோ வென்றிடு நங்கோ பங்கெட நன்றே தந்தனை நந்தா மந்தண
நம்பா நெஞ்சி னிரம்பா நம்பர நம்பா நம்பதி யம்பா தம்பதி
தஞ்சோ வென்றவர் தஞ்சோ பந்தெறு தந்தா வந்தன நுந்தா டந்திடு
சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர சம்போ சங்கர. 12

அருட்பெருஞ்ஜோதி

## 175. பொதுநிலையருள்வது

இராகம் - இந்துஸ்தான் பியாக் - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

**பொது**நிலை யருள்வது பொதுவினில் நிறைவது
பொதுநலம் உடையது பொதுநடம் இடுவது
அதுபரம் அதுபதி அதுபொருள் அதுசிவம்
அரஹர அரஹர அரஹர அரஹர. 1

நவநிலை தருவது நவவடி வுறுவது
நவவெளி நடுவது நவநவ நவமது
சிவமெனும் அதுபதம் அதுகதி அதுபொருள்
சிவசிவ சிவசிவ சிவசிவ சிவசிவ. 2

சந்திர சேகர சுந்தர சுரவர
தந்திர நவபத மந்திர புரகட
சங்கர சிவசிவ சங்கர சிவசிவ
சங்கர சிவசிவ சங்கர சிவசிவ.

அருட்பெருஞ்ஜோதி

## 176. வானசிற்கன

இராகம் - சங்கராபரணம் - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

**வான**சிற்கன மந்திரதந்திர வாதசிற்குண மந்தணவந்தண
வாரசற்சன வந்திதசிந்தித வாமவற்புத மங்கலமங்கள
ஞானசிற்சுக சங்கரகங்கர ஞாயசற்குண வங்கணவங்கண
நாதசிற்பர வம்பரநம்பர நாததற்பர விம்பசிதம்பர. 1

பாரதத்துவ பஞ்சகரஞ்சக பாதசத்துவ சங்கசபங்கச
பாலநித்திய வம்பகநம்பக பாசபுத்தக பண்டிதகண்டித
நாரவித்தக சங்கிதவிங்கித நாடகத்தவ நம்பதிநங்கதி
நாதசிற்பர நம்பரவம்பர நாததற்பர விம்பசிதம்பர. 2

நாதபால சுலோசன வர்த்தன
சாதசால விமோசன நிர்த்தன. 3

அருட்பெருஞ்ஜோதி

## 177. ஓதவடங்காது

இராகம் - மாஞ்சி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

**ஓதவடங்** காதுமடங் காதுதொடங் காது
ஔகையொடுங் காதுமடங் காதுநடுங் காது
சூதமலங் காதுவிலங் காதுகலங் காது
ஜோதிபரஞ் ஜோதிசுயஞ் ஜோதிபெருஞ் ஜோதி. 1

ஏதமுயங் காதுகயங் காதுமயங் காது
ஏறியிறங் காதுவுறங் காதுகறங் காது
சூதமிணங் காதுபிணங் காதுவணங் காது
ஜோதிபரஞ் ஜோதிசுயஞ் ஜோதிபெருஞ் ஜோதி. 2

அருட்பெருஞ்ஜோதி

## 178. விரைசேர் சடையாய்

இராகம் - தீரசங்கராபரணம் - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

விரைசேர் சடையாய் விடையாய் உடையாய்
விகிர்தா விபவா விமலா வமலா
வெஞ்சேர் பஞ்சார் நஞ்சார் கண்டா விம்ப சிதம்பரனே. 1

அரசே குருவே அமுதே சிவமே
அணியே மணியே அருளே பொருளே
அந்தோ வந்தாள் எந்தாய் எந்தாய் அம்பல நம்பதியே. 2

உருவே உயிரே உணர்வே உறவே
உரையே பொருளே ஒளியே வெளியே
ஒன்றே யென்றே நன்றே தந்தாய் அம்பர நம்பரனே. 3

அருவே திருவே அறிவே செறிவே
அதுவே இதுவே அடியே முடியே
அந்தோ வந்தாள் எந்தாய் எந்தாய் அம்பல நம்பதியே. 4

அருட்பெருஞ்ஜோதி

## 179. பசியாத அமுதே

இராகம் - ஆனந்தபைரவி - அடதாளம்

அருட்பெருஞ்ஜோதி

பசியாத அமுதே பகையாத பதியே
பகராத நிலையே பறையாத சுகமே
நசியாத பொருளே நலியாத உறவே
நடராஜ மணியே நடராஜ மணியே. 1

புரையாத மணியே புகலாத நிலையே
புகையாத கனலே புதையாத பொருளே
நரையாத வரமே நடியாத நடமே
நடராஜ நிதியே நடராஜ நிதியே. 2

சிவஞான நிலையே சிவபோக நிறைவே
சிவபோக வுருவே சிவமான உணர்வே
நவநீத மதியே நவநாத கதியே
நடராஜ பதியே நடராஜ பதியே. 3

தவயோக பலமே சிவஞான நிலமே
தலையேறும் அணியே விலையேறு மணியே
நவவார நடமே சுவகார புடமே
நடராஜ பரமே நடராஜ பரமே. 4

துதிவேத உறவே சுகபோத நறவே
துனிதீரும் இடமே தனிஞான நடமே
நதியார நிதியே அதிகார பதியே
நடராஜ குருவே நடராஜ குருவே. 5

வயமான வரமே வியமான பரமே
மனமோன நிலையே கனஞான மலையே
நயமான உரையே நடுவான வரையே
நடராஜ துரையே நடராஜ துரையே. 6

பதியுறு பொருளே பொருளுறு பயனே
பயனுறு நிறைவே நிறைவுறு வெளியே
மதியுறும் அமுதே அமுதுறு சுவையே
மறைமுடி மணியே மறைமுடி மணியே. 7

அருளுறு வெளியே வெளியுறு பொருளே
அதுவுறு மதுவே மதுவுறு சுவையே
மருளறு தெருளே தெருளுறும் ஒளியே
மறைமுடி மணியே மறைமுடி மணியே. 8

தருவளர் நிழலே நிழல்வளர் சுகமே
தடம்வளர் புனலே புனல்வளர் நலனே
திருவளர் உருவே உருவளர் உயிரே
திருநட மணியே திருநட மணியே. 9

உயிருறும் உணர்வே உணர்வுறும் ஒளியே
ஒளியுறு வெளியே வெளியுறு வெளியே
செயிரறு பதியே சிவநிறை நிதியே
திருநட மணியே திருநட மணியே. 10

கலைநிறை மதியே மதிநிறை யமுதே
கதிநிறை கதிரே கதிர்நிறை சுடரே
சிலைநிறை நிலையே நிலைநிறை சிவமே
திருநட மணியே திருநட மணியே. 11

மிகவுயர் நெறியே நெறியுயர் விளைவே
விளைவுயர் சுகமே சுகமுயர் பதமே
திகழுய ருபர்வே வுயருப ருயர்வே
திருநட மணியே திருநட மணியே. 12

இயல்கிளர் மறையே மறைகிளர் இசையே
இசைகிளர் துதியே துதிகிளர் இறையே
செயல்கிளர் அடியே யடிகிளர் முடியே
திருநட மணியே திருநட மணியே. 13

புரையறு புகழே புகழ்பெறு பொருளே
பொருளறு முடியே முடிவுறு புணர்வே
திரையறு கடலே கடலெழு சுதையே
திருநட மணியே திருநட மணியே. 14

நிகழ்நவ நிலையே நிலையுயர் நிலையே
நிறையருள் நிதியே நிதிதரு பதியே
திகழ்சிவ பதமே சிவபத சுகமே
திருநட மணியே திருநட மணியே. 15

அருட்பெருஞ்ஜோதி

## 180. நீடியவேதம்

இராகம் - இந்துஸ்தானி - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

நீடிய வேதந் தேடிய பாதம்
நேடிய கீதம் பாடிய பாதம்
ஆடிய போதங் கூடிய பாதம்
ஆடிய பாதம் ஆடிய பாதம். 1

சாக்கிய வேதந் தேக்கிய பாதம்
தாக்கிய ஏதம் போக்கிய பாதம்
சோக்கிய வாதம் ஆக்கிய பாதம்
தூக்கிய பாதந் தூக்கிய பாதம். 2

ஏன்றிய சூதந் தோன்றிய பாதம்
ஈன்றிய நாதம் ஆன்றிய பாதம்
ஓன்றிய பூதம் ஞான்றிய பாதம்
ஊன்றிய பாதம் ஊன்றிய பாதம். 3

சஞ்சிதம் விடும் நெஞ்சித பாதம்
தஞ்சித மாகும் சஞ்சித பாதம்
கொஞ்சித மேவும் ரஞ்சித பாதம்
குஞ்சித பாதம் குஞ்சித பாதம். 4

எண்ணிய நானே திண்ணிய ஞானேன்
எண்ணிய வாறே நண்ணிய பேறே
புண்ணிய ஞானேன் அண்ணிய ஞானேன்
புண்ணிய வானே புண்ணிய வானே. 5

தோத்திய சீரே பொத்திய பேரே
துத்திய பாவே பத்திய நாவே
சத்திய நானே நித்திய ஞானேன்
சத்திய வானே சத்திய வானே. 6

எம்புலப் பகையே எம்புலத் துறவே
எங்குலத் தவமே எங்குலச் சிவமே
அம்பினிற் கனலே அந்தணர்க் கிறையே
அம்பலத் தரசே அம்பலத் தரசே. 7

இன்புடைப் பொருளே இன்சுவைக் கனியே
என்குணச் சுடரே யிந்தகத் தொளியே
அன்புடைக் குருவே அம்புயற் கிறையே
அம்பலத் தமுதே அம்பலத் தமுதே. 8

அருட்பெருஞ்ஜோதி

# 181. வேதசிகாமணியே

இராகம் - இந்துஸ்தான்தோடி - அடதாளசாப்பு

அருட்பெருஞ்ஜோதி

வேதசிகா மணியே போதசுகோ தயமே
மேதகுமா பொருளே யோதருமோர் நிலையே
நாதபரா பரமே சூதபரா வமுதே
ஞானசபா பதியே ஞானசபா பதியே. 1

ஏக சதாசிவமே யோக சுகாகரமே
ஏம பராநலமே காம விமோசனமே
நாக விகாசனமே நாக சுகோடணமே
ஞான சபாபதியே ஞான சபாபதியே. 2

தூய சதாகதியே நேய சதாசிவமே
சோம சிகாமணியே வாம உமாபதியே
ஞாய பராகரமே காய புராதரமே
ஞான சபாபதியே ஞான சபாபதியே. 3

ஆரண ஞாபகமே பூரண சோபனமே
ஆதி யனாதியனே வேதிய னாதியனே
நாரண னாதரமே காரண மேபரமே
ஞான சபாபதியே ஞான சபாபதியே. 4

ஆகம போதகமே யாதர வேதகமே
ஆமய மோசனமே யாரமு தாகரமே
நாக நடோதயமே நாத புரோதயமே
ஞான சபாபதியே ஞான சபாபதியே. 5

ஆடக நீடொளியே நேடக நாடொளியே
ஆதி புராதனனே வேதி பராபரனே
நாடக நாயகனே நானவ னானவனே
ஞான சபாபதியே ஞான சபாபதியே. 6

ஆரியனே சிவனே ஆரணனே பவனே
ஆலயனே அரனே ஆதரனே சுரனே
நாரியனே வரனே நாடியனே பரனே
ஞான சபாபதியே ஞான சபாபதியே. 7

ஆதர வேதியனே ஆடக ஜோதியனே
ஆரணி பாதியனே ஆதர வாதியனே
நாத விபூதியனே நாமவ ருதியனே
ஞான சபாபதியே ஞான சபாபதியே. 8

தேவ கலாநிதியே ஜீவ தயாநிதியே
தீன சகாநிதியே சேகர மாநிதியே
நாவல ரோர்பதியே நாரி உமாபதியே
ஞான சபாபதியே ஞான சபாபதியே. 9

ஆடிய நாடகனே ஆலமர் ஆதியனே
ஆகம மேலவனே ஆரண நாவலனே
நாடிய காரணனே நீடிய பூரணனே
ஞான சபாபதியே ஞான சபாபதியே. 10

அருட்பெருஞ்ஜோதி

## 182. பதநம்புறு

இராகம் - கருடத்தொனி - ஏகதாளம்

அருட்பெருஞ்ஜோதி

**பதநம்புறு** பவரிங்குறு பவசங்கட மறநின்றிடு
பரமம்பொது நடமென்றென துளநம்புற அருளம்பர
சிதகுஞ்சித பதரஞ்சித சிவசுந்தர சிவமந்திர
சிவசங்கர சிவசங்கர சிவசங்கர சிவசங்கர. 1

வேறு

கலகந்தரு மவலம்பன கதிநம்பல நிதமுங்
கனகந்தரு மணிமன்றுறு கதிதந்தரு ளுடலஞ்
சலசந்திர னெனநின்றவர் தழுவும்பத சரணம்
சரணம்பதி சரணஞ்சிவ சரணங்குரு சரணம். 2

எனதென்பதும் நினதென்பதும் இதுவென்றுணர் தருணம்
இனமொன்றது பிறிதன்றென இசைகின்றது பரமம்
தனதென்பது மனதென்பது சகமென்றனை சரணம்
சரணம்பதி சரணஞ்சிவ சரணங்குரு சரணம். 3

அருட்பெருஞ்ஜோதி

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்ஜோதி

# 183. ஜோதி

உசந்தா - ஆதிதாளம்

அருட்பெருஞ்ஜோதி

ஜோதிஜோதி ஜோதிசுயஞ்
ஜோதிஜோதி ஜோதிபரம்
ஜோதிஜோதி ஜோதியருள்
ஜோதிஜோதி ஜோதிசிவம். 1

வாமஜோதி சோமஜோதி வானஜோதி ஞானஜோதி
மாகஜோதி யோகஜோதி வாதஜோதி நாதஜோதி
ஏமஜோதி வியோமஜோதி யேறுஜோதி வீறுஜோதி
ஏகஜோதி யேகஜோதி யேகஜோதி யேகஜோதி. 2

ஆதிநீதி வேதனே ஆடல்நீடு பாதனே
வாதிஞான போதனே வாழ்கவாழ்க நாதனே. 3

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

திருச்சிற்றம்பலம்

உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்ஜோதி

திரு அருட்பிரகாச வள்ளலார்

# 184. சித்தி வளாகத் திருமாளிகையில்

திருக்காப் பிட்டுக்கொண்ட காலத்து

(ஸ்ரீமுகவரு தைமீ 19உ)

# அருளிய திருப்பாடல்

கோச்சகக் கலிப்பா

அருட்பெருஞ்ஜோதி

பிச்சுலகர் மெச்சப் பிதற்றிநின்ற பேதையனேன்
இச்சையெலாம் எய்த இசைந்தருளிச் செய்தனையே
அச்சமெலாந் தீர்ந்தேன் அருளமுதம் உண்கின்றேன்
நிச்சலும்பே ரானந்த நித்திரைசெய் கின்றேனே.

அருட்பெருஞ்ஜோதி

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

திருச்சிற்றம்பலம்



சித்திவளாகத் திருமாளிகை

X இந்தக் குறியிட்ட திருஅறையில்தான் சுவாமிகள் திருக்காப்பிட்டுக்கொண்டார்கள்.

# 185. பல்வகைய தனிப்பாடல்கள்

சிற்சபை
அருட்பெருஞ்ஜோதி

அருட்சபை கடப்புரி அருட்பெருஞ் ஜோதி
தெருட்பெருஞ் சீர்சொலத் திகழ்வ சித்தியே. 1

மாதங்க முகத்தோனங் கணபதிதன் செங்கமல மலர்த்தாள் போற்றி
ஏதங்க ளறுத்தருளுங் குமரகுரு பரன்பாத விணைகள் போற்றி
தாதங்க மலர்க்கொன்றைச் சடையுடைய சிவபெருமான் சரணம் போற்றி
சீதங்கொள் மலர்க்குழலாள் சிவகாம சவுந்தரியின் திருத்தாள் போற்றி. 2

கலித்துறை

சோடில்லை மேல்வெள்ளைச் சொக்கா இலைகல்ல சோமனில்லை
பாடில்லை கையிற் பணமில்லை தேகப் பருமனில்லை
வீடில்லை யாதொரு வீறுப்பு மில்லை விவாகமது
நாடில்லை நீநெஞ்ச மேயெந்த வாறினி நண்ணுவையே. 3

பந்து

பூவாம லேபிஞ்சுங் காய்த்த விடத்தே
பூவார் மலர்கொண்டு பந்தாடா நின்றேன்
சாவா வரந்தந்து வாழ்வாயோ பந்தே
சாவாம லென்னொடு வீழ்வாயோ பந்தே. 4

கலித்துறை

வான்வேண்டு சிற்றம் பலத்தே வயங்கி வளரமுதத்
தேன்வேண்டி னேனித் தருணத் தருள்செய்க செய்திலையேல்
ஊன்வேண்டு மென்னுயிர் நீத்துநின் மேற்பழி யோவிளைப்பேன்
நான்வேண்டு மோபழி தான்வேண்டு மோசொல்க நாயகனே. 5

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

தருவகையித் தருணநல்ல தருணமிதி லெனக்கே
தனித்தவருட் பெருஞ்ஜோதி தந்தருள்க விதுதான்
ஒருவகையீ திலையெனில்வே றொருவகையென் னுடைய
உடலுயிரை யொழித்திடுக வுவப்பினொடே யிந்த
இருவகையுஞ் சம்மதமே திருவடிசாட் சியதாய்
இயம்பினனென் னிதயமுன்ற னிதயமறிந் ததுவே
அருவகையோ வுருவகையு மாகியென்னு ளமர்ந்தாய்
அம்மேயென் னப்பாவென் னையாவென் னரசே. 6

வினைத்தடைதீர்த் தெனையாண்ட மெய்யன்மணிப் பொதுவில்
மெய்ஞ்ஞான நடம்புரிந்து விளங்குகின்ற விமலன்
எனைத்தனிவைத் தருளொளியீந் தென்னுளிருக் கின்றான்
எல்லாஞ்செய் வல்லசித்த னிச்சையருட் ஜோதி
தினைத்தனைபெற் றவரேனுஞ் சாவுமுன்னே யுலகிற்
செத்தவர்க ளெல்லாருந் திரும்பவரு கென்று
நினைத்தவுட னெதிர்வந்து நிற்பர்கண் டாயெனது
நெஞ்சேசீ யஞ்சேலுள் ளஞ்சேலஞ் சேலே. 7

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

என்னுடலு மென்னுயிரு மென்பொருளு நின்னவென விசைந்தஞ் ஞான்றே
உன்னிடைநான் கொடுத்தனன்மற் றென்னிடைவே றொன்றுமிலை யுடையா யிங்கே
புன்னிகரேன் குற்றமெலாம் பொறுத்ததுவும் போதாமற் புணர்ந்து கொண்டே
தன்னிகரின் றனைவைத்தா யிஞ்ஞான்றென் கொடுப்பேனின் றன்மைக் கந்தோ. 8

வேறு

கோது கொடுத்த மனச்சிறியேன் குற்றங் குணமாக் கொண்டேயிப்
போதுகொடுத்த நின்னருளாம் பொருளை நினைக்கும் போதெல்லாம்
தாது கொடுத்த பெருங்களிப்புஞ் சாலா தென்றால் சாமிநினக்
கேது கொடுப்பேன் கேட்பதன்முன் னெல்லாங் கொடுக்க வல்லாயே. 9

விருத்தம்

உருத்தி ரன்றிரு மாலப னெப்பமுக் குணமா
யிருத்த லின்றிபக் குணங்களை யென்றுமாண் டருளுங்
கருத்த னுகையிற் குணேசனக் குணவிகா ரத்திற்
பொருத்த மின்மைய னுகையாற் புகல்குண ரகிதன். 10

களங்க வக்குணங் கடந்திருந் தலிற்குணா தீதன்
வளங்கொ ளத்தகு முலகெலா மருவிநிற் றலினுல்
விளங்கு விச்சுவ வியாபியிவ் விசுவத்தை யாண்டு
துலங்கு றாலந் தோற்றலின் விச்சுவ கருத்தன். 11

வெய்ய னுபுல கழித்தலின் விசுவ சங்காரி
பைய மேலெனப் படுவன பலவற்றின் மேலாம்
ஐய னுதலிற் பராபர னுமெனப் பட்ட
செய்ய னுகிய சிவபிரா னொருவனுண் டமரீர். 12

வன்முட்டைப் பூச்சியும் புன்சிலைப் பேனுந் தன்வாய்க்கொள்ளியால்
என்முட்டைத் தேகஞ் சுறுக்கிடவே சுட்டிரா முழுதும்
தொன்முட்டையினுந் துணியினும் பாயினுஞ் சூழ்கின்றதோர்
பொன்முட்டை வேண்டியென் செய்வேனருண் முக்கட் புண்ணியனே. 13

தத்தா தனத்தைத் தாவென் றரங்கன் றனிநடித்தாய்
தத்தா தனத்தைத் தாவென் றரங்கன் றனிநடித்தாய்
தத்தா தனத்தைத் தாவென் றரங்கன் றனிநடித்தாய்
தத்தா தனத்தைத் தாவென் றரங்கன் றனஞ்செல்லுமே. 14

## போற்றிச் சந்த விருத்தம்

போற்றி நின்னருள் போற்றி நின்பொது
　போற்றி நின்புகழ் போற்றி நின்னுரு
போற்றி நின்னியல் போற்றி நின்னிலை
　போற்றி நின்னெறி போற்றி நின்சுகம்
போற்றி நின்னுளம் போற்றி நின்மொழி
　போற்றி நின்செயல் போற்றி நின்குணம்
போற்றி நின்முடி போற்றி நின்னடு
　போற்றி நின்னடி போற்றி போற்றியே. 15

போற்றி நின்னிடம் போற்றி நின்வலம்
　போற்றி நின்னடம் போற்றி நின்னலம்
போற்றி நின்றிறம் போற்றி நின்றரம்
　போற்றி நின்வரம் போற்றி நின்கதி
போற்றி நின்கலை போற்றி நின்பொருள்
　போற்றி நின்னொளி போற்றி நின்வெளி
போற்றி நின்றயை போற்றி நின்கொடை
　போற்றி நின்பதம் போற்றி போற்றியே. 16

## வேறு

போற்று கின்றவென் புன்மை யாவையும்
　பொறுத்த நின்பெரும் பொறுமை போற்றியென்
ஆற்றுவே னுனக் கறிகிலே னெனக்
　கறிவு தந்தபே ரறிவ போற்றிவான்
காற்று நீடழ லாதியைந்து நான்
　காணக் காட்டிய கருத்த போற்றிவன்
கூற்று தைத்துநீத் தழிவிலா வுருக்
　கொள்ள வைத்தநின் கொள்கை போற்றியே. 17

அருட்பெருஞ்ஜோதி

## 186. நிந்தாஸ்துதி

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

இறகெடுத்த வமணர்குலம் வேரறுத்த சொக்கேயீ தென்ன ஞாயம்
அறுகெடுத்த சடைமுடிமேல் மண்ணெடுக்க மாட்டாம லடிபட்டு ஐயோ
பிறகெடுத்தீர் வளையல் விற்றீர் சொற்கேளாப் பிள்ளைகளைப் பெற்ற தோஷம்
விறகெடுத்தீர் என்செய்வீர் விதிவசந்தான் யாவரையும் விடாது தானே. 1

அருட்பெருஞ்ஜோதி

திருவதிகைத் திருவீரட்டானம்

## 187. பெரியநாயகியம்மை தோத்திரம்

கலி விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

உரிய நாயகி யோங்கதி கைப்பதித்
துரிய நாயகி தூயவீ ரட்டற்கே
பிரிய நாயகி பேரரு ளாயகி
பெரிய நாயகி பெற்றியைப் பேசுவாம். 1

உலகந் தழைக்க வுயிர்தழைக்க வுணர்வு தழைக்க வொளிதழைக்க
உருவந் தழைத்த பசுங்கொடியே உள்ளத் தினிக்குந் தெள்ளமுதே
திலகந் தழைத்த நுதற்கரும்பே செல்வத் திருவே கலைக்குருவே
சிறக்கும் மலைப்பெண் மணியேமா தேவி யிச்சை ஞானமொடு
வலகந் தழைக்குங் கிரியையின்பம் வழங்கு மாதி பரையென்ன
வயங்கு மொருபே ரருளேயெம் மதியை விளக்கும் மணிவிளக்கே
அலகந் தழைக்குந் திருவதிகை ஐயர் விரும்பும் மெய்யுறவே
அரிய பெரிய நாயகிப்பெண் அரசே என்னை யாண்டருளே. 2

தன்னே ரரியாப் பரவெளியிற் சத்தாஞ் சுத்த வனுபவத்தைச்
சார்ந்து நின்ற பெரியவர்க்குந் தாயே யெமக்குத் தனித்தாயே
மின்னே மின்னே ரிடைப்பிடியே விளங்கு மிதய மலரனமே
வேதம் புகலும் பசுங்கிளியே விமலக் குயிலே யிளமயிலே
பொன்னே யெல்லாம் வல்லதிரி புரையே பரையே பூரணமே
புனிதமான புண்ணியமே பொற்பே கற்ப கப்பூவே
அன்னே முன்னே என்னையத் தமர்ந்த வதிகை யருட்சிவையே
அரிய பெரிய நாயகிப்பெண் அரசே யென்னை யாண்டருளே. 3

அருட்பெருஞ்ஜோதி

திருவோத்தூர்

# 188. ஞானசிகாமணி தோத்திரம்

பன்னிருசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

அணிவா யுலகத் தம்புயனு மளிக்குந் தொழிற்பொன் னம்புயனும்
அறியா வருமைத் திருவடியை யடியேந் தரிசித் தகங்குளிர
மணிவாய் மலர்ந்தெம் போல்வார்க்கு மறையுண் முடிபை வகுத்தருள
வயங்குங் கருணை வடிவெடுத்து வந்து விளங்கு மணிச்சுடரே
பிணிவாய் பிறவிக் கொருமருந்தே பேரா னந்தப் பெருவிருந்தே
பிறங்கு கதியி னருளாறே பெரியோர் மகிழ்விற் பெரும்பேறே
திணிவா யெயிற்சூழ் திருவோத்தூர் திகழ வமர்ந்த சிவநெறியே
தேவர் புகழுஞ் சிவஞானத் தேவே ஞான சிகாமணியே. 1

நின்பா லறிவு நின்செயலு நீயும் பிறிதன் றெமதருளே
நெடிய விகற்ப வுணர்ச்சிகொடு நின்று யதனால் நேர்ந்திலைகாண்
அன்பா லுன்பா லொருமொழிதந் தனமிம் மொழியா லறிந்தொருங்கி
அளவா வறிவே யுருவாக வமரென் றுணர்த்து மரும்பொருளே
இன்பா லென்பாற் றருதாயி லினிய கருணை யிருங்கடலே
இகத்தும் பரத்துந் துணையாகி என்னு ளிருந்த வியனிறைவே
தென்பால் விளங்குந் திருவோத்தூர் திகழு மதுரச் செழுங்கனியே
தேவர் புகழுஞ் சிவஞானத் தேவே ஞான சிகாமணியே. 2

அசையும் பரிசாந் தத்துவமன் றவத்தை யகன்ற வறிவேநீ
யாகு மதனை யெமதருளா லலவா மென்றே யுலவாமல்
இசையும் விகற்ப நிலையையொழித் திருந்த படியே யிருந்தறிகாண்
என்றென் னுணர்வைத் தெளித்தநினக் கென்னே கைம்மா றறியேனே
நசையும் வெறுப்புந் தவிர்ந்தவர்பால் நண்ணுந் துணையே நன்னெறியே
நான்று னென்ன லறத்திகழ்ந்து நாளு மோங்கு நடுநிலையே
திசையும் புவியும் புகழோத்தூர்ச் சீர்கொண் மதுரச் செழும்பாகே
தேவர் புகழுஞ் சிவஞானத் தேவே ஞான சிகாமணியே. 3

அருட்பெருஞ்ஜோதி

# 189. வயித்தியநாதர் பதிகம்

பதினொன்குசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

ஓகைமட வாரல்குலே பிரம பதமவர்கள்
உந்தியே வைகுந்த மேல்
ஓங்குமுலை யேகைலை யவர்குமுத வாயினிதழ்
ஊறலே யமுத மவர்தம்
பாகனைய மொழியேநல் வேதவாக் கியமவர்கள்
பார்வையே கருணை நோக்கம்
பாங்கினவ ரோடுவிளை யாடவரு சுகமதே
பரமசுக மாகுமிந்த
யூகமறி யாமலே தேகமிக வாடினீர்
உறுசுவைப் பழமெ றிந்தே
உற்றவெறு வாய்மெல்லும் வீணர்நீ ரென்றுநல்
லோரை நிந்திப்ப ரவர்தம்
வாகைவாய் மதமற மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 1

உண்டதே யுணவுதான் கண்டதே காட்சியிதை
உற்றறிய மாட்டார் களா
உயிருண்டு பாவபுண் ணியமுண்டு இருவினைகள்
உண்டுபிற வியுண்டு துன்பத்
தொண்டதே செயுநரக வாதையுண் டின்பமுறு
சொர்க்கமுண் டிவையு மன்றித்
தொழுகடவு ளுண்டுகதி யுண்டென்று சிலர்சொலுந்
துர்ப்புத்தி யாலுல கிலே
கொண்டதே சாதகம் வெறுத்துமட மாதர்தங்
கொங்கையும் வெறுத்துக் கையில்
கொண்டதிங் கனியைவிட் டந்தரத் தொருபழங்
கொள்ளுவீ ரென்ப ரந்த
வண்டர்வா யறவொரு மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 2

**உம்பர்வா** னமுதனைய சொற்களாற் பெரியோர்
உரைத்தவாய் மைகளை நாடி
ஓதுகின் றோர்தமைக் கண்டவ மதித் தெதிரில்
ஒதிபோல நிற்பது மலால்
கம்பர்வாய் இவர்வாய்க் கதைப்பென்பர் சிறுகருங்
காக்கைவாய்க் கத்த லிவர்வாய்க்
கத்தலிற் சிறிதென்பர் சூடேறு நெய்யொரு
கலங்கொள்ள வேண்டு மென்பர்
இம்பர்நாங் கேட்டகதை யிதுவென்ப ரன்றியும்
இவர்க்கேது தெரியு மென்பர்
இவையெலா மெவனோவோர் வம்பனும் வீணன்முன்
இட்டகட் டென்பர் மெத்த
வம்பர்வா யறவொரு மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 3

**கல்லை**யு முருக்கலாம் நாருரித் திடலாம்
கனிந்தகனி யாச்செய் யலாம்
கடுவிடமு முண்ணலாம் அமுதாக்க லாங்கொடுங்
கரடிபுலி சிங்க முதலா
வெல்லுமிரு கங்களையும் வசமாக்கலா மன்றி
வித்தை யுங்கற் பிக்கலாம்
மிக்கவா னைத்தண்டை விறகாக்க லாமணலை
மேவுதேர் வடமாக் கலாம்
இல்லையொரு தெய்வமவே றில்லையெம் பாலின்பம்
ஈகின்ற பெண்கள் குறியே
எங்கள்குல தெய்வமெனு மூடரைத் தேற்றவெனில்
எத்துணையு மரிதரிது காண்
வல்லையவ ருணர்வற மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 4

**படியளவு** சாம்பலைப் பூசியே சைவம்
பழுத்த பழமோ பூசணைப்
பழமோ வெனக்கருங் கல்போலு மசையாது
பாழாகு கின்றோர்க ளோர்
பிடியளவு சாதமுங் கொள்ளார்கள் அல்லதொரு
பெண்ணை யெனினுங் கொள்கிலார்
பேய்கொண்ட தோவன்றி நோய்கொண்ட தோபெரும்
பித்தேற்ற தோவறிகி லேன்

செடியளவு வூத்தைவாய்ப் பல்லமுக் கெல்லாந்
தெரிந்திடக் காட்டி நகைதான்
செய்துவளை யாப்பெருஞ் செம்மாத் துண்டுபோற்
செம்மாப்ப ரவர்வாய் மதம்
மடியளவ தாவொரு மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 5

பெண்கொண்ட சுகமதே கண்கண்ட பலனிது
பிடிக்கவறி யாது சிலர்தாம்
பேரூரி லாதவொரு வெறுவெளியிலே சுகம்
பெறவே விரும்பி வீணிற்
பண்கொண்ட வுடல்வெளுத் துள்ளே நரம்பெலாம்
பசையற்று மேலெ மூப்பப்
பட்டினி கிடந்து சாகின்றார்க ளீதென்ன
பாவமிவ ருண்மை யறியார்
கண்கொண்ட குருடரே யென்றுவாய்ப் பல்லெலாங்
காட்டிச் சிரித்து நீண்ட
கழுமரக் கட்டைபோல் நிற்பார்க ளையவிக்
கயவர்வாய் மதமு முதுமே
மண்கொண்டு போகவோர் மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 6

திருத்தமுடை யோர்கருணை யாலிந்த வுலகில்
தியங்குவீ ரழியாச் சுகம்
சேருலக மாம்பரம பதமதனை யடையுநெறி
சேரவா ருங்க ளென்றால்
இருத்தினிய சுவையுணவு வேண்டுமணி யாடைதரும்
இடம்வேண்டு மிவைக ளெல்லாம்
இல்லையா யினுமிரவு பகலென்ப தறியாமல்
இறுகப் பிடித்த ணைக்கப்
பெருத்தமுலை யோடிளம் பருவமுட னழகுடைய
பெண்ணைகப் படுமா கிலோ
பேசிடீ ரப்பரம பதநாட்டி னுக்குநும்
பிறகிதோ வருவ மென்பார்
வருத்துமவ ருறவற மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 7

**பே**தையுல கோர்விரத மேதுதவ மேதுவீண்
பேச்சிவை யெலாம் வேதனும்
பித்தன்வாய்ப் பித்தேறு கத்துநூல் கத்திய
பெரும்புரட் டாகு மல்லால்
ஓதையுறும் உலகா யதத்தினுள வுண்மைபோல்
ஒருசிறிது மில்லை யில்லை
உள்ளதறி யாதிலவு காத்தகிளி போலுடல்
உலர்ந்தீர்க ளினியா யினுர்
மேதையுண வாதிவேண் டுவவெலா முண்டுநீர்
விரைமலர்த் தொடை யாதியா
வேண்டுவ வெலாங்கொண்டு மேடைமேற் பெண்களொடு
விளையாடு வீர்க ளென்பார்
வாதையவர் சார்பற மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 8

**ஈனம்** பழுத்தமன வாதையற நின்னருளை
எண்ணிநல் லோர்க ளொருபால்
இறைவநின் தோத்திர மியம்பியிரு கண்ணீர்
இறைப்ப வதுகண்டு நின்று
ஞானம் பழுத்துவிழி யாலொழுகு கின்றநீர்
நம்முலகி லொருவ ரலவே
ஞானியிவர் யோனிவழி தோன்றியவ ரோவென
நகைப்பர் சும்மா வழுகிலோ
ஊனங் குழுத்தகண் ணோமென்ப ருலகத்தில்
உயர்பெண்டி சாக்கொ டுத்த
ஒருவன்முக மென்னவிவர் முகம்வாடு கின்றதென
உளறு வார்வா யடங்க
மானம் பழுத்திடு மருந்தருள்க தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 9

**கற்பவை** யெலாங்கற் றுணர்ந்தபெரி யோர்தமைக்
காண்பதே யருமை யருமை
கற்பதரு மிடியனிவ ணிடையடைந் தாலெனக்
கருணையா லவர் வலியவந்
திற்புற னிருப்பவது கண்டுமந் தோகடி
தெழுந்துபோய்த் தொழுது தங்கட்
கியலுறுதி வேண்டாது கண்கெட்ட குருடர்போல்
ஏமாந் திருப்ப ரிவர்தாம்

பொற்பினா று சுவையறிவு மறிவுடைய ரன்றுமேற்
புல்லாதி யுணு முயிர்களும்
போன்றிடா ரிவர்களைக் கூறைபோய்ப் பாழாம்
புறச்சுவ ரெனப் புகலலாம்
வற்புறும் படிதரும வழியோங்கு தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 10

மெய்யோர் தினைத்தனையு மறிகிலார் பொய்க்கதை
விளம்பவெனி லிவ்வு லகிலோ
மேலுலகி லேறுகினு மஞ்சாது மொழிவர்தெரு
மேவுமண் ணொனினு முதவக்
கையோ மனத்தையும் விடுக்கவிசை யார்கள்கொலை
களவுகட் காம முதலாக்
கண்டதீ மைகளன்றி நன்மையென் பதனையொரு
கனவிலுங் கண்டறி கிலார்
ஐயோமு னிவர்தமை விதிப்படி படைத்தவிதி
யங்கைதாங் கங்கை யென்னும்
ஆற்றிற் குளிக்கினுந் தீமூழ்கி யெழினுமவ்
வசுத்த நீங்காது கண்டாய்
மையோ ரனுத்தனையு மேவுறத் தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 11

இளவேனின் மாலையாய்க் குளிர்சோலை யாய்மலர்
இலஞ்சிபூம் பொய்கை யருகாய்
ஏற்றசந் திரகாந்த மேடையா யதன்மேல்
இலங்கு மரமிய வணையுமாய்
தளவேயு மல்லிகைப் பந்தராய்ப் பால்போற்
றழைத்திடு நிலாக் காலமாய்த்
தனியிளந் தென்றலாய் நிறைநரம் புளவீணை
தன்னிசைப் பாட லிடமாய்
களவே கலந்தகற் புடையமட வரல்புடை
கலந்தநய வார்த்தை யுடனாய்க்
களிகொள இருந்தவர்கள் கண்டசுகம் நின்னடிக்
கழனிழற் சுக நிகருமே
வளவேலை சூழுலகு புகழ்கின்ற தவசிகா
மணியுலக நாத வள்ளல்
மகிழவரு வேளூரி லன்பர்பவ ரோகமற
வளர் வயித்திய நாதனே. 12

அருட்பெருஞ்ஜோதி

# 190. ஸ்ரீ ராமநாமத் திருப்பதிகம்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**காராய** வண்ண மணிவண்ண கண்ண கனசங்கு சக்ர தரநீள்
சீராய தூய மலர்வாய நேய ஸ்ரீராம ராம னெனவே
தாராய வாழ்வு தருநெஞ்சு சூழ்க தாமோத ராய நமவோம்
நாராய ணாய நமவாம னாய நமகேச வாய நமவே. 1

எண்சீரடி ஆசிரிய விருத்தம்

**திருமகளெம்** பெருமாட்டி மகிழும் வண்ணச்
செழுங்கனியே கொழும்பாகே தேனே தெய்வத்
தருமகனைக் காத்தருளக் கரத்தே வென்றித்
தனுவெடுத்த வொருமுதலே தருமப் பேறே
இருமையுமென் னுளத்தமர்ந்த ராம நாமத்
தென்னரசே யென்னமுதே யென்று யேநின்
மருமலர்ப்பொன் னடிவழுத்துஞ் சிறியேன் அந்தோ
மனந்தளர்ந்தேன் அறிந்தும்அருள் வழங்கி லாயே. 2

கலைக்கடலே கருணைநெடுங் கடலே கானங்
கடந்ததடங் கடலேயென் கருத்தே ஞான
மலைக்கணெழுஞ் சுடரேவான் சுடரே யன்பர்
மனத்தொளிருஞ் சுயஞ்சுடரே மணியே வானோர்
தலைக்கணுறு மகுடசிகா மணியே வாய்மைத்
தசரதன்றன் குலமணியே தமியேன் உள்ளம்
நிலைக்கணுறுஞ் ஸ்ரீராம வள்ளலே யென்
நிலையறிந்தும் அருளவின்னு நினைந்தி லாயே. 3

மண்ணுளா நின்றவர்தம் வாழ்வு வேண்டேன்
மற்றவர்போற் பற்றடைந்து மாள வேண்டேன்
விண்ணுளா நின்றவொரு மேன்மை வேண்டேன்
வித்தகநின் றிருவருளே வேண்டி நின்றேன்
புண்ணுளா நின்றமன முடையேன் செய்த
பொய்யனைத்துந் திருவுளத்தே பொறுப்பா யன்றிக்
கண்ணுளா சுடர்க்கமலக் கண்ணா என்னைக்
கைவிடிலென் செய்வேனே கடைய னேனே. 4

தெவ்வினையார் அரக்கர்குலஞ் செற்ற வெற்றிச்
சிங்கமே யெங்கள்குல தெய்வ மேயோ
வெவ்வினைதீர்த் தருள்கின்ற ராம நாம
வியன்சுடரே யிவ்வுலக விடயக் காட்டில்
இவ்வினையேன் அகப்பட்டேன் புலனாங் கள்வர்க்
கிலக்கானேன் துணையொன்று மில்லேன் அந்தோ
செய்வினையொன் றறியேனிங் கென்னை யெந்தாய்
திருவுளத்திற் சேர்த்திலையேற் செய்வ தென்னே. 5

வான்வண்ணக் கருமுகிலே மழையே நீல
மணிவண்ணக் கொழுஞ்சுடரே மருந்தே வானத்
தேன்வண்ணச் செழுஞ்சுவையே ராம நாமத்
தெய்வமே நின்புகழைத் தெளிந்தே ஓதா
ஊன்வண்ணப் புலைவாயர் இடத்தே சென்றாங்
குழைக்கின்றேன் செய்வகையொன் றுணரேன் அந்தோ
கான்வண்ணக் குடும்பத்திற் கிலக்கா என்னைக்
காட்டினையே யென்னேநின் கருணை யீதோ. 6

பொன்னுடையார் வாயிலிற்போய் வீணே காலம்
போக்குகின்றேன் இவ்வுலகப் புணர்ப்பை வேண்டி
என்னுடையாய் நின்னடியை மறந்தேன் அந்தோ
என்செய்கேன் என்செய்கேன் ஏழையே னான்
பின்னுடையேன் பிழையுடையேன் அல்லா லுன்றன்
பேரருளும் உடையேனோ பிறந்தேன் வாளா
உன்னுடைய திருவுளத்தென் னினைதி போவென்
ஒருமுதல்வா ஸ்ரீராமா வுணர்கி லேனே. 7

அறம்பழுக்குந் தருவேயென் குருவே யென்றன்
ஆருயிருக் கொருதுணையே யரசே பூவை
நிறம்பழுக்க அழகொழுகும் வடிவக் குன்றே
நெடுங்கடலுக் கணைபளித்த நிலையே வெய்ய
மறம்பழுக்கும் இலங்கையிரா வணனைப் பண்டோர்
வாளியினாற் பணிகொண்ட மணியே வாய்மைத்
திறம்பழுக்கும் ஸ்ரீராம வள்ளலே நின்
திருவருளை யன்றிமற்றோர் செயலி லேனே. 8

கல்லாய வன்மனத்தர் தம்பாற் சென்றே
கண்கலக்கங் கொள்கின்றேன் கவலை வாழ்வை
எல்லாமுள் ளிருந்தறிந்தா யன்றோ சற்றும்
இரங்கிலையெம் பெருமானே யென்னே யென்னே
பொல்லாத வெவ்வினையேன் எனினும் என்னைப்
புண்ணியனே புரப்பதருட் புகழ்ச்சி யன்றோ
அல்லார்ந்த துயர்க்கடலின் றெடுத்தி டாயேல்
ஆற்றேனுன் பழிநின்பால் ஆக்கு வேனே. 9

மையான நெஞ்சகத்தோர் வாயில் சார்ந்தே
மனந்தளர்ந்தேன் வருந்துகின்ற வருத்த மெல்லாம்
ஐயாவென் உளத்தமர்ந்தாய் நீதான் சற்றும்
அறியாயோ அறியாயேல் அறிவா ரியாரே
பொய்யான தன்மையினேன் எனினு மென்னைப்
புறம்விடுத்தல் அழகேயோ பொருளா எண்ணி
மெய்யாவென் றனையந்நாள் ஆண்டா யிந்நாள்
வெறுத்தனையேல் எங்கேயான் மேவு வேனே. 10

கூறுவதோர் குணமில்லாக் கொடிதாஞ் செல்வக்
குருட்டறிவோர் இடைப்படுமென் குறைக ளெல்லாம்
ஆறுவதோர் வழிகாணேன் அந்தோ அந்தோ
அவலமெனுங் கருங்கடலில் அழுந்து கின்றேன்
ஏறுவதோர் வகையறியேன் எந்தா யெந்தாய்
ஏற்றுகின்றோர் நின்னையன்றி இல்லேன் என்னைச்
சீறுவதோ இரங்குவதோ யாதோ வுன்றன்
திருவுளத்தைத் தெரியேனே சிறிய னேனே. 11

அருட்பெருஞ்ஜோதி

திருவெவ்வுளூர் ஸ்ரீ வீரராகவப்பெருமாள்

## 191. போற்றித் திருப்பஞ்சகம்

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

தண்ணமர் மதியே சாந்தந் தழைத்தசத் துவனே போற்றி
வண்ணமா மணியே போற்றி மணிவண்ணத் தேவா போற்றி
அண்ணலே எவ்வு ளூரில் அமர்ந்தரு ளாதி போற்றி
விண்ணவர் முதல்வா போற்றி வீரரா கவனே போற்றி. 1

பாண்டவர் தூத னாகப் பலித்தருள் பரனே போற்றி
நீண்டவ னென்ன வேதம் நிகழ்த்துமா நிதியே போற்றி
தூண்டலில் லாம லோங்குஞ் ஜோதிநல் விளக்கே போற்றி
வேண்டவ ரெவ்வு ளூர்வாழ் வீரரா கவனே போற்றி. 2

மேதினி புரக்கும் வேந்தர் வீறெலாம் நினதே போற்றி
கோதிலா மனத்தே நின்று குலாவிய கோவே போற்றி
ஓதிய எவ்வு ளூரில் உறைந்தருள் புரிவாய் போற்றி
வேதியன் றன்னை யீன்ற வீரரா கவனே போற்றி. 3

இளங்கொடி தனைக்கொண் டேகும் இராவணன் றனை யழித்தே
களங்கமில் விபீட ணர்க்குக் கனவர சளித்தாய் போற்றி
துளங்குமா தவத்தோ ருற்ற துயரெலாந் தவிர்த்தாய் போற்றி
விளங்குநல் எவ்வு ளூர்வாழ் வீரரா கவனே போற்றி. 4

அற்புதத் திருவை மார்பில் அணைத்தபே ரழகா போற்றி
பொற்புறு திகிரி சங்கு பொருந்துகைப் புனிதா போற்றி
வற்புறு பிணிதீர்த் தென்னை மகிழ்வித்த வரதா போற்றி
வெற்புய ரெவ்வு ளூர்வாழ் வீரரா கவனே போற்றி. 5

அருட்பெருஞ்ஜோதி

திருக்கண்ணமங்கை

# 192. இலக்ஷ்மி தோத்திரம்

பன்னிருசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

உலகம் புரக்கும் பெருமான்றன் உளத்தும் புயத்தும் அமர்ந்தருளி
உவகை யளிக்கும் பேரின்ப வுருவே யெல்லாம் உடையாளே
திலகஞ் செறிவா ணுதற்கரும்பே தேனே கனிந்த செழுங்கனியே
தெவிட்டா தன்பர் உளத்துள்ளே தித்தித் தெழுமோர் தெள்ளமுதே
மலகஞ் சகத்தேற் கருளளித்த வாழ்வே யென்கண் மணியேயென்
வருத்தந் தவிர்க்க வருங்குருவாம் வடிவே ஞான மணிவிளக்கே
சலகந் தரம்போற் கருணைபொழி தடங்கண் திருவே கண்ணமங்கைத்
தாயே சரணஞ் சரணமிது தருணங் கருணை தருவாயே. 1

அருட்பெருஞ்ஜோதி

சென்னப்பட்டணம் ஏழுகிணற் றருகிலிருக்கும்

# 193. துலுக்காணத் தம்மன்பேரில்

# பஞ்சரத்தினம்

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

சீர்வளர் மதியுந் திருவளர் வாழ்க்கைச் செல்வமுங் கல்வியும் பொறையும்
பார்வளர் திறனும் பயன்வளர் பரிசும் பத்தியு மெனக்கருள் பரிந்தே
வார்வளர் தனத்தாய் மருவளர் குழலாய் மணிவள ரணிமலர் முகத்தாய்
ஏர்வளர் குணத்தா யிசைதுலுக் காணத் திரேணுகை யெனுமொரு திருவே. 1

உவந்தொரு காசும் உதவிடாக் கொடிய உலுத்தர்தங் கடைதொறு மோடி
அவந்தனி லலையா வகையெனக் குன்றன் அகமலர்ந் தருளுதல் வேண்டும்
நவந்தரு மதிய நிவந்தபூங் கொடியே நலந்தரு நகைமணிக் கோவை
இவந்தொளிர் பசுந்தோ ளிசைதுலுக் காணத் திரேணுகை யெனுமொரு திருவே.

விருந்தினர் தம்மை யுபசரித் திடவும் விரவுறு முறவினர் மகிழத்
திருந்திய மனத்தால் நன்றிசெய் திடவுஞ் சிறியனேற் கருளுதல் வேண்டும்
வருந்திவந் தடைந்தோர்க் கருள்செயுங் கருணை வாரியே வடிவுறு மயிலே
இருந்திசை புகழு மிசைதுலுக் காணத் திரேணுகை யெனுமொரு திருவே. 3

புண்ணியம் புரியும் புனிதர்தஞ் சார்பும் புத்திரர் மனைவியே முதலாய்
நண்ணிய குடும்ப நலம்பெறப் புரியும் நன்குமென் றனக்கருள் புரிவாய்
விண்ணிய கதிரி னொளிசெயு மிழையாய் விளங்கரு ளொழுகிய விழியாய்
எண்ணிய அடியர்க் கிசைதுலுக் காணத் திரேணுகை யெனுமொரு திருவே. 4

மனமெலி யாமற் பிணியடை யாமல் வஞ்சகர் தமைமரு வாமற்
சினநிலை யாம லுடல்சலி யாமற் சிறியனே னுறமகிழ்ந் தருள்வாய்
அனமகிழ் நடையா யணிதுடி யிடையாய் அழகுசெய் காஞ்சன வுடையாய்
இனமகிழ் சென்னை யிசைதுலுக் காணத் திரேணுகை யெனுமொரு திருவே. 5

அருட்பெருஞ்ஜோதி

குறிஞ்சிப்பாடிக் கடுத்துள்ள

## 194. சிங்கபுரிக் கந்தர் பதிகம்

வெண்பா

அருட்பெருஞ்ஜோதி

பொன்மகள்வாழ் சிங்கபுரி போதனறு மாமுகன்மேல்
நன்மைமிகு செந்தமிழ்ப்பா நாமுரைக்கச் — சின்மயத்தின்
மெய்வடிவா நங்குருதாள் வேழமுகன் றன்னிருதாள்
பொய்யகலப் போற்றுவமிப் போது.

அறுசீரடி ஆசிரிய விருத்தம்

சீராரு மறையொழுக்கந் தவிராது நான்மரபு சிறக்க வாழும்
ஏராரு நிதிபதியிந் திரன்புரமு மிகநாணு மெழிலின் மிக்க
வாராருங் கொங்கையர்கள் மணவாளருடன்கூடி வாழ்த்த நாளும்
தேராரு நெடுவீதிச் சிங்கபுரி தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 1

உம்பர்துயர் கயிலையரர்க் கோதிடவே யப்பொழுதே யுவந்து நாதன்
தம்பொருவில் முகமாறு கொண்டுநுத லீன்றபொறி சரவணத்தில்
நம்புபவ ருயவிடுத்து வந்தருளு நங்குகனே நலிவு தீர்ப்பாய்
திங்கள்தவழ் மதில்சூழுஞ் சிங்கபுரி தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 2

பொல்லாத சூர்க்கிளையைத் தடிந்தமரர் படுந்துயரப் புன்மை நீக்கும்
வல்லானே யெனதுபிணி நீங்கினந்தா லொருகணத்தில் மாறிடாதோ
கல்லாதே னெனினுமெனை யிகழாதே நினதடியார் கழகங் கூட்டாய்
செல்லாதார் வலியடக்குஞ் சிங்கபுரி தனிலமர்ந்த தெய்வக்குன்றே. 3

பண்டேசங் கப்புலவ ரருஞ்சிறையைத் தவிர்த்தருளும் பகவ னேயென்
புண்டருவிந் நோய்தணிக்கப் புரையிலியோய் யான்செய்யும் புன்மைதானோ
தண்டையெழில் கிண்கிணிசேர் சரணமலர்க் கனுதினமும் தமியேன் அன்பாய்த்
தெண்டனிடச் செய்தருள்வாய் சிங்கபுரி தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 4

தாவாத வசியர்குலப் பெண்ணினுக்கோர் கரமளித்த சதுரன் அன்றே
மூவாத மறைபுகலு மொழிகேட்டுன் முண்டகத்தாண் முறையிற் றாழ்ந்து
தேவாதி தேவனெனப் பலராலுந் துதிபுரிந்து சிறப்பின் மிக்க
தீவாயிப் பிணிதொலைப்பாய் சிங்கபுரி தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 5

வானவர்கோன் மேனிற் றரமறியா திகழ்ந்துவிட விரைவிற் சென்று
மானமதில் வீற்றிருந்தே யவன்புரிந்த கொடுமைதனை மாற்று மெங்கள்
தானவர்தங் குலமடர்த்த ஷண்முகனே இப்பிணியைத் தணிப்பாய் வாசத்
தேனவிழும் பொழில்சூழுஞ் சிங்கபுரி தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 6

மட்டாரும் பொழில்சேரும் பரங்கிரிசெந் தூர்பழனி மருவு சாமி
நட்டாரும் பணிபுரியு மாறுதலை மலைமுதலாய் நணுகி யெங்கள்
ஒட்டாதார் வலியடக்கி யன்பர்துதி யேற்றருளு மொருவ காவாய்
தெட்டாதார்க் கருள்புரியுஞ் சிங்கபுரி தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 7

முன்செய்த மாதவத்தால் அருணகிரிநாதர் முன்னே முறையிட் டேத்தும்
புன்செயல்தீர் திருப்புகழை யேற்றருளு மெய்ஞ்ஞான புனித னென்றே
என்செயலி லிரவுபக லொழியாமற் போற்றியிட விரங்கா தென்னே
தென்றிசைசேர்ந் தருள்புரியுஞ் சிங்கபுரி தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 8

விண்ணவர்கோ னருந்துயர நீக்கிடவு மாதுதவ விளைவு நல்குங்
கண்ணகன்ற பேரருளின் கருணையினுங் குஞ்சரியைக் காத லோடும்
மண்ணுலகோர் முதலுயிர்கள் மகிழ்ந்திடவு மணம்புரிந்த வள்ளலே யென்
திண்ணியதீ வினையொழிப்பாய் சிங்கபுரி தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 9

மாசகன்ற சிவமுனிவ ரருளாலே மானிடமாய் வந்த மாதின்
ஆசில்தவப் பேறளிக்க வள்ளிமலை தனைச்சார்ந்தே யங்கு கூடி
நேசமிகு மணம்புரிந்த நின்மலனே சிறியேனை நீயே காப்பாய்
தேசுலவு பொழில்சூழுஞ் சிங்கபுரி தனிலமர்ந்த தெய்வக் குன்றே. 10

அருட்பெருஞ்ஜோதி



# 195. குடும்ப கோஷம்

காப்பு

அறுசீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**பூ**வுலகும் பொன்னுலகும் புகழ்தவத்திற் பெரியருளம் புனித மான
தேவுலகென் றமர்ந்தருளுஞ் சிவகளிற்றை ஐந்துகரத் தெய்வந் தன்னை
மூவுலகுந் துதியாறு முகத்தமுதை யெங்குருவை முக்கட் கோவை
நாவுலகு நயப்பெய்த வழுத்திடுமெம துறுவினையின் நவைகள் தீர்ப்பாம். 1

ஆனைமுகத் தனையாறு முகத்தனையைம் முகத்தனைப்பா லவளைப் பூதச்
சேனைமுகத் தலைவனைச்சண் டேசரனைக் கவுணியகோத் திரநங் கோவைச்
சோனைமுகத் தருள்திருத்தாண் டகப்புனைந்த அப்பனைவன் றொண்டத் தேவை
வானைமுகத் தவர்வழுத்தும் வாதவூர் அடிகளையாம் வணங்கி வாழ்வாம். 2

தேறுங்கையா னனமுரித்த சிவனையிக் குடும்பத்தின் செய்கை சொல்லப்
பெறுங்கையாம் வகையொன்றுந் தெரியாமே சொலப்புகுந்த பேதையேனைக்
குறுங்கையான் மலையணைத்துக் கொளநினைத்தே தான் என்கேனோ கொளுந்தூசின்றி
வெறுங்கையான் முழம்போடும் வேலையிலா வீணனென விளம்பு கேனோ. 3

சீர்பாட்டிற் சிறந்தசிவ குருவேயிக் குடும்பத்தின் திறம்பா டற்கே
ஓர்பாட்டிற் கோருகோடிப் பசும்பொன்வரும் ஆனாலும் உன்பே ரன்றிப்
பார்பாட்டிற் சிறுதெய்வப் பேர்களைமுன் னிலைவைத்துப் பாடேன் இந்த
நேர்பாட்டிற் பிழைகுறியேல் அருட்செவிக்கேற் பித்தலருள் நிலைமை யன்றோ.

கலிநிலைத்துறை

மாநில மீதிந் நூன்முறை செய்தது மனைமேவும்
நானெனில் நானே நாணமி லேனை நகுகின்றேன்
ஈனமில் புலவீர் என்னுள் அமர்ந்தருள் இறையெம்மான்
தானெனில் அடியேன் அவைசொ லடக்கஞ் சதுரன்றே. 5

அருட்பெருஞ்ஜோதி

முதலாவது

# 195. குருதரிசனப் படலம்

கலிவிருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

நீர்வளம் நிலவளம் நிறைந்த பொற்பது
கார்வளர் பொழில்புடை கவின்ற காட்சிய
தேர்வளர் நலனெலா மென்று முள்ளது
சீர்வளர் தலங்களுள் திலக மென்பது. 1

திருவளர் புயத்தனுந் திசை முகத்தனுந்
தருவளர் மகத்தனுஞ் சார்ந்து நாடொறும்
மருவளர் மலர்கொடு வழிபட் டெண்ணிய
உருவளர் சிறப்பெலா முற்ற மாண்பது. 2

அற்றமில் சண்பைய ராதி மூவருஞ்
சொற்றமிழ்ப் பதிகங்கள் தோறுஞ் சேர்வது
நற்றவர் புகழ்வது நாயினே னுக்குங்
கற்றவ ருறவினைக் காட்டி நின்றது. 3

தவநெறி தழைத்துமெய்ச் சாந்தம் பூத்துவன்
பவநெறி காய்த்தருட் பழம் பழுத்திடும்
நவநெறி தரும்பர நவிற்றுஞ் சைவமாஞ்
சிவநெறி தருந்தருச் சிறந்த சீரது. 4

சோலையுந் தடங்களுந் துரிசி லாஅறச்
சாலையும் மடங்களுஞ் சத்தி ரங்களும்
பாலையும் பழத்தையும் பருக லொத்தசொன்
மாலையுந் தொடுப்பவர் வாழ்வு முள்ளது. 5

அந்தணர் அறுதொழில் ஆற்றுஞ் சால்பது
மந்தண மறைமுடி வழுத்து மாண்பது
சுந்தர நீற்றணி துலங்கு மன்பர்கள்
வந்துவந் தனைசெய்து வசிக்கும் பேறது. 6

பூவெலாம் புதுமணம் பொலியு மொண்டயிர்க்
காவெலாஞ் சிவமணங் கமழு கின்றது
தேவெலாஞ் செறிவது சிவங் கனிந்தமெய்ந்
நாவெலாம் புகழ்வது நன்மை சான்றது. 7

சாலியும் போலிய தழைகொள் கன்னலின்
வேலியு முக்கனி விழைவுந் தாழைகள்
கோலிய பொங்கருங் குறைவி லாதது
[1] பாலியின் வடகரைப் படியின் மேலது. 8

எண்டிசை புகழ்நின் றிலங்கு கின்றது
அண்டர்கள் முடியினும் அழிவி லாதது
தொண்டமண் டலவடற் றாய கீழ்த்திசை
கண்டல்சூழ் கடற்கரை காண வுள்ளது. 9

திருமகள் கலைமகள் சிறந்த ஞானமாங்
குருமகள் மூவருங் கூடி வாழ்வது
தெருமர லகற்றுமெஞ் சிவபி ரான்மலை
ஒருமக ளொடுறை [2] ஒற்றி மாண்பதி. 10

அப்பெரும் பதியிடை அயன்முன் னாகிய
முப்பெருந் தலைவரு முடிவ ணங்கிட
ஒப்பருஞ் சிவபிரா னுருவு கொண்டருள்
செப்பருங் கோயிலைச் சேர்ந்த சூழலில். 11

கிள்ளைக ளாகமங் கிளக்கக் கேட்டதற்
குள்ளுணர் பூவைக ளுரை விரித்திடத்
தெள்ளிய மயிலினந் தேர்ந்து ளானந்தங்
கொள்ளைகொண் டயனடங் குயிற்ற வுள்ளது. 12

சைவயா கங்களுஞ் சாற்று மற்றைய
தெய்வயா கங்களுஞ் செய்ய வோங்கிய
மைவிடாப் புகையொடு மழையுங் கூடினும்
மெய்விடா ருளமென விளங்கு கின்றது. 13

கண்டவ ருளமெலாங் கட்டு கின்றது
தண்டமிழ்க் கவிதைபோற் சாந்த மிக்கது
விண்டயன் பதமுதல் விரும்பத் தக்கது
எண்டருந் தவமர சிருக்குஞ் சீரது. 14

வந்தியா ரமுதையும் வாங்கி யுண்டருள்
அந்தியார் வண்ணர்தம் அருளில் நின்றது
நந்தியாச் சிரமமாம் நாமம் பெற்றது
நிந்தியா நெறியதோர் நிலையுண் டாயிடை. 15

1 பாலி என்பது—பாலாறு 2 ஒற்றி என்பது — திருவொற்றியூர்

வேதமு மாகம விரிவு மற்றைநூற்
போதமு மன்னுறப் போதிப் போர்களும்
வாதமும் விதண்டமு மருளு ருவகைப்
பேதமு மபேதமும் பேசு வோர்களும். 16

பவமெலாந் தவிர்த்தருட் பதம ளிப்பது
தவமலா தில்லெனச் சார்ந்து ளோர்களும்
அவமெலா மகன்றபின் னனுப விப்பது
சிவமலா தில்லெனச் சேர்ந்து ளோர்களும். 17

ஞானயோ கத்தினை நண்ணி னோர்களும்
மோனமே பொருளென முன்னி னோர்களும்
வானமே பெறினுமிம் மாய வாழ்க்கையில்
ஊனமே யிருத்தலென் றுவட்டி னோர்களும். 18

மறந்தில ருலகரிவ் வஞ்ச வாழ்க்கையைத்
துறந்தில ரென்னெனச் சொல்கின் றோர்களும்
இறந்திலர் பிறந்தில ரின்ப மெய்தினர்
வறந்திலர் தவரென வகுக்கின் றோர்களும். 19

தேன்சொலும் வடசொலுந் தெரிந்து ளோர்களும்
இன்சொலும் வாய்மையு மிசைக்கின் றோர்களும்
வன்சொலு மடமையும் மறமும் வஞ்சமும்
புன்சொலு முடையர்பாற் பொருந்து றார்களும். 20

கருநெறித் தமிழெலாங் கையகன்று மெய்த்
[1] திருநெறித் தமிழ்மறை தேர்ந்து ளோர்களும்
அருநெறித் தனியெழுத் தைந்தி னுட்பொருள்
குருநெறித் தகவுறக் குறிக்கின் றோர்களும். 21

இரவொடு பகலிலா திருக்கின் றோர்களும்
வரவொடு போக்கிலா வழிநின் றோர்களும்
கரவொடு மாயையைக் கடிந்த சீலரும்
உரவொடு மெய்ந்நிலை யோங்கு வோர்களும். 22

பொறிவழி மனஞ்செலாப் புனித சித்தரும்
அறிவழி யவ்வழி யகன்று ளோர்களும்
செறிவழி யாவகைச் சிறந்த முத்தரும்
குறிவழி திறம்புறக் கொள்கை யோர்களும். 23

1 தேவாரம்.

மால்வகை முழுவதும் நீக்கி மன்னரும்
நூல்வகை ஞானத்தி னுவனு கின்றதோர்
நால்வகை நிலைகளில் நண்ணு வோர்களும்
ஏல்வகை யிணையடி யேத்திச் சூழ்ந்திட. 24

தெள்ளிய வமுதவெண் திங்களோ நறை
துள்ளிய நறுமணஞ் சூழ்ந் தலர்ந்திடும்
ஒள்ளிய கமலமோ வென்ன வோங்கிய
வள்ளிய திருமுக மண்டலத் திலே. 25

கடைவரை நிறைபெருங் கருணை வெள்ளமேன்
மடைதிறந் தொழுகிவான் வழிந்து பாரெலாந்
தடைபடாத் தண்ணளி ததும்பி யானந்தக்
கொடைதரும் விழிமலர் குலவி வாழ்ந்திட. 26

சிறைதேறுஞ் சிவசிவ சிவவென் றன்பொடு
மறைமொழி சிறக்கும்வாய் மலரும் விண்ணக
நிறையமு தொழுகிவெண் ணிலவ லர்ந்தருள்
இறைபெறும் புன்னகை யெழிலு மோங்கிட. 27

வேதபுத் தகந்திகழ் மென்கை யுந்திருப்
பாதபங் கயங்களும் பரவு நீற்றொளி
போதவுத் தூளனம் பொலிந்த மேனியும்
ஓதுகன் மரங்களு முருகத் தோன்றிட. 28

அருஞ்சிவ ஞானமும் அமல வின்பமுந்
திருந்தவோ ருருக்கொடு சேர்ந்த தென்னவே
தருஞ்சிவ குருவெனுந் தக்க தேசிகன்
இருந்தனன் இருந்தவா றிருந்த நாளினே. 29

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

ஒருநாளி லொருமகனோர் பதினாறாண் டகவைநல முடையா னொற்றித்
திருநாளி லெம்பெருமான் தியாகேசன் திருப்பவனிச் சேவை செய்து
மருநாள மலர்த்தடஞ்சூழ்ந் தெழில்பெறுமவ் வாச்சிரம வனத்துட் போந்து
கருநாளின் கரிசறுக்குங் குருநாதன் இருக்கையெதிர் கண்டான் மன்னோ. 30

கண்டவனக் குருநாதன் கடைக்கணிக்கப் பெற்றதனாற் கடத்திற் சற்றே
திண்டகுதே றிடச்சிறிது தெளிநீர்போற் றெளிந்தறிவு சிறிது தோன்றத்
தண்டமெனக் கீழ்விழுந்து வணங்கியெதிர் நின்றுகரந் தலைமேற் கூப்பிப்
பண்டுறுமன் பொடுவிழிக ணீர்சொரிய வியந்துதுதி பண்ணு வானால். 31

கருணைநெடுங் கடலென்கோ கல்லாலின் அடியமர்ந்த கடவு ளென்கோ
அருணகிரிக் கருள்புரிந்த ஆறுமுகக் குருவென்கோ அமுத மென்கோ
மருணலிய வரும்பிறவி மருந்தென்கோ அடியேன்கண் மணியென்கோ மெய்த்
தெருணிறைந்த சிவகுருவே நின்றனையீண் டெவ்வாறு சிந்திக்கேனே. 32

என்றனைக் கருணையொடுஞ் சிவகுருவங் கெதிர்நோக்கி யிளையோ யுன்றன்
நன்றான சரிதமெது நவிலுதியென் றுரைத்தருளா ஞான யோகங்
குன்றாத குணக்குன்றே குறையாத குளிர்மதியே குருவே யென்றும்
பொன்றாத நிலையருள்வோய் கேட்டருள்க வெனவணங்கிப் புகல்வான் மாதோ. 33

கற்றவர்சூழ் இத்தலத்துக் கைங்கடிகை யெல்லைதனிற் கவின்சேர் சென்னை
உற்றடியே னிருக்குமூர் ரூத்திரர்தங் குலத்தாசை யுடையா னென்னைப்
பெற்றவன்பேர் வினைச்சியெனைப் பெற்றவள்பே ரெனக்குமுன்னே பிறந்தார் மற்றுஞ்
சுற்றமிக வுடையேன்சஞ் சலனெனும்பே ரென்பெயராய்ச் சொல்வ ராலோ. 34

குடிப்பேறிற் றும்மூலைப்பா லேழாண்டு மட்டுமிகக் குடித்து நாக்குத்
தடிப்பேறிற் றதலினுற் படிப்பேறிற் றிலைபடியேன் தனக்குக் கல்விப்
பிடிப்பேறிச் சிறியேன்முன் பிறந்தவர்தம் பெயரெழுதப் பெரிதுங் கற்று
நடிப்பேறி னாவர்முன் னெடிப்பேற நின்றேனிந் நாயினேனே. 35

தந்தையுணர்ந் திவன்மிகநாத் தடிப்பேறி னுடம்புந் தடித்தான் மற்றைப்
புந்தியிலுங் காரிருப்புப் பொருப்புலக்கைக் கொழுந்தானன் போதஞ் சாரா
மந்தனெனப் பயின்றகலைச் சாலையினின் றகற்றி [1] ஔவை வாக்கு நாடிப்
பந்தமனைப் பண்டமெலாங் கடையுழன்று சுமந்துவரப் பணித்தா னெந்தாய். 36

அண்ணுறுமென் தந்தைதாய்க் கடியனேன் கடைப்பிள்ளை யான தொன்றே
கண்ணுறுநற் கல்வியினுங் கடைப்பிள்ளை யானேன்பின் கருதும் வாழ்க்கை
நண்ணுறுபல் பண்டமெலாங் கொள்வதினுங் கடைப்பிள்ளை நானே யானேன்
உண்ணுறுமிவ் வுடலோம்பி யொதியேபோன் மிகவளர்ந்தே னுணர்விலேனே. 37

பெருஞ்செல்வப் பெருக்கத்திற் பிறந்தேனன் பிள்ளையாய்ப் பிறந்த நாள்தொட்
டிருஞ்செல்வத் திந்நாள்மட் டயல்வேறு குறைசிறிது மில்லை யெந்தாய்
அருஞ்செல்வ மெனுங்கல்வி யறிவில்லாக் குறையொன்றே யடைந்திட் டேனவ்
வருஞ்செல்வத் தாசையுளேன் பேடிமணம் நாடிமனம் வருந்தல் போன்றே. 38

இன்னவகை யுழல்கின்றேன் இத்தலத்திற் றிருநாளென் றிசைக்கக் கேட்டிங்
கென்னனைய சிறுவர்களோ டெய்தினேன் திருப்பவனி யினிது கண்டேன்
பின்னரென தடனுற்றோர் பிரிந்தனர்நா யடியேன்முன் பிறப்பிற் செய்த
தன்னனைய தவப்பயனாற் றேவேநின் றிருச்சமுகந் தரிசித் தேனே. 39

1. பீரம் பேணிற் பாரந் தாங்கும்.

ஈதெனது சரிதமொரு தெய்வீகத்தாற் களர்நிலத்தி னிடையே செந்நெற்
பேதமற முளைத்ததுபோற் றேவேநின் றிருச்சமுகப் பெருமையாலே
மூதறிவு சிறிதென்னுண் முளைத்ததது பயிராக முழுதுங் கல்விக்
காதலுறு சிறியேனைக் காத்தருள வேண்டுமெனக் கழறி னேனே. 40

அன்னவன்சொன் மொழிகேட்டுச் சிவகுருவந் நிளநிலா அரும்ப வுள்ளே
புன்னகைகொண் டென்னகத்திற் புரிந்ததுநன் றாயினுமிப் போது நீயுன்
மன்னகருக் கேகியவண் தந்தைதாய்க் குறைத்தவர்சம் மதம்பெற் றீண்டித்
தொன்னகருக் கெய்துதியென் றுரைத்தருளச் சஞ்சலன்கை தொழுதுசொல்வான்.

வேர்ப்புலகின் புவப்புறுமென் தந்தைதாய் சம்மதத்தை வேண்டி மீண்டே
ஆர்ப்புலவாச் சேன்னைநக ரடைந்தேனேற் பெருங்குகையி லமர்ந்த செங்கட்
போர்ப்புலியைப் பார்த்துவரப் போனகதை யாய்முடியும் பொருளாயென்னைச்
சேர்ப்புடைய குருமணியே யென்செய்கே னறிவறியாச் சிறிய னேனே. 42

கண்பாரேன் றயர்ந்துபணிந் தழுதிருகண் ணீர்சொரியக் கலங்கி னேனை
நண்பார்மெய்க் குருநாதன் நோக்கியிவ ணிருந்திடநீ நயப்பா யப்பா
பண்பாரிங் குறுமவர்தாம் பிச்சைச்சோ றுச்சியிலே பரிந்து வாங்கி
உண்பார்மற் றவ்வகைநீ யுண்ணுதியோ வுண்ணுதியே லுரைதி யென்றான். 43

உச்சியிலே பிச்சையெடுத் துண்பதுவோ பெரிதெளிதே சோவா தோடிக்
கச்சியிலே பிச்சைகொண்டு காசியிலே நீராடிக் கடிது போகிக்
கோச்சியிலே சேபமுடித்துக் கோங்கணத்தி லேபுசித்துக் கோள்ளேன் றாலும்
மெச்சியுளே மிகமகிழ்ந்து செய்வேனென் றனையையா விட்டி டேலே. 44

புல்லமுதே நல்லமுது புரைக்குடிலே புனைமாடம் புடைக்கும் பாறைக்
கல்லணையே மெல்லணைநாள் கழிந்தபழங் கந்தையே கலையென் றாலும்
அல்லலுறே னரசேநின் சொல்லமுதுண் டருந்தவமா டத்தே வைகி
ஒல்லுமன்றே திடவணைகொண் டருட்போர்வை போர்த்துநல முடிக்கின் மாதோ.

சைவநீ றணிவிளங்கி நகைதுளும்பி யுபசாந்தந் ததும்பிப் பொங்கித்
தெய்வநீ டருட்கருணை நிறைந்துவழிந் தழகொழுகிச் செம்பொற் கஞ்சப்
பொய்கைவாய் மலர்ந்தசெழும் போதனைய நின்முகத்தின் பொலிவு நோக்குஞ்
செய்கையே யுலகுறுபுன் சுகம்பொசித்தன் மிகையன்றே தேவ தேவே. 46

எவ்வகைநின் றிருவுளப்பாங் கிருப்பதெளி யேனளவி லெந்தா யெந்தாய்
அவ்வகைநின் றிடச்சிறிது மஞ்சேனென் றனைவிடே லாள்க வென்றே
இவ்வகையிற் பலபகர்ந்து விழுந்திறைஞ்சி யெழுந்திரா திருகண் ணீரால்
செவ்வகையிற் குருநாதன் றிருவடிக்கீழ் நிறையாறு செய்தான் மன்றே. 47

தெருளுறுமவ் வாச்சிரமத் திருந்துறு வறங்காக்குஞ் செல்வ ரெல்லாம்
அருளுறுமெய்ச் சிவகுருவி னடிவணங்கிச் சிறியோமை யடர்ந்த பாச
மருளுறுவன் கடல்கடத்தி வாழ்வித்த குணக்கலமே மணியே யிந்த
இருளுறுமொண் சிறுவனையுங் காத்தருள வேண்டுமென இரந்தா ரையன். 48

மற்றவனை யெழுகவெனக் கருணைபுரிந் தமலமுக மலர்ந்து நோக்கிப்
புற்றரவ மரைக்கசைத்த ஒற்றிநகர்ப் பெருமானைப் போது மூன்றும்
நற்றகையன் புடன்தரிசித் தவன்கோயிற் பணியியற்றி நாளு நம்பால்
கற்றவர்தஞ் சொல்வழியிற் கலைபயின்று நெறிநிற்கக் கடவா யென்று. 49

தனிமலர்வாய் மலர்ந்தருளிப் பின்னரவன் மாணாக்கர் தம்மை நோக்கிப்
புனிதநெறி யிரிவனைப் புதியனெனக் கருதாமற் புரிந்து நாளுங்
கனிவுறவீ ரிவனகத்திற் கல்லாமை யெனுமிருளைக் கடியும் வண்ணம்
இனியகலை விளக்கிடுவீ ரென்றான்சஞ் சலனதுகேட் டின்ப மெய்தா. 50

அடியனே னுய்ந்தனனின் னருணோக்கம் பெறற்கேது வாய தூய
நெடியமா தவமெதுசெய் திருந்தேனென் றகங்குளிர்ந்து நெஞ்சந் தேறி
முடியினாற் பன்முறைதாழ்ந் துடம்பொடுக்கித் தூசொடுக்கி முறையாற் பேசும்
படியினவாய்ப் பொத்தியெதிர் நின்றான்பின் குருநாதன் பணித்த வாறே. 51

வேதமுதற் கலையனைத்தும் விதிப்படிகற் றுணர்ந்தறிவான் மேலோ னாகிப்
போதமனச் செறிவுடைய மாணாக்கர் சஞ்சலனைப் புரிந்து நோக்கி
மூதறிவன் றேசிகன்றன் றிருவாக்கின் படியின்று முதலோர் கன்னற்
போதுகலை பயின்று மற்றைப் போதெலாஞ் சிவபணியே புரிதி யென்றார். 52

என்றவருட் சிதம்பரமா முனிவரவன் றனையருகே யிருத்தி யன்பால்
ஒன்றியவெண் ணீறணிந்து தூலவெழுத் தைந்துணர்த்தி யுடையான் கோயிற்
சென்றுதொழும் நெறியனைத்தும் விளக்கியருட் சிவபணியுந் தேற்றி யுள்ள
மன்றவவன் பருவமறிந் ததற்கியைந்த கலைபயிற்றி மகிழ்வித் தாரால். 53

அருட்பெருஞ்ஜோதி



## இரண்டாவது
# முயற்சிப்படலம்

அறுசீர்க்கழி நெடிலடி ஆசிரிய விருத்தம்

அருட்பெருஞ்ஜோதி

**அவ்**வண்ணஞ் சஞ்சலன்றான் புரிந்தியற்று முயற்சியெலாம் அளவிட் டோதச்
செவ்வண்ணம் பழுத்தஒற்றிச் சிவக்கொழுந்தின் திருவருளைச் சேர்ந்தோர்க்கன்றி
இவ்வண்ண மெனப்பகர்தல் பிறர்க்கரிதே ஆயினுமவ் விறைவன் றுளை
வெவ்வண்ணச் சிறியேனுள் ளமர்த்தியொரு சிறிதறிய விளம்பு வேனால். 1

மேலையிலே படுத்திருந்த வெஞ்சுடரோன் குணபாலின் விழித்துப் பூவோர்
வேலையிலே முயலுறக்கீழ் வேலையிலே யெழுவதற்கு மேவு மாதி
காலையிலே யெழுந்தேகிக் கங்கையிலே மிக்கதெனக் கருதி மேலோர்
ஓலையிலே பொறித்தநந்தி ஓடையிலே தெய்வநன்னீர் ஓடியாடி. 2

வெண்ணிலவு ததும்புதிரு வெண்ணீறைந் தெழுத்தோதி மிகவும் பூசி
உண்ணிலவு சிவகுருவின் அடித்துணையுந் திருவொற்றி உவந்து மேவுங்
கண்ணிலவு நுதற்கரும்பின் கழற்பதமும் அன்பினொடு கருதிச் சென்றே
எண்ணிலவு குருபரன்றன் திருமுனடைந் தஞ்சலிசெய் திறைஞ்சி மன்னே. 3

முன்னறியான் பின்னறியான் முழுமூடன் என்றென்னை முனியா தாண்ட
நின்னருளை யென்னெனயான் நிகழ்த்துறுவேன் பெருங்கருணை நிறைவே தூய
நன்னெறியே நடக்கவருட் போதமெனுஞ் செங்கோலை நடத்தா னின்ற
மன்னவனே சிவகுருவாம் வள்ளலை நின்றுணைப்பொன் மலர்த்தாள் போற்றி. 4

அருந்தவரும் உணவினியல் எதுவென்றால் இதுவெனவும் அறிய நீநின்
றிருந்ததிசை யெதுவென்றால் இதுவெனச்சுட் டவுந்தெரியா திருந்தவென்னைத்
திருந்தவருட் கடைநோக்கஞ் செய்தளித்த பெருங்கருணைச் செல்வ மேநன்
மருந்தமுத மனையவருட் சிவகுருவே போற்றியென வழுத்திப் பின்னர். 5

ஆங்குவிடை கொண்டுகுரு அருள்நோக்காற் சிவயோக மாதி நண்ணி
ஓங்குதிருக் கூட்டத்தைத் தனித்தனிநின் றிறைஞ்சியெனை உவக்கும் வண்ணந்
தீங்ககற்றுஞ் சிவகுருவின் திருவுளத்தை நாயேன்மேல் திருப்பி யின்பம்
வாங்கியெனக் களித்தஅருண் மாதவரே நும்முடைய மலர்த்தாள் போற்றி. 6

குருவெல்லை கடவாத குணக்குன்றம் அனையீரே கோதில் வாய்மை
மருவெல்லை நெறிநின்ற மனத்தீரே போற்றியென வழுத்திப் பின்னர்
பொருவெல்லை அகன்றோங்கும் அன்பினொடும் அவணின்று போந்தவ்வொற்றித்
திருவெல்லை தனைமகிழ்விற் கருவெல்லை கடக்கவலஞ் செய்து மாதோ. 7

தொழுந்தகைய முனிவருஞ் சுரருமிகத் தொழுதேத்தத் துலங்குந் திங்கட்
கொழுந்தனையச் சடையனையக் கூத்தாடிக் கொண்டேபெங் கோமானாளும்
எழுந்தருளும் பெருஞ்செல்வத் திருமாட வீதிதனை யிறைஞ்சி யேத்தி
அழுந்தியசற் பத்தியுடன் மூன்றுமுறை வலஞ்செய்தங் கதற்குப் பின்னர். 8

உளந்தெளிந்து விளங்குகின்ற வுத்தமர்செய் தவமேபோல் ஓங்கி வானம்
அளந்ததிருக் கோபுரங்கண் டஞ்சலிசெய் திறைஞ்சிமுகி லாதி சூடி
இளங்கதிர்வெண் திங்களணி யெம்பெருமான் சடைமுடிபோல் இலங்குந் தூய
வளங்கெழுமோர் திருமதிலை ஐந்துமுறை வலமாக வந்து மாதோ. 9

உட்புகுந்து திருவாய விடையோங்கும் விடைக்கொடியை யுவந்து நோக்கிக்
கட்புனலிற் குளித்திரண்டு கைகுளிரத் தொழுதிறைஞ்சிக் கருணை செய்யும்
ஒட்புடைய நம்பெருமான் மாளிகையை வலமேழின் உவந்து செய்து
நட்புடைய மனங்கசிய ஐந்தெழுத்துண் ணினைந்துமெல்ல நடந்து மாதோ. 10

அம்பொடித்துப் பகைதுறக்குங் கயமுகனைக் கருணையினால் ஆளும் வண்ணங்
கொம்பொடித்து வீசியவன் கோளொடித்துக் கோலொடித்துக் கோதில் விண்ணோர்
வம்பொடித்து வாழ்வித்த ஆனைமுகப் பெருமானை வணங்கித் தன்தே
கம்பொடித்துக் கைகுவித்துக் கருத்துருகிக் கண்களினீர் காலா நின்றே. 11

தடையுடைக்குந் தனிமுதலே தண்ணமுதே பெங்கள்பெருந் தகையேயோங்கி
மடையுடைக்கும் பெருங்கருணை மதமலையே யானந்த மலையே யுள்ளத்
திடையுடைக்குந் துயர்நீக்கி யின்பளிக்கும் ஐந்துகரத் திறையே மாயைக்
கடையுடைக்குங் கழற்புனைதாட் கணபதியே போற்றியெனக் கனிந்துமன்றோ.12

திறம்பழுத்த வருணந்தி தேவரடி வணங்கியருட் சிவத்தின் செய்ய
நிறம்பழுத்த மலரடியை மான்முதலோர் அழுக்காறு நிரம்ப மேற்கொண்
டறம்பழுத்த விடையுருவத் தண்ணலை யெனப்பரவி அனுக்ஞை பெற்று
மறம்பழுத்தார்க் கரியதிரு விமானத்தை யனந்தமுறை வலஞ்செய் தேத்தி. 13

வன்னிதியை மருவாத மாதவரும் மாலயனும் வணங்கிப் போற்றுஞ்
சந்நிதியைச் சார்ந்துவிழி யானந்த நீர்வெள்ளந் ததும்பப் பல்கால்
நன்னிதிபெற் றிடப்பணிந்து கரங்குவித்துப் படம்பக்க நாத னென்னுஞ்
செந்நிதியிற் பரஞ்சுடரைப் பொன்னிதிகண் டவன்போற்கண்செழிக்கக்கண்டு. 14

உடன்முழுதும் புளகமெழ வுளமுழுதும் உருக்கமெழ வுவந்தா னந்தக்
கடன்முழுதுங் கண்கனெழக் கரசரணங் கம்பமெழக் கருத்தி னோடு
மடன்முழுதும் எழமலர்ந்த மலரின்முக மகிழ்ச்சியெழ மலிந்த பாசத்
திடன்முழுதும் அகன்றன்பே வடிவாக நின்றுதுதி செய்வான் மாதோ. 15

உடையானே யெவ்வுயிர்க்கும் ஒருமுதலே யிளம்பிறை கொண்டோங்குங் கங்கைச்
சடையானே அன்பருளத் தாமரையில் அமர்ந்தபெருந் தகையே வெள்ளை
விடையானேமறை முடியின் விளங்கியமெய்ப் பொருளே மெய்விளங்கார் தம்மை
அடையானே திருவோற்றி ஆலயத்தெம் அரசேநின் னடிகள் போற்றி. 16

கலைமகளுந் திருமகளுங் கழுத்தணிந்த மங்கலநாண் கழற்றா வண்ணம்
அலைகடலின் எழுவிடத்தை யடக்கியருண் மணிமிடற்றெம் அமுதே தெய்வ
மலைமகளை யொருபுறம்வைத் தலைமகளை முடியிட்ட மணியே மேருச்
சிலைவளைத்துப் புரமெரித்த சிறுநகையெம் பெருமானின் திருத்தாள்போற்றி. 17

மறைதேட அயன்றேட மால்தேட அன்பருள மலரி னுள்ளே
இறையேனும் பிரியாமல் இருந்தருளும் பெருவாழ்வே யிறையே யென்றுங்
குறையாத குளிர்மதியே கோவாத வொளிமணியே குணப்பொற் குன்றே
பொறையாளர் வழுத்துமொற்றிப் பூங்கோயிற் பெருமானே போற்றிபோற்றி.

எனப்பெரிதுந் துதித்திறைஞ்சி ஆடுகின்ற பெருமான்முன் எய்தித் தூக்கும்
வனப்புடைய மலர்ப்பதமு மாயைதனை மிதித்தூன்று மலர்ப்பொற் றாளும்
மனப்பருவ மலர்மலரக் கண்குளிரக் கண்டுமிக வணங்கிப் பல்கால்
இனப்பெரியார்க் கின்பருளுங் கூத்துடைய மாமணியே யின்ப வாழ்வே. 19

காரணமுக் கண்கொளுஞ்செங் கரும்பேசெங் கனியேயென் கண்ணே மேலை
ஆரணத்துட் பொருளாகி யனைத்துமா யாதொன்றும் அல்லா தாகிப்
பூரணநின் மயவெளியிற் சச்சிதா னந்தநடம் புரியுந் தேவே
ஏரணவு நடராயப் பெம்மானே யெம்மானே யென்று வாழ்த்தி. 20

சடையாடச் சடைமீதிற் சலமகளு மிளமதியுந் ததும்பக் கொன்றைத்
தொடையாடக் கருணைவிழிக் கடைதுளும்பப் புன்னகையுட் டுலங்கவெள்ளைக்
கொடையாட இமயமடக் கொடியாடத் தனிநெடுவேற் குழந்தை மேவி
இடையாடப் பவனிவரும் எம்பெருமான் தியாகனெதிர் இறைஞ்சி நின்று. 21

இருந்தேயென் னுளத்திலங்குஞ் செழுஞ்சுடரே ஓவாத இன்பமேயா
வருந்தேறு நிலைநின்ற வான்பொருளே பவப்பிணியை மாற்றுந் தெய்வ
மருந்தேயென் கண்ணேகண் மணியேசெம் மணியேயென் வாழ்வே யெங்கள்
பெருந்தேவே தருந்தியாகப் பெருமானே கடவுளர்தம் பிரானே போற்றி. 22

என்றுதுதித் தருள்வடிவிற் கல்லாலி னடியமர்ந்த இறைவன் முன்னின்
றென்றுமனத் தன்புடன்கீழ் விழுந்துபணிந் தெழுந்திருகை உச்சி கூப்பி
நன்றுணர்ந்த நால்வருக்கன் றருண்மொழிந்த குருமணியே நாயி னேனை
இன்றுமகிழ்ந் தாட்கொண்ட சிவகுருவே சற்குருவே யென்று வாழ்த்தி. 23

மயிலேறும் பெருமாள்முன் னிறைஞ்சிமலர்க் கரங்கூப்பி வணங்கி நின்றே
அயிலேறுங் கதிர்வேற்கை யையாவென் னப்பாவென் னரசே அன்பர்
கையிலேறுங் கனியேமுக் கண்ணோறு பெற்றவிளங் காளாய் நீலக்
குயிலேறு மொழிக்கடவுட் குஞ்சரந்தோய் களிறேயென் குருவே போற்றி. 24

ஓடுகின்ற சிறுவர்களோ டுடன்கூடி விளையாட்டே யுவந்து நாளும்
ஆடுகின்ற பருவத்தே அடியேனுள் ளமர்ந்தருளி அன்பால் நின்னை
நாடுகின்ற வகைசிறிதே யளித்தீண்டு குருவாகி நலந்தந் துள்கிப்
பாடுகின்ற வகையளித்த பரகுருவே போற்றியெனப் பரவி மன்னோ. 25

பன்முறைநாத் தழும்பேறத் துதித்துநெடுங் [1]கடன்முழுதும் பருகிக் கந்நாள்
நன்முறைசெய் மணக்கோலங் காட்டியருள் பெருமான்முன் நண்ணி நின்று
தொன்முறைமா ருமலருள் சுந்தரிசேர் கல்யாண சுந்தரா முற்
சொன்முறைசேர்சுந்தரன்றன் தோழாவென் றகங்குளிர்ந்து துதித்துவாழ்த்தி. 26

மான்மகனை நான்முகனை வைத்தவன்றன் சிரநகத்தால் வகிர்ந்து வாங்கித்
தேன்மலர்ப்பொற் கரத்தேந்துங் காபாலி முன்பணிந்து திருமால் வேதன்
வான்மகனை தியர்தம்மை வருத்தியவர் தகன்செருக்கு மாளச் சூலத்
தூன்மலர நுழைத்தேந்தும் வயிரவநிற் போற்றியென உவந்து வாழ்த்தி. 27

நிலையாய்நின் றுயர்ந்தவர்கட் கருள்புரியும் பரம்பரையை நிமலை தன்னைத்
தலையான்மெய் யுறவணங்கி உலகமெலா மளித்தபெருந் தாயே மேருச்
சிலையான்றன் னிடத்தமர்ந்த தெள்ளமுதே ஆனந்தத் தேனே மானே
மலையான்றன் னொருமகளே வடிவுடைய இளங்குயிலே மயிலே போற்றி. 28

வான்வளர்த்த மலர்க்கொடியே மலைவளர்த்த மடப்பிடியே மணியே வாசக்
கான்வளர்த்த மலர்க்கோதைக் கனியேமுக் கனியேபைங் கரும்பே செங்கை
மான்வளர்த்துச் சடையிலிள மதிவளர்த்த வொருகிழவன் மகிழ வாய்த்த
தேன்வளர்த்த மொழிக்குமரி கௌரியென மறைபுகழ்மா தேவி போற்றி. 29

போற்றியெனப் புகழ்ந்துசண்பைப் புனிதமறைக் குலமணியைப் போந்துபோற்றி
நாற்றிசையும் புகழ்கின்ற நாவரசைப் பணிந்துசிவ ஞானந் தேறித்
தோற்றியவோர் சங்கிலியாற் றுடக்குண்ட யானைதனைத் தொழுது மாயை
மாற்றியகம் மாணிக்க வாசகப்போன் மலையடியை வணங்கி மாதோ. 30

தொண்டுநிலை சேர்ந்துயர்ந்த சண்டேசர் முதலோரைத் தொழுது போற்றி
விண்டுமுத னொருங்குதிரு வாயலிடை அன்பினொடு மேவி யாங்குத்
தண்டுவிழுந் தெனவிழுந்து பணிந்துபணிந் திருவிழியிற் றரள மாலை
கொண்டுநடங் கொண்டுநெறி கொண்டுமகிழ் கொண்டுமனங் குளிர்ந்தான் பின்னர்.

1. அகஸ்திய முனிவர்.

கருவலகிட் டருள்புரியுங் கண்ணுடையான் விமானத்தின் கனகச் சூழன்
மருவலகின் மணித்திரண்மா ளிகைமண்ட பங்கண்முதல் வகுத்த வெல்லாந்
திருவலகிட் டணிசாந்தத் திருமெழுக்கிட் டன்பினொடுந் திருவா யற்கண்
ஒருவலகிற் றிரணமொடு புல்லாதி களைக்களைந்தாங் குவந்து மாதோ. 32

புறத்தணுகித் திருமதிலின் புறத்தினுநற் றிருக்குளத்தின் புறத்து ஞானத்
திறத்தர்மகிழ்ந் தேத்துகின்ற திருமாட வீதியினுந் தெரிந்து காலின்
உறத்தருமுட் கல்லொடுபுல் லாதிகளை நீக்கிநல முறுத்திப் பாசம்
அறத்தொழுநல் லறத்தொழுகுஞ் சிவனடியார்க் கேவல்பல அன்பாற் செய்து. 33

கருமுடிக்குங் களமுடையான் கண்ணுடையா னெம்முடைய கருத்தன் செய்ய
திருமுடிக்குஞ் செங்கமலத் திருவடிக்கும் புனைந்திடுவான் சிறப்ப வைத்த
மருமுடிக்கு மலர்நந்த வனத்தினையுள் ளன்புடனே வணங்கித் தூநீர்
உருமுடிக்கட் சுமந்துகொணர்ந் துட்குளிர விடுத்துவிடுத் தூட்டி மாதோ. 34

தேங்கமழ்பொற் கொன்றைநறும் பாடலமா லதிவகுளஞ் சிறந்த சாதிக்
கோங்குவளை மயிலைநறு மல்லிகையொண் டளவமலர்க் குரவந் தும்பைப்
பாங்கறுகு கூவிளநற் பத்திரமா தியமிகுநற் பத்தி யுள்ளத்
தோங்குறமெய்ப் புனிதமொடு முவந்துபறித் தைந்தெழுத்தும் உன்னிஆங்கே.

பொன்மாலை யணையகொன்றைப் பூமாலை முதற்பிணையற் புனித மாலை
என்மாலை யகற்றுடையான் திருமுடிக்குச் சாத்துதிரு விண்டை மாலைக்
கன்மாலை நெஞ்சமுறான் கழன்மாலைத் தோண்மாலைக் கண்ணி மாலை
மன்மாலைத் தார்மாலை வகைமாலை தொடுத்தெடுத்து வந்து மாதோ. 36

மீண்டுமேருட் கோயிலினுட் புகுந்துச்சிப் பூசனைசெய் வேளைதன்னில்
ஆண்டவனுக் கணிவித்து வலம்புரிந்து தொழுதுதுதித் தாடிப் பாடி
ஆண்டமரும் பரிவாரத் தேவர்முத லனைவரையு மன்பா லேத்தி
வேண்டுவிருப் புடன்பிரியா விடைகொண்டு புறத்தணுகி மேவி யாங்கண். 37

சீரேன மறியாத திருவடியுங் குருவடியுஞ் சிந்தித் தேகி
ஆரேனுங் கோலைகுறியார் எமக்குரியா ரெனவவர்தம் இல்லந்தோறும்
போரேர்நெற் சோறேனும் புதுக்கஞ்சி யேனுமன்றிப் புளித்த காடி
நீரேனுங் கூழேனுங் கிடைத்ததனை யேற்றுவந்து நின்று வாங்கி. 38

அங்குருவின் தகைதெரிக்கும் ஆச்சிரமத் திடையணுகி அன்பி னோடுந்
தங்குருவி னடிமுடிமண் ணுறவணங்கி யிருகரமுந் தலைமேற் கூப்பி
எங்குருவே சிவகுருவே யெழிற்குமர குருவேயிவ் வெளியேன் றன்பால்
இங்குருவிற் கருணைபுரி திருவாக்கின் படிபிச்சை யேற்ற தீதால். 39

ஆய்மலர்ந்த அருட்கண்ணே நாமமெழுத் தைந்தோவன்றி
அருளிரா மலிங்க அற்புதப்பொற் பெயரோ
வாய்மலர்ந்த திரிரண்டு மறையோமூ விரண்டுமா
முறையோ வருத்துரையீர் மயக்கொழிமா தவரே. 1

வெண்பா

அகத்தியனே வான்மிகியோ ஆதிசேடன் தானே
மகத்துவமாம் சம்பந்த வள்ளலோ — இகத்தில்
சச்சிதா னந்தத்தின் தண்ணளியோ யென்னென்பேன்
மெச்சுமதி இராமலிங்க வேள். 2

— பொன்னேரி சுந்தரம் பிள்ளை.

## 3.

தொண்டேன்றுஞ் செய்யத் துணிவா ரனைவருக்குங்
கண்டென் றினிக்குங் கவிப்பனுவல் — விண்டெனுற
வானவட லூரா னறைவிட் டெழுவானென்
றியா னறைவ தீசனரு ளே.

— திருவாமாத்தூர் ஸ்ரீமத் தண்டபாணி சுவாமிகள்.

## 4.

திருவளர் வடலூர்ச் செழும்பதி யமர்ந்த
உருவளர் ஞான வொளியே போற்றி
யான்செயும் பிழைகள் யாவுநீ பொறுத்துன்
தேன்செய் பதாம்புயஞ் சேர்த்தருள் போற்றி
போதவா னந்த பூரணனே யெனக்
காதரவாகி வந் தருளுக போற்றி
என்னையும் பொருளா வேற்று நின்பாத
சன்னிதி வைத்தருள் தாயே போற்றி
நின்பத நேய நிலைஇய வென்னைச்
சன்மார்க் கத்திற் சார்த்துக போற்றி
சற்குரு ராய தயாநிதி போற்றி
எற்கிரு ளொழித்த விறையே போற்றி
போற்றி போற்றிநின் புனைதரு மடிமலர்
போற்றியென் னுட்டடம் பூத்து வாழியவே. 1

— வேலூர் பத்மநாப முதலியார்.

## 5.

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

மாநில வரைப்பிற் பிறவிபற் பலவா மற்றவற் றரிதுமா னுடமென்
றீனுல குரைக்கு மதினுயிர்க் குறுதி யெய்துத லரிதென்ப ரெனையுந்
தானொரு பொருளா வெடுத்தினி தாண்டு தரைமிசைச் சுத்தசன் மார்க்க
மேனிலை வைத்த சற்குரு மணியின் வியனிலை யுரைத்திட லரிதே. 1

சேலரு வயல்சூ ழுத்தர ஞான சித்திபுரத் தனி வாழ்க்கை
சாலருச் சுத்த சமரச ஞான தயாநிதி யடியனே னுளத்தின்
பாலரு தோங்கும் இராமலிங் கப்பேர்ப் பகாருங் குருசிகா மணிதன்
வாலருப் பாத யுகளதா மரையென் மனத்தட மலர்ந்துவா ழியவே. 2

— பெங்களூர் இராகவலு நாயகர்.

## 6.

எழுசீரடி ஆசிரிய விருத்தம்

பவக்கடல் கடந்து கரைபெரு தழலும் பாவியென் றனையதிற் சேர்க்கத்
தவக்கட லனையார் புகழ்தருந் தனதாட் சார்புதந் தருளுதற் பொருட்டே
அவக்கடல் கடத்தியருள் வடலூரி லமர்குரு ராமலிங் கப்பேர்
எவக்கடல் கடந்துமெங் குருராய னிறுசர ணென்றும்வாழ்த் திடுவாம். 1

உலகினி லெவரு மலகிலா விறும்பூ துறப்பல வற்புதங் காட்டி
நிலவுநீஇ யொளிரு மறைமுடி வாழ்க்கை நீத்தெமை யாளுதற் பொருட்டுக்
குலவுமா நிலத்தின் மானுட வுருக்கொள் குருமணி ராமலிங் கப்பேர்
இலகுசன் மார்க்கத் திறையடி யென்ற னிதயத்தி லென்றும் வாழியவே. 2

— திரிசிரபுரம் ம. லோகநாத செட்டியார்.

---

# 7. வருகைப் பதிகம்

பன்னிருசீர் விருத்தம்

திருச்சிற்றம்பலம்

**உலகந் தழைக்க** வந்துதித்த வுருவே வருக வோதாதே
　உற்ற கலைக ளனைத்தினையு முணர்ந்தோய் வருக வொன்றிரண்டற்
றிலகும் பரமா னந்தசுக இயல்பே வருக யிம்பர்தமை
　இறவாக் கதியி லேற்றுகின்ற யிறையே வருக யென்போல்வார்
கலகந் தவிர்த்துக் கதியளிக்குங் கண்ணே வருக கண்ணிறைந்த
　களிப்பே களிப்பி லூறுகின்ற கனியே வருக கலைமதிதோய்
வலகஞ் செறிந்த வடற்பதியின் வாழ்வே வருக விராமலிங்க
　வள்ள லெனுமோர் மாணிக்க மணியே வருக வருகவே. 1

வெளியிற் சிறந்த சுத்தபர வெளியே வருக வெம்மலமாம்
　வெய்ய திமிர மொழிக்கவரு விளக்கே வருக வேதாந்தத்
தளியிற் சிறந்த மௌனநறுந் தருவே வருக சன்மார்க்கந்
　தழைக்க வுலகி லவதரித்த தலைவா வருக சமநிலையாம்

அளியிற் சிறந்த பெருங்கருணை யப்பா வருக வாய்த ரெலாம்
அண்ணிப் பரவும் புண்ணியமெய் யருளே வருக வதிநலஞ்சேர்
வளியிற் சிறந்த வடற்பதியின் வாழ்வே வருக ராமலிங்க
வள்ள லெனுமோர் மாணிக்க மணியே வருக வருகவே. 2

கருணை நிறைந்து வழியுமருட் கடலே வருக கற்பகத்திற்
காய்த்து முதிர்ந்து பழுத்தநறுங் கனியே வருக கருதுகிற்போர்
இருளை யுறவே யெரிவிளக்கா மிறையே வருக யெழுமையினும்
இம்மை யம்மைப் பயனளிக்கும் எந்தாய் வருக யிடர்செயுமோர்
மரணந் தவிர்த்து வாழ்வளிக்கு மருந்தே வருக வென்னிதய
மலரை மலர்த்தும் வான்சுடரேசெம் மணியே வருக வழுத்தரிதாம்
வருண நிறைந்த வடற்பதியின் வாழ்வே வருக விராமலிங்க
வள்ள லெனுமோர் மாணிக்க மணியே வருக வருகவே. 3

வேத முடிவில் விளங்குமருள் விளக்கே வருக மெய்ஞ்ஞான
வீட்டின் பயனு யோங்குகின்ற விருந்தே வருக விளங்குபர
போத மயமா யோங்குமுபர் பொருப்பே வருக வானந்தம்
பொங்கித் ததும்பி வழியுமருட் புனலே வருக பூரணமாய்
ஏத மகன்று ருள்ளகத்தில் இருப்போய் வருக யிதமகிதம்
இரண்டுங் கடந்த யிறுதிசுகம் ஈவோய் வருக யெஞ்ஞான்றும்
வாத மகன்ற வடற்பதியின் வாழ்வே வருக விராமலிங்க
வள்ள லெனுமோர் மாணிக்க மணியே வருக வருகவே. 4

செப்பும் ஷடாந்த நிலைமுழுதுந் தெரிந்தோய் வருக திரிவிதமாந்
தீக்கை யுடையோர் பரவுமருட் செல்வா வருக செகதலத்தில்
ஒப்பு முயர்வு நீத்தபர வுருவே வருக வோற்றியிலே
வுவட்டா வமுத முண்டுவக்கு முணர்வே வருக வுறுபசியாம்
வெப்பு தவிர்த்து சுகமளிக்கும் விபுவே வருக விண்ணோரும்
வேண்டிப் பரவு மொருதெய்வ வெளியே வருக விழுமியர்தம்
வைப்பென் றிலகும் வடற்பதியின் வாழ்வே வருக விராமலிங்க
வள்ள லெனுமோர் மாணிக்க மணியே வருக வருகவே. 5

பத்தி சுவைக்கு முயர்ஞானப் பழமே வருக பரவுகிற்போர்
பந்தந் தொலைக்க வந்தகுரு பரனே வருக பழிச்சரிதாம்
சித்தி நிலைகள் பலபுரிந்த சிவமே வருக முத்தேகத்
திறம்பெற் றழியா தோங்குமருட் செல்வா வருக சிவயோக
முத்தி நிலையாஞ் சோபான மொழிவோய் வருக முழுதுணர்ந்த
முனிவ ரகத்தும் புறத்துமொளிர் முத்தே வருக மூவாசை
மத்த ரளியா வடற்பதியின் வாழ்வே வருக விராமலிங்க
வள்ள லெனுமோர் மாணிக்க மணியே வருக வருகவே. 6

ஓடும் பொருளு மொன்றாய்க்கண் டுவப்போய் வருக வோங்காரத்
துண்மை யறிந்த யோகியர்தம் உளவே வருக உவப்புடனே
பாடுந் தொழிலை மேற்கொண்ட பதியே வருக பதிநிலையிப்
பாரி லுரைக்க வவதரித்த பண்பே வருக பரிவுடனே
கூடு மடியார் குழுவமர்ந்த குருவே வருக குணமெனுமோர்
குன்றில் விளங்கு மெமதுகுலக் கொழுந்தே வருக குவலயத்தில்
வாடுந் தகவில் வடற்பதியின் வாழ்வே வருக விராமலிங்க
வள்ள லெனுமோர் மாணிக்க மணியே வருக வருகவே. 7

பாசக் கிழங்கைப் பறித்தெடுக்கும் பரசே வருக பழவடியார்
பகரும் வேத ராசியமாம் பண்ணே வருக பவப்பிணியை
நாசம் புரிந்து நலமளிக்கும் நட்பே வருக நாதாந்த
நடனங் காணுந் திறலளித்த நாதா வருக நதிமதியம்
வீசுஞ் சடையோ னருள்வடிவாம் வித்தே வருக வியனிலத்தில்
விருப்பும் வெறுப்பு மற்றசுக விழைவே வருக விளம்புபல
வாச நிறைந்த வடற்பதியின் வாழ்வே வருக விராமலிங்க
வள்ள லெனுமோர் மாணிக்க மணியே வருக வருகவே. 8

கண்டா லினிக்கு மதிமதுரக் கரும்பே வருக காதலித்தோர்
கன்றங் கழியக் கண்களிக்குங் களிப்பே வருக கடவுளர்தந்
தொண்டால் யாவும் வருமென்றே சொல்வோய் வருக துரியபரஞ்
ஜோதி நிலையைக் காட்டவந்த துரையே வருக சூக்குமத்தை
விண்டா லனைத்தும் விளங்குமென விரிப்போய் வருக விண்ணோரும்
வேண்டும் பரமா னந்தசுக விளைவே வருக வியன்பொழிலில்
வண்டார் வலஞ்சூழ் வடற்பதியின் வாழ்வே வருக விராமலிங்க
வள்ள லெனுமோர் மாணிக்க மணியே வருக வருகவே. 9

சாகாக் கல்வி கரைகண்ட சதுரா வருக சாந்தமெனுந்
தவளக் கலையை யுடுத்தமர்ந்த தலைவா வருக சற்குணர்க்கே
வேகாக் காலை விளம்பவந்த வபுவே வருக வெறிவிலக்காம்
வெண்பா வுரைத்த தமிழ்த்தலைமை வேந்தே வருக வியநிலத்தில்
பாகார் மொழியார் பற்றறுத்த பரமே வருக பத்திதனைப்
பாரி லெவர்க்கும் படவிரிக்கும் பாங்கே வருக பல்காலும்
வாகார் தெய்வ வடற்பதியின் வாழ்வே வருக விராமலிங்க
வள்ள லெனுமோர் மாணிக்க மணியே வருக வருகவே. 10

அறுசீர் விருத்தம்

பத்திவரும் பழவினைகள் பறந்தோடு மூலமலப் பகுதி மாயும்
புத்திவரும் புலைகொலைகள் புறம்போகு மானந்தம் பொங்குஞ் சாந்த
முத்திவரு மழியாநன் மோச்சமுறு முதுகடல்சூ ழுலகி லெல்லாச்
சித்திவருமி ராமலிங்க தேசிகன்றன் அருட்பாவைச் சிந்திப் போர்க்கே. 11

மைக்காலன் றனையுதைத்து மறையவனுக் கருள்புரிந்த வள்ளன் மீதே
அக்காலம் பெரியரெலா மரியநறுந் தமிழுரைத்தா ரதனை யோர்ந்தே
இக்காலந் தெளிநடையா லருட்பாவென் றொருநூலை யிபம்ப வுன்னை
முக்கால மறிந்தபிரான் ஏவினனோ இராமலிங்க முனிவ ரேறே. 12

புலைமறந்த புண்ணியர்கள் புகழுகின்ற இராமலிங்கப் புனிதா நீதான்
கலைமறந்த வனுபவத்தாற் கனிந்துரைத்த அருட்பாவைக் கழறுந் தோறும்
முலைமறந்து குழவிகள்சொன் முகநோக்கும் விலங்கினங்கள் முற்றும் பொல்லாக்
கொலைமறந்து செவியேற்றிங் கருண்மயமாய் விளங்குமெனிற் கூற லென்னே. 13

அண்டரெலாங் கடைந்தெடுத்த வமுதமென்கோ வைங்கரனுற் கரனு ரீந்த
மண்டுசுவைக் கனியென்கோ வள்ளிமுனம் வேட்களித்த மலைத்தே னென்கோ
கண்டவர்க ளதிசயிக்கக் கவிபொழியும் இராமலிங்கக் கடவுண் ஞானி
தண்டமிழா லுரைத்ததிரு அருட்பாவின் சுவையதனைச் சாற்றுங் காலே. 14

காவென்றாற் கற்பகமே கனியென்றாற் கதலியதே கண்ணிற் காணுந்
தேவென்றாற் றினகரனே திருவென்றா லருட்டிருவே செய்யாள் வாழும்
பூவென்றாற் றாமரையே புலமென்றால் மெய்யறிவே பொருந்து மேலாம்
பாவென்றா லருட்பாவே பதியென்றாற் பசுபதியே பகருங் காலே. 15

பனியினிக்கு மொழிராம லிங்கவருட் பண்ணவனே பண்பான் நீக்க
தனியினிக்கு மனமுடையார் சந்ததமும் பரவுபெருந் தகையே நீதான்
நனியினிக்கும் படியுரைத்த நல்லருட்பாச் சுவையதனை நாடா ரெல்லாங்
கனியினிக்குங் கரும்பினிக்குங் கண்டினிக்கு மென்றென்றே கழறுவாரே. 16

செழுத்த மலர்க் குழலுமையாள் சிவகாம வல்லியொடு திருமன் றாடும்
முழுத்தலைமைத் தனிக்கடவுள் முளரிமலர்ப் பதமதனில் முயன்று நாளும்
அழுத்தமுறும் இராமலிங்க அண்ணால்நீ வாய்மலர்ந்த அருட்பா தன்னில்
எழுத்தெழுத்து மினிக்குமென்றா லென்சொல்கே னின்சீர்த்தி யென்சொல் கேனே. 17

தற்போதந் தலைக்கொண்டு தனையறியாச் சந்தத்தாற் றருக்கிப் பேசுந்
துற்போதச் சுணங்கரொடு சேராமல் நெஞ்சேநீ சுகமெய்ஞ் ஞானச்
சிற்போதச் சோதிதனைக் காட்டுதிறல் ராமலிங்க தேசி கேந்த்ரன்
சொற்போத அருட்பாவைத் தொழுததினுட் சுவையருந்தி சுகித்தி டாயே. 18

அருட்பிர காச ரருட்பெருஞ் சித்த ரருட்பெருஞ் ஜோதியார் மீது
தெருட்பிர காசத் திருவருட் பாவாந் தீபமொன் றேத்தின ரதுதான்
இருட்பிர காசந் தொலைத்தெழு நிலைமே லேற்றியெட் டாநிலைபரமப்
பொருட்பிர காசந் தம்மொடு பொருத்திப் புரையிலாப் போகமீய்ந்திடுமே. 19

திருவருட்பாதோத்திரம்

சினத்தை யவித்த சித்தரெலாஞ் செப்பு மிராம லிங்கமெனுங்
கனத்த யோக தற்பரகின் கனிவாய் மலர்ந்த வாசகந்தான்
தனத்தி னிடத்துந் தனமுடையார் தங்க ளிடத்துந் தாவுகின்ற
மனத்தை யொழித்திங் கன்பையொரு மலைபோல் வளரச் செய்திடுமே. 20

வேறு

ஒருதரம் படிக்கி னுடற்பொறி கரண மோய்ந்துயி ரனுபவங் கூடும்
இருதரம் படிக்கி லெண்ணிலாச் சித்தி யேய்ந்தரு ளனுபவங் கூடும்
மருதர மதையே முத்தரம் படிக்கின் மண்ணிறை யனுபவங் கூடும்
கருதரும் வள்ளல் கனிவுட னுரைத்த கவினருட் பாவிலோர் கவியே. 21

பத்திக் கடலே சிவஞான பதியே யென்னற் பாக்கியமே
முத்திக் கரசே இராமலிங்க முனியே மோன முழுப்பொருளே
பித்திற் கிடந்தே யறிவழிந்த பேயே னுன்றாட் பெறலென்றோ
சித்தி வளாகத் திருமடத்திற் றிகழுந் தெய்வத் திருவிளக்கே. 22

கட்டளைக் கலித்துறை

வாணியுஞ் சோமியும் வானத்தின் மேவி வயங்கு மிந்தி
ராணியும் போற்ற ரசிதாம் பரத்தில் ரமிப்பவன் றாட்
பேணியு வந்திடுமி ராமலிங் கேந்திரர் பேசிய நூல்
வணியு மாகுமன் றேமுத்தி வீட்டினி லேறு தற்கே. 23

பேய்மதங் கொண்டவர் பாலனு காவருட் பேற்றினராம்
சேய்மதங் கொண்டவர் தம் மீது வைத்தவெஞ் சீற்றத்தினால்
நாய்மதங் கொண்டுபின் கேடுற்ற வாறென நானிலத்தில்
வாய்மதங் கொண்டு பிதற்றுகின் றார் நெஞ்ச வஞ்சகரே. 24

தக்கனைச் செற்றவற் கேதக நின்றலை தந்தவந்த
நக்கனைப் பாடிய நாவல ருள்ளம் நயந்திடவே
கற்கரை யும்படியி ராமலிங்கேசர் கரைந்த தமிழ்
சற்கரைப் பந்தலில் தேன்மாரி பெய்திட்ட தன்மையதே. 25

பீடார் திருவருட் பாவாணர் வந்திப் பெருநிலத்தில்
பாடாத பாட்டையும் பாடிடு வாரெனப் பாமடந்தை
ஏடார் கமலத் திராதயனுவினி லிருக்க வுற்றாள்
ஓடா வனந்தனும் பாதலம் புக்கங் கொளித் தனனே. 26

ஊர்பா டுவார்சிலர் ஓயாமற் செல்வ முதவி செய்வோர்
பேர்பா டுவார்சிலர் பிரியாவிடை யெனும் பெண்கள் குணச்
சீர்பா டுவார்சிலர் ஸ்ரீராம லிங்கநற் றேசிகர் போல்
ஆர்பா டுவார்கேட்ட போதே புலன்க ளடங்கிடவே. 27

அருட்பா வெனுது மருட்பா வெனச் சொல்லி யாணவத்தால்
இருட்பா டுலகினி லேறேயென வுழலினர் கட்கே
பொருட்பா லளிப்பவர் கட்கும் நரகம் பொருந்துமென்றால்
தெருட்பா விகள்படும் பாட்டையுங் கேட்டையுஞ் செப்ப வற்றே. 28

அருவருப் பாகிய நோயணு காரந்த காரமென்னும்
ஒருபெரும் பாழ்நிரை யம்புக்கிடா ருலகேத்த நிற்பார்
தெருவருட் சித்த ரெனுமிராம லிங்கநற் றேசிகர் சொல்
திருவருட் பாவிலொரு கவிபேனுந் தெரிந்த வரே 29

வெண்பா

வாராத வல்வினைநோய் வந்தாலும் வன்மையொடு
சேராத பாவமெலாஞ் சேர்ந்தாலும் — தீராதென்
றார்சொன்னு ரெங்களருட் பிரகாசப் பெருமான்
பேர்சொன்னாற் போமே பிணி. 30

வாழ்த்து

வாழி வடற்சிற்சபையில் வாய்ந்தநட ராஜாருள்
வாழி யவண்பூசிக்கு மாதவர்கள் — வாழியென்றும்
வள்ள லிராமலிங்க மன்னனடி யார்களேல்லாம்
புள்ளலிலா வின்ப மியைந்தே. 31

இவை — கூடலூர். சிவ. துரைசாமி தேசிகர் இயற்றியவை.

## 8

அறுசீர் விருத்தம்

தேரூர்ந்து மேருவலஞ் செய்தொளிரும்
செங்கதிர்போற் றிகழ்ந்து நாளும்
நீரூர்ந்த கடலுலகிற் கருட்கிரணந்
தனைப்பரப்பி நெடிய மூலங்
காரூர்ந்த குப்பாயங் கிழியஅருட்
பெருஞ்ஜோதி காணக் காட்டுந்
தாரூர்ந்த வயங்கெழுதோள் இராமலிங்க
குருவடலூர் சபைகண் டோனே. 1

கண்டாய்நீ வடலூறுசிற் சபையிலருட்
பெருஞ்ஜோதி கண்ட பின்னே
கொண்டாய்நீ மோனபதங் கல்லாலின்
புடையமர்ந்தோன் கோலம் பூண்டாய்

தண்டாய்நீங் காத்தொழும்ப ருடனின்றாய்
எனையுனடித் தண்டேன் மாந்தும்
வண்டாநீர் மையனாகப் பணித்திஅருட்
பிரகாச வள்ளி யோனே. 2

வள்ளலாய் வடலூருள் வருவார்க்குன்
அருளமுதம் வழங்கா நின்றாய்
கொள்ளலாம் பரிபாக மின்மையினாற்
பரிந்தேத்திக் கொளமாட் டாமல்
எள்ளலா மலத்தழுந்தி மாழாந்தேன்
எனக்குமெந்தா யிரங்கு வாயோ
கொள்ளலா மலவுடல்பொன் னுடலாக்கும்
இராமலிங்கப் புனிதத் தேவே. 3

தேவேமெய்ஞ் ஞான அருட் பிரகாச
வள்ளலெனத் திகழா நிற்குங்
கோவேயென் குணமலையே வடலூறுசிற்
றம்பலத்துட் குலவு ஞானப்
பூவேயப் பூமணமே மணங்கமழ்செந்
தேனேநின் பூந்தாட் கென்சொற்
பாவேறத் தொண்டுகொண்டாய் முன்னைதுமா
தவம்புரிந்தேன் பதக னேனே. 4

—மஹாவித்வான் சித்தாந்தரத்நாகரம் அரன்வாயல் வேங்கடசுப்பு பிள்ளை.

## 9

சீர்பூத்த மறைமுனிவ ரகம்பூத்த நலம்பூத் திறத்தி னுனிப்
பார்பூத்த மயல்பூத்த எனதுளத்திற் பூத்தநகை பாறப் பூத்த
ஏர்பூத்த அருணயன இணைபூத்த இருந்தவனிங் கிறைமை பூத்த
பேர்பூத்த போதசிதம் பரராம லிங்கனடி பேணி வாழ்வாம். 1

—சென்னை சூளை சோமசுந்தர நாயகர்.

## 10

விசித்திர விஸ்வ மாயிகம் — விகாரம் ருத்பு பஞ்சனம்
சரீர ரூப வர்ஜிதம் — ஸ்வயம் ப்ரகாச லக்ஷணம்
தநுத்ர யேண சோபிதம் — தராதி தத்வ தாரிணம்
குருத்த மார்ய ராமலிங்க — கோமணிம் நமாம் யஹம். 1

சிதாத்ம தேஜ பாஸ்வரம் — சிவானு பூதி ரஞ்சனம்
ஸதாத்ம கோடி நாயகம் — ஷடாந்த ஜ்யோதி பாஸ்கரம்
பதார்த்த சோத நாஸ்ரயம் — பவாப்தி சோஷ ணாகரம்
குருத்த மார்ய ராமலிங்க — கோமணிம் நமாம் யஹம். 2

சராச ராத்ய ரூபகம் — சதோத யார்க்க சிந்திதம்
க்ஷரா க்ஷரத்வ யாதிகம் — ஸநாதநம் புரா தநம்
பரா பரப்ர காசகம் — பரோக்ஷ போத வர்ஜிதம்
குருத்த மார்ய ராமலிங்க — கோமணிம் நமாம் யஹம். 3

—ஓர் அன்பர்.

## 11

அறுசீர் விருத்தம்

அருள்பழுத்த செழுங்கனியே அகம்பழுத்த
சிவஞான அமுதே முத்திப்
பொருள்பழுத்த அருட்பாவை எமக்களித்த
தெய்வமணப் பூவே என்றும்
மருள்பழுத்த அடியேங்கள் மனவிருளை
அகற்றவரு மணியே மெய்மைத்
தெருள்பழுத்த வடலூர்வாழ் இராமலிங்க
நின்னருளைச் சிந்திப் பேனே. 1

தேன்கலந்த திருவமுதாம் தேவாரத்
திருப்பாட்டைத் தினமு நாடி
'நன்கலந்து பாடுங்கால் நானறியேன்
எனை'எனநீ நவின்ற பாட்டை
வான்கலந்த வடலூர்வாழ் இராமலிங்க
மணியேயான் வழுத்துங் காலை
ஊன்கலந்த உயிரெல்லாம் உளமெல்லாம்
உணர்வெல்லாம் உருகு மாலோ. 2

வள்ளல்நின் வாசகத்தை வடித்ததமிழ்த்
தேனென்கோ வானோர் எய்த
அள்ளாத அமுதென்கோ அருளென்கோ
அன்பென்கோ அறமே என்கோ
பொள்ளாத மணியென்கோ பொருளென்கோ
பொன்னென்கோ புலன்கள் நாடி
விள்ளாத வீடென்கோ இராமலிங்க
மாமணியே விரிக்கொ ணாதே. 3

—காவேரிப்பாக்கம் ரா. நமச்சிவாய முதலியார்.



உ

சிவமயம்

திருச்சிற்றம்பலம்

அருட்பெருஞ்ஜோதி

திருவருட் பிரகாச வள்ளல்

# 12. ஞானசிங்காதனபீடத்

## திருவருட் செங்கோலாட்சி

விருத்தம்

திருவருட்பிரகாச வள்ளலார் திருவடி வாழ்க

அருளுருவாய் வருகுருவை யறிபொருளா யகத்துன்னிக்
கருணைவளர் ஞானசிங் காதனமொன் றங்கெழுநிலைமேல்
இருண்மூல பந்தமற வெங்கள்குரு ராமலிங்கன்
மருளறச்செய் தருட்சேங்கோல் மதித்துறச்செய் வகையுரைப்பாம். 1

ஓய்ந்தமன மொருவீட்டிற் கொருதுணையா கும்புறத்துச்
சாய்ந்தமன மெழுநரகந் தள்ளுதற்குத் துணைதானென்
றாய்ந்தமன மகற்றுதற்கோ ரருட்குரவ னருளியவா
றேய்ந்தமன மடக்கும்வகை யெங்குரவன் துணைப்பட்டான். 2

நில்லாது போமனதை நிராசையாற் றுனிறுக்கி
வெல்லாமல் வென்றதனை வேரறுத்து வினைகளைந்து
சொல்லாமற் சொன்னபொருட் சுயஞான முறவிளக்கி
எல்லாருந் தொழுந்தாளு யிணையிலியா யிருந்தனனால். 3

இருந்தமுறை தனைக்கேண்மின் இன்னுமே யெங்குரவன்
ஒருசத்தின் மயமனமா யொருசிவத்தின் மயமறிவாய்
ஒருபரமன் மயம்வெளியாய் ஒங்குருசிற் பரமாதி
அருளுருதற் பரமாகு மகாதிமுப்பா ழுகன்றவிடம். 4

பேரொளியே நாதாந்தப் பெருஞ்ஜோதி சிவப்பாழ்
நேரொளியை யஞ்செழுத்தால் நேர்ந்துதத்வ ஞானமது
சேரொளியே சிவப்பாழாய்ச் சேர்ந்துறுதற் பரஞான
வேரொளியே பரப்பாழா யுயருமது தனையொதுக்கி. 5

நின்றதத்து வங்கடந்த நிலைசிவப் பாழாகி
நின்றவிடம் பிரமமென்று நிகழ்த்தினுமா யாப்பிரமம்
மன்னுமிட மாகுமது மாண்டவிட மந்திரமாய்ப்
பன்னுமொரு பிரமமது சிவப்பாழா மதுகடந்தே. 6

தாண்டுமிடந் தாரகநற் பிரமந்தான் பரப்பாழாய்
ஆண்டவெளி பெருவெளிவா ழரும்பாக முறுநிலையுஞ்
சேண்பகிமா தாரஞ்சித் தாந்தநிரா தாரமமே
வேண்டும்வே தாந்தநிலை மேலாகு மீதானம். 7

கடந்தவிட நாதாந்தங் காத்தருளு ஞானமது
கடந்தவிடம் பரஞ்ஞானங் கருவினுதிப் பொடுமிறப்புந்
தொடர்ந்தவிட மாகுமது தோயாது மீதானம்
அடர்ந்தபிறப் பிறப்பின்றி யமருமிட மானந்தம். 8

இந்தநிலை யுருவறிந்தே யிருந்தவண்ட பிண்டநிலை
பந்தமித யந்தனக்குப் பாங்குறுமேல் கீழொன்றாய்த்
தொந்தமுறற் பிரமாண்ட நிலையறிந்து தூயசிவ
சிந்தனையிற் றொடக்குண்டு சிவந்தானுப் தானதுவாய். 9

இருந்தநிலை யாற்றன்னை யறிந்தெல்லாந் தானாகப்
பொருந்துமொரு தலைவனையே புணர்ந்துறுநன் னிலைவேண்டி
அருந்துணையா யாருயிருக் கருங்கதிதந் தருள்வானுப்
பெருந்துணையெம் பெருமானுப் பிரமனய னறியானும். 10

ஓருருவா யோருருவு மில்லானு யொளிக்குமிடம்
பேருருவாய்ப் பெருவெளியாய்ப் பெருவெளிக்குள் பெருவெளியாய்
வேருருவாய் விளங்குமிரு வினையில்லா விடத்தொளிரும்
நேருருவாய் நினைவில்லா விடத்தொளிரு நின்மலமாய். 11

பதிஞானந் தானாகிப் பசுஞானந் தானாகி
விதிஞான மிரண்டின்றி விளங்குமெலாந் தானாகிக்
கதிஞானப் பொருளாகிக் கனமோனப் பொருளாகி
அதிபிரமப் பொருளாகி யதற்குளெலாந் தானாகி. 12

அண்டபிண்டந் தானாகி யதற்குமப்பா லாம்பிரமம்
அண்டமுந்தா னாகியுறு மசராசர மாம்பூத
அண்டமத னுட்பிரிவா யானதத்வ வண்டமெலாங்
கண்டபெரு மாயையுந்தான் காணாத பொருளாகி. 13

ஆக்கலோடு காத்தலுமங் கருளுமவ னாகியுறு
சூக்குமனல் வடிவாகித் தூலவடி வாகியவன்
நோக்கும் விழிக் கெட்டாத நுண்ணியநற் பொருளாகிச்
சூக்குமமுத னான்காகித் தோன்றியுறு வாக்காகி. 14

வேறு

அந்தமும் இறுதியில்லா அளப்பருஞ் ஜோதியாகிப்
பந்தமும் வீடுமாகிப் பதிபசு பாசமாகிச்
சிந்தனைக் கெட்டாதாகித் திரிக்கெனும் பொருளதாகி
எந்தையு மாகியென்னுள் இருப்பவ னாகியென்றும். 15

தோன்றுமா மறைகளாகித் தூரிசிலா கமங்களாகி
ஏன்றநற் கலைகளாகி யென்னுயிர்க் குயிருமாகி
ஆன்றவா தாரமாறுக் கப்பாலு மாகியென்னுள்
தோன்றிடும் பொருளுமாகித் தோன்றாத துணையுமாகி. 16

இத்தனை பொருளுமாகி யெங்குரு வானசித்தன்
சத்திய வடிவன்சாந்த சச்சிதா னந்தன்றானும்
நித்தியன் வருவதெப்போ தென்றுள முருகிநிற்பன்
சுத்தமா மிராமலிங்கன் றுயரிலான் வரவுநோக்கி. 17

வேறு

எந்தைதா னெவ்வுருக்கொண் டெழுந்தருள்வா னறிகிலன்யான்
சந்தமறைத் தவிசமைக்கச் சார்ந்ததன்மே லிருப்பவனை
அந்தமுத லில்லாத வருட்குருவென் றறிவனென்றே
இந்தவு லகம்போற்ற விதுசெய்தா னெங்குரவன். 18

வேறு

அருளொளி யகலாதோங்கு மருட்பர சாக்கிரந்தான்
இருண்மனப் பகுதிபோன விடமதற் கப்பாலான
பொருள்பர சொற்பனத்திற் பொய்ப்பொருண் மாயைநீங்கும்
தருணமச் சிவர்க்கேற்ற தகுமன வடக்கந்தன்னில். 19

ஆனந்தந் தோன்றுமந்த வானந்த நிலைபெறுந்து
போனவவ் விடவசுத்தம் பொங்குமச் சொற்பனத்தில்
ஆனவங் கதுபோமென்னி லாங்குறு வாசடாழ்ந்து
ஊனமுற் றொடுங்கலாகு முயர்ந்துறு பரசுழுத்தி. 20

சாவசங் காரதத்வஞ் சம்பவந் திதியிரண்டாங்
கர்மமங் கதனைத்தீர்க்க வந்தன மென்னத்தோன்றும்
தர்மமங் ககலாதுற்ற தனிவிடமஃதா மப்பால்
பிர்மசாக் கிரத்திற்சுத்த மாயையின் ப்ரக்ஞையாகி. 21

உலகியல் மறைத்தாங்கோங்கு முயர்திரோ பவமுறுந்தான்
விலகுறு மரியபிர்ம்ம சொற்பனம் விந்துதன்னைப்
புலனுற விளக்குநாதம் போமிட மருள்விளக்கம்
கலகமில் லரியபிர்ம்ம சுழுத்திமா மாயைநீக்கம். 22

அவ்வருள் விளக்கம்பெற்றோ மென்பதும் போமிடந்தான்
அவ்விய மகல்சொரூப மதுகுரு துரியந்தன்னில்
பவ்வமா மிருளொழிந்து பரமநல் லின்பந்தோன்றுந்
திவ்யவிந் நிலையின்றன்மை தெரிந்தெவ ருரைப்பாரம்மா. 23

ஆனவிவ் வெழுநிலைப்பே ரடிநிலை முதலாமேழும்
தானதை மறைக்குமாயைத் தன்னுருத் திரைதவித்து
வானவில் லொளிவிட்டோங்கி வயங்குமத் தன்மைமாறு
ஞானசிற் சபையையிங்கே நாட்டிய பின்னுமாங்கே. 24

நடுநிலை தன்னுள்ஞானத் தாரகச்சொரூபந் தானும்
படுமல ரயன்வியப்பப் பன்மணிப் பளிங்குகொண்டு
வடுவற விளங்குநல்ல மறைகடாம் போற்றுஞ்சைவ
நடுநிலை யிராமலிங்க னயமுறச் செய்வித்தானே. 25

அருமையவ் வெழுநிலைக்கண் மேனிலை யதன்மேலோங்கும்
பொருவில்பூ ரணவானந்தப் பொற்கோச குருவைக்காணு
திருவரு விரண்டுமின்றி ஒளிவிடுந் தவிசமைத்தே
அருளுரு வாகுமெங்கள் அரியமெய்க் குரவாணுளும். 26

நோக்குறு நோக்கையன்பால் நோக்குமந் நிலையால்நோக்க
நோக்குறு நோக்கமன்றே நோக்குமென் றுறுதிநாடித்
தாக்கதி க்ராந்தமேலாஞ் சமவேத முடிவிலோங்கும்
நீக்கரு நிலையைநாடி நினைந்துநைந் துருகிநின்றான். 27

எச்சமயத் தினுள்ளோ ரேவருமே நோக்குந்தோறும்
பொச்சமில் எங்கள்தெய்வப் பொதுச்சபை யெனப்புகன்று
அச்சபை மணித்தெய்வந்தா னருள்நட ராஜனாகுங்
கோச்சமப் பொதுசிறப்பைத் தூக்கியே வியப்பரன்றே. 28

தற்போதந் தானகன்று தண்ணருள் நினைவாற்செய்த
பொற்கோயி லாகுமன்னுப் புவிபுளார் போதங்கொண்டு
கற்கவா லமைத்துயர்ந்த கணக்கது போலுமாகா
சிற்சபை தனக்கீடில்லை யென்றுரை செய்வரன்றே. 29

வெறுவெளி யாசனந்தான் விதித்தது கேட்டவிப்பார்
உறுமறி வுடையரியாரு முற்றதன் வடிவுநோக்கிப்
பெறும்பொரு ளிதன்மேலுண்டோ விலையெனப் பேசிப்போந்து
பொறுமைகொண் டெருப்ராம லிங்கதே சிகனைப்போற்றி. 30

இருந்தன ரிருந்தண்கூடல் எந்தைகொண் டுறுபீடம்போற்
பொருந்துமெய்ஞ் ஞானபீடம் போந்துவாழ் பவனெம்மானன்
குருவரு வாகுமீச னொருவனே யேறுதற்குப்
பொருந்துமென் றுரைக்கவல்ல புண்ணிய பீடந்தன்னில். 31

வருவதேங் நாளோவந்து வாழ்பெரு கருணைதன்னைத்
தருவதெந் நாளோவெல்லாந் தந்தருள் சித்தசாமி
இருளறுத் தன்பர்காண இருக்குநா டென்றுபின்னும்
உருகியே நாடிபுள்ளே யுற்றுற்றுப் பார்க்கும்பின்னும். 32

வேர்க்குங்கண் ணீர்ததும்பி மெய்நடுக் குற்றுச்சோறும்
பார்க்குங்கம் பிக்கும்வார்த்தை பழுதற நழுவும்பின்னும்
போர்க்குமெய்ப் புளகமிந்தப் பொலிவுறு தேட்டங்கொண்டு
ஆர்க்குமா னந்தக்கண்ணீ ராற்றுக்கு ளாழுந்தும்பாடும். 33

ஆனந்தக் கூத்துமாடு மாருகு மந்தரபீஜ
மோனமாம் பீடமொன்றில் முன்னிற்பா னெங்குமாகி
ஊனந்தா னில்லாசித்த னொருவனே யெனக்குளாகித்
தானந்த மில்லாதெங்குந் தானுதுஞ் சாட்சியாகும. 34

சற்குரு வரவுநோக்கிச் சாந்தரை நோட்டமாதி
கற்புரு மவத்தைபத்துங் கடந்தவம் முடிவில்தானே
பொற்புர விருக்கவல்ல புண்ணியன் வருநாளெண்ணி
நிற்பனக் காட்சிகாண நின்றனர் பலருமம்மா. 35

விருத்தம்

திருவக லாதஞானச் செல்வமுற் றோங்குமன்பர்
உருவள ரியந்தேடி யுட்கும் மிராமலிங்கன்
ஒருபுவி யறிவுறுமல் உழற்றிய அணைமேல்வந்து
ஒருகுரு மேவுந்தன்மை ஒன்றையார் உரைப்பாரம்மா. 36

போற்பக லாதஞானப் பொலிவனைப் புரிந்தவாண்டு
பற்பல வாயிற்றின்னம் பரமசற் குரவன்வந்து
நிற்பதெந் நாளேயானும் அறிகில னென்றுநெஞ்சந்
துற்பல மாகமிக்கத் துயருழந் திருக்குங்காலை. 37

ஒருபக லெம்மையாளும் ஒருவன்றன் உளம்புகுந்து
வருங்குறிப் புணர்ந்துவாழு நாளிற்றா னடைந்ததன்மை
ஒருவன்யான் தெரிந்துரைக்க வொண்ணுமோ வொண்ணாதாலும்
அருட்குரு பரன்றான்றோன்றும் அருணிலை யுரைப்பன்கேண்மின். 38

அருட்பிர காசவள்ளல் அருள்விழி தோறுநாளும்
ஒருவிடப் புறமதாடும் உண்மைகள் பலவுங்கண்டு
அருள்நிலை விளங்குங்காட்சி யதிசய மதனைவாயால்
அருள்செய்யும் இராமலிங்க னற்புதக் காட்சிகேண்மின். 39

சோதிநன் மலையுந்தோன்றுந் தோன்றுநல் வீதியுந்தன்
வீதியின் நடுவில்மேடை மேடைமேல் கூடமாங்கு
ஆதியேழ் நிலைகொள்மாடம் அங்ஙனந் தோன்றுமந்த
நீதியி னடக்கைகேட்கி னெஞ்சந்தா னுருகுமம்மா. 40

அருட்பெருஞ் ஜோதியாகு மச்சிவ மலையிற் றோன்றும்
கருணைநல் வீதியாகுங் காருண்ய சத்யமார்க்கம்
அருணனி சுரக்குமேடை யாத்மகிற் சத்திகூடம்
இருளொளி யாகுமூலப் பகுதியுள் இருந்துதோன்றும். 41

ஏழ்நிலை மாடபேத மிருண்மல சத்திபேதம்
வாழ்நிலை யீசனாகி குருசாக்ரம் வயங்குமீறுந்
தாழ்வுறா வாதியந்தம் ஒத்தநன் னிலையேயாகிச்
சூழ்வுறு சூட்சிகாணுந் தூயநற் பெரியோனாகி. 42

ஒன்றதோன் றாகியுள்ளே யொளிக்குந்தத் துவங்கடந்து
நின்றிடம் போற்றுமந்த நிலையொன்றே யாகுமாங்கே
சென்றிடக் காணும்சத்தி யனந்தமாய்த் தேய்ந்தகன்ற
பின்தத்வ முடிவைக்கண்டு பேர்ந்துமும் மடியாயோங்கும். 43

கோடுமுடி தில்லைசச்சி தானந்தங் கோதிருனே
ஒளியுறு விரண்யகோச மொப்புயர் வில்லாவாயிற்
படிகடந் துறுமவ்வேலை பரிபாக சத்திகூடம்
முடிவிலா துயருங்காட்சி முன்தோன்றக் காணுங்காலை. 44

ஆங்கவர் வெண்மையாதி யைவண்ண மாகிநிற்கும்
ஆங்கவர் தமைகண்டப்பா லன்புடன் சென்றக்கோயில்
தீங்கி லாத்திருவாய்க்கண்ணே திருவள ரைம்பெண்சத்தி
பாங்குறு சம்புபட்சப் பார்வையும் வென்றப்பாலே. 45

மணிவாயில் பெண்ணேடாணுப் மாண்புறு விளக்கமாகித்
துணிவுறு விரண்டுவிந்து நாதநற் ஜோதியாகிப்
பணிவுடன் விளக்கமாங்கே பார்கொணுக் காட்சியாகும்
அணிவளர்ந் துறுமணுக்கத் திருவாயி லாங்கேதோன்றும். 46

அப்பொருட் பின்னசத்தி யருண்ஞான மறிதுயிற்கு
ஒப்புரு வாகுந்தில்லை கோவிந்த னொருவன்வாழும்
செப்புஞ்சிற் றம்பலத்தின் திருமுன்னு மதனைக்கண்டே
தப்பிலா னந்தவல்லி தானுறுங் காட்சியாகும். 47

அருட்சத்தி யாட்சியன்பா லனுபவந் தோன்றக்கண்டு
பொருட்சத்தி சலனசத்தி யாதார போதஞானத்
திருநட ராஜன்றன்னைத் தரிசித்தே வந்தபேறு
ஒருபொரு ளாகுஞ்சுவாமி பொருவனே யறிவானென்று. 48

சொன்னது முண்மைஞானச் சபையான்மச் சோதியாகும்
மன்னவ்வெ ளிக்குட்ஜோதி யாயதக் கடவுளாகும்
பன்னுமவ் வொளியெழுந்தும் மாண்புட னசைதலைநன்
கின்னடந் தோன்றுருமைக் கிடஞ்சிதம் பரமதாகும். 49

அச்சிவ சிதம்பரத்தி னனுபவச் சொரூபகாட்சி
பொச்சமி லாட்சிதன்னைப் பொய்படா தறிந்தவெந்தை
எச்சமயத் தோர்தாமு மிசையவே கூறியாங்கு
நச்சுற விருந்துளோர்க்கு நாவினென் றுரைக்கலுற்றான். 50

பந்தந்தா னகலநீவிர் பந்தக்கா ளுட்டுமின்கள்
சொந்தபூங் காவனத்தின் றாயநல் லணியின்ஜோதி
இந்தப்பார் முழுதுமேத்த வினிதணி மின்களென்றே
இந்தொளி மழுங்கவிந்நா ளெழிலுறச் செய்வித்தானே. 51

அங்ஙன மியற்றுந்தோறு மனுபவக் காட்சிக்கேற்ப
மங்கலக் கோலங்கொள்ளும் மாண்புகள் பலவுண்டம்மா
அங்கதை யறியவொண்ணு தெவர்க்குமென் றளப்பான்சத்யன்
சங்கதி வேறொன்றில்லை சத்தியமீ தென்றபின்னும். 52

புண்ணிய குருநம்முருட் புகக்கொடி கட்டனன்றென்
றெண்ணுமின் னெங்கள்சாமி யித்தினம் வருநாளென்றே
பண்ணுமின் பணிகள்யாயும் பாடுமின் பசிக்கிலாங்கே
உண்ணுமி னுணவையென்றே யுரைத்தபி னுரைக்கும்பின்னும். 53

## விருத்தம்

வேதாகம மிரண்டின்விரி பொருள்க ளனைத்தும்
விரித்துரைப்பா ரிவ்வுலகி லில்லையென்றே விரிக்கும்
வேதவந்தம் போலுரைக்கும் வேதாந்த முடிவில்
விளங்குமே சித்தாந்த வித்தகநன் முடிவு
நாதவந்த போதந்தா னமுவினர்க்கே யாகும்
நாடுமின்க ளென்றவல்ல நடுநிலைநன் னிலையே
வாதமற்ற பேர்க்கேயிவ் வாழ்வுபெறக் கூடும்
வாய்ப்பறைகொண் டேபறைமின் மன்னுசக மறிய. 54

பரபட்ச முழுதுமே பார்த்துணருங் காலை
பார்த்தறிவ தெல்லாம்பொய் பகுத்தறிவத் வைதம்
தரமுறுங் கேவலாத் துவிதமே நானீ
தானேயென் போன்மாயா வாதியிவ னுக்குள்
உரனுறும் மதவாதி யுலகமெலாந் தானுப்
ஒங்குவான் றனக்குமே லொருவனில் லானுப்ச்
சிரமெடுத்துக் கொண்டாடிக் குதுகுலிப்பா னிவன்றன்
சிரமுறுவான் வேதாந்தி நீநானென் போனே. 55

தோன்றுகே வலாத்துவித மிஃதொழித்துச் சுத்தந்
தோய்ந்தவே தாந்தநிலை யத்வைதப் பொருடான்
ஆன்றவரு மறைகளொன் றெனுவருமை நோக்கி
ஆகுமப் பொருளென்றென் றறைந்திடுநற் சூது
வன்றவிரண் டின்மையிரண் டன்மையிரு பொருளின்
ஏற்றமுண்மை யிஃதறியா ரிரண்டொன்றென் றுரைப்பர்
சான்றநற் றுவிதமத் வைதவறி வதனைச்
சாற்றுமுண்மை யறிபவர்கள் தமையறிவா ரிலையால். 56

## வேறு

ஏர்பெருஞ் சுருதியுக்தி யநுபவ மூன்று மேற்றுப்
பேர்பெறுஞ் சமரசத்தின் றன்மையித் தன்மை யென்றே
பார்முழு துணரமாட்டாப் பண்பினை யிராமலிங்கன்
சூர்பெறும் அருட்ப்ரகாச வள்ளறுன் சொல்லலுற்றான். 57

ஆதியாங் கடவுளாகும் பசுபதி பரமனுங்கே
சோதியா கமத்தின் திண்மை துணிபொரு ளொன்றேயன்றே
ஓதிய துண்மையாமிவ் வுண்மையைச் சோதித்துப்பார்
பேதியா திருக்கமாட்டா வென்றுந்தங் கன்மத்தாலே. 58

வேறு

நீதிவேத முடிவின்மா வாக்யம்நீயே யதுவானுப்
ஆதியாகுந் தொந்ததசி யதுவேகிரி யாவுபதேசம்
சோதியது நீயானுயென் பதுவேசுத்த ஞானவனு
பூதிதத்வ தரிசனமென் றுரைக்கப்புகுந்த பின்னுமே. 59

தேகமுதலா முபாதிகளெழ் தேருமவனே யாத்மாவாம்
போகஞான நீயேதற் போதவுபாதி கூடிலறி
மோகமுக்ய மதுநீங்கு மிடமேலட்சிய மோட்சமுறு
தாகமின்றி தானென்பதது வேசுத்தந் தானுடல்தான். 60

அல்லேனென் பதுசுத்த மதுவேவிட்ட விலக்கணையாஞ்
சொல்லுமன்ய மாகாமே சொரூபமேக மாயிருக்கை
வெல்லும்விடாத விலக்கணையாம் விளங்குஞான வானந்தம்
ஒல்லும்விட்டும் விடாதவிலக் கணையாமென் றங் குரைத்தபினும். 61

வேறு

வகைகண்ட கடவுளாத்ம வளமுறுதொகை யீதென்றே
பகையறு நூல்களாலும் பண்புறு முத்தியாலும்
தகைவுட னுரைக்கினுங்கே தடைபடுங் கடவுடாஞ்செய்
சிகைபடும் பணிகடாமச் சீர்மையை யுரைக்கொணுதே. 62

ஆதலினனு பவத்தி லருள்சிவ மிரண்டுமொன்றாய்
வாதனை யற்றுவேத மாகம வழக்குநீங்குஞ்
சோதனை தனக்குமெட்டா துரிசற விளங்குமெங்கள்
நாதனை யெளிதிற்காண நல்லரு ளொளிதேதோன்றும். 63

என்றுரைத் திட்டவெந்தை யினியநல் இராமலிங்கம்
நன்கருட் ப்ரகாசவள்ளல் நன்கருட் டுணையானின்று
மன்புவி முழுதும்வென்று வாழருட் செங்கோலாள
மன்னிய குருகடாட்சம் வாய்த்தநன் காட்சியீதே. 64

மேற்கோள்

சத்தியவான் வார்த்தையிது தானுரைத்தேன் கண்டாய்
சந்தேக மில்லையிது தனிற்சந்தோட முறுவாய்
இத்தினமே யருட்ஜோதி யெய்துகின்ற தினமாம்
இனிவருமத் தினங்களெலா மின்பமுறுந் தினங்கள்

சுத்தசிவ சன்மார்க்கந் துலங்குமெல்லா வுலகுந்
தூய்மையுறும் நீயுரைக்குஞ் சொல்லனைத்தும் பலிக்குஞ்
செத்தவர்க ளெழுந்துலகிற் றிரிந்துமகிழ்ந் திருப்பார்
திருவருட்செங் கோலெங்குஞ் செல்லுகின்ற தாமே.

(6-ந் திருமுறை பக்கம் 379—3)

திருஅருட்பிரகாச வள்ளலார் திருவடிவாழ்க
ஞானசிங்காதனபீடத் திருவருட் செங்கோலாட்சி முற்றிபது.

எண்சீர் விருத்தம்

**தா**ய்மலர்ந்த பெருங்கருணைத் தத்துவனே ரெங்கள்-சனிப்பிறப்பை
யொறுத்து வினைத் தனித்தொடக்கை யறுக்க
வேய்மலர்ந்த கருணைதிரு மேனிகொண்ட காலத்
தெண்டோளோ இருதோளோ முக்கண்ணோ விருமை
ஆய்மலர்ந்த அருட்கண்ணோ நாமமெழுத் தைந்தோவன்றி
யருளிராம மலிங்க அற்புதப்பொற் பெயரோ
வாய்மலர்ந்த தீரிரண்டுமறையோ மூவிரண்டு மாமுறையோ
வகுத்துரையீர் மயக்கொழி மாத வரே.

திருஅருட்பிரகாச வள்ளார் திருவடிவாழ்க

பொன்னேரி சுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றியன.

# 13. அனுபவப்பதிகம்

நேரிசை வெண்பா

திருவருட் பிரகாசவள்ளலார் திருவடிவாழ்க

**தொ**ண்டென்றுஞ் செய்யத் துணிவா ரனைவருக்குங்
கண்டேன் றினிக்குங் கவிப்பனுவல் — விண்டெனுற
வானவட லூரா னறைவிட் டெழுவானென்
றியானறைவ தீசனரு ளே.

கோச்சகக்கலிப்பா

ஆனந்தத் திருக்கூத்தா லைந்தொழிலும் புரிகின்றோன்
மீனஞ்சும் விழிநல்லார் வேட்கையறு வினையேன்பால்
மானங்கொண் டறையூடு மறைந்திருக்கும் வடலூரான்
வானங்கண் டின்பமெய்த வருவானென் றுரைத்தானே. 1

பெண்ணுருவ மொருபாதி பெற்றிருக்கும் பீடுடையான்
கண்ணுரிமை தானுமில்லார் கடைத்தலையிற் றிரிவேன்பால்
எண்ணும்வட லூர்ப்புலவ னிருட்டறைவிட் டெழுந்தொருக்கால்
மண்ணுலக மீடேற வருவானென் றுரைத்தானே. 2

கண்டமதிற் கறையெய்தக் காரால முண்டபிரான்
புண்டருநெஞ் சினனாகிப் புலர்கின்ற பொல்லேன்பாற்
றண்டலைசூழ் வடலூரான் றனியறைவிட் டினியோர்கால்
வண்டமிழ்ச்சீர்க் கனியோங்க வருவானென் றுரைத்தானே. 3

பொற்றையொரு வில்லாகப் புவியூர்ந்து புரஞ்செற்றோன்
பற்றை வென்றோர் தங்களையும் பதையாம விகழ்வேன்பால்
அற்றையிற்சிற் சிலரேங்க அறையுட்போம் வடலூரான்
மற்றையவர் கண்கூச வருவானென் றுரைத்தானே. 4

நம்புமவ னிமித்தமொரு நாரியிடந் தூதானோன்
வெம்புதுயர்க் காதரமா மிடிப்பட்டு மெலிவேன்பால்
அம்புவிபெல் லாமறிய வறையுட்போம் வடலூரான்
வம்புரைப்பார் பலர்காண வருவானென் றுரைத்தானே. 5

நீராறும் பனிமதியு நெடுஞ்சடையிற் புனைபெம்மான்
பேராசைக் கடலினிடை பிழைபட்டுக் கிடப்பேன்பாற்
சீராரும் வடலூரான் சிற்றறைவிட் டினியிங்கு
வாரானென் பவர்கண்முன் வருவானென் றுரைத்தானே. 6

கஞ்சனடுத் தலைகொய்து கரத்தேந்தி யிரந்துண்டோன்
நஞ்சயின்ற மீனென்ன நாநிலத்திற் சுழல்வேன்பால்
நெஞ்சறிய வடலூரா னீறணியார் முதலாய
வஞ்சரையெல் லாங்கெடுக்க வருவானென் றுரைத்தானே. 7

விசையனிரு விழிகாண வேடனுருக் கொடுசென்றோன்
தசைநுகர்வார் தமையேசச் சலியாத தமியேன்பால்
திசையறிய வடலூரிற் செழுந்தமிழ்ப்பா வலன்தீயோர்
வசைமுழுதுங் கெடமீண்டு வருவானென் றுரைத்தானே. 8

முற்கிரியைக் குரியானை முருகோனைத் தருமூர்த்தி
கற்கிணற்றுற் பலவாறு கலக்கமுறுங் கடையேன்பால்
நற்கிருபை வலியாடி நரர்வசைகொள் வடலூரான்
மற்கிளர்தோள் வேந்தர்தொழ வருவானென் றுரைத்தானே. 9

நால்வருக்கன் றருள்செய்து நறுந்தமிழ்ச்சொற் றொடைகோண்டோன்
மேல்வருமா றுணராது வெதும்புகின்ற வினையேன்பாற்
சேல்வளநீர் வடலூரான் சிரிப்பார்கண் கரிப்பெய்த
வால்வளைத்தண் கடற்பாரில் வருவானென் றுரைத்தானே. 10

அட்டவித மூர்த்தியுமா மவனருளால் வடலூரான்
வட்டநிலத் தினர்காண வருவானென் றுரைத்தபடி
இட்டமிருந் திருப்புகழோ ரியம்பியபாட் டினிதென்பார்
சிட்டர்விதிப் படியாவுஞ் சிவன்செயலென் றுணர்ந்தோரே. 11

திருவருட் பிரகாசவள்ளலார் திருவடிகள்வாழ்க.

# விண்ணப்பதிகம்

நேரிசை வெண்பா

திருவருட் பிரகாச வள்ளலார் திருவடிகள்வாழ்க

இன்னம்வட லூரா னெழுந்திடவேன் செய்திலாய்
என்னவொரு பதிக மெத்தவென்னுட் — சொன்னசிவன்
தன்னருளோர் சாட்சி தமியேன் மனஞ்சாட்சி
சின்னதலாட் சத்தியஞ் சாட்சி.

எண்சீர் விருத்தம்

அரக்கரிற் றலையாய சிற்சி லர்க்கு மளவிலா வர மருளிய சிவனே
கரக்கு நெஞ்சுடைக் காதகர் வாழ்வு கண்டருப் பெருங் களியடைந் தனையோ
பரக்கு நீர்த்தடஞ் சூழ்தரு வில்லிப் பாக்கத் தென்றொடு பகர்ந்தமை நிசமேல்
இரக்கமே வடிவாம் வடலூ ரானின்னம் எனெழுந் திடப் புரிந்திலையே. 1

கனியைநே ரிதழ்ச் சிவைபொடும் வடிவேற் கந்தவே ளொடுங் காளையிற் றிகழ்வாய்
அனியவா திகளுவப் பதுகண்டு மடியரேந் துயரடைவை தேர்ந் திலையோ
பனியறு மலர்க்கொன்றையே போலப் பகரவல்லவர் டரிர்தர ததினவாம்
இனியசொற் கவிபகர் வடலூரா னின்னமே னெழுந்திடப் புரிந் திலையே. 2

சினக்கு மால்விடைக் கொடியினைப் புகல்வார் சிந்தைபோற் செயுந்திரு வருளுடையாய்
அனத்தமீ றலிற் புவிமக ளழுந்தீ தகற்ற நாடுதல றிந்திலை கொல்லோ
கனக்கு நான்மறை நெறிகண் மூவிரண்டுங் கந்தவேண் முககமல மென்றுணரும்
எனக்கோர் நற்றுணை யாம்வடலூரா னின்னமே னெழுந்திடப் புரிந்திலையே. 3

களப மென்முலை வணிக மின்னொருத்தி கருதுநாளிரு கனிவிரைந் தளித்தாய்
அளகை யாதிபன் போற்கொலைத் தீயோ ரடங்கவாழ்தல் கண்டயர்ந் தனனந்தோ
மிளகை நேரொரு சிறியவண் டெழுந்து விளக்கில் வீழினும் விழிப்புனல் சிந்தி
இளகு நெஞ்சகம் பெறும்வடலூரா னின்னமே னெழுந்திடப் புரிந்திலையே. 4

பானனோர் விழிச் சிறுமியர் தொடரப் பலிக்கொள்வா னொரு படுதலை யெடுத்தாய்
வானநாடரும் வியப்புறத் தருஞ்சீ வழுத்துவார்க்குமுன் வழங்கிலைகொல்லோ
ஊனருந்திட னலமெனக்கொடுபொய் பொருங்குராணிலத் துற்றவர்க்குணர்த்தும்
ஈனர்நாணுறும் படிவடலூரா னின்னமேனெழுந் திடப்புரிந் திலையே. 5

போன்கலாபியை யனையவள் காணப் பொதுவிலாடிய புனிதவா னவனே
நின்கடாட்சமின் றேற்கவியாரு நிகழ்த்திடாரெனு நியமமாய்ந் ததுவோ
வன்கணுரிகழ்வன பலகேட்டு மானமின்றிநீ மறைந்துறன் முறையோ
வென்கணு ரசப் படவடலூரா னின்னமேனெழுந் திடப்புரிந் திலையே, 6

நண்ணினர் சிலர் மகிழ்வுறச்சில்லோர் நலிவுநீத்துயிர் நல்கியநம்பா
கண்ணில்வான் சுடர்மூன் றையுங்கொடுநீ கவின்றுளாயெனல் கதையெனத் தகுமோ
புண்ணிலா வுணவே நரர்பலரும் புசிக்கவேண்டுறும் புனிதமா தவத்தோர்
எண்ணிலார் மிகப்புகழ் வடலூரா னின்னமேனெழுந் திடப்புரிந் திலையே. 7

திசையோ ரெட்டுமெண்டோ ளெனக்கொண்டு திகழுமெட்டு மூர்த்திகளுமா மொருவா
விசையன் கைச்சிலை யடியினுமிந்நாள் விளம்புமுத்தமிழ் வெறுப்பவா யின்வோ
வசைவினின்றிரு வருள்வலிக் கடங்கா வாக்கமின்றென வறைதரு மாண்மைக்
கிசைபு மெய்புணர் வுறும்வடலூரா னின்னமேனெழுந் திடப்புரிந் திலையே. 8

வாடியேத்திய வானவருய்வான் மலர்க்கணுலழு மடிவில்சங் கரனே
தேடிடும்பய னெய்துறுமையினுற் சிந்தைநொந்துடற் சிதைப்பனென் றவன்முன்
பாடிடுங்கவி பெவண்சகித்தனையோ பழுதிலாவிரு பாலர்பெற் றிலையோ
வீடில்சீர்மலி தரும்வடலூரா னின்னமேனெழுந் திடப்புரிந் திலையே. 9

போதுவி லோர்திருத் தாளெடுத்தாடும் பொற்ப நாடுநர்ப் புணரருட் பொருப்பே
சதுரர் மட்டுமுன் பகர்தமிழினித்த தன்மையாதுனைச் சாற்றுநந் தமிழ்ச்சொன்
மதுரங் கைப்பெனின் மனஞ்சிரி யாதோ வாஞ்சை யாவுமேன் வழங்கிலை யந்தோ
வெதுவு நின்செய லெனும்வட லூரா னின்னமே னெழுந் திடப்புரிந் திலையே. 10

அனக பூரண மாய கண்டமுமாயா மொதியை யைங்கொழிலானைக்
கனவு நன்னனவொப்ப தென்றுணருங் காதலெய்திய கவின்றிருப் புகழோன்
றனது சிந்தையின் கிளர்கிர்வடலூர்த் தமிழ்வலான்றனைத் தருகெனப் பகர்பாட்
டினவலாருளத் தொருங்குவாழருளே யுணருந்தன்மைய துண்மையொன்றுண்டே

திருவருட் பிரகாச வள்ளலார் திருவடிகள்வாழ்க

முருகதாச சுவாமிகளென்றும் திருப்புகழ் சுவாமிகளென்றும்
விளங்கிய

## ஸ்ரீமத் தண்டபாணி சுவாமிகள்
## திருவாய் மலர்ந்தருளியவை.

ஆசிரிய விருத்தம்

**எத்தனைப்** பிறவிக ளெடுக்கவைத் தும்பிரமன் இன்னுஞ் சலிக்க வில்லை
இறப்புத் தொழிற்பல விசைத்துமவ் வியமனுக் கென்பா விரக்க மில்லை
நித்தமும் விடாதனு பவிக்கவரு முன்செய்த நீள்வினை யொழிந்த தில்லை
நெஞ்சமெண் பதுகோடி நிதநினைக் குந்தொழிலை நிமிடமு மறக்க வில்லை
சித்தமொடு புத்திபுஞ் சிந்தனை சாரணைச் சிறிதுங் குறைந்த தில்லை
சிறியனே னென்செய்வே னிவ்வகைத் துன்பெலாந் தீர்ந்திடச் செய்தரு ளுவாய்
சித்தர்முத் தர்கள்பத்தர் நற்றவர் பெரும்புலவர் சேர்வடற் சிற்சபையில் வாழ்
திருவருட் புரவாச மருவுமுத் தமர்நேச திருவருட் பிர காசனே. 1

ஞாலமதின் மனமொத்த நண்பினரை வஞ்சிக்கு நயமுளேன் நல்லோர் தமை
நாத்தழும் பேறவன் மொழிநவிலு வேனுன்றன் நாமமொரு போது முரையேன்
சாலமட வார்தமைத் தஞ்சமென வெண்ணுவேன் தவவிரத தரும நினையேன்
தானஞ்செய் வோரைத் தடுக்கவறி வேன்றீயர் தம்மினுந் தவறு புரிவேன்
காலமெல் லாங்களவு செய்வோர் தமக்குளவு கரவிற் கலந்து சொல்வேன்
கலியுறுங் கயமைபல கருதினே னெனினுமிக் கடையேனை யாண் டருளுவாய்
சீலமிகு மெய்யடியர் சேரும்வட லூரெனுஞ் சித்திபுர சிற்சபையில் வாழ்
திருவருட் புரவாச மருவுமுத் தமர்நேச திருவருட் பிர காசனே. 2

—காரணப்பட்டு. கந்தசாமிப் பிள்ளை.





அருட்பெருஞ்ஜோதி

திருவருட் பிரகாச வள்ளலார் திருவடிகள் வாழ்க

# குரு வணக்கம்



"எல்லாஞ் செயல்கூடும் என்னாணை யம்பலத்தே
எல்லாம் வல்லான் றனையே ஏத்து"

என்று எம்மனோர்க்கு எடுத்துக் காட்டிய இன்பப் பெருவாழ்வே! தேவரீர் திருவடிகள் என்றும் வாழ்வதாக!! அல்லாமலும், "எல்லாமுடைய அருட்பெருஞ்ஜோதி அற்புதக் கடவுளே" இயற்கை உண்மையரெனவும் அவரது திருமாளிகையை யடையுந் திறவுகோல், ஜீவகாருண்யமொன்றே யெனவும், எமக்கறிவித்த எம்பெருமானே!

இதுதொடங்கி எக்காலத்தும் சுத்தசன்மார்க்கத்தின் முக்கிய தடையாகிய சமயங்கள், மதங்கள், மார்க்கங்கள் என்பவற்றின் ஆசார சங்கற்ப விகற்பங்களும்; வருணம் ஆசிரமம் முதலிய உலகாசார சங்கற்ப விகற்பங்களும் எங்கள் மனத்திற் பற்றாதவண்ணம் தேவரீர் திருவருள் பாலித்தருளல் வேண்டும். அத்துடன் சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய லக்ஷியமாகிய ஆன்மநேய ஒருமைப்பாட்டுரிமை எங்களுக்குள் எக்காலத்தும், எவ்விடத்தும், எவ்விதத்தும், எவ்வளவும் விலகாமல் நிறைந்து ஜீவகாருண்யந் தழைத்து ஓங்கி வளரச் செய்வித்தருளல் வேண்டும்.

அகத்தே கறுத்துள்ள எம்மனோரனைவரையும் ஜகத்தே திருத்திச் சன்மார்க்க சங்கத்து அடைவித்து இகத்தே பரத்தைப் பெற்று மகிழ்விக்கவே இந்த யுகத்தே திருவவதாரஞ் செய்த எமது மெய்த் தந்தையரே! தேவரீர் பெருங்கருணை ஆட்சிக்கு வந்தனம்! வந்தனம்!!

அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை



அருட்பெருஞ்ஜோதி

திருவருட் பிரகாச வள்ளலார் திருவடிகள் வாழ்க

# விண்ணப்பம்

**அப்பாநான்** வேண்டுதல்கேட் டருள்புரிதல் வேண்டும்
ஆருயிர்கட் கெல்லாம் நான் அன்புசெயல் வேண்டும்
எப்பாரும் எப்பதமும் எங்கணும் நான்சென்றே
எந்தைநின தருட்புகழை யியம்பியிடல் வேண்டும்
செப்பாத மேல்நிலைமேல் சுத்தசிவ மார்க்கம்
திகழ்ந்தோங்க அருட்ஜோதி செலுத்தியிடல் வேண்டும்
தப்பேது நான்செயினும் நீபொறுத்தல் வேண்டும்
தலைவ! நினைப் பிரியாத நிலைமையும்வேண் டுவனே.

**சற்சபைக்குரியார்** தம்மொடுக்கூடித் தனித்தபே ரன்பும்மெய் யறிவும்
நற்சபைக்குரிய ஒழுக்கமும்அழியா நல்லமெய் வாழ்க்கையும் பெற்றே
சிற்சபைநடமும் பொற்சபைநடமும் தினந்தொறும் பாடிநின் றாடித்
தெற்சபையுலகத்து உயிர்க்கெலாம்இன்பம் செய்வதென் இச்சையாம் எந்தாய்.

**கருணையே** வடிவாய்ப் பிறர்களுக் கடுத்த கடுந்துய ரச்சமாதிகளைத்
தருணம்நின் அருளால்தவிர்த்து அவர்க்கு இன்பம்தரவும் வன்புலை கொலைஇரண்டும்
ஒருவிய நெறியில் உலகெலாம் நடக்க உஞற்றவும் அம்பலந்தனிலே
மருவியபுகழை வழுத்தவும் நின்னை வாழ்த்தவும் இச்சை காண்எந்தாய்.

**தங்கமே யனையார்** கூடியஞான சமரச சுத்தசன் மார்க்கச்
சங்கமே கண்டு களிக்கவும் சங்கம்சார் திருக்கோயில் கண்டிடவும்
துங்கமேபெறும் சற்சங்கம் நீடூழி துலங்கவும் சங்கத்தில் அடியேன்
அங்கமேகுளிர நின்றனைப்பாடி யாடவும் இச்சைகாண் எந்தாய்.

அருட்பெருஞ்ஜோதி அருட்பெருஞ்ஜோதி
தனிப்பெருங்கருணை அருட்பெருஞ்ஜோதி

எல்லாம் செயல்கூடும் என்னாணை அம்பலத்தே
எல்லாம் வல்லான்றனையே யேத்து

அருட்பெருஞ்ஜோதி



அருட்பெருஞ்ஜோதி

# திருவருட்பா

# ஆறாவது திருமுறை

## பதிகங்கள்-பாட்டுகள்

# அகராதி





* தடித்த எழுத்துக்களில் இருப்பவை பதிகங்கள்.

## இ

## ஊ



## எ

## பொ



## போ



## ம

## மா



## மி



## மீ



## மு

—





அருட்பெருஞ்ஜோதி

## ஆறாவது திருமுறை

# பிழை திருத்தம்

| பக்கம் | பாட்டு | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|---|
| 3 | 76 | — | அ-வி-ந்தவிர் | அ-வ-ந்தவிர் |
| 17 | 599 | — | பிர—மும் | பிர-ம-மும் |
| 38 | 1327 | — | பெரும்-ப-ணி | பெரும்-பி-ணி |
| 49 | 7 | 5 | யது-வாய் | யது-வும் |
| 70 | அடிக்குறிப்பு | 3 | 'பா-ட்டுக்கடங்கா' | 'வீ-ட்டுக்கடங்கா' |
| 88 | 3 | 1 | நாதாந்த-ந் | நாதாந்த-த் |
| 108 | 112 | 1 | யு-ண்ணியா | பு-ண்ணியா |
| 163 | 98 | 6 | சிவ-ோய-கப் | சிவ-யோ-கப் |
| 197 | 12 | 1 | முடி-யே | முடி-பே |
| 198 | 1 | 1 | யடி-யே-ன் | யடி-யே-ன் |
| 240 | 5 | 1 | லொரு-பே-ரும் | லொரு-பே-ரும் |
| 242 | 7 | 5 | சதுமறைசே—ல் | சதுமறைசெ-ா-ல் |
| 242 | 7 | 8 | பூ-றுகின்ற | மூ-றுகின்ற |
| 242 | 7 | 8 | ே-பறுமே | ே-பறுமே |
| 256 | 72 | 6 | யாதலி—வ் | யாதலி-லி-வ் |
| 259 | 88 | 2 | பெருந்தகை-யி-ன் | பெருந்தகை-யே-ன் |
| 259 | 89 | 4 | கெப்பெ—ரொவ் | கெப்பெ-ய-ரொவ் |
| 274 | 6 | 4 | ே-யஞெரு | ே-யஞெரு |
| 276 | 9 | 2 | சிவ—பலிக்கு-ப் | சிவ-ம்-பலிக்கு-ம் |
| 321 | 5 | 4 | நிறைந்துறப்-பு | நிறைந்துறப்- |
| 322 | 7 | 4 | பெ—யர்காள் | பெ-ரி-யர்காள் |
| 359 | 14 | 3 | தென்றிசை-த-யும் | தென்றிசை-ற-யும் |
| 368 | 76 | 2 | பி-ளைவிற் | வி-ளைவிற் |
| 429 | 5 | 3 | வைத்—து | வைத்-த-து |
| 448 | 12 | 2 | சம்பந்த-ர்-ப் | சம்பந்த-ப் |
| 453 | 2 | 3 | கொள்-வி-ரென் | கொள்-வீ-ரென் |
| 523 | 58 | 4 | வில்வ-வா-ணம் | வில்வ-ணம் |
| 525 | 8 | 1 | தவரவர்க்கு-த் | தவரவர்க்கு-ய் |
| 526 | 11 | 1 | பெ—ய்யோடப் | பொ-ா-ய்யோடப் |
| 538 | | 19 | நேரி-நடோ-ட்டாமல் | நேரி-டவோ-ட்டாமல் |
| 542 | | 9 | அருட்பெ—ஞ்ஜோதி | அருட்பெ-ரு-ஞ்ஜோதி |
| 556 | | 3 | வ-ல்லா | எ-ல்லா |
| 575 | | 26 | கொண்டி-டி-ருங்கள் | கொண்டி-ருங்கள் |

| பக்கம். | பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| வ 5 | | 31 | வா-தி | வா-தீ |
| வ 6 | | 19 | இந்-த-ரிய | இந்-தி-ரிய |
| வ 14 | | 13 | நாமரூ-ம | காமரூ-ப |
| வ 19 | | 23 | ஓ-ளா-து | ஓ-டா-து |
| வ ,, | | 23 | மாயை— | மாயை-யை |
| வ 20 | | 2 | ச-க்-தி | ச-த்-தி |
| வ 41 | | 22 | பரு-ங்-களில் | பரு-வ-ங்களில் |
| வ 53 | | 16 | மிருக— | மிருக-ம் |
| வ 55 | | 7 | ய-வ-சு | வ-ய-து |
| வ 70 | | 18 | மா-யா-யை | மா-மா-யை |
| வ 107 | | 17 | 153 | 455 |
| வ 128 | | 1 | நமவென- - | நமவெனவே |
| வ 137 | | 10 | ே-பாது | ே-பாது |



# அருட்பெருஞ்ஜோதி

"உயிர்க்கொலையும் புலைப்புசிப்பும்
தவிர்த்தவர்களே உறவினத்தார்"

# சென்னை சமரச சுத்த சன்மார்க்க சங்கத்தின் அலுவல்கள்



1. திருவருளால் இச்சங்கமானது 14-3-1930 பௌர்ணமி தினத்தில் ஏற்பட்டு அதுமுதல், பிரதி குருவாரந்தோறும் காலையில் ஏழைமக்கட்கு சங்கநிலையத்தில் ஆகார மளித்தலும், காலை மாலை 7-மணி முதல் 9-மணி வரையில் திருவருட்பா பாராயணம் செய்தலும், ஒத்தவர்களுடன் சத்விசாரஞ் செய்தலும்,

2. பிரதி சுக்கிரவாரந்தோறும் திருஒற்றியூரில் இரவு 7-மணி முதல் திருஅருட்பா பாராயணம் செய்தலும்,

3. ஐயா அவர்கள் உத்தரவுபடிக்கு (1) 'தைப்பூசந்தவறாது' வடலூர் தரிசித்தலும், (2) சாலை சகாப்தமாகிய பிரதிவருட வைகாசிமீ 11௳ திருஒற்றியூரில் ஆண்டு விழா நடத்தலும், (3) சுவாமிகள் பிறந்த திருநாளான பிரதிவருட புரட்டாசிமீ சித்திரை நக்ஷத்திரத்தில் சென்னையில் சிறப்பாக விழாக் கொண்டாடுதலும்,

4. ஜீவகாருண்யமுள்ள அன்பர்கள் அழைத்தால் பாராயணஞ்செய்தலும், சன்மார்க்க உபந்நியாசங்கள் செய்தலும், பல சங்கங்கள் மூலமாக சன்மார்க்கத்தைப் பரவச்செய்தலும்,

5. பலியிடும் கெட்ட வழக்கத்தை நிறுத்த முயலுதலும், புலால் உண்ணாமையை பிரசாரஞ்செய்தலும், குடிப் பழக்கத்தை ஒழித்தலும், நேரிட்டமட்டில் ஜீவர்களுக்கு உபகரித்தலும், சகோதர ஒற்றுமைக்குப் பாடுபடுதலும்,

6. பிரதி ஞாயிறுதோறும் சங்கநிலையத்தில் சமரசவேத பாடசாலை நடத்தலும்,

7. திருவருட்பாக்களை அச்சிட்டு அடக்கமான விலையில் பரவச்செய்தலும் ஆகிய முதலியனவாம்.

சங்கத்தில் சேர விரும்புவோர் செலுத்தவேண்டிய மாதச்சந்தா அணா-4 மட்டும். சங்கத்தின் ரசீது இல்லாப் பணத்திற்கு சங்கம் உத்திரவாதமல்ல.

## முக்கிய கவனிப்பு.

அன்பர்காள் !

சங்கத்தின் அன்பர்கள் மாதந்தோறும் உதவிவரும் சந்தாத்தொகையும், சங்கத்தில் வெளியாகும் புத்தகங்கள் மூலமாகக் கிடைக்கும் ஊதியமும், குருவாரந்தோறும் சங்க நிலையத்தில் நடக்கிற அன்னவிரயத்திற்கும், மற்ற விசேட காலங்களில் நடக்கிற அன்னவிரயங்களுக்கும் உபயோகப் படுவதால் அன்பர்கள் சன்மார்க்கத்தில் பாகங்கொள்ள முன்வருவார்களாக.

சுவாமிகளின் ஸ்தாபனங்களாகிய - வடலூர் சத்திய தருமசாலை, வடலூர் - சத்தியஞான சபை - மேட்டுக்குப்பம் சித்திவளாகத்திருமாளிகை இம்மூன்று ஸ்தாபனங்களுக்கும் தங்களால் இயன்ற உதவிசெய்து அதனால் அம்பலனை அடைவீர்கள் எனத் திருவருளை இறைஞ்சுகின்றனம்.

அருட்பெருஞ்ஜோதி தனிப்பெருங்கருணை



ஜனவரி 1935 } சங்கநிலையம்:—சென்னை சமரசசுத்தசன்மார்க்கசங்கம்,
சன்மார்க்க ஆண்டு 62 }

## 10. திருவருட்பா-திரு ஆயிரம் (ஐந்தாம்பதிப்பு)

ஆறு திருமுறைகளிலுமிருந்து சுமார் ஆயிரம் பாடல்களை, பூஜாமுறைக்கு ஏற்றபடி நாமாவளிகள் கீர்த்தனைகள் முதலிய அனைத்தையும், பாராயணத்துக்கும், சன்மார்க்க சங்கங்களுக்கும், கையுறையாகவும் வழித்துணையாகவும், பக்தியை ஊட்டும்படியாகவும், திரட்டி சொற்பவிலையுடன், உலகமெங்கும் பல்லாயிரக்கணக்கான பிரதிகளுடன் பிரகாசிக்கின்ற பாக்கேட் புத்தகம் 5 - ம் பதிப்பாக விளங்குகின்ற 336 - பக்கம் கொண்ட சுத்தப்பதிப்பு அணா 0 2 0

ஷை அட்டை பைண்டு ... ... ... அணா 0 2 6

## 11. ஷை திரு ஆயிரம் (நான்காம் பதிப்பு)

| | | | |
|---|---|---|---|
| கிளேஸ் பட்டு காலிகோ பைண்டு ... ... அணா | 0 | 4 | 0 |
| விநாயகர் திருவருட்பா, ஒற்றியூர் திருவருட்பா, தியாகப்பெருமான் திருவருட்பா, சிதம்பரம் திருவருட்பா, நாமாவளி, கீர்த்தனை, தனித்தனி | 0 | 0 | 3 |
| திருஒற்றியூர் வடிவுடைமாணிக்கமாலை முழுதும் 100-பாடல் ... | 0 | 0 | 3 |
| சென்னை கந்தப்பெருமான் தெய்வமணிமாலை ... ... | 0 | 0 | 3 |
| ஷை காலணு புத்தகங்கள் 100-க்கு ரூபாய் ... ... | 1 | 0 | 0 |
| உண்மைநெறி (சமாதிவற்புறுத்தும் பத்திரிகையுடன்) ... ... 100-புத்தகம் ... ... ... ... ... | 0 | 8 | 0 |
| மகாதேவமாலை மூலம் 101 - பாடல்களும் தனி ... ... | 0 | 0 | 6 |
| முருகன் திருவருட்பா திருத்தணிகைப் பதிகங்களின் திரட்டு ... | 0 | 0 | 6 |
| நடராஜர் திருவருட்பா (நடராஜபதி மாலையுடன்) ... ... | 0 | 0 | 6 |
| பாராயணத் திருவருட்பா 2 - ம் பதிப்பு சுமார் 50 - பாடல்கள், தினந்தோறும் காலையில் பாராயணத்துக்கேற்றது. சிறுவர்க்கும் ஏற்றபடி பதப்பிரிவு செய்து ஒரு தம்பிடி விலையுள்ளது 100 - க்கு ... ... அணா | 0 | 8 | 0 |

## 12. சுவாமிகளின் அழகிய ஆப்டோன் படங்கள்

| | | | |
|---|---|---|---|
| இரண்டுகலரில் அச்சிட்டவை. உயர்ந்த தடித்த வழுவழுப்பான கடிதம். வடலூர் ஐதீகத்துடன் பெரியசைஸ் 20''×15''— ... அணா | 0 | 2 | 0 |
| சுவாமிகளின் சிறிய ஆப்டோன் படங்கள் ... 0 1 0 ... | 0 | 0 | 6 |
| வடலூர் சத்திய ஞான சபை பெரியபடம் ... | 0 | 1 | 0 |
| தருமசாலை, சத்தியஞானசபை, சித்திவளாகத் திருமாளிகை, தெய்வீக மாமரம், சுவாமிகளின் கையெழுத்துப்பாட்டுகள், முதலியவற்றின் ஆப்டோன் படங்களும் உள்ளன; அவை தனித்தனி | 0 | 0 | 6 |

☞ குறிப்பு:—

1. வியாபாரிகளுக்கு வேண்டிய கமிஷன் உண்டு. இன்னும் இதர புத்தகங்கள் தேவையானாலும் வாங்கி அனுப்புகிறோம்.

2. ரூபா. 1 - க்குக் குறைந்து வி. பி. அனுப்ப இயலாது.

3. புத்தகங்கள் தபால் மூலம் அனுப்புவது செலவு மிகவும் அதிகமானதால், அன்பர்கள் ரெயில்வே பார்சல் மூலம் பெற்றுக்கொள்ள விரும்புகிறோம். ரெயில்வே பார்சல் அனுப்புவதானால், புத்தகத்தின்கிரயம் முழுதும் முன்னதாக அனுப்பிவிட்டால் பாக்கிங் முதலிய செலவுகளின்றிப் பார்சல் அனுப்பிவிடப்படும்.

4. ரூபா. 1-க்குக் குறைந்து புத்தகம் வாங்குவோர், தபால்பில்லைகள் அனுப்பிப் பெற்றுக்கொள்ளவும். தபால்செலவு வேறு. விலாசமும், அருகில் உள்ள ரெயில்வே ஸ்டேஷன் பெயரையும் தெளிவாக எழுதியனுப்ப வேண்டும்.

இங்ஙனம்:

ஜனவரி 1935 சென்னை சமரச சுத்தசன்மார்க்க சங்கத்தின் அன்பர்கள்.

சன்மார்க்கஆண்டு-[illegible], சூளை, சென்னை.